# ஸ்ரீ விஷ்ணுசித்த விஜயம்

வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் இயற்றியது

( முதல் அத்தியாயம் - இரண்டாம் பாகம் )





பதிப்பாசிரியர் :
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட்.

7-00 ] [ தபால் 1-00.

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



# ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம்

## முதல் அத்தியாயம் - இரண்டாம் பாகம்

[ மூன்றுவது, நான்காவது பாதங்கள் ]

[ இரண்டாம் பதிப்பு ]

இயற்றியவர்:—

**ஸ்ரீ. உ. வே. ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.**

*[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர்]*



கிடைக்குமிடம்:—

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

*அட்வகேட்,*

*3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-1.*

**விலை ரூ. 7-00.    தாபல்கூலி 1-00.**

*ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-1.*



ஸ்ரீ உ. வே. ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்

[இந்நூலின் ஆசிரியர்]

# ★ விஷ்ணுசித்தவிஜயம் ★

## விஷயஸூசிகை

### முதலத்தியாயம் — மூன்றும்பாதம்

முதலத்தியாயம் — நாலாம்பாதம்.



**விஷ்ணுசித்தவிஜயம் - அநுபந்தங்கள்**



3. இரண்டாவது அநுபந்தத்தில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு சமயசாதனம் பதிலுரைத்தால் மூன்றுவது அநுபந்தத்தில் அந்த பதிலுரை ஆராயப்படும்.





* நூற்றெட்டு உபனிஷத்துக்களில் பெரும்பான்மையானவை 500 வருடங்கட்குள் கற்பிக்கப்பட்டவை என்று நாம் ஸாத்விக விஜயத்தில் எழுதியிருந்ததை, திருநெல்வேலியிலிருந்து வெளிவரும் 'சமயசாதனம்' என்னும் சைவப்பத்திரிகை கண்டிக்க முற்பட்டது. முதலிரண்டு அநுபந்தங்கள் அதற்கு பதிலுரைக்கின்றன.

# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றேடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-50 | -25 |
| 2. ஸ்தோத்ரரத்நசதுःச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 3-00 | -45 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -25 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -30 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம் | 1-88 | -30 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2-75 | -40 |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1-63 | -30 |
| 8. சதுःச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-50 | -25 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2-00 | -37 |
| 10. நாச்சியார்திருமொழி வ்யாக்யானம் | 4-00 | -60 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -45 |
| 12. நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம்(விவரணத்துடன்) | 2-00 | -40 |
| 13. ஸ்ரீராமாயணதனிச்லோகம்(விவரணத்துடன்) I Part. | 3-50 | -55 |
| ஷை இரண்டாம்பாகம்(விவரணத்துடன்) (அச்சில்) | 7-00 | 1-00 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | -13 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0-10) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1-88 | -30 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-75 | -40 |
| 18. சிறியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-38 | -25 |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 2-50 | -37 |
| 20. பெரியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-50 | -25 |
| 21. முதல்திருவந்தாதி, அப்பிள்ளையுரை(விவரணத்துடன்) | 3-00 | -45 |
| 22. இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம் அப்பிள்ளையுரை (விவரணத்துடன்) | 4-00 | 60 |
| 23. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் (அச்சில்) | | |

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 3-00 | -45 |
| 2. (போதாயந) ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-31 | -10 |
| 3. (போதாயந) உபாகர்மவிதி | 0-31 | -10 |
| 4. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -15 |
| 5. நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -13 |
| 6. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -38 |
| 7. பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -38 |
| 8. தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -10 |
| 9. கம்பராமாயணம் (கையடைப்படலம் முடிய) | 2-50 | -45 |
| 10. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -11 |
| 11. பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை பூர்வபாகம் | 4-00 | 1-08 |
| ஷை உத்தரபாகம் | 4-00 | 1-00 |
| 12. ஸ்ரீகேசவ மணிமாலை | 0-50 | -13 |
| 13. ஸ்ரீலக்ஷ்மீ நருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -13 |

| | | |
|---|---|---|
| 14. யதிராஜவிம்சதி வ்யாக்யானம் | 0-88 | -18 |
| 15. ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -38 |
| 16. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 | -75 |
| ஷை இரண்டாம்பாகம் | 7-00 | 1-25 |
| 17. கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 | -15 |
| 18. சாரீரககாரிகாவளீ (முதல் பாகம்) | 3-00 | -45 |
| 19. பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 | -60 |
| 20. ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் (தபால் உள்பட 50பை) | | |

இடைக்குமிடம்:- S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு எளிய தமிழ் விரிவுரைகளுடன் வெளிவரும் சிறந்த ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை.**

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

வேதம், ஸ்மிருதிகள், இதிஹாஸங்கள் முதலியவற்றிலிருந்து ஸ்ரீமந்நாராயணனின் பெருமையை விளக்கும் விஷ்ணுசித்த விஜயம் என்னும் சிறந்த கிரந்தமும், தமிழில் கீதா வ்யாக்யானமும், திவ்யப்ரபந்தங்களுக்கு எளிய விவரணங்களோடு கூடிய பூர்வாசார்ய வ்யாக்யானங்களும், விசிஷ்டாத்வைத ப்ரகரணக்ரந்தமான விவரண ஸஹித சாரீரககாரிகாவளியும், விசிஷ்டாத்வைத விஜயமும் மற்றும் பல விஷயங்களும் வெளிவருகின்றன.

*ஆசிரியர்:—*

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
**அட்வகேட்,**
*3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.*

## வருடச் சந்தா ரூ. 4-00.

ஸர்வஜித் மார்கழி 28உ (12-1-1948) முதல் தொடர்ந்து நடைபெறுகிறது.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம்



## முதலத்தியாயம் — மூன்றும்பாதம்

## நாராயணனே ஸர்வாந்தர்யாமியும் ஸர்வரக்ஷகனும்

### பீடிகை

இதுவரையில் நாராயணனே ஸர்வகாரணன் என்று பற்பல வேதவாக்கியங்களைக்கொண்டு நிர்ணயிக்கப்பட்டது. ''யதோ வா இமாநி பூ₁தாநி ஜாயந்தே...தத்₃ விஜிஜ்ஞாஸஸ்வ தத்₃ ப்₃ரஹ்மேதி'' [யாதொன்றினிடமிருந்து இந்த ஜீவராசிகள் தோன்றுகின்றனவோ அதையே ப்ரஹ்மமென்று அறிவாயாக.] என்னும் லக்ஷணத்திற்கு லக்ஷ்யமாயிருப்பவன் நாராயணனே என்று நிர்த்தாரணம் செய்யப்பட்டது. இனி, ''யேந ஜாதாநி ஜீவந்தி யத் ப்ரயந்த்யபி₄ஸம் விஶந்தி'' [பிறந்தவைகள் எதனால் உயிர்வாழ்கின்றனவோ, எதை ப்ரளயகாலத்தில் அடைகின்றனவோ...] என்று சொல்லப்பட்ட ரக்ஷகத்வ ஸம்ஹர்த்ருத்வ குணங்களும் அவனிடத்திலேயே அந்வயித்து நிற்கும் என்று நிரூபிக்கப்படும்.

அதிலே ரக்ஷகத்வதர்மம் அச்சுதனிடத்திலேயே பொருந்தி நிற்கிறது என்பதை முதலில் நிரூபிப்போம்; ''ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் । ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாப₄ாக₃ ப₄வத்யந்யஸ்ய கஸ்யசித் ॥''[ரக்ஷணத்திலேயே நிலைநிற்கும் ஹரியைத் தவிர வேறு எவருக்கும் ரக்ஷணஸாமர்த்தியம் இல்லையன்றோ] என்று விஷ்ணுபுராணத்திலே பராசரர் ப்ரகடனம் செய்த பொருளே வேதாந்த விழுப்பொருள் என்று விளக்குவோம்.

ஒரு வஸ்துவை ஒருவன் ரக்ஷிக்கிறானாகில், ரக்ஷகனை அவன், ரக்ஷ்யமான—( ரக்ஷிக்கப்படுவதான )—அவ்வஸ்துவைப் பரிபூர்ண

மாக அறிந்திருத்தல் வேண்டும். அவ்வஸ்துவைப் பற்றிய அறிவு குறைவுபட்டிருக்குமாகில், அவன் அதற்குச் செய்யக்கூடிய ரக்ஷணமும் குறைவு பட்டே நிற்கும். இவ்வுலகில், எத்தனையேனும் அறிவுடைய மனிதராயினும், ஒரு பொருளையும் பரிபூர்ணமாக அறியும் திறமையற்றவர்களாகையாலே, அவர்கள் அவ்வப்பொருள்களுக்குச் செய்யக் கூடிய ரக்ஷணங்கள் குறையுடையனவாகவே இருப்பதைக் காணுநிற்கிறோம். எவ்வுலகிலுள்ள எல்லாப்பொருள்களுக்கும் எல்லாவிதமான ரக்ஷணங்களையும் செய்பவனாகக் கீர்த்திபெற்ற பரமபுருஷன் அவ்வெல்லாப்பொருள்களையும் பரிபூர்ணமாக—உள்ளும் புறமும்— அறிந்தவனாயிருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும். அவைகளை உள்ளும் புறமும் அறிய வேண்டுமாகில், அவைகளெல்லாவற்றிலும் வியாபித்திருத்தல் வேண்டும். அப்படி வியாபித்திருக்கும்போது விளக்கு தன் ஒளியாலே அறையிலே வியாபித்திருப்பதுபோலும், சூரியன் தன் கிரணங்களாலே உலகிலே வியாபித்திருப்பதுபோலும் தன் அறிவாலே மட்டும் வியாபித்திருந்தானாகில், அப்போது "வாலாக்₃ர ஶதப₄ாக₃ஸ்ய ஶதத₄ா கல்பிதஸ்ய ச। ப₄ாகே₃ா ஜீவஸ் ஸ விஜ்ஞேய: ஸ சாநந்த்யாய கல்பதே ||" [தானிய நுனியின் பல்லாயிரத்தில் ஒரு பாகத்தில் ஒரு பகுதியேயென்றறியத்தக்க ஜீவன் (முக்திதசையில்) எங்கும் வியாபிக்கிறான்] என்று சொல்லப்பட்ட முக்தாத்மாவைக்காட்டிலும் இவனுக்கோர் ஏற்றம் ஸித்தியாது. "யோ வேத்தி யுக₃பத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா₃ா ஸ்வத:" [எவனொருவன் எப்போதும் எல்லாப்பொருள்களையும் ஒரே சமயத்தில் ப்ரத்யக்ஷமாகத் தன் ஸ்வரூபத்தாலேயே அறிகிறானோ...] என்று பரமாத்மாவுக்கே அஸாதாரணமாகச் சொல்லப்படுவதான—தன் ஸ்வரூபத்தாலேயே எல்லாவற்றையும் அறிகை என்னும்—தர்மம் இல்லாமலொழியும். ஸர்வபூதாந்தராத்மா என்று மறைகள் முறையிடுவதும் பொருளற்றதாகும். ஆகையாலே, காட்டிலே காட்டுத்தீ பரவியிருப்பதைப்போலவும், எள்ளினுள்ளே எண்ணெ வியாபித்திருப்பதைப்போலவும், கறந்தபாலில் நெய் கரந்து (மறைந்து) பரந்திருப்பதைப்போலேயும் எல்லாப்பொருள்களினுள்ளேயும் தன் ஸ்வரூபத்தாலேயே வியாபித்திருத்தல் வேண்டும். அப்போதே பரமாத்மா [ பரமனான-மிகவுயர்ந்த-ஆத்மா ] என்னும் பெயர் பொருளுள்ளதாகும். ஆக, இவ்வளவால் ஸர்வரக்ஷகனாயிருப்பவன் ஸர்வ வஸ்துக்களையும் தன் ஸ்வரூபத்தாலேயே வியாபித்திருக்கவேண்டும் என்றதாகிறது. இவ்வர்த்தத்தையே "அந்த:

ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [ஸர்வாந்தர்யாமியான பகவான் எல்லா ஜனங்களையும் உள்நுழைந்து நின்று நியமிக்கிருன்.] என்று வேதம் உத்கோஷித்தது. ஆகையால், ஸர்வ ரக்ஷகன் யாரென்று விசாரிப்பதற்கு முன் ஸர்வாந்தர்யாமியாயிருப்பவன் யாரென்று விசாரிப்பதும் அவசியமாகிறது. ஸர்வாந்தர்யாமியாயுள்ளவன் வாஸுதேவனே என்று இனிவிளக்குவோம்.

## ஸுபாலோபனிஷத்தின் ஸுநிச்சிதார்த்தம்

ஸர்வகாரணன் நாராயணனே என்று கோஷிக்கும் வாக்கியங்கள் பல இவ்வுபனிஷத்திலுளவென்பது முன்னமே நிரூபிக்கப்பட்டது. ஸர்வாந்தர்யாமியும் அவனே என்று இங்கு முடிவுகட்டியிருப்பதைப் பார்ப்போம் இப்போது.

" அந்தஶ் ஶரீரே நிஹிதோ கு₃ஹாயாமஜ ஏகோ நித்யோ யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம் ய: ப்ருதி₂வீமந்தரே ஸஞ்சரந் யம் ப்ருதி₂வீ ந வேத₃ யஸ்யாபஶ் ஶரீரம் யோऽபாமந்தரே ஸஞ் சரந் யமாபோ ந விது₃ர் யஸ்ய தேஜ: ஶரீரம் யஸ் தேஜோ ऽந்தரே ஸஞ்சரந் யம் தேஜோ ந வேத₃ யஸ்ய வாயு: ஶரீரம் யோ வாயுமந்தரே ஸஞ்சரந் யம் வாயுர் ந வேத₃ யஸ்யாகாஶ: ஶரீரம் ய ஆகாஶமந்தரே ஸஞ்சரந் யமாகாஶோ ந வேத₃ யஸ்ய மந: ஶரீரம் யோ மநோऽந்தரே ஸஞ்சரந் யம் மநோ ந வேத₃ யஸ்ய பு₃த்₃தி₄. ஶரீரம் யோ பு₃த்₃தி₄மந்தரே ஸஞ்சரந் யம் பு₃த்₃தி₄ர் ந வேத₃ யஸ்யாऽஹங்கார: ஶரீரம் யோऽஹங்காரமந்தரே ஸஞ்சரந் யமஹங்காரோ ந வேத₃ யஸ்ய சித்தம் ஶரீரம் யஶ்சித்தமந்தரே ஸஞ்சரந் யம் சித்தம் ந வேத₃ யஸ்யாவ்யக்தம் ஶரீரம் யோவ்யக்தமந்தரே ஸஞ்சரந் யமவ்யக்தம் ந வேத₃ யஸ்யாऽக்ஷரம் ஶரீரம் யோऽக்ஷரமந்தரே ஸஞ்சரந் யமக்ஷரம் ந வேத₃ யஸ்ய ம்ருத்யு: ஶரீரம் யோ ம்ருத்யுமந்தரே ஸஞ்சரந் யம் ம்ருத்யுர் ந வேத₃ (ஸ) ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மாऽபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:"

*[சரீரத்தினுள் ஹ்ருதயகுஹையிலே பிறப்பற்றவனாய், ஒப்பற்றவனாய், நித்யனாயிருக்கும் எவனொருவனுக்கு பூமியானது சரீரமாயிருக்கிறதோ, எவனொருவன் பூமியினுள்ளே ஸஞ்சரிக்கிருனோ,*

எவனை பூமியானது அறியவில்லையோ, எவனுக்கு ஜலம் சரீரமோ, எவன் ஜலத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை ஜலம் அறியாதோ, எவனுக்கு அக்னி சரீரமோ, எவன் அக்னியினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை அக்னி அறியாதோ, எவனுக்கு வாயு சரீரமோ, எவன் வாயுவினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை வாயு அறியாதோ, எவனுக்கு ஆகாசம் சரீரமோ, எவன் ஆகாசத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை ஆகாசம் அறியவில்லையோ, எவனுக்கு மனம் சரீரமோ, எவன் மனத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை மனம் அறியவில்லையோ, எவனுக்கு புத்தி சரீரமோ, எவன் புத்தியினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை புத்தி அறியவில்லையோ, எவனுக்கு அஹங்காரம் சரீரமோ, எவன் அஹங்காரத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை அஹங்காரம் அறியாதோ, எவனுக்குச் சித்தம் சரீரமோ, எவன் சித்தத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனைச் சித்தம் அறியாதோ, எவனுக்கு அவ்யக்தம் சரீரமோ, எவன் அவ்யக்தத்தினுள் ஸஞ்சரிக்கிருனே. எவனை அவ்யக்தம் அறியாதோ, எவனுக்கு அக்ஷரம் சரீரமோ, எவன் அக்ஷரத்தினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை அக்ஷரம் அறியாதோ, எவனுக்கு ம்ருத்யு சரீரமோ, எவன் ம்ருத்யுவினுள் ஸஞ்சரிக்கிருனே, எவனை ம்ருத்யு அறியாதோ அவனே எல்லாஜீவராசிகளுக்கும் அந்தராத்மாவாய், பாபமற்றவனுய், பரமபதத்திலே எழுந்தருளியிருப்பவனுய், ஒப்பற்றவனுன இந்தநாராயணனென்னும் தேவன்.] என்று ஸுபாலோபனிஷத்தின் ஏழாவது கண்டத்திலே உத்கோஷிக்கப்பட்டது. இவ்வாக்கியங்களிலிருந்து நாராயணனே சேதநாசேதநங்களடங்கிய எல்லாவுலகிற்கும் அந்தர்யாமியாயிருப்பவன் என்று விளங்குகிறது.

(அந்த: ஶரீரே நிஹிதோ குஹாயாம்) சரீரமாகிற மலையிலே ஹ்ருதயமென்னும் குஹையிலே மறைத்துவைக்கப்பட்டுள்ள நிதி போன்றவன். (அஜ:) பிறப்பற்றவன். (ஏக:) ஒப்பற்றவன். (நித்ய:) என்றுமிருப்பவன். (யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்) எவனுக்கு பூமி முழுவதும் சரீரமாகின்றதோ. பூமி சரீரமானலும், ஜீவன் தன் சரீரத்திற்குள்ளே எல்லாவிடங்களிலும் ஸ்வரூபத்தாலே வியாபிக்கமாட்டாதாப்போலேயோ இவனும் பூமியிலே வியாபித்திருப்பது? என்ன,-(ய: ப்ருதிவீமந்தரே ஸஞ்சரந்) "பரந்ததண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் பரந்த அண்டமிதென நிலவிசும் பொழிவற" என்றுப்போலே ப்ருதிவியின் ஒவ்வொரு அணுவிலும் ஜாதி வ்யக்தியிலே பரிஸமாப்ய வியாபித்திருக்குமாப்போலே

வியாபித்திருப்பான்—ஸஞ்சரித்துக் கொண்டிருப்பான்—என்கிறது. அப்படி இவன் வியாபித்திருந்தானாகில் பூமி இவனை அறிந்திருக்க வேண்டுமே என்ன,—(யம் ப்ருதிவீ ந வேத) "நிலவிசும்பொழி வறக் கரந்தெங்கும் பரந்துளன் இவையுண்டகரனே" "திடவிசும் பெரிவளி நீர் நிலமிவை மிசைப் படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும் உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே" என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே உடலினுள்ளே உயிர்போலே மறைந்து வியாபித்திருக்கிறானகையாலே இவனை பூமி அறியமாட்டாது என்கிறது. இப்படி பூமியொன்றிலே தான் வியாபித்திருப்பனோ வென்ன,—(யஸ்யாப: ஶரீரம்...யஸ்ய மந: ஶரீரம்...யஸ்யாவ்யக்தம் ஶரீரம்...யஸ்யாக்ஷரம் ஶரீரம்...யஸ்ய ம்ருத்யு: ஶரீரம்...) 'திட விசும்பெரிவளி நீர் நிலம்' எனப்படும் ஐந்து பூதங்களிலும், மனஸ் முதலிய இந்திரியங்களிலும், ஜீவாத்மாவினுள்ளும், மூல ப்ரக்ருதியின் பல்வேறு அவஸ்தைகளிலும் இப்படி வியாபித் துள்ளான் என்கிறது; கரந்த சில் இடந்தொறும் இடம் திகழ் பொருள்தொறும் கரந்து எங்கும் பரந்துளன் என்கிறது. புத்தி, அஹங்காரம், சித்தம், என்பவை வெவ்வேறு செயல்களுடன் கூடிய மனஸ்ஸைக் குறிக்கின்றன. அவ்யக்தம், அக்ஷரம், தமஸ் என்பவை முறையே ஒன்றுக்கொன்று ஸூக்ஷ்மமான மூலப்ரக்ருதி யின் நிலைகளைச் சொல்லுகின்றன. அக்ஷரஶப்தம் அழிவற்றவர்களான ஜீவர்களையே முக்கியமாகக் குறிக்கக் கூடியதாகையால் இங்கு ஜீவர்களுடன் சேர்ந்துள்ள மூலப்ரக்ருதியின் நிலையைக்குறிக்கிறது. ஆக, சேதநாசேதநங்கள் எல்லாம் நாராயணனின் சரீரங்களே என்று சொல்லப்பட்டதாயிற்று. "யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்...யஸ் யாப: ஶரீரம்..." என்று ஒவ்வொரு பொருளையும் எடுத்துச் சொன்னதிலிருந்து ஒவ்வொன்றிலும் இவன் பூர்ணமாக வியா பித்திருக்கிறன் என்று உணர்த்தப்படுகிறது. இப்படி இவை யெல்லாம் சரீரமாயிருப்பதாலே 'இவனே எல்லாம்' என்று சொல்லலாம் என்பதை,

**"நைவேஹ கிஞ்சநாக்₃ர ஆஸீத₃மூல மநாத₄ாரா இமா: ப்ரஜா: ப்ரஜாயந்தே தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:, சக்ஷுஶ்ச த்₃ரஷ்ட்வ்யஞ்ச நாராயண:, ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோத வ்யஞ்ச நாராயண:, ஜிஹ்வா ச ரஸயிதவ்யஞ்ச நாராயண:, த்வக் ச ஸ்பர்ஶயிதவ்யஞ்ச நாராயண:, மநஶ்ச மந்தவ்யஞ்ச**

நாராயண:, பு$_3$த்$_3$தி$_4$ஶ்ச போ$_3$த்$_3$த$_4$வ்யஞ்ச நாராயண:, அஹங்காரஶ்சாஹங்கர்த்தவ்யஞ்ச நாராயண:, சித்தஞ்ச சேதயிதவ்யஞ்ச நாராயண:, வாக் ச வக்தவ்யஞ்ச நாராயண:, ஹஸ்தௌ சாத$_3$ாதவ்யஞ்ச நாராயண:, பாதௌ$_3$ ச க$_3$ந்தவ்யஞ்ச நாராயண:, பாயுஶ்ச விஸர்ஜயிதவ்யஞ்ச நாராயண:. உபஸ்த$_2$ஶ்சாநந்த$_3$யிதவ்யஞ்ச நாராயண:, த$_4$ாதா வித$_4$ாதா கர்த்தா விகர்த்தா தி$_3$வ்யோ தே$_3$வ ஏக ஏவ நாராயண:, ஆதி$_3$த்யா ருத்$_3$ரா மருதோ வஸவோஶ்விநௌ ருசோ யஜூம்ஷி மந்த்ரா அக்$_3$நிராஜ்யமாஹுதிர் நாராயண:.... வருணோர்யமா சந்த்$_3$ரமா கலா கவிர் த$_4$ாதா ப்$_3$ரஹ்மா ப்ரஜாபதிர் மக$_4$வா தி$_3$வஸாஶ்ச அர்த்த$_4$தி$_3$வஸாஶ்ச காலா: கல்பாஶ்சோர்த்$_4$வஞ்ச தி$_3$ஶஶ்ச ஸர்வம் நாராயண: புருஷ ஏவேத$_3$ம் ஸர்வம் யத்$_3$பூ$_4$தம் யச்சப$_4$வ்யம் தத்$_3$ விஷ்ணோ: பரமம் பத$_3$ம் ஸத$_3$ா பச்யந்தி ஸூரயோ தி$_2$வீவ சக்ஷுராததம் தத்$_3$ விப்ராஸோ விபந்யவோ ஜாக்$_3$ருவாம்ஸஸ் ஸமிந்த$_4$தே, விஷ்ணோர் யத் பரமம் பத$_3$ம் ''

*[இவ்வுலகில் முதலில் ஒன்றுமில்லை; மூலமற்றவராகவும், ஆதாரமற்றவர்களாகவுமுள்ள இந்த ப்ரஜைகள் உண்டாகிருர்கள். திவ்யனை தேவன் நாராயணன் ஒருவனே இருந்தான். கண்ணும் காண்பனவும் நாராயணனே; காதும் கேட்பனவும நாராயணனே. மூக்கும் முகர்வனவும் நாராயணனே; நாக்கும் ருசிப்பனவும் நாராயணனே; தோலும் தொடுவனவும் நாராயணனே; மனமும் நினைப்பனவும் நாராயணனே; அறிவும் அறிவனவும் நாராயணனே; அஹங்காரமும் அஹங்கரிக்கப்படுவதும் நாராயணனே; சிந்திக்கும் சித்தமும் சிந்திக்கப்படுவனவும் நாராயணனே; வாக்கும் சொல்லப்படுவனவும் நாராயணனே; கைகளும் கொடுப்பனவும் நாராயணனே; காலும் நடப்பனவும் நாராயணனே; (மலம்) கழிக்கும் இந்திரியமும் கழிப்பனவும் நாராயணனே; அநுபவிக்கும் இந்திரியமும அநுபவிக்கப்படுவனவும் நாராயணனே- தரிப்பவனும், (ஸ்ருஷ்டியை) விதிப்பவனும், உண்டாக்குகிறவனும், மாறுதலடையச் செய்பவனும் பரமபதத்திலுள்ள நாராயணனுகிற தேவன் ஒருவனே. பன்னிரு ஆதித்யர்களும், பதினொரு உருத்திரர்களும், மருத்துக்களும், எட்டு வஸுக்களும் அச்விநீதேவர்களும், ருக்*

யஜுஸ் ஸாமாதர்வணவேதங்களும், அக்னியும், நெய்யும், ஆஹுதியும் நாராயணனே; வருணனும், 'அர்யமா' என்னும் தேவதையும், சந்திரனும், கலைகளும், கவியும், தாதாவும், பிரமனும், ப்ரஜாபதியும், இந்திரனும், நாளும், இரவு பகல்களும், காலங்களும் கல்பங்களும், மேலும் கீழும் ஆகிய எல்லாம் நாராயணனே. இருந்தனவும், இருக்கின்றனவும், இருக்கப்புகுகின்றனவுமாகிய எல்லாம் பரமபுருஷனே. அதுவே விஷ்ணுவின் பரமபதமாகும். நித்யஸூரிகள் அதை ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் லோகசக்ஷுஸ்ஸான ஸூர்யனை (நாம்) காண்பதுபோல் காண்கிறார்கள். ஞானிகளும் ஸ்துதிசீலர்களுமான அவர்கள் விழிப்புடன் விளங்குகிறார்கள் அங்கு] என்னும் மஹாவாக்யத்தின் மூலம் ஆறுவது கண்டத்தில் அருமறை அறிவித்தது. "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸிஸர்வ:" [நீ எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறாய்; அதனால் எல்லாம் ஆகிறாய்] என்று கீதையிலே அர்ஜுனனும்,

"அந்யஶ்ச ராஜந் ஸ பர: தத₂ாந்ய: பஞ்சவிம்ஶக: |
தத்ஸ்த₂த்வாத₃நுபஶ்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத₄வ: ||

[அரசே! அந்தப் பரமாத்மா (ஜீவனிலும்) வேறுபட்டவனே. அப்படியே இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவனும் (பரமனிலும்) வேறுபட்டவனே. ஆயினும் நல்லோர்கள் ஜீவனிடத்திலே பரமன் வியாபித்திருப்பதாலே அவர்களை ஒருவராகவே காண்கிறார்கள்] என்று மஹாபாரதத்திலும், "அவஸ்தி₂தேரிதி காஶக்ருத்ஸ்ந:" [ஜீவனுக்குள் பரமன் நிற்கிறானகையாலே ஜீவனைக்குறிக்கும் சப்தங்கள் பரமனைச் சொல்லுகின்றன என்று காஶக்ருத்ஸ்னர் உரைத்தார்] என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் வியாஸரும் அறுதியிட்டனரன்றோ. நிற்க; இங்கு ஒருகால் சொன்னப்போலே ஒன்பதின்கால் நாராயண ஶப்தத்தை மறுபடியும் மறுபடியும் உத்கோஷித்ததன் மூலம் நாராயணனே ஸர்வாந்தர்யாமி என்பதை அசைக்கமுடியாதபடி நிலைநிறுத்துகிறது நான்மறை. ஸர்வாந்தர்யாமித்வம் என்பது புருஷோத்தமனின் தனிப்பெயரான நாராயணநாமத்திற்கே உள்ளதொரு பொருளன்றோ.

"தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய்க் காலாய்
தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்"

[கால்கள் அத்யாத்மம் (சரீரத்திலுள்ளதொரு அவயவம்). நடக்கத்தக்கது அதிபூதம் (ஐம்பெரும்பூதங்களிலுள்ளது). இவற்றுக்கு அதிதேவதை விஷ்ணுவாவான். நாடியொன்று இவற்றைச் சேர்ப்பது; அடிகளிலும், அடிவைப்பனவற்றிலும், விஷ்ணுவிலும், நாடியிலும், ப்ராணனிலும், அறிவிலும், ஆநந்தத்திலும், ஹ்ருதயாகாசத்திலும், இவையெல்லாவற்றிலும் எவனொருவன் ஸஞ்சரிக்கின்றானோ, அவனே இந்தப் பரமாத்மாவாவான்; கிழத்தனம், மரணம் முதலிய சரீரதோஷங்களும், பயம், துன்பம் முதலிய மநோதோஷங்களும் அற்றவனாய் அநந்தனான இப்பரமாத்மாவை உபாஸியுங்கள்.] என்று பரமாத்மாவானவன் விஷ்ணுவுக்கும் அந்தர்யாமியாயிருக்கிறானென்றது விஷ்ணுபரத்வத்திற்குப் பொருந்தாதே என்னில்: அடிகளுக்கும், அடிவைப்பனவற்றுக்கும் அதிதேவதையாக இங்கு படிக்கப்படும் விஷ்ணு ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கிய உபேந்திரனேயாகையால் அவ்வுபேந்திரனுடைய திருமேனியைச் சொல்லுவதாகி, அதனுள்ளும் நாராயணனின் ஸ்வரூபமே வியாபித்திருக்கின்றது என்று உரைப்பதாகிறது இவ்வாக்யம். அன்றிக்கே, விஷ்ணுசப்தம் பகவத்ஸ்வரூபத்தையே சொல்லுவதானாலும், "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்" [எல்லாவுலகிற்கும் ஸ்வாமியாகவும், தனக்குத் தானே ஈச்வரனாகவுமுள்ளவன் நாராயணன்.] "ஸ்வே மஹிம்நி ப்ரதிஷ்டி₂த:" [பரமபுருஷன் தன் மஹிமையினாலேயே தான் நிலை நிற்கிறான்,] என்னும் சுருதிவாக்கியங்களைப் போலே தனக்குத் தானே அந்தர்யாமியாமதொழிய, வேறொரு அந்தர்யாமியை உடையனல்லன் என்றதாகிறது. இப்படிக் கொள்ளாவிடில், ஏழாவது கண்டத்தில் நாராயணனே ஸர்வாந்தர்யாமி என்று பலகால் உத்கோஷித்திருப்பதும், இக்கண்டத்தில் ஒவ்வொரு வாக்யத்திலும் "அஜர மம்ருத மப₄ய மஶோக மநந்தம்" என்று அந்தர்யாமியை அநந்தசப்தத்தாலே சொல்லியிருப்பதும் ஒட்டாது.

அப்படியாகில், "யோ பு₃த்₃தௌ₄ யோ போ₃த்₃த₄வ்யே யோ ப்₃ரஹ்மணி" [எவனொருவன் புத்தியை அநுக்ரஹிக்கும் மஹத்தத்வத்திலும், அறியப்படுவனவற்றிலும், அவற்றுக்கு அபிமானியான பிரமனிடத்திலுமுள்ளானோ...] என்றும்,

"யோஹங்காரே யோஹங்கர்த்தவ்யே யோ ருத்₃ரே"

[எவனொருவன் அஹங்காரத்திலும், அஹங்கரிக்கப்படுவனவற்றிலும் அவற்றுக்கு அபிமானியான ருத்ரனிடத்திலுமுள்ளானோ...] என்றும்

ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாகப் பரமாத்மாவைச் சொல்லும் வாக்கியங்களிலும், இப்படியே பொருள் கொள்ளலாகாதோ எனில்: ப்ரஹ்மருத்ரர்கள் பகவானுடைய அவதாரபூதர்கள் என்பதற்கு ப்ரமாணமொன்றுமில்லையாகையாலும், 'நாராயணனிடமிருந்து பிறந்தவர்களே அவர்கள்' என்பதற்குப் பல பிரமாணங்களுள்ளனவாகையாலும், இவ்வுபனிஷத்திலேயே பரமபுருஷனிடமிருந்து பிரமன் பிறந்தானென்றும், பிறந்தவுடன் அவன் பயந்தானென்றும், அந்நான்முகனின் முகத்திலிருந்து க்ரோதத்தாலே முக்கண்ணன் பிறந்தான் (லலாடாத் க்ரோத₄ஜோ ருத்₃ரோ ஜாயதே) என்றும் சொல்லுகையாலும் கர்மவசப்பட்டவர்களாகவும், பாபம் நீங்கப்பெருமை, குரூரத்தன்மை முதலிய துர்க்குணங்களை உடையவராகவும் வேதத்திலேயும் கீர்த்திக்கப்படுமவர்களாகையாலும் அப்படிப் பொருள் கொள்ளல் பொருந்தாது. ஸாத்விகஶாஸ்திரங்களான பாரதாதிகளிலும்,

**''ஸ்ருஷ்டிம் தத: கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே''**
[விஷ்ணுதர்மம்]

[பிரமனே! உன்னை வியாபித்து நான் ஸ்ருஷ்டிசெய்யக்கடவேன்.] என்றும்,

**''தவாந்தராத்மா மம ச யே சாந்யே தே₃ஹிஸம்ஜ்ஞிதா:''**
[பார-சாந்தி 361-4]

[(ருத்ரனாகிய) உனக்கும், (பிரமனாகிற) எனக்கும் மற்றுமுள்ள எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தராத்மா பரமபுருஷனே.] என்றும்,

**''விஷ்ணுராத்மா ப₄க₃வதோ ப₄வஸ்யாமிததேஜஸ: ।**
**தஸ்மாத்₃ த₄நுர்ஜ்யாஸம்ஸர்க்க₃ம் ஸ விஷேஹே மஹேஶ்வர:॥''**
[பார-கர்ண 35-50]

[அதிகமான தேஜஸ்ஸையுடைய சிவனுக்கு (புரமெரித்த காலத்தில்) விஷ்ணுவானவர் (விசேஷித்து) ஆத்மாவாயிருந்தார். ஆகையினாலேயே மஹேச்வரனான சிவனும் வில்லையும் நாணையும் தொடமுடிந்தது.] என்றும் ப்ரஹ்மருத்ராதிகளுக்குப் புருஷோத்தமனே அந்தர்யாமி என்னும் அர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றோ. ஆகையால் விஷ்ணுவே ப்ரஹ்மருத்ராதி ஸகலசேதநர்க்கும், அசேதநப் பொருள்களெல்லாவற்றுக்கும் அந்தர்யாமியாய் நின்று அளிப்பவனென்பதே ஸுபாலோபனிஷத்தின் ஸுநிச்சிதார்த்தமாகும்.

# நாராயணோபநிஷத்தின் நிர்ணயம்

எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியாயிருப்பதால் எல்லாமாயிருக்கிறுன் நாராயணன் என்று ஸுபாலோபனிஷத்தில் முடிவு கட்டப்பட்ட இவ்வர்த்தத்தையே நாராயணோபநிஷத்தும் வலியுறுத்துகிறது. 'நாராயணனே எல்லாச்சேதநாசேதநங்களும்' என்று சொல்லியிருந்தபோதிலும் ப்ரஹ்மருத்ரர்களைத் தனியாக எடுத்து அவர்களுக்கும் நாராயணனே அந்தர்யாமி என்று தெளிவாக முடிவுகட்டாத குறையொன்றுண்டு ஸுபாலோபனிஷத்தில். அக்குறையும் தீர "பிரமனும் நாராயணனே; உருத்திரனும் நாராயணனே; இந்திரனும் நாராயணனே; காலமும் நாராயணனே; திக்குகளும் விதிக்குகளும், மேலும் கீழும், உள்ளும் புறமும் ஆகிய எல்லாம் நாராயணனே" என்று உறுதிகூறுகிறது இந்த உபநிஷத்து. "நாராயணாத்$_3$ ப்$_3$ரஹ்மா ஜாயதே நாராயணாத்$_3$ ருத்$_3$ரோ ஜாயதே" [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறுன்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறுன்] என்று நாராயணனே ப்ரஹ்மருத்ரர்களுக்கும் காரணபுருஷன் என்பதே முதல்வேதத்தின் முடியிலே முடிவுகட்டப்பட்ட முழுப்பொருள் என்று உபதேசித்த இவ்வுபனிஷத்தே நாராயணனே ப்ரஹ்மருத்ரர்களுக்கு அந்தர்யாமியாகவுமிருப்பதால் அவர்களாகவும் ஆமவன் என்பதே இரண்டாம் வேதமான யஜுர் வேதத்தின் தலையான அர்த்தம் என்று உத்கோஷிக்கிறது. எம்பெருமானுர் முதலான ஆசார்யஶ்ரேஷ்டர்கள் அனைவராலும் எடுத்துக் கையாளப்பட்டதான இவ்வுபனிஷத்து இன்றும் உருக்குலையாமலிருப்பது நம்முடைய பாக்கியத்தினுலேயேயாகும்.

" அத$_2$ நித்யோ நாராயண:| ப்$_3$ரஹ்மா நாராயண:| ஶிவஶ்ச நாராயண:| ஶக்ரஶ்ச நாராயண:| காலஶ்ச நாராயண:| தி$_3$ஶஶ்ச நாராயண:| விதி$_3$ஶஶ்ச நாராயண:| ஊர்த்$_4$வஞ்ச நாராயண:| அத$_4$ஶ்ச நாராயண:| அந்தர் ப$_3$ஹிஶ்ச நாராயண:| நாராயண ஏவேத$_3$ம் ஸர்வம்| யத்$_3$ பூ$_4$தம் யச்ச ப$_4$வ்யம்| நிஷ்களங்கோ நிரஞ்ஜநோ நிர்விகல்போ நிராக்$_2$யாதஶ்ஶுத்$_3$தே$_4$ா தே$_3$வ ஏகோ நாராயண:| ந த்$_3$விதீயோऽஸ்தி கஶ்சித்| ய ஏவம் வேத$_3$ ஸ விஷ்ணுரேவ ப$_4$வதி| ஸ விஷ்ணுரேவ ப$_4$வதி| ஏதத்$_3$ யஜுர்வேத$_3$ ஶிரோதீ$_4$தே ||"

[நித்யனுயிருப்பவன் நாராயணனே. பிரமனும் நாராயணனே. சிவனும் நாராயணனே. இந்திரனும் நாராயணனே. காலமும் நாராயணனே. திக்குகளும் நாராயணனே. விதிக்குகளும் நாராயணனே. உள்ளும் புறமும் நாராயணனே. சென்றவையும், இருப்பவையும், வருமவையும் ஆகிய எல்லாம் நாராயணனே. களங்கமற்றவனும், தோஷமற்றவனும், மநோவாக்குகளுக்கு எட்டாதவனும் சுத்தனுமான தேவன் நாராயணன் ஒருவனே. இரண்டாமவன் ஒருவனுமில்லை. எவன் இப்படி அறிகிருனே அவன் விஷ்ணுவைப்போலே ஆகிருன். இவ்வர்த்தத்தை யஜுர் வேதஶிரஸ் படிக்கிறது.]

( அத$_2$ நித்யோ நாராயண: ) ஸ்வரூபத்தாலும், ஸ்வபாவத்தாலும் அழிவில்லாதவன் நாராயணன் ஒருவனே. "ஸர்வம் வாக்யம் ஸாவத$_4$ாரணம்" [எல்லா வாக்கியங்களும் பொதுவாக ஏகாரத்துடன் கூடியவையே] என்னும் நியாயத்தாலே இங்குள்ள வாக்கியங்களெல்லாம் ஏகாரத்துடன் கூடியவையாகவே ஆகின்றன. இத்தால் அடுத்துப் படிக்கப்படும் பிரமன் சிவன் முதலிய அனைவரும் அழிவுள்ளவர்களே என்று உணர்த்தப்படுகிறது.

" அவிகாராய ஶுத்$_3$த$_4$ாய நித்யாய பரமாத்மநே ।
ஸதை$_3$கரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

[ப்ரக்ருதியினுடையது போல் ஸ்வரூபவிகாரம் இல்லாதவனுகவும், ஜீவனுடையதுபோல் அசுத்தியில்லாதவனுகவும், நித்யனுகவும், பரமாத்மாவாகவும், எப்போதும் ஒருபடிப்பட்ட ரூபத்தை உடையவனுகவும், எல்லாரையும் ஜயித்திருப்பவனுயுமுள்ள விஷ்ணுவுக்கு நமஸ்காரம்] என்று பராசரமஹர்ஷி இவ்வாக்கியத்தை உபப்ரும்ஹணம் செய்தருளினுர்.

ஸ்ருஷ்டி ஸம்ஹாரகர்த்தாக்களானப்ரஹ்மருத்ரர்களையும் நித்யர்களென்றே கொள்ளவேண்டியிருக்க நாராயணன் ஒருவனே நித்யனென்னலாமோ என்ன,– (ப்ரஹ்மா நாராயண: ஶிவஶ்ச நாராயண:) பிரமனும் நாராயணனே; சிவனும் நாராயணனே. பிரமன் சிவன் எனப்படும் ஜீவர்களுடைய ஸத்தையும் நாராயணன் அந்தர்யாமியாயிருக்கையாலேயே ஸித்திக்கிறது. அப்படியிருக்க, அவர்களும் அவனைப்போலே எப்படி நித்யராக முடியும் என்று அறிவிக்கிறது அருமறை. " அவிகாராய ஶுத்$_3$த$_4$ாய நித்யாய பரமாத்மநே

விஷ்ணவே" என்றவுடன், "நமோ ஹிரண்யக₃ர்ப்ப₄ாய ஹரயே ஶங்கராய ச" என்ற பராஶர ப்ரஹ்மரிஷியும் இவ்வர்த்தத்தையே விளக்கினார்.

"ஸ்ருஷ்டிஸ்தி₂த்யந்தகரணீம் ப்₃ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் |
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப₄கவாந் ஏக ஏவ ஜநார்த்த₃ந: ||"

[ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களைச்செய்யும் ப்ரஹ்மவிஷ்ணுருத்ரர்களென்னும் பெயர்களை ஜநார்த்தனனாகிய பகவான் ஒருவனே அடைகிறான்.] முதலான பற்பல புராணவாக்யங்களிலும் இவ்வர்த்தமே உத்கோஷிக்கப்பட்டது. வேதம் தமிழ் செய்த மாறனும், "அரனயனென உலகழித்து அமைத்துளனே" "சிவனாய் அயனாய்" "என்திருமார்வன் தன்னை என் மலைமகள் கூறன்தன்னை என்றும் என்நாமகளை அகம்பாற்கொண்ட நான்முகனை நின்ற சசிபதியை" "முனியே! நான் முகனே! முக்கண்ணப்பா!" "அரியை அயனை அரனை அலற்றி" என்று தம் சரமப்ரபந்தமான திருவாய்மொழியிலே முதலிலும் நடுவிலும் முடிவிலும் இவ்வர்த்தத்தையே முடிவு கட்டியருளினர். (ஶிவஶ்ச நாராயண:) 'ருத்ரனும் நாராயணனே' என்னாமல், 'ஶிவனும் நாராயணனே' என்றதால் திரிமூர்த்திகளில் ஒருவனான ருத்ரன் வேறு, அவர்களிலும் உயர்ந்தவனான சிவன் வேறு என்னும் பக்ஷம் தள்ளப்படுகிறது. "நாராயணாத்₃ ருத்₃ரோ ஜாயதே" [நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்] என்று நாராயணனிடமிருந்து பிரமனுக்குப் பின் பிறந்தவனாகச் சொல்லப்பட்ட உருத்திரனே சிவனென்றும் சொல்லப்படுபவன், அவனுக்கும் அந்தர்யாமியாயிருப்பவன் நாராயணனே என்று நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. (ஶக்ரஶ்ச நாராயண:) இந்திரனும் நாராயணனே. "நின்ற சசிபதியை" என்றார் ஆழ்வார். ஸுப்ரஸித்தஜீவனான இந்திரனுடன் சேர்த்துப் படிப்பதன் மூலம் ப்ரஹ்மருத்ரர்களும் அவனைப்போன்ற ஜீவர்களே என்று உணர்த்துகிறது வேதம்.

"பிரமனும், சிவனும், இந்திரனும் நாராயணனே" என்று சொன்னதைக் கண்ட சில மந்தமதிகள் இவர்களுக்கும் நாராயணனுக்கும் ஐக்யம் சொல்லப்படுவதாக பிரமித்துவிடப்போகிறார்கள் என்று எண்ணிய வேதபுருஷன் அடுத்தபடியாகப் பேசுகிறான்,— (காலஶ்ச நாராயண: தி₃ஶஶ்ச நாராயண: விதி₃ஶஶ்ச நாராயண: ஊர்த்₄வஞ்ச நாராயண: அத₄ஶ்ச நாராயண:, அந்தர் ப₃ஹிஶ்ச

நாராயண: நாராயண ஏவேதும் ஸர்வம்) காலமும், திக்குகளும், விதிக்குகளும், மேலும் கீழும், உள்ளும் புறமுமாகிய எல்லாம் நாராயணனே. அசேதனபதார்த்தங்களான காலாதிகளுக்குப் பரமசேதனனான நாராயணனோடு ஐக்யம் ஸித்திக்குமன்றுகிடீர் ப்ரஹ்மருத்ரர்களுக்கும் நாராயணனுக்கும் ஐக்யம் ஸித்திப்பது. "சிவனாய் அயனாய்" என்றதைக் கண்டதும் சில கலியுகவேதாந்திகள் "சடகோபன் சமரசத்தை என்னென்று புகழ்வது!" என்று மோஹித்துப்பிறரையும் மோஹிப்பிக்கிறார்கள். சற்று முன்னே "நீராய்நிலனாய்த்தீயாய்க்காலாய்நெடுவானாய் சீரார் சுடர்களிரண்டாய்" என்று உரைத்திருப்பதைக் கண்ணிருந்தும் காணகில்லார்கள். பரமசேதனன் அசேதனப்பொருள்களுடன் ஒரேவேற்றுமையில் படிக்கப் படுவதற்குக் காரணம் யாதோ, அக்காரணத்தைக் கொண்டே அவன் சேதனர்களுடன் ஒன்றாகப்படிக்கப்படுவதையும் நிர்வஹிப்பதே நியாயமாகும். " இந்தக் குடம் கறுப்பு " என்னும் வாக்யத்திலே கறுப்பு என்னும் குணமும் அந்த குணத்தையுடைய 'குடம்' என்னும் பொருளும் ஒன்றாகப் படிக்கப்படுவதைக்காண்கின்றோம். " அறிவாளியான இவன் மெலிந்திரா நின்றான் " என்னும் வாக்கியத்திலே அறிவையுடையதான ஆத்மாவும், மெலிவையுடையதான சரீரமும் ஒன்றாகச் சொல்லப்படுவதைக் கேட்கின்றோம். "இந்தக் குடம் மண்" என்னும் வாக்யத்திலே காரணமான மண்ணும் காரியமான-(அதிலிருந்துண்டான)-குடமும் ஒன்றாக வழங்கப்படுவதையும் அறிகின்றோம். இதிலிருந்து குணகுணிகளும், சரீரசரீரிகளும், காரணகார்யங்களும் ஒன்றாகப் படிக்கப்படும் வழக்கு உண்டு என்று அறிகிறோம். ஸகலசேதநாசேதநங்களும் பரமபுருஷனை விட்டுப்பிரியமாட்டாமல், அவனைப்பற்றியே ஸத்தை பெற்றிருப்பதால் குணியான-(ப்ரகாரியான-விசேஷ்யனான)-அவனுக்கு குணமாகவும்—(ப்ரகாரமாகவும்—விசேஷணமாகவும்), அவனாலே உள்ளும் புறமும் உடல்மிசை உயிரென வியாபிக்கப் பட்டும் தரிக்கப்பட்டும் நிற்பதால் சரீரியான அவனுக்கு சரீரமாகவும், அவனிடமிருந்தே உண்டாவதால் காரணமான அவனுக்குக் கார்யமாகவும் இருப்பதால் அவனும் அவைகளும் ஒன்றாகப் படிக்கப்படுகின்றனர் என்று கொள்வதே நான்மறையோர் கண்ட நன் முடிவாகும். ஆக இவ்வளவால், இங்கு ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் நாராயணனுக்கும் ஐக்யம் சொல்ல வழியில்லையென்றும் அவர்கள் அவனுக்கு சரீரமாகவும் ப்ரகாரமாகவும் உள்ளனர் என்று கொள்வதே பொருந்துமென்றும் நிர்ணயிக்கப்பட்ட

தாயிற்று. (நாராயண ஏவேத₃ம் ஸர்வம் யத்₃பூ₄தம் யச்ச ப₄வ்யம்) சென்றவையும், இருப்பவையும், வருமவையுமாகிய எல்லாம் நாராயணனே. 'திக்குகளும் விதிக்குகளும் மேலும் கீழும் உள்ளும் புறமும் நாராயணனே' என்னும் வாக்கியத்தால் தேசபரிச்சேதம் (தேசத்தினால் அளவுபட்டிருத்தல்) இல்லாதவன் நாராயணன் என்கிறது. "நாராயணனே இவையெல்லாம்" என்னும் வாக்கியத்தினாலே வஸ்து பரிச்சேதம் இல்லையென்கிறது. "சென்றவையும் இருப்பவையும் வருமவையும் நாராயணனே" என்று கால பரிச்சேதமும் இல்லையென்கிறது.

இப்படிச் சேதனசேதநங்கள் எல்லாம் தானே என்று சொல்லும்படி நாராயணன் அவற்றுடன் ஒன்றியிருந்தானாகில் அவற்றிலேயுள்ள தோஷங்களெல்லாம் இவனிடமும் தட்டாதோ எனில், தட்டாது என்கிறது அடுத்தபடியாக,– (நிஷ்களங்க:) அசேதநங்களைப்போலே ஸ்வரூபத்தில் தோஷம் இல்லாதவன். (நிரஞ்ஜந:) சேதநவஸ்துக்களைப்போலே ஸ்வபாவத்திலும் தோஷம் இல்லாதவன். (நிர்விகல்போ நிராக்₂யாத:) இந்திரியங்களால் கிரஹிக்கத் தக்க அவைகளைப்போலன்றிக்கே இந்திரியங்களால் கிரஹிக்கத் தகாதவன். (நிர்விகல்ப:) மநஸ்ஸாலும் அறியப்படாதவன். (நிராக்₂யாத:) வாக₃தீ₃ந்திரியங்களுக்கும் எட்டாதவன். (ஶுத்₃த₄:) ஞானமற்றவையும் அளவுபட்ட ஞானத்தையுடையவையுமான அவற்றைப் போலன்றிக்கே, ஸ்வரூபமும் ஸ்வபாவமும் அளவற்ற சுத்தஜ்ஞாந ரூபமாயிருப்பவன். (தேவ:) "அநஶ்நந் அந்ய: அபி₄சாகஶீதி" [கர்ம பலனை உண்ணாத பரமாத்மா விளங்காநிற்கிறான்] என்கிறபடியே சிதசித் ஸம்பந்தத்தால் தோஷமேற்படாததோடன்றியில் பிரகாசமும் பெற்றுநிற்பவன். "நாராயண ஏவேத₂ம ஸர்வம்—ஶுத்₃தே₄ா தே₃வ:" என்னும் வாக்கியத்தை, "யாவையும் யவரும் தானாய் அவரவர் சமயம் தோறும் தோய்விலன் புலனைந்துக்கும் சொல்லப்படான் உணர்வின் மூர்த்தி" என்று வேதம் தமிழ் செய்த மாறன் மொழிபெயர்த்தருளினர். (ஏகோ நாராயண:) நாராயணன் ஒருவனே இப்படிப் பட்டவன். (நத்விதீயோஸ்தி கஶ்சித்) வேறு எவனும் இப்படிப் பட்டவனல்லன். அந்வயத்தாலும் வ்யதிரேகத்தாலும் த்₃ருடீ₄கரிக்கிறது. (ய ஏவம் வேத₃ ஸ விஷ்ணுரேவ ப₄வதி) எவன் இப்படி அறிகிறானோ அவன் விஷ்ணுவைப் போலேயாகிறான். ஏவகாரம் இவார்த்த₂கம். "மகன் தந்தையாகவே யிருக்கிறான்" என்றவிடத்திற்போலே. இல்லையேல் "ந த்₃விதீயோஸ்தி கஶ்சித்" என்றதும்

ஸஹஸ்ருதி முதலியவையும் நலியும். (ஏதத்₃ யஜுர்வேத₃ ஶிரோ தீ₄தே) அஜ்ஞனொருவன் சொன்ன தாழ் மொழியன்றுகிடீரிது! அபௌருஷேயமான வேதத்திலும் தலையான பொருள்கிடீர்!

## ப்ரஹ்மபிந்தூபநிஷத்தின் ப்ரஹ்மநிர்ணயம்

திருவாய்மொழி ஈட்டில் (8-5-10) 'ப்ரஹ்மவிது₃பநிஷத்து' என்று தொடங்கி ஒரு உபநிஷத் வாக்யம் எடுக்கப்பட்டுள்ளது. "தத₃ஸ்ம்யஹம் வாஸுதே₃வ இதி" என்று முடிகின்றது அவ் வாக்யம். பன்னிராயிரப்படியிலும் இவ்வாக்யத்தின் ஒரு பகுதி எடுக்கப்பட்டுள்ளது. ஸ்ரீவேதாந்ததேசிகர் தம் தத்வமுக்தாகலா பத்தில் நாயகஸரத்தில்,

"ஆத்₃யம் ராமாயணம் தத் ஸ ச நிக₃மக₃ணே பஞ்சம: பஞ்சராத்ரம்
ஸத்வோபஜ்ஞம் புராணம் மநுமுக₂முநிபி₄ர் நிர்மிதம் த₄ர்ம ஶாஸ்த்ரம் |
த்யக்தாந்யோ மூலவேத₃: கட₂பரிபடி₂தா வல்லிகாஸ் தாபநீயம்
ஸௌபா₃ல ப்₃ரஹ்மபி₃ந்து₃ப்ரப்₄ருதிகமபி நஸ் தத்பரம் தத்பரத்வே ||

[ஆதிகாவியமான ராமாயணம், ஐந்தாவது வேதமான மஹா பாரதம், பாஞ்சராத்ரசாஸ்த்ரம், ஸாத்விகபுராணங்கள், மநுஸ்ம்ருதி, முதலான தர்மஶாஸ்த்ரங்கள், தேவதாந்தர ஸம்பந்தமற்ற மூல வேதம், கடவல்லிகள், தாபனீயோபனிஷத்து, ஸுபாலோப நிஷத்து, ப்ரஹ்ம பிந்தூபநிஷத்து முதலானவையும் பகவத்பரத்வ நிர்ணய விஷயத்தில் நமக்கு முக்கிய ப்ரமாணங்களாகும்] என்று அருளிச்செய்து, ஸர்வார்த்தஸித்தியில் "ப்₃ரஹ்மபி₃ந்தூ₃பநிஷத₃பி— 'அஹம் வாஸுதே₃வ:' இத்யஹங்க்₃ரஹோபாஸநத₃ர்ஶநாத்₃ வாஸு தே₃வவிஷயா" [ப்ரஹ்மபிந்தூபநிஷத்தும், 'நானே வாஸுதேவன்' என்று தானாகவே உபாஸிக்கும் உபாஸனம் காணப்படுவதால் வாஸுதேவ விஷயமானது,] என்று வியாக்கியானமும் செய்தருளி னார். "தத₃ஸ்ம்யஹம்வாஸுதே₃வ:" என்று முடிவதாய் ஈட்டி லெடுக்கப்பட்டதான வாக்யத்தையே ஸர்வார்த்தஸித்தியிலும் நினைக்கிறாரென்பது தெளிவு. 'ப்ரஹ்மபிந்தூபநிஷத்' என்னும் பெயரே ஈட்டில் 'ப்ரஹ்மவிதுபநிஷத்' என்று பிழையாக அச்சிடப்

பட்டிருக்கவேண்டும். அன்றிக்கே, இரண்டு நாமங்களும் அவ்வுப நிஷத்துக்குண்டென்று கொண்டாலும் குறையில்லை. "அத ஏவ சோபமா ஸூர்யகாதி₃வத்" [3-2-18] என்னும் ப்ரஹ்மஸூத்ரத்தின் பாஷ்யத்தில், இவ்வுபனிஷத்தில் "ஏக ஏவ து" என்று தொடங்கும் மந்திரத்தைஆதிஶங்கரர் எடுத்திருக்கிறார். ஆக,இப்படிப் பல ஆசாரி யர்களால்எடுத்தாளப்பட்டிருக்கும் இவ்வுபநிஷத்து இப்போதும் பூர்ணமாக உள்ளது. 1896-ல் ஸ்மார்த்தர்களால் கிரந்தலிபியில் அச்சிடப்பட்டிருக்கும் நூற்றெட்டு உபநிஷத் புஸ்தகத்தில் 20-வது உபநிஷத்தாக அச்சிடப்பட்டிருக்கும் அம்ருதபி₃ந்தூ₃பநிஷத்தில் ஈட்டிலெடுத்திருக்கும் ச்ருதிவாக்யங்கள் முழுவதும் இருப்பதி லிருந்து இவ்வுபநிஷத்தே நம் ஆசாரியர்களால் 'ப்ரஹ்மபிந்தூப நிஷத்' என்று குலாவப்பட்ட உபநிஷத் என்று நிர்ணயிக்கிறோம். நிற்க; இவ்வுபநிஷத்திலே வாஸுதேவனே ஸர்வாந்தர்யாமி என்று விளக்கியிருப்பதை விவரிப்போமினி:

**" க₃வாமநேகவர்ணாநாம் க்ஷீரஸ்ய த்வேகவர்ணதா।**
**க்ஷீரவத் பஶ்யதி ஜ்ஞாநம் லிங்கி₃நஸ்து க₃வாம் யதா₂॥**
**க்₄ருதமிவ பயஸி நிகூ₃டம்**
**பூ₄தே பூ₄தே ச வஸதி விஜ்ஞாநம்।**
**ஸததம் மந்தே₂தவ்யம்**
**மநஸா மந்தா₂ந பூ₄தேந॥**
**ஜ்ஞாநநேத்ரம் ஸமாதா₄ய சோத்₃த₄ரேத் வஹ்நிவத் பரம்।**
**நிஷ்கலம் நிஶ்சலம் ஶாந்தம் தத்₃ ப்₃ரஹ்மாஹமிதி ஸ்ம்ருதம்॥**
**ஸர்வபூ₄தாதி₄வாஸஞ்ச யத்₃ பூ₄தேஷு வஸத்யபி।**
**ஸர்வாநுக்₃ராஹகத்வேந தத₃ஸ்ம்யஹம் வாஸுதேவஸ்**
**தத₃ஸ்ம்யஹம் வாஸுதே₃வ இத்யுபநிஷத்॥**

[பல நிறங்களையுடைய பசுக்களின் பால் ஒரே (வெளுப்பு) நிற முடையதாயிருக்கிறது. அதுபோலவே ஞானிகள் பசுவின் பாலைப் போலே (பலவகைப்பட்ட சரீரங்களிலுள்ள) ஜீவர்களை ஒரே அறிவுமயமானவராய்க் காண்கிறார்கள். அந்தப் பாலில் மறைந் துறையும் நெய்போலே, பால்போன்ற ஒவ்வொரு ஜீவனிடத்திலும், விபுஜ்ஞாநஸ்வரூபனாகையால் விஜ்ஞானமெனப்படும் பரமாத்மா மறைந்திருக்கிறான். பாலில் மத்தையிட்டு நெய்யைக் கடைந் தெடுப்பதுபோலே, மநஸ்ஸாகிற மத்தினால் ஜீவாத்மாவைக்

கடைநது பரமபுருஷனைக காணவேணும (அரணிககடடையில) நெருபபைபபோலே பரமபுருஷனை ஞானககணணைககொணடு எழுபபவேணடும அவயவமறறதும சலநமறறதும, ஆசை யறறதுமான அநத பரஹமமே நான என்று சொலலபபடுகிறது எலலா பூதஙகளுககும இருபபிடமாய, எலலா பூதஙகளிலும வஸிபபதாய யாதொரு ஸாவாக்ஷகமான ததவமுளளதோ, அநத வாஸுதேவன நானே இது உபநிஷத ] என்று இவவுபநிஷததின கடைசியில காணும மநதிரஙகளை விளககுவோம

(கவாமநேசவாணுநாம க்ஷீரஸய தவேகவாணதா) பல நிறங கொண்ட பசுககளினபாலோவெனில ஒரே வெணமை நிறததை யுடையதாயுளளது ( க்ஷீரவத பஶயதி ஜஞாநம லிஙகிநஸது கவாம யதா ) ஞானிகள பசுககளின பாலைபபோலே, ஒவவொரு தேஹததிலுமுளள ஆதமாவை ஞாநஸவரூபமாயிருபபதாகவே காணகிறாரகள (கவாம யதா) பசுககள ஒன்றுககொனறு வேறு பட்ட நிறத்துடன விளஙகுவதுபோல ஜீவாகளுடைய தேஹங களும ஒன்றுககொனறு மிகவும வேறுபட்டு விளஙகுகின்றன (க்ஷீரவத) பசுககளின பால எபபடி ஒரேமாதிரியான நிறம, ரஸம, மணம முதலியுவறறுடன விளஙகுகிறதோ அபபடியே ஆதமாக கள அனைவரும ஜஞாநம, ஆநநதம, ஶேஷதவம முதலான ஒரே குணஙகளையுடையவாகளாயத திகழகினறாரகள (லிஙகிந ) ஞானி கள, ஆதமாவுககு நிரூபகலிஙகமான (நிரூபிககும அடையாளமான) ஞாநததைப பூரணமாக உடையவாகள (ஜஞாநம) ஜஞாநததையே ஸவரூபமாகவும குணமாகவும உடையவனுகையால 'ஞானம' என்றே சொலலப்படும ஜீவனை, (லிஙகிந க்ஷீரவத பஶயநதி) ஞானிகள பாலைபபோலே ஒருபடிபபட்டதாயக காணகிறாரகள

' வித₃யா விநயஸமபநநே ப₃ராஹமணே க₃வி ஹஸதிநி।
ஶுநி சைவ ஶவபாகே ச பணடி₃தா ஸமத₃ாஶிந ॥

[கலவியும அடககமும நிறைநத அநதணன (இவையறற) கேவல பராஹமணன பசு யானை, நாய, அநநாயைத தினனும சண டாளன ஆகிய அனைவரிடததிலும ஞானிகள ஒரேமாதிரியான (ஞானஸவரூபமெனனும) நினைவை உடையவாகள ] என்று கீதையில கணணனும அருளினனன்றே (பஶயதி) பஶயநதி' [காணகிறாரகள] என்றிருககவேணடியது சாநதஸமாகையாலே பஶயதி என்றுகிடககிறது அனறிககே, தேஹமாகிற பாஹய

லிங்கத்தை (வெளி அடையாளத்தை) உடைய ஜீவன் 'லிங்கீ' எனப்படுவதாகக் கொண்டு. (லிங்கிந: ஜ்ஞாநம் க்ஷீரவத் பச்யதி) தேஹத்தையுடைய ஜீவனுடைய ஞாநஸ்வரூபமான ஆத்மாவைப் பாலைப்போலே பார்க்கிறான் (பண்டிதனுயிருப்பவன்) என்றும் பொருள்கொள்ளலாம். (க்ருதமிவ பயஸி நிகூடம் பூதே பூதே ச வஸதி விஜ்ஞாநம்) பாலிலே மறைந்துறையும் நெய்யைப்போலே பால்போலே ஒருபடிப்பட்டு விளங்கும் ஒவ்வொரு ஜீவனிடத்திலும், விஜ்ஞாநமாகிற பரமாத்மா வாழ்கிறான். (பூதே பூதே) பாலைப்போல் ஒருபடிப்பட்டதாயினும், ஆத்மாக்கள் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையே என்கிறபடி. இத்தால் ஏகாத்மவாதம எடுத்துக்கனையப்படுகிறது. (க்ருதமிவ பயஸி நிகூடம்) பாலினுள் நெய் மறைந்திருந்தபோதிலும், பாலும் நெய்யும், வேறுபட்டவையா யிருப்பதுபோல் ஜீவனுள் பரமன் இருந்தபோதிலும் ஜீவனும் பரனும் வேறுபட்டவர்களே என்று உணர்த்துகிறது. இத்தால் அத்வைதவாதம் அடியறுக்கப்படுகிறது.

(பூதே பூதே ச) சகாரம் அநுக்தஸமுச்சயமாய், கோஸ்தானத்திலேயுள்ள அசேதனமான தேஹத்திலும் நெய்போன்ற பரம புருஷன் மறைந்துறைகிறான் என்கிறது. (விஜ்ஞாநம் வஸதி) 'ஜ்ஞாநம்' என்னும் பெயரையுடைய ஜீவனிலும் உயர்ந்தவனுகை யாலே 'விஜ்ஞானம்' என்று சொல்லத்தக்க பரமாத்மா பாலினுள் நெய்போலே ஜீவர்களுக்குள்ளே மறைந்துறைகிறான். (விஜ்ஞாநம்) விபுஜ்ஞாந ஸ்வரூபன். விபுவான ஜ்ஞாநத்தையே ஸ்வரூபமாக உடைத்தாயிருக்கையென்பது பரமாத்மா ஒருவனுக்கே அஸாதாரணமாயுள்ள லக்ஷணமன்றோ. (விஜ்ஞாநம்) "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச" [இவனுடைய சக்தியும், ஜ்ஞாநமும், பலமும், செயலும், இயற்கையானதாகவும், பஹுவிதமானதாகவும், மேலானதாகவும் சொல்லப்படுகின்றன.] என்கிறபடியே விவிதஜ்ஞாநத்தை உடையவன் என்றும் விஜ்ஞாந சப்தத்திற்குப் பொருள்கொள்ளலாம். பாலினுள்ளே உள்ள நெய்யை மத்தையிட்டுக் கடைந்தெடுப்பதுபோலே பால்போன்ற ஜீவனிடமுள்ள பரமபுருஷனுகிற நெய்யைக் கடைந்தெடுக்க முடியுமோ வென்னில், முடியும் என்கிறது அடுத்தபடியாக. (ஸததம் மந்தேதவ்யம் மநஸா மந்தாநபூதேந) மநஸ்ஸாகிற மத்தினுல் ஜீவனுகிற பாலிலிருந்து பரமனுகிற நெய் எப்போதும் கடைந்தெடுக்கப்படவேண்டும். (ஸததம் மந்தேதவ்யம்) "முப்போதும் கடைந்

தீண்டிய வெண்ணெய்'' [பெரியாழ் திரு 3-1-5] என்றுப்போலே எப்போதும் கடைந்தெடுக்கப்படவேண்டும்.(மநஸா¦மந்தாநபூதேந) "ந நக்ஷுஷா க்₃ருஹ்யதே நாபி வாசா மநஸா து விஶுத்₃தே₄ந" [பரமாத்மா கண்ணாலும் வாக்காலும் அறியப்படுவதில்லை. பரிசுத்த மான மனத்தாலேயே அறியப்படுவான்] "என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணால் காணு முணர்ந்து" என்று சொல்லப்பட்டதன்றே. (ஜ்ஞாநநேத்ரம் ஸமாதாய) உட்கண்ணாகிற ஞானக்கண்ணை ஸமாதியிலே நிறுத்தி. (உத்தரேத்வஹ்நிவத் பரம்) அரணிக்கட்டையிலிருந்து நெருப்பைக் கடைந்து எழுப்புவதுபோல் பரமபுருஷனை எழுப்பவேண்டும். அந்தப் பரம்பொருள் எப்படிப்பட்டதெனில்: (நிஷ்களம்) ப்ராக்ருத மான அவயவங்களற்றது. அன்றிக்கே, தோஷமற்றது என்று மாம். (நிஶ்சலம்) விபுவாயிருப்பதால் அசைவற்றது. (ஶாந்தம்) அவாப்தஸமஸ்தகாமமாகையால் ஆசைகளற்றது. (தத் ப்ரஹ்மாஹ மிதி ஸம்ருதம்) 'அஹம் ப்₃ரஹ்மாஸ்மி' [நான் ப்ரஹ்மமாயிருக் கிறேன்] என்னும் அஹங்க்ரஹோபாஸனத்திற்கு விஷயமா யிருப்பது. "இப்படிப்பட்ட ப்ரஹ்மம் யார்? நானே ப்ரஹ்மம் என்று உபாஸிப்பதற்குக் காரணம் என்ன?" என்னும் கேள்வி கள் எழ, அவற்றுக்கு பதிலளிக்கிறது அடுத்தபடியாக. (ஸர்வ பூதாதிவாஸஞ்ச) எல்லா பூதங்களுக்கும் இருப்பிடமாயிருக்கிறது இப்பரம்பொருள். புஸ்தகத்திற்கு மேடை இருப்பிடமாயிருக்கிறது என்றால் புஸ்தகத்தை மேடை தாங்குகிறது என்று பொருள்படுவது போல், ஸர்வபூதங்களுக்கும் பரம்பொருள் இருப்பிடமாயிருக்கிறது என்றதால் பரம்பொருள் எல்லாவற்றையும் தாங்குகிறது என்ற தாகி ஸர்வாதாரத்வம் சொல்லப்படுகிறது. (யத் பூதேஷு வஸத்யபி) ஸர்வபூதங்களிலும் பரவஸ்து வாழ்கிறது. ஜீவன் உடலிலே வாழ்கிறது என்றால் ஜீவன் உடலை வியாபித்திருக்கிறது என்று பொருள்படுவதுபோல், இங்கும் பரம்பொருள் ஸர்வபூதங்களையும் வியாபித்திருக்கிறது என்றதாகி, ஸர்வவ்யாபகத்வம் சொல்லப்படு கிறது. மிகவுயர்ந்ததான பரம்பொருள், மிகத் தாழ்ந்த வஸ்துக் களிலே வெறுப்படையாமல் வியாபித்திருக்கக் காரணமென் னென்னில்: (ஸர்வாநுக்ராஹகத்வேந) எல்லா ஜீவராசிகளிடத்திலும் க்ருபையையே வடிவாகக் கொண்டிருக்கையால் எல்லா பூதங்களிலும் வியாபித்திருந்து ரக்ஷிக்கிறது என்கை. (தத்) தஸ்மாத். ஆகை யால். இப்படி எல்லாப்பொருள்களையும் தரித்தும், வியாபித்தும் நிற்கையாலே. (அஹம் வாஸுதேவ: அஸ்மி) நான் ஸர்வவ்யா

பகனும் ஸர்வாதாரனுமான வாஸுதேவனுயிருக்கிறேன். இத்தால் ஜீவபரர்களை ஒன்ருகச் சொல்லுவது சரீரசரீரிபாவத்தாலேயே யொழிய ஐக்யத்தாலன்று என்று உணர்த்தப்படுகிறது. "அவஸ்தி₂தேரிதி காஶக்ருத்ஸ்ந:" ['பரமன் ஜீவனுகருள்ளே நிற்கையால் ஜீவனைக்குறிக்கும் சப்தங்கள் பரமனையும் சொல்லுகின்றன என்று காஶக்ருத்ஸனர்உரைத்தார்] என்று முடிவுகட்டியது ப்ரஹ்மஸூத்ரம்.

"அந்யஶ்ச ராஜந் ஸ பர: ததா₂ந்ய: பஞ்சவிம்ஶக: |
தத்ஸ்த₂த்வாத₃நுபஶ்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத₄வ: ||

[அரசே! பரமன் ஜீவனில் வேறுபட்டவன்; அப்படியே இருபத்தைந்தாவது தத்துவமான ஜீவன் (இருபத்தாருவது தத்துவமான) பரமனில் வேறுபட்டவன். ஆனுல், ஜீவனிடத்திலே பரமன் வியாபித்திருப்பதாலே நல்லோர்கள் இருவரையும் ஒருவராகவே காண்கின்றனர்] என்றது மஹாபாரதம். "ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:" [எல்லாவற்றையும் வியாபித்து நிற்கிருய்; ஆகையால் எல்லாமும் ஆகிருய்.] என்ருன் அர்ஜுனன். "ஸர்வக₃த்வாத₃நந்தஸ்ய ஸ ஏவாஹ மவஸ்தி₂த:" [அநந்தன் ஸர்வவ்யாபியாகையாலே, அவனுகவே நானிருக்கிறேன்] என்ருன் ப்ரஹ்லாதன். இந்த ச்ருதிவாக்யத்திற்கு இவையெல்லாம் உபப்ரும்ஹணங்களாகி, ஜீவபரைக்ய வாதத்தைச் சிதறவடிக்கின்றன. ஜ்ஞானமயனுன ஜீவனுக்கும் அந்தர்யாமியாய் விளங்கும் 'விஜ்ஞாநம்' வாஸுதேவனே என்று நிர்ணயிப்பதன் மூலம் விஷ்ணுபரத்வத்தை விளங்கவைக்கிறது இவ்வுபனிஷத். "ஸர்வபூ₄தாதி₄வாஸம் ச யத்₃ பூ₄தேஷு வஸத்யபி...வாஸுதே₃வ:" என்று வாஸுதேவஶப்த நிர்வசனத்தை உரைக்கும் இவ்வாக்கியத்தை,

"ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத: |
ததஸ் ஸ வாஸுதே₃வேதி வித்₃வத்₃பி₄: பரிபட்₂யதே || "
[1-2-12]

[இவன் எல்லாப்பொருள்களிலும் வஸிக்கிருனுகையாலும், எல்லாப் பொருள்களும் இவனிடத்தில் வாழ்கின்றனவாகையாலும், இவன் ஞானிகளால் வாஸுதேவன் என்று படிக்கப்படுகிருன்] என்றும்,

"வஸந்தி தத்ர பூ₄தாநி பூ₄தாத்மந்யகி₂லாத்மநி |
ஸ ச பூ₄தேஷ்வஶேஷேஷு................|| " [6-5-75]

[ஜீவர்களுக்கும், மற்ற எல்லாவற்றுக்கும் ஆத்மாவான அவனிடத்தில் ஜீவர்கள் வாழ்கின்றனர். அவனும் எல்லா ஜீவர்களிடத்தும் வாழ்கிறான்.] என்றும் பராசர மஹர்ஷி விஷ்ணுபுராணத்தில் விளக்கியருளினார். "க்ஷீரவத் பச்யதி ஜ்ஞாநம் லிங்கி₃நஸ்து க₃வாம் யதா₂ க்₄ருதமிவ பயஸி நிகூ₃ட₄ம் பூ₄தே பூ₄தே ச வஸதி விஜ்ஞாநம்" [ஞானிகள் பலநிறப் பசுக்களிலுள்ள பாலைப்போல் ஒருபடிபட்டதாக ஜீவாத்மாவைக் காண்கிறார்கள். அக்கறந்த பாலில் மறைந்துறையும் நெய்போல் விஜ்ஞானமான பரமாத்மா ஒவ்வொரு ஜீவனிடத்திலும் வாழ்கிறான்.] என்னும் மந்திரங்களை, வேதம் தமிழ்செய்த மாறன்,

"பிறந்த மாயா பாரதம் பொருத மாயா நீயின்னே
சிறந்த கால் தீ நீர் வான் மண் பிறவுமாய பெருமானே!
கறந்த பாலுள் நெய்யேபோல் இவற்றுளெங்கும் கண்டுகொள்
இறந்து நின்ற பெருமாயா! உன்னை எங்கே காண்கேனே"

என்று விஷ்ணுபரமாக விவரித்தருளினார். உபப்ரும்ஹண நிரபேக்ஷமாக, பகவதஸாதாரணமான வாஸுதேவசப்தத்தை ப்ரயோகிப்பதன் மூலம் விஷ்ணுபரத்வத்தை விளங்கவைத்தது இவ்வுபநிஷத்து. ஆக இவ்வளவால், ரிஷிகளாலும், ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் விவரிக்கப்பட்டும் ஆதரிக்கப் பட்டும் போந்த ப்ரஹ்மபிந்தூபநிஷத்திலிருந்து வாஸுதேவனே ஸர்வாந்தர்யாமியென்னும் அர்த்தம் நிர்ணயிக்கப்பட்டதாயிற்று.

## நாராயணவல்லியின் அந்தர்யாமி நிர்ணயம்

அந்தர்யாமித்வம் இருவகைப்படும். தன் ஸ்வரூபத்தாலே ஸர்வவஸ்துக்களையும் வியாபித்திருப்பது ஒருவகை. இதுவே மேலே எடுத்த உபநிஷத் வாக்யங்களிலே விவரிக்கப்பட்டது. உபாஸகர்களை அநுக்ரஹிப்பதற்காக அவர்களுடைய ஹ்ருதயகமலத்திலே திவ்யமங்கள விக்ரஹத்துடன் கூடியவனாய் எழுந்தருளியிருப்பது இரண்டாம்வகை. நம்பிள்ளையீடு (7-3-1)ல் எடுக்கப்பட்ட ஐதிஹ்யத்தை இங்கு அநுஸந்திப்பது. "இந்தீ₃வரஶ்யாம: ஹ்ருத₃யே ஸுப்ரதிஷ்டி₂த:" முதலான ரிஷி வசனங்களும், "வெள்ளைச் சுரி சங்கொடாழியேந்தி தாமரைக்கண்ணன் என் நெஞ்சினூடே புள்ளைக்கடாகின்றவாற்றைக் காணீர்" முதலான ஆழ்வார் பாசுரங்களும் பகவான் திருமேனியுடனும், சங்கசக்ராதிகளுடனும் எழுந்தருளியிருக்கிறான் என்பதற்கு ப்ரமாணம். பரம், வ்யூஹம், விபவம்,

அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து நிலைகளில் நான்காவதாகக் கணக்கிடப்படும் அந்தர்யாமி நிலையென்பதும் இதுவேயாகும். நாராயணவல்லியில் பதினோராவது அநுவாகமான நாராயண ஸூக்தத்தில் "விச்வாத்மாநம் பராயணம் நாராயணம்" என்றும், "ஆத்மா நாராயண: பர:" என்றும்,

"யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேऽபி வா ।
அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த: ॥"

[இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமாயுள்ளவற்றையெல்லாம் உள்ளும் புறமும் வியாபித்து நிற்கிறான் நாராயணன்] என்றும் ஸ்வரூபத்தாலே எல்லாவற்றையும் வியாபித்து நிற்கும் அந்தர்யாமி நிலையைச்சொல்லி, "பத்மகோஶப்ரதீகாஶம் ஹ்ருதயம்" என்று தொடங்கி,

"தஸ்ய மத்₄யே வஹ்நிஶிகா₂ அணீயோர்த்₄வா வ்யவஸ்தி₂த:
நீலதோயத₃மத்₄யஸ்தா₂ வித்₃யுல்லேகே₂வ பா₄ஸ்வரா
நீவாரஶூகவத் தந்வீ பீதா பா₄ஸ்யாத் தநூபமா
தஸ்யாஶ் ஶிகா₂யா மத்₄யே பரமாத்மா வ்யவஸ்தி₂த:
ஸ ப்₃ரஹ்மா ஸ ஶிவஸ் ஸேந்த்₃ரஸ் ஸோக்ஷர:
பரமஸ்ஸ்வராட்"

[அந்த ஹ்ருதயத்தின் நடுவில் மெல்லியதாயும், மேல்நோக்கினதாயுமிருக்கும் வஹ்நிஶிகை இருக்கிறது. அது நீலமேகத்தை நடுவில் கொண்ட மின்னல்கொடிபோல் ஒளியுடனும், நெல் நுனிபோல் மெல்லியதாகவும், மஞ்சள் நிறமானதாகவும், ஒப்பற்றதாகவுமிருக்கிறது. அந்தசிகையின் (திவ்யமங்கள விக்ரஹத்தின்) நடுவில் பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான். அவன் பிரமனுக்கும் அந்தர்யாமி; சிவனுக்கும் அந்தர்யாமி; இந்திரனுக்கும் அந்தர்யாமி; கர்மத்திற்கு வசப்படாதவனும், மேலானவனுமான முக்தாத்மாவிற்கும் அந்தர்யாமி அவனே.] என்பதுவரையில் ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களை விபூதியாகக்கொண்ட நாராயணனுடைய விக்ரஹ வ்யாப்திரூபமான அந்தர்யாமி நிலையும் விவரிக்கப்படுகிறது. இம்மந்திரங்களின் விரிவுரையை நாராயணஸூக்த வ்யாக்யானத்தில் கண்டுகொள்வது. ஆக, நாராயணவல்லியாலும் நாராயணனே ஸ்வரூபத்தாலும், விக்ரஹத்தாலும் வியாபித்து அந்தர்யாமியாய் விளங்குகிறான் என்று நிர்ணயிக்கப்பட்டதாகிறது.

## ஸகலபலப்ரதன் விஷ்ணுவே

அந்தர்யாமியாய் நின்று அளிப்பவன் அச்சுதனேயென்று அருமறைகள் அறுதியிட்டிருப்பதை அறிவித்தோம். அறம் பொருள் இன்பம் வீடு (தர்மார்த்தகாமமோக்ஷங்கள்) என்னும் அரும் பயன்களை (புருஷார்த்தங்களை) அவனியிலுள்ளோர்க்கு அருளு பவனும் அநந்தனே என்பதே அருமறைமுடிவு என்பதை முடிவு கட்டுவோமினி. அந்தர்யாமியாய் நின்று அவரவர்களுடைய ஸத்தையை நோக்கி ரக்ஷிப்பதோடல்லாமல், அவரவர் விரும்பும் பலன்களையும் கொடுத்து வாழவைப்பவன் வாஸுதேவனே என்பதே வேதாந்தஸித்தாந்தம் என்பதை விளங்கவைப்போம்.

## புருஷஸூக்தத்தில் ஸர்வரக்ஷகநிர்ணயம்

வேதாந்தங்களில் தலைசிறந்ததான புருஷஸூக்தத்திலே முதல் மந்திரமே ரக்ஷ்யத்தினளவல்ல ரக்ஷகனின் பாரிப்பு என்றுபிரகடனப் படுத்துகிறது. (ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்) பரமபுருஷன் முடிகளாயிரம், கண்களாயிரம் கால்களாயிரமுடைய வன்; அடியாரை அளிப்பதற்குத் தகுந்த அளவற்ற ஜ்ஞாநஶக்தி களை உடையவன். (ஸ பூ₄மிம் விஶ்வதோ வ்ருத்வா) அவன் பூமியை எல்லாப்புறங்களிலும் வியாபித்தான். ஒருவனைப் பிடிக்க நினைத்து ஊரை வளையுமாப்போலே யாரேனுமொருசேதனனை அடையலாமோ என்னுமாசையாலே அகிலவுலகையும் வியாபித்துநின்றானவன். இவ்வளவேயோ? (அத்யதிஷ்ட₂த்₃ த₃ஶாங்கு₃லம்) பத்து அங்குலம் அதிகமாகவும் வியாபித்துநின்றான். ரக்ஷ்யத்தினளவன்று ரக்ஷகனின் பாரிப்பு என்கிறது.

புருஷஸூக்தத்தில் இரண்டாவது மந்திரம், இவ்வுலகிலிருப் பார்க்கு அந்நத்தையும், அவ்வுலகு செல்வார்க்கு மோக்ஷத்தையும் அளிப்பவன் பரமபுருஷனே என்கிறது. ஸகலபலப்ரதன் விஷ்ணுவேயென்றபடி. (புருஷ ஏவேத₃ம் ஸர்வம் யத்₃ பூ₄தம் யச்ச ப₄வ்யம்... யத₃ந்நேநாதிரோஹதி) அவனளிக்கும் அந்நந் தினால் மறையாமலிருப்பதும், சென்றதும், உள்ளதும், வருவது மான முக்காலத்திலுள்ள மூவுலகும் பரமபுருஷனே. இத்தால் தான் அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை (இருப்பை) நோக்குவ தோடல்லாமல், உலகினர்க்கு உணவை ஊட்டி ஊக்குவிப்பவ னும் புருஷனே என்றதாகிறது. இவ்வுலகில் உணவூட்டுமளவே யோவென்னில்: (உதாம்ருதத்வஸ்யேஶாந:) மேலுலகத்திலும்

மோக்ஷானுபவமாகிற உணவை ஊட்டுபவன் இவனேயென்கை. இவ்வுலகில் அந்நமளிப்பதுடனன்றியில், அங்கு சென்றாலும், "அஹமந்நாத₃:" [நான் (பரமபுருஷனின் ப்ரீதியாகிற) அந்நத்தை அருந்துபவன்] என்னச்செய்பவன் இவனே. (அம்ருதத்வஸ்ய ஈஶாந: புருஷ:) ஈசானன் என்று உலகில் பிரஸித்திபெற்ற அவனன்றுகிடீர் இவன். மோக்ஷபலனுக்குக் கண்காட்டியாகவும் கைகாட்டியாகவும் நிற்கும் அவனைப்போலன்றியே மோக்ஷத்தை நேரே அளிக்கும் ப்ரபுவாயிருப்பவன் இவன். ஆக, இம்மந்திரத்தால் எல்லாச் சேதநர்க்கும் அவரவர் விரும்பும் பலன்களை அளித்து ரக்ஷிப்பவன் அச்சுதனே என்றதாயிற்று.

மூன்றாவது மந்திரத்திலே இவ்வுலக இன்பங்களையும், அவ்வுலகப்பேரின்பத்தையும் அநுபவிக்குமிடங்களான உபயவிபூதியையும் உடையவன் இவனே என்கிறது. (பாதோ₃ஸ்ய விஶ்வா பூ₄தாநி) இவ்வுலகெல்லாம் அவன் செல்வத்தில் ஒரு பகுதி. அதில் மூன்று பகுதி பரமபதத்திலுள்ளது. ரக்ஷணாஸ்தானங்களான உபயவிபூதியையும் உடையவன் இவனாகையாலேயும் இவனே ரக்ஷகன் என்று அறுதியிடுகிறது.

நாலாவது மந்திரத்தில், பரமபதத்திலே நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருக்குமிருப்பையும் மதியாமல், தன் ரக்ஷணம் நிறம் பெறுவதற்காக, இவ்வுலகிலே உயிரளிப்பான் எந்நின்றயோனியுமாய்ப் பிறந்து பரந்தான் என்கிறது. (த்ரிபாதூ₃ர்த்₄வ உதை₃த் புருஷ:) (ஊர்த்₄வ: புருஷ:) ஊர்த்வலோகமான பரமபதத்தில் நிற்கும் பரமபுருஷன். ரக்ஷணத்தில் ஊற்றத்தாலே உயர நிற்பவன் தன்னைத் தாழவிட்டான் என்கிறது. (த்ரிபாந் உதைத்) ப்ரத்யும்னன, ஸங்கர்ஷணன், அநிருத்தன் என்னும் மூன்று அவதாரங்களை உடையவனாகி, 'இவ்வுலகையெல்லாம் ரக்ஷிக்கக் கடவேன்' என்று ஸங்கல்பித்தான். (பாதோ₃ஸ்யேஹாப₄வாத் புந:) இவனுடைய ஒரு அவ்தாரமான அநிருத்தன் இங்கு மறுபடியும் அவதரித்தான். இப்படி அவதரித்தது ஒன்றிரண்டு அவதாரமேயோ என்னில்: (ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாஶநாநஶநே அபி₄) அதற்குப்பின் உணவருந்தும்- தேவமநுஷ்யாதிகளுக்காகவும், உணவருந்தாத கல்லாகவும, கட்டியாகவுமிருக்கும் சேதனருக்காகவும் எந்நின்றயோனியுமாய்ப்பிறந்து பரந்தான் என்கை.

ஆக இப்படி உபக்ரமத்தில் (ஆரம்பத்தில்), அந்தர்யாமியாய் நின்றும் அவரவர் விரும்பும் பலன்களை அளித்தும், அவதாரங்கள் செய்தும் ரக்ஷிப்பவன் புருஷோத்தமனே என்று நிர்ணயித்து, உபஸம்ஹாரத்திலும் (முடிவிலும்) இவ்வர்த்தங்களையே வலியுறுத்து கிறது. "தமேவம் வித்₃வாநம்ருத இஹ ப₄வதி நாந்ய: பந்தா₂ வித்₃யதேயநாய" [ஆதித்யவர்ணனை அந்த மஹாபுருஷனை இப்படி அறிபவனே இந்த ஜந்மத்தில் மோக்ஷமடைகிறான். மோக்ஷமடைய வேறு மார்க்கமில்லை.], என்று மோக்ஷபலப்ரதன் முகுந்தனே என்று முடிவுகட்டியது "ப்ரஜாபதிஶ் சரதி க₃ர்ப்பே₄ அந்த:" என்று அந்தர்யாமியாய் நின்று நோக்குபவனும் நாராயணனே என்று நவின்றது. "அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே" [பிறப்பற்ற வனாயிருந்தும் பலபடியாகப் பிறக்கிறான் பரமபுருஷன்] என்று அவதாரம் செய்து அளிப்பவன் அச்சுதனே என்று அறைந்தது. "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ...இஷ்டம் மநிஷாண, அமும் மநிஷாண, ஸர்வம் மநிஷாண" [உனக்கு ஸ்ரீபூமிதேவிகள் பத்னிகளாவர்; இஷ்டத்தைக்கொடும்; இந்தக் கைங்கரியத்தைக் கொடும். எல்லாவற்றையும் கொடும்] என்று பிராட்டிகளுடன் கூடிய பரந்தாமனே இப்படி ஸர்வரக்ஷகனாகவும்,ஸகலபலப்ரதனாகவும் ஆகிறான் என்று சாற்றியது. ஆக, லக்ஷ்மீநாதனான பரமபுருஷன் ஒருவனையே ப்ரதிபாதிக்கும் புருஷஸூக்தத்திலிருந்து நாராயணனே ஸர்வ ரக்ஷகனும் ஸகலபலப்ரதனுமென்று நிர்ணயிக்கப்பட்டதாயிற்று.

## நாராயணவல்லியில் பலப்ரதநிர்ணயம்

ஸகலவேதாந்த நிகமநபூதமான நாராயணவல்லியும், ஸர்வாந்தர்யாமி நாராயணனே என்று நிர்ணயித்ததுடன் நில்லாமல் ஸகலபலப்ரதனும் நாராயணனே என்றும் நிர்த்தாரணம் செய்தது. (ஸஹஸ்ரஶீர்ஷம்) முடிகளாயிரமுடையவன்; அளவற்ற ஜ்ஞாநஶக்திகளை உடையவன் என்கை. பாலநஸாமர்த்யத்தை உடையவன் இவனே யென்றபடி. (தேவம்) ரக்ஷணத்தாலே நிறம்பெறுமவன். (விச்வாக்ஷம்) அனைவர்க்கும் கண்ணாயிருந்து காக்குமியல்வினன். (விச்வசம்புவம்) உலகிற்கு எல்லாவிதமான நன்மைகளையும் கொடுப்பவன். (விச்வம்) இவ்வுலகிற்கு எல்லா நன்மைகளையும் தானே செய்துதரவேண்டும்படி இவ்வுலகைத் தானாகவே அபிமானித்து நிற்பவன். இப்படிப்பட்டவன் யாரோவெனில்: (நாராயணம் தேவம்) நாராயணன் என்னும் தனிப்பெயரையுடைய தேவன். (விச்வம் நாராயணம்) உலகைத் தானாக அபிமானிப்பதற்குக்

காரணம் நரஸமூஹங்களையெல்லாம் இருப்பிடமாகக் கொண்டவனாகவும், அவற்றுக்கு இருப்பிடமாகவும் இருக்கையாலேயே என்கிறது. (நாராயணம்) நரஸமூஹங்களான சேதநர்களுக்கு ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருந்து ரக்ஷிப்பவன். (தேவம்) இப்படி ரக்ஷிக்கையாலே ஒளிபெறுமவன். (அக்ஷரம்) தன் ரக்ஷண ஸ்வபாவத்திற்கு என்றும் அழிவில்லாதவன். (பரமம் ப்ரபும்) பலப்ரதானம் செய்வதில் மேலானவனாயிருப்பவன். தன்னையே தமர்க்கு நல்குபவன். (விச்வத: பரமம்) ரக்ஷிக்கப்படும் உலகைக் காட்டிலும் ரக்ஷகனை தான் உயர்ந்துநிற்பவன். (நித்யம்) என்றும் ரக்ஷிப்பதையே ஸ்வபாவமாகக்கொண்டவன். (விச்வம் நாராயணம்) என்றும் அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்கி ரக்ஷிப்பவன். (ஹரிம்) "ஹரிர் ஹரதி பாபாநி" [பாபங்களைப் போக்கடிப்பவன் ஹரியே] என்கிறபடியே விரோதிகளை நிரஸிப்பதன்மூலம் ரக்ஷிப்பவன். (விச்வமேவேதம் புருஷ:) இவ்வுலகெல்லாம் தானேயென்னும்படி அந்தர்யாமியாயிருப்பவன். (தத் விச்வமுபஜீவதி) உலகெல்லாம் அவனைப் பற்றிநின்றே ஜீவிக்கிறது. இவ்வுலகைப் படைத்தும், ப்ரளயஜலத்திலிருந்து எடுத்தும், ப்ரளயாபத்திலே உண்டும், பிறகு உமிழ்ந்தும், இப்படி ஸர்வவிதமான ரக்ஷணங்களையும் செய்பவன் இவனேயென்றபடி. இதற்குக் காரணம் யாதெனில்: (பதிம் விச்வஸ்ய) உலகத்திற்குப் பதியாயிருப்பவன். உடையவனாகையாலே உடைமையை விடமாட்டாமல் ரக்ஷிக்கிறபடி. (ஆத்மேச்வரம்) தான் பிறருக்கு ரக்ஷகனாயிருக்குமாப்போலே தனக்கு வேறொரு ரக்ஷகனில்லாதவன். (சாச்வதம் சிவம்) என்றும் ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் ரக்ஷிக்கும் சுத்தியை உடையவன். (அச்யுதம்) தன்னை அண்டியவர்களை அகலவிடாமல் அளிப்பவன். (நாராயணம்) இதற்குக் காரணம் அவர்களோடு இயற்கையாக உள்ள ஸம்பந்தம். (மஹாஜ்ஞேயம்) ரக்ஷகர்களாக அறியத்தக்கவர்களுள் சிறந்தவன். (விச்வாத்மாநம்) உலகிற்கு ஆத்மாவாயிருந்து அளிப்பவன். (பராயணம்) மேலான ப்ராப்யாமாகவும், ப்ராபகமாகவுமிருந்து ரக்ஷிப்பவன்.

(அநந்தம்) பல அவதாரங்களெடுத்து ரக்ஷிப்பவன். (அவ்யயம்) அவதாரங்களெடுத்தபோதிலும் குறைவுபடாமல் நிறைவு பெறுபவன். (கவிம்) தன் இனிய பேச்சுக்களாலே அடியாரை அளிப்பவன். (ஸமுத்₃ரேந்தம்) அவதாரங்களுக்கு மூலமான முதலவதாரம். திருப்பாற்கடலிலே சாய்ந்தருளியபடி. (விச்வசம்புவம்) திருப்பாற்கடலிலிருந்து கொண்டு உலகுக்கு எல்லா நன்மை

யையும் செய்பவன். ஆக. இவ்வளவால் எல்லாப்பலன்களையும் அளித்தும் அவதாரங்களையெடுத்தும் சேதநரை ரக்ஷிப்பவன் நாராயணனே என்னுமர்த்தம் நாராயண ஸூக்தத்திலிருந்தும் நிர்ணயிக்கப்பட்டது. நாராயண ஸூக்த வ்யாக்யானத்திலே விரிவு கண்டுகொள்வது. ஸகலபலத்தையும ஸாதித்துக் கொடுப்பவன் நாராயணனே என்னும் இவ்வோந்த விழுப்பொருள்,

"தே₃வேந்த்₃ரஸ் த்ரிபு₄வநமர்த்த₂மேகபிங்க₃ஸ்
ஸர்வர்த்₃தி₄ம் த்ரிபு₄வநக₃ாஞ்ச கார்த்தவீர்ய: |
வைதே₃ஹ: பரமபத₃ம் ப்ரஸாத்₃ய விஷ்ணும்
ஸம்ப்ராப்தஸ் ஸகலப₂லப்ரதே₃ா ஹி விஷ்ணு:"

[விஷ்ணுவை ஆராதித்து, தேவேந்திரன் மூவுலகையும், குபேரன் தனத்தையும், கார்த்தவீரியார்ஜுனன் மூவுலகிலுள்ள எல்லாப் பெருமைகளையும், ஜனகர் பரமபதத்தையும் அடைந்தனர். விஷ்ணுவானவர் எல்லாப் பலனையும் தருபவரன்றோ.] என்று விஷ்ணுதர்மத்திலே விளக்கப்பட்டது.

## முக்தி பூமிப்ரதன் முகுந்தனே

இப்படி ஸகலபலப்ரதனாக இருந்தபோதிலும், முக்தி பலப்ரதானத்திலேயே பகவானுக்கு விசேஷமான அபிமானமுண்டு. முக்தியளிப்பது என்பது முகுந்தன் ஒருவனுக்கேயுள்ளதொரு தனிப்பெருமை. 'மு' என்னும் எழுத்து முக்தியையும், 'கு' என்னும் எழுத்து பூமியையும் குறிக்குமாகையால் முகுந்தன் என்னும் பெயர் முக்தி பூமிப்ரதன் (முக்திபூமியை அளிப்பவன்) என்று பொருள் படுவதாகிறது. முக்தி பூமியாவது,— மோக்ஷாநுபவஸ்தலமான பரமபதம். அதற்கு நிர்வாஹகனாயிருப்பவனே அப்பதத்தைப் பிறருக்கும் தரமுடியும. பரமவ்யோம பரமாகாசாதிஶப்தங்களாலே சாஸ்த்ரப்ரஸித்தமான அப்பரமபதத்துக்கு நிர்வாஹகனாயிருந்து கொண்டு, அடியார்க்கு அதையளிப்பவனும் விஷ்ணுவேயென்பதை விளக்குவோமினி.

## நான்மறைமுடிகளில் பரமபதநிலய நிர்ணயம்

"தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ஸதா₃ா பஶ்யந்தி ஸூரய. |
தி₃வீவ சக்ஷுராததம் | தத்₃ விப்ராஸோ விபந்யவோ
ஜாக்₃ருவாம்ஸஸ் ஸமிந்த₄தே| விஷ்ணோர் யத் பரமம் பத₃ம்||"

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள். அப்பரமபதம், எங்கும் (ஒளியால்) வியாபித்திருப்பவனும், உலகிற்கெல்லாம் கண்ணாயிருப்பவனுமான ஸூர்யன்போல் ப்ரகாசமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபதமிருக்கிறதோ, அதில் மேதாவிகளும் துதிப்பதையே தொழிலாகக்கொண்டவர்களுமான நித்யஸூரிகள் விழிப்புடன் விளங்குகிறார்கள்.] என்பது ரிக் யஜுஸ் ஸாமவேதம் மூன்றிலும படிக்கப்படுவதொரு மந்திரம், இதில் அப்ராக்ருதமானதொரு ஸ்தான விசேஷம் உள்ளதென்பதும், அது விஷ்ணுவினுடைய தென்பதும், அதிலே பகவானை எப்போதும் கண்டு அநுபவிப்பவர்களான நித்யஸூரிகள் பலர்உளர் என்பதும், அவர்கள் பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துகிறார்களென்பதும் தெளிவு படுத்தப்படுகிறது. இனி இம்மந்திரத்தை விவரிப்போம்.

(தத் விஷ்ணோ: பரமம் பதம்) விஷ்ணுவினுடையதான அந்த மேலான ஸ்தானத்தை. (ஸதா பச்யந்தி ஸூரய:) நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள். 'ஸதா₃ பச்யந்தி' [எப்போதும் காண்கிறார்கள்] என்றதால், இவர்கள் முக்காலங்களிலும் பகவதநுபவம் செய்பவர்கள் என்பதும் ஸம்ஸாரவாஸனையும் அற்றவர்கள் என்பதும் தெளிவாகிறது. 'பரமம் பத₃ம்' என்கையாலே விஷ்ணுவினுடையதான இந்த ஸ்தாநம் ப்ரஹ்மாதிலோகங்களைக் காட்டிலும் மிகவுயர்ந்ததென்று விளங்குகிறது. (தி₃வீவ சக்ஷுராததம்) ஆகாயத்தில் (ஒளியாலே) வியாபித்துநிற்கும் லோகசக்ஷுஸ்ஸான ஸூர்யனைப்போலே ஒளி பெற்று விளங்குவது இப்பரமபதம். இவ்வுலகிலுள்ள பொருள்களுள் ஸூர்யனே மிகவும் பிரகாசத்தையுடையவனாய் விளங்குகிறானகையாலே, அவனை உபமானமாகச் சொல்லுகிறது. உண்மையில் கோடிஸூர்யப்ரகாசத்தையும் விஞ்சியிருப்பதாகவன்றோ பரமபதம் சாஸ்திரங்களிலே கோஷிக்கப்படுகிறது.

''அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்தா₂நம் விஷ்ணோர் மஹாத்மந:|
ஸ்வயைவ ப்ரப₄யா ராஜந் து₃ஷ்ப்ரேக்ஷம் தே₃வதா₃நவை: ||''

[அரசனே! மஹாத்மாவான விஷ்ணுவினுடையதான அந்த ஸ்தானம் ஸூர்யன் அக்னி முதலானவற்றின் ஒளியையும் விஞ்சி நிற்பது. தன் ஒளியாலே தேவர்களாலும், அஸுரர்களாலும் காணமுடியாததாய் விளங்குகிறது அது.] என்றல்லவோ மஹாபாரதத்தில் வேத

வியாஸரும் விளக்கியருளினர். (யத்விஷ்ணோ: பரமம்பதம்) விஷ்ணுவினுடையதான யாதொரு பரமபதம் உண்டோ. வேதாந்தங்களிலே அதனுடைய ப்ரஸித்தியைக் காட்டுவதற்காக யச்சப்தத்தாலே மறுபடியும் அநுவதிக்கிறது. (தத்) தஸ்மிந். அந்தப்பரமபதத்திலே. (விப்ராஸ:) ஞானிகளான நித்யமுக்தர்கள். (விபந்யவ:) 'பநு-ஸ்துதௌ' என்று தாதுவாகையாலே, துதிப்பதையே தொழிலாகக் கொண்டவர்கள். (ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே) விழிப்புடன் விளங்குகிறார்கள். அன்பின் மிகுதியாலே, அப்ராக்ருததேசத்திலும் 'என்ன தீங்குவருகிறதோ?' என்று அஸ்தாநே பயஶங்கைபண்ணி அஞ்சி அதிஜாக்ரதையுடன் விளங்குகிறார்கள். "நமோ நாராயணாயவென்று பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்று விஷ்ணுசித்தர் இவ்வேதவாக்யத்தை விளக்கியருளினர்.

இவ்வாக்யத்திலிருந்து பரமாத்மா விஷ்ணுவேயென்பதும், அவன் மேலானதொரு உலகத்தில் எழுந்தருளியிருக்கிறான் என்பதும், அவ்வுலகம் மிகப் பிரகாசம் பொருந்தியதென்பதும் அங்கு எக்காலத்திலும் அவனைக்கண்டு கொண்டிருக்கும் ஸூரிகள் பலர் உள்ளனரென்பதும், அவர்கள் பல்லாண்டும் அவனைச் சூழ்ந்திருந்து ஏத்திப் பல்லாண்டு பாடும்படியான தன்மையை உடையவர்களென்பதும் தெளிவாகிறது. இத்தால் குணமில்லை, ரூபமில்லை, ஸ்தானமில்லை, ஜீவர்கள் வேறில்லை, இங்கேயே ஜீவன் ப்ரஹ்மமாவதுதான் மோக்ஷம் என்றெல்லாம் கூறிவரும் அத்வைதிகளின் வாதம் அடியறுக்கப்பட்டதாயிற்று. **"ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்₃ரஹ்ம நிஷ்களம்"** [முண்ட 2-2-10] [பொன்மயமான மேலான உலகத்தில், ரஜோகுணமற்றதும், அவயவங்களில்லாததுமான ப்ரஹ்மமிருக்கிறது.] **"யோ அஸ்யாத்₄யக்ஷ: பரமே வ்யோமந் ஸோ அங்க₂ வேத₃ யதி₃வா ந வேத₃"** [தை-அஷ்ட (2-8-9-6)] [எவனொருவன் இவ்வுலகத்திற்கு அதிபதியாய் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிறானோ] **"தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே யத்ர பூர்வே ஸாத்₄யாஸ் ஸந்தி தே₃வா:"** [யாதொரு பரமபதத்தில் ஸாத்யர்கள் எனப்படும் தேவர்கள் இருக்கிறார்களோ, அந்தப் பரமபதத்தை அவர்கள் மஹிமையுடையவர்களாய் அடைகிறார்கள்.] **"பரமே வ்யோமந் ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா"** [தை-ஆ 1-2] [முக்தன் பரமாகாசத்தில் ப்ரஹ்மத்துடன் கூடிய எல்லாக்காமங்களையும் (கல்யாண குணங்களையும்) அனுபவிக்கிறான்.] **"நாகஸ்ய ப்ருஷ்டே₂ மஹதோ மஹீயாந்"**

[தை-நா-1] [பெரியதிலும் பெரியவன் பரமபதத்தின் மேலுள்ளான்.] "த்ரிபாத₃ஸ்யாம்ருதம் தி₃வி" "தமஸ: பரஸ்தாத்" [பு-ஸூ] "ரஜஸ: பராகே" [ருக்] [முக்குணங்களுள்ள ப்ரக்ருதிக்கு மேலுள்ளலோகம்] என்று பல வேதவாக்யங்களில் உத்கோஷிக்கப்பட்ட பரம பதம் விஷ்ணுவினுடையதே என்று நிலைநாட்டித்தருகின்றன "தத்₃ விஷ்ணோ:" என்று தொடங்கும் இவ்வேதவாக்யங்கள். "ஸோத்₄வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பத₃ம்" [கட 1-3-9] [ஸம்ஸார வழிக்கு மேலான விஷ்ணுவின் பரமபதத்தை அவன் அடைகிருன்] என்று யஜுர்வேதத்தைச் சேர்ந்த கடோப நிஷத்திலும். "ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரோபாஸகோ வைகுண்ட₂பு₄வநம் க₃மிஷ்யதி.........ஏதத₃த₂ர்வசிரோதீ₄தே" [அஷ்டாக்ஷரத்தை உபாஸிப்பவன் வைகுண்டலோகத்தை அடைகிருன்...இதை அதர்வணவேதசிரஸ் சொல்லுகிறது] என்று நாராயணோபனிஷத்திலுள்ள அதர்வணசிரோவாக்யத்திலும் உத்கோஷிக்கப்பட்டதிலிருந்து, இவ்வர்த்தமே நான்மறைகள் கண்ட நன்முடிவு என்று நிலைநாட்டப்பட்டதாகிறது.

## கௌஷீதக்யுபநிஷத்தில் முக்திப்ரத நிர்ணயம்

இவ்வுபநிஷத்தின முதல் அத்தியாயத்தில் ஸம்ஸார மார்க்கமாகிற தூமாதிமார்க்கத்தை முதலில் சொல்லி, மோக்ஷமார்க்கமாகிற அர்ச்சிராதி மார்க்கத்தை விரிவாக உபதேசித்து, அதன் வழியாக இச்சேதனன் பரமபதத்திற்குச் சென்று தன் ஸ்வரூபம் விளங்கப்பெற்று ஸ்ரீமந் நாராயணனின் மடியிலேயேறி வார்த்தை சொல்லி, ப்ரஹ்மாநுபவத்தை அநுபவிக்கும் ப்ரகாரம் உபதேசிக்கப்படுகிறது. இங்கு முக்திப்ரதனாகச் சொல்லப்படுமவன் திருவுக்கும் திருவாகியசெல்வனேயென்பதைக் காண்போமினி.

**"ஸ ஏதம் தே₃வயாநம் பந்த₂ாநமாபத்₃ய அக்₃நிலோகமாக₃ச்ச₂தி ஸ வாயுலோகம் ஸ ஆதி₃த்யலோகம் ஸ இந்த்₃ரலோகம் ஸ ப்ரஜாபதிலோகம் ஸ ப்₃ரஹ்மலோகம் ||**

[தேவமார்க்கமெனப்படும் அர்ச்சிராதிமார்க்கத்தைப் பற்றி நின்று அச்சேதனன் அக்நிலோகத்திற்கு வருகிருன்; பிறகு வாயுலோகத்திற்கு வருகிருன்; பிறகு வருணலோகத்திற்கும், பிறகு ஆதித்யலோகத்திற்கும், பிறகு இந்திரலோகத்திற்கும், பிறகு ப்ரஜாபதிலோகத்திற்கும் கடைசியாக ப்ரஹ்மலோகத்திற்கும் வருகிருன்.]

இந்த மந்திரத்திலிருந்து முக்தியடைவதற்காக 'ப்ரஹ்மத்தின் உலகம்' என்று அழைக்கப்பெறும் ஒரு உலகிற்குச் செல்லவேண்டு மென்பதும். அதற்கொரு வழியுண்டெபதும். அவ்வழியில் பற்பல உலகங்கள் உள்ளனவென்பதும் உணர்த்தப்படுகின்றன. இப்படி இவன் அக்னிலோகம், வாயுலோகம் முதலான பல உலகங்களின் வழியாகச் செல்லும்போது அந்தந்த உலகிலுள்ள தேவர்கள் இவனை ராஜோபசாரம் செய்து வழியனுப்புகிறார்களென்பதை வேதம் தமிழ் செய்த மாறன், "நாரணன் தமரைக்கண்டுகந்து... தோரணம் நிறைத்தெங்கும் தொழுதனர் உலகே" என்றும்,

"தொழுதனர் உலகர்கள் தூபநல் மலர்மழை
பொழிவனர், பூமியன்றளந்தவன் தமர்முன்னே,
எழுமினென்றிரு மருங்கிசைத்தனர் முனிவர்கள்
வழியிது வைகுந்தர்க்கென்று வந்தெதிரே" என்றும்,

"எதிரெதிர் இமையவர் இருப்பிடம் வகுத்தனர்
கதிரவர் அவரவர் கைநிரைகாட்டினர்" என்றும்,

"மாதவன் தமரென்று வாசலில் வானவர்
போதுமின் எமதிடம் புகுதுகவென்றலும்
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
வேதநல் வாயவர் வேள்வியுள் மடுத்தே" என்றும்,

"ஆள்மின்கள் வானகம் ஆழியான் தமரென்று
வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே" என்றும்,

"மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும்
தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர்" என்றும்,
விவரித்தருளினர்.

"தஸ்ய அரோ ஹ்ரத$_3$: | முஹூர்த்தா யஷ்டிஹா: || விரஜாநதீ$_3$ || தில்யோ வ்ருக்ஷ: || ஸாலஜ்யம் ஸம்ஸ்த$_2$ாநம் || அபராஜிதமாயதநம் || இந்த்$_3$ரப்ரஜாபதீ த்$_3$வாரகே$_2$ாபௌ || விபு$_4$ப்ரமிதம் || விசக்ஷணு ஆஸந்தீ$_3$ || அமிதௌஜா: பர்யங்க: || என்று ப்ரஹ்மத்தின் உலகை வர்ணிக்கும் மந்திரங்கள் அடுத்த படியாகப் படிக்கப்படுகின்றன. இவற்றை விவரிப்போம்.

(தஸ்ய அரோ ஹ்ரத₃:) அந்த ப்ரஹ்மலோகத்தின் அருகில் 'அரம்' என்னும் பெயருள்ளதொரு குளமிருக்கிறது. (முஹூர்த்தா யஷ்டி ஹா:) 'முஹூர்த்தங்கள்' என்னும் பெயர் உள்ளவர்களாய்ப் பிரம்பைக் கையிலேந்தி ப்ரஹ்மத்தை அறியாதவர்களை உட்புகாமல அடித்தோட்டும் ஸூரிகள் சிலர் உள்ளனர். யஷ்டி–பிரம்பு. யஷ்டி ஹா:-பிரம்பினுல் அடிப்பவர்கள். (விரஜா நதீ₃ தில்யோ வ்ருக்ஷ: ஸாலஜ்யம் ஸம்ஸ்தா₂நம்) அங்கு விரஜை என்னும் நதி ஓடுகிறது. 'தில்யம்' என்னும மரமும் ஸாலஜ்யம் எனனும் ஸ்தானமுமுள்ளன. (அபராஜிதமாயதநம்) அபராஜிதம் (ஜயிக்கப்படாதது) என்னும் பெயருள்ள (வைகுண்ட) நகரம் (இவைகளுக்கு அப்பால) உள்ளது. (இந்த்ர ப்ரஜாபதீ த்₃வாரகே₃ாபௌ) இந்திரன ப்ரஜாபதி என்னும பெயர் கொண்ட த்வாரபாலர்கள் உள்ளனர். "வைகுந்தம புகுதலும் வாசலில் வானவர்" என்ருர் ஆழ்வாரும். (விபு₄ப்ரமிதம்) மிகப்பரந்து, பெரிய அளவுடையதான மணிமண்டபம் அடுத்துள்ளது. "ஸஹஸ்ரஸ்தூ₂ணே விமிதே த்₃ருட₄ உக்₃ரே யத்ர தே₃வா நாமதி₄தே₃வ ஆஸ்தே" [ஆயிரக்கணக்கான தூண்களை உடையதும், மிகப்பரந்ததும், பலம்பொருந்தியதும், பிரகாசமுடையதுமான திருமாமணிமண்டபத்தில் தேவாதிதேவன் எழுந்தருளியிருக்கிருன்] என்று மற்ருெரு வேதவாக்கியமும் விளம்பிற்றன்ருே. (விசக்ஷணு ஆஸந்தீ₃) விசக்ஷணை என்னும் பெயருள்ள பீடமொன்று அதிலுள்ளது. இதுவே தர்மம், அதர்மம் முதலானவற்றைக் கால்களாவுடையதாகக் கீர்த்திபெற்ற தர்மாதிபீடமாகும். தன்மேல் ஏறுமவனை ஸர்வஜ்ஞனுக்கவல்ல பெருமை பெற்றிருக்கையால் 'விசக்ஷணை' [ஸமர்த்தை] என்று பெயர்பெற்றதுபோலும். (அமிதௌஜா: பர்யங்க:) அளவற்ற பலத்தையுடைய அநந்தன் இந்தப் பீடத்தின்மேலுள்ள மெத்தையாக இருக்கிருன். 'பர்யங்க:' என்று படுக்கையாகச் சொன்னதாலும், அளவற்ற பலத்தையுடையவன் என்று அநந்தசப்தபர்யாயமான நாமத்தைப் படித்ததாலும் இங்கு படுக்கையாகப் படிக்கப்படுமவன் ஆதிஶேஷனே என்றும், அதில் வீற்றிருக்கும் ப்ரஹ்மம் அநந்தசயனனுன அச்யுதனே என்றும் தெளிவாகிறது.

" க₃ந்த₄ர்வாப்ஸரஸ் ஸித்₃த₄ாஸ் ஸகிந்நரமஹோரக₃ா: |
நாந்தம் கு₃ணாநாம் க₃ச்ச₂ந்தி தேநாநந்தோऽயமுச்யதே ||"
[1-8-17]

[ கந்தருவர்களும், அப்ஸரஸ்ஸுக்களும், ஸித்தர்களும், கின்னரர்களும், மஹாநாகங்களும், இவனுடைய குணங்களின் எல்லையைக் காணமாட்டார்களாகையாலே இவன் அநந்தனெனப்படுகிறுன்] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் பலம் முதலான குணங்களில் அளவற்றவனுயிருப்பதாலேயே இவன் அநந்தன் எனப்படுகிறுன் என்று சொல்லப்பட்டதன்றே. (அமிதௌஜா:) அளவற்ற பலத்தை யுடையவன். "பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே ஸ்வாப₄₁விகீ ஜ்ஞாநப₃லக்ரியா ச" [இவனுக்கு மேலானதும், விதவிதமானதும், இயற்கையானதுமான அறிவு, பலம், செயல் முதலியவை கேட்கப்படுகின்றது] என்று சொல்லப்பட்ட ஸர்வேச்வரனுடைய பலத்திற்கு அளவுண்டாகிலன்றே அவனையும் தாங்கிநிற்கும் இவனுடைய பலத்திற்கு அளவுண்டாவது. இப்படி இவன் பரமபுருஷனும் பிராட்டியும் துகைத்துப் பரிமாறலாம்படியான பலத்தை உடையவனுயிருக்கையாலேயன்றே "ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந ப₃லைக் த₄ாமநி" [மேலான அறிவுக்கும், பலத்திற்கும் ஓரே இருப்பிடமாயிருக்கும் ஆதிசேஷனிடத்தில்] என்று ஆளவந்தாரும் அருளினுர். ஆக, இங்கு 'அமிதௌஜா: பர்யங்க:' என்றதன்மூலம் அநந்த பலனுன ஆதிசேஷனின்மேல் அமர்ந்த அச்யுதனே அருமறைப் பொருள் என்று அறிவிக்கப்பட்டதாகிறது.

"தம் ப்₃ரஹ்ம ஆஹ;– அபி₄த₄ாவத மம யஶஸா விரஜாம் வா஽யம் நதீ₃ம் ப்ராபத்। ந வா அயம் ஜிகீ₃ஷ்யதி' இதி"

இந்த மந்திரம் தன்னைநோக்கி வரும் முக்தசேதனனை உத்தேசித்துப் பரமபுருஷன் ஸ்த்ரீரூபங்கொண்ட சில ஸூரிகளை, அவனையழைத்துவர ஏவுகிறுன் என்று உரைக்கிறது. (தம் ப்ரஹ்ம ஆஹ) 'தமுத்₃தி₃ஶ்ய ப்₃ரஹ்ம ஆஹ' என்றபடி. அடுத்த மந்திரத்தில் சொல்லப்படும் அப்ஸரஸ்ஸுகளிடம் அந்த முக்தசேதனனைக் குறித்துப் பரமபுருஷன் பின்வருமாறு உரைக்கிறுன். (அபிதாவத) ஓடிச்சென்று எதிர்கொள்ளுங்கள். (மம யஶஸா விரஜாம் வாயம் நதீ₃ம் ப்ராபத்) என் அருளாலே இச்சேதனன் ஸூக்ஷ்ம தேஹஸம்பந்தமாகிற ரஜஸ்ஸை-தோஷத்தை—போக்கடிக்கும் விரஜாநதியை அடைந்துள்ளான். (ந வா அயம் ஜிகீ₃ஷ்யதி) அல்லது விரஜாநதியை நெருங்கிக் கொண்டிருக்கிறுன். நீங்கள் அவனை எதிர்கொண்டழைக்க ஓடுங்கள் என்று கீழோடு அந்வயம். ஆக, இதுவரையில் ஸாலோக்யம் (ப்ரஹ்மத்தின் உலகத்தை அடைகை) என்னும் மோக்ஷத்தின் முதற்படி உரைக்கப்பட்டது. இனி ஸாரூப்யம் விவரிக்கப்படுகிறது.

"தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம் ப்ரதித₄ாவந்தி ஶதம் மாலாஹஸ்தா: ஶதமஞ்ஜநஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா:ஶதம் வாஸோஹஸ்தா: ஶதம் ப₂ணஹஸ்தா:| தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி| ஸ ப்₃ரஹ்மாலங்காரேண அலங்க்ருத: ப்₃ரஹ்ம வித்₃வாந் ப்₃ரஹ்மைவ அபி₄ப்ரைதி ||"

(தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம்...ப₂ணஹஸ்தா:) அந்த முக்த சேதனனைக்குறித்து அழகிய ஸ்த்ரீவடிவம் கொண்டிருக்கையால் அப்ஸரஸ்ஸுகள் எனத்தக்க ஸூரிகள் ஐந்நூறு பேர் விரைந்து செல்கின்றனர். நூறுபேர் அவனை அலங்கரிப்பதற்காக மாலைகளை ஏந்திச் செல்கின்றனர். நூறு பேர் அலங்கரிப்பதற்கு மைகளை எடுத்துச் செல்கின்றனர். நூற்றுவர் சூர்ணங்களைக் கைக்கொண்டு செல்கின்றனர். நூறுபேர் வஸ்த்ரங்களைக்கொண்டு செல்கின்றனர். நூற்றுவர் பூஷணங்களை எடுத்துச் செல்கின்றனர். இங்கு ஐந்நூறு பேர் என்றது கணக்கற்றவர்கள் என்றபடி, மாலை முதலிய ஐந்து பொருள்களைச் சொன்னது, திருவடி நிலைகள், பூர்ண கும்பங்கள், தீபங்கள் முதலிய பல பொருள்களுக்கும் உபலக்ஷணம். இவ்வாக்கியத்தை,

"விதிவகை புகுந்தனர் என்று நல்வேதியர்
பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்
நிதியும் நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும்
மதிமுகமடந்தையர் ஏந்தினர் வந்தே" என்று

ஆழ்வாரும் விவரித்தருளினர். 'அப்ஸரஸ:' என்றதை 'மதிமுக மடந்தையர்' என்றும், 'சூர்ணஹஸ்தா:' என்றதை 'நற்சுண்ணமும்' என்றும் தமிழ்ப்படுத்தி இங்கு சொல்லப்பட்ட ஐந்து பொருள்களும் பூர்ணகும்பம் முதலிய பல பொருள்களும் உபலக்ஷணம் என்று உணர்த்தியருளியுள்ளார் வேதம் தமிழ செய்த மாறன். (தம் ப்₃ரஹ்மாலங்காரேண அலங்குர்வந்தி) ப்ரஹ்மஸாலோக்யம் பெற்ற அவனை ப்ரஹ்மத்தின் அலங்காரத்தினால் அலங்கரிக்கிறார்கள்; ப்ரஹ்ம ஸாரூப்யமும் பெறச்செய்கிறார்கள். (ஸாரூப்யம்—ஒரே உருவை உடையவனாகை) (ஸ ப்₃ரஹ்மாலங்காரேண அலங்க்ருத: ப்₃ரஹ்ம வித்₃வாந் ப்₃ரஹ்மைவ அபி₄ப்ரைதி) அப்படி ப்ரஹ்மத்தின் அலங்காரத்தினால் அலங்கரிக்கப்பட்டு அந்த ப்ரஹ்மஜ்ஞானி ப்ரஹ்மத்தினிடம் செல்கின்றான். ஸாலோக்ய ஸாரூப்யங்களைப் பெற்றவன் ஸாமீப்யம் என்னும் மூன்றாவது நிலையையும் அடை

கிறான் என்றபடி. 'ப்ரஹ்ம' என்றதால் இது ப்ரஹ்மாவின் உலகமன்று, பரப்ரஹ்மத்தின் உலகமே என்று உணர்த்துகிறது. அவன் எப்படி ஸாமீப்யஸாயுஜ்ய நிலைகளை அடைகிறான் என்பதை விவரிக்கின்றன அடுத்துள்ள மந்திரங்கள்.

(ஸ ஆக₃ச்ச₂த்யரம் ஹ்ரத₃ம் தந் மநஸாத்யேதி தம் ருத்வா ஸம்ப்ரதி விதே₃ா மஜ்ஜந்தி) அரம் என்னும் குளத்தை அடைகிறான் அவன். அதில் மநஸ்ஸாலேயே குளித்துக் கடந்து செல்கிறான். இப்போதும் ஞானிகள் அக்குளத்தில் குளித்தே செல்கின்றனர். (ஸ ஆக₃ச்ச₂தி முஹூர்த்தாந் யஷ்டிஹாந் தேஸ்மாத₃பத்₃ரவந்தி) அவன், கையில் பிரம்பேந்தி (ப்ரஹ்மஜ்ஞாநமற்றவர்களை)விரட்டும் முஹூர்த்தர்களை அடைகிறான். இவன் ஞானியாகையாலே இவனைக் கண்டு விலகிச்செல்கின்றனர் அவர்கள். (ஸ ஆக₃ச்சதி விரஜாம் நதீ₃ம் தாம் மநஸைவாத்யேதி) விரஜாநதியை அடைகிறான் அவன்; மனஸ்ஸினாலேயே அதைத் தாண்டுகிறான். (தத் ஸுக்ருத து₃ஷ்க்ருதே து₄நுதே தஸ்ய ப்ரியா ஜ்ஞாதய: ஸுக்ருதமுபயந்தி அப்ரியா து₃ஷ்க்ருதம்) அவன் புண்யபாபங்களை விட்டுச்செல்கிறான்; அவனுக்கினிய உறவினர்கள் புண்யத்தையும், அவன் விரோதிகள் பாபத்தையும் அடைகிறார்கள். இந்தப் புண்யபாபவிமோசனம் தேஹத்தை விட்டவுடன் ஏற்படுவதென்றும், விரஜாநதீதரணத்திற்குப்பின் ஏற்படுவதாகப் பொருள்கொள்ளலாகாதென்றும் ஸூத்ர பாஷ்யகாரர்கள் நிச்சயித்தார்கள். இங்கு ஸகல புண்யபாபவிமோசனத்தைச் சொன்னதிலிருந்தும் இது மோக்ஷஸ்தானமே என்பது தெளிவாகிறது. இது மோக்ஷமன்று என்னும் அத்வைதிகளின் வாதம் ஆதாரமற்றதாகிறது.

இனிமேல் ஸமானகுணயோகம் (ப்ரஹ்மத்தின் குணத்தை உடையவனாகை) என்னும் மோக்ஷத்தின் கடைசிப்படியான ஸாயுஜ்யநிலை வர்ணிக்கப்படுகிறது. (ஸ ஆக₃ச்சதி தில்யம் வ்ருக்ஷம் தம் ப்ரஹ்ம₃க₃ந்த₄: ப்ரவிஶதி...ஸ ஆக₃ச்ச₂தி அபராஜிதமாயதநம் தம் ப்₃ரஹ்மதேஜ: ப்ரவிஶதி) அவன் தில்யம் என்னும் மரத்தையும் ஸாலஜ்யம் என்னும் இடத்தையும் அடைந்தவுடன் "ஸர்வக₃ந்த₄: ஸர்வரஸ:" [ எல்லா கந்தங்களையும் ரஸங்களையும் உடையவன் ] எனப்படும் ப்ரஹ்மத்தின் கந்தமும் ரஸமும் அவனை அடைகின்றன. அபராஜிதமென்னும் வைகுண்டநகரத்தை அவன் அடைகிறான்; அவனிடம் ப்ரஹ்மத்தின் ஒளி பிரவேசிக்கிறது. (ஸ ஆக₃ச்சதி இந்த்₃ரப்ரஜாபதீ த்₃வாரகோ₃பௌ தாவஸ்மாத₃பத்₃ரவத:) இந்த்ர

ப்ரஜாபதிகளான த்வார பாலர்களை அவன் அடைகிறான். அவர்கள் அவனைக்கண்டு ஓடிச்சென்று, எதிர்கொண்டழைக்கிறார்கள். தங்கள் இருப்பிடத்தை விட்டுச்சென்று அவனை அவ்விடத்திலே இருத்திப்பூஜித்து நிற்கின்றனர் என்றவளவும் பாவம்.

"வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
வைகுந்தன் தமர் எமர் எமதிடம் புகுதென்று
வைகுந்தத்தமரரும் முனிவரும் வியந்தனர்" என்று

வேதம் தமிழ்செய்தார் விளக்கியருளினார் இவ்வாக்கியத்தை. (ஸ ஆக$_3$ச்ச$_2$தி விபு$_4$ப்ரமிதம் தம் ப்$_3$ரஹ்மயஶ: ப்ரவிஶதி) மிகப்பரந்ததான திருமாமணிமண்டபத்தை அவன் அடைகிறான்; அவனை ப்ரஹ்மத்தின் புகழ் அடைகிறது. (ஸ ஆக$_3$ச்ச$_2$தி விசக்ஷணமாஸந்தீ$_3$ம் ஸா ப்ரஜ்ஞா ப்ரஜ்ஞயா ஹி விபஶ்யதி) அவன் 'விசக்ஷணை' என்னும் பீடத்தை அடைகிறான்; அந்தப் பீடம் அறிவுக்கு அபிமானிதேவதையாயிருப்பது. (அதை அடைந்தவுடன்) இவன் எல்லாவற்றையும் அறியும் ஸர்வஜ்ஞனாகிறான். (ஸ ஆக$_3$ச்சதி அமிதௌஜஸம் பர்யங்கம்) அவன் அநந்தனாகிற படுக்கையை அடைகிறான். (ஸ ப்ராண:) பலத்தைக் கொடுக்கும் ப்ராணனுக்கு அபிமானியாயிருப்பவன் மஹாபலவானான அவ்வநந்தன். அவனையடைந்ததும் இவனும் பலத்தையடைகிறான் என்று பாவம்.

இதற்குப்பின், அந்தப் படுக்கைக்குக் கால்கள், கட்டைகள், கயிறுகள் முதலியவை யாவை என்று விவரித்துவிட்டு, சந்திர கிரணங்கள் அப்படுக்கையின்மேலுள்ள விரிப்பாயுள்ளது என்று உரைத்தபின் பின்வருமாறு படிக்கிறது.

"உத்$_4$கீ$_3$த$_2$ உபஶ்ரீ: ஶ்ரீருபப$_3$ர்ஹணம்। தஸ்மிந் ப்$_3$ரஹ்ம ஆஸ்தே। தமித்த$_2$ம்வித் பாதே$_3$நைவ அக்$_3$ர ஆரோஹதி॥"

(உத்கீத உபஶ்ரீ:) உக்கீதமென்னும் மந்திரம் படுக்கைவிரிப்பாக ஶ்ரீதேவியின் அருகில் இருக்கிறது. (ஶ்ரீருபப$_3$ர்ஹணம்) ஶ்ரீதேவியானவள் உபபர்ஹணமாக—காலுக்கு அணையாக—எழுந்தருளியிருக்கிறாள். திருவடிகளை வருடிக் கொண்டிருக்கிறாள் என்று ப$_4$ாவம். (தஸ்மிந்...) ஶ்ரீதேவியுடன் கூடிய ஆதிசேஷனாகிற அப்படுக்கையில் ப்ரஹ்மம் எழுந்தருளியிருக்கிறது. (தமித்த$_2$ம்வித்...)

ஞானியானவன் அப்படுக்கையிலே அடியிட்டு ஏறுகிருன். கைக் குழந்தையானது தாய் மடியிலே அடியிட்டு ஏறுவது போலே அப் படுக்கையிலே காலாலே முதலில் ஏறுகிருன் என்று கருத்து. (பாதே₃ந ஆரோஹதி) பரமபுருஷனுடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ஏறுகிருன் என்றுமாம். (பாதேந அத்ய₄ா ரோஹதி) என்றும் பாடம். பெருமாளும் பிராட்டியுமாக எழுந்தருளியிருக்கும் ஆதிசேஷனுகிற ப்டுக்கையிலே இன்றே முக்தியடையும் இச்சேதனன் அடியிட்டு ஏறி ப்ரஹ்மாநுபவத்தைப் பெற்று, ப்ரஹ்மத்துடன் ஸம்பாஷித்து ஸாயுஜ்யநிலையையும் அடைகிருன் என்று முடிகிறது ஆசார்யர்கள் அனைவராலும் ஆதரிக்கப்பட்ட இவ்வுபனிஷத். "ஹ்ரீஸ்ச தே லக்ஷ்மீஸ்ச பத்ந்யௌ" என்று ஸ்ரீதேவியையிட்டுப் பரமபுருஷன் யாரென்று நிரூபித்த புருஷஸூக்தத்தைப் போலே இவ்வுபனிஷத் தும், பிராட்டியின் ஸம்பந்தத்தைக்காட்டிப் பரமபதநிலயனைப் பேசுகிறது. "ஸ்ரீதேவியானவள் காலுக்கு அணையாக இருக்கிருள்" என்று சொல்லி 'அதன்மேல் ப்ரஹ்மம் எழுந்தருளியிருக்கிறது' என்றதால் ஸ்ரீதேவிக்கும் ஶேஷத்வமே ஸ்வரூபம் என்பதும், அவளுக்கும் ஈச்வரனை நாராயணனே பரப்ரஹ்மம் என் பதும் நிர்ணயிக்கப்படுகிறது. ஆக, இவ்வுபனிஷத்தால் திரு வுக்கும் திருவாகிய செல்வனே பரமபத நிலயனுகவும், பரம புருஷார்த்த ப்ரதனுகவுமிருக்கிருன் என்று நிர்ணயிக்கப் பட்டதாயிற்று.

இப்படி பகவத்ஸ்வரூபத்தையும் நிரூபித்துத் தருபவளான பிராட்டியின் பெருமைகளை அறியவேண்டியது ஆவச்யகமாகை யாலும், "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ ரக்ஷக:" என்று புருஷ காரபூதையான பிராட்டியுடன் கூடிய பகவானே ரக்ஷகனுக வேதாந்தங்களில் சொல்லப்படுகிருன் என்று சாஸ்த்ரம் சொல்லு கையாலும், பகவதத்யந்த பரதந்திரையான பிராட்டியை ஸ்ரீவைஷ்ணவர்களிலும் சிலர், பேசநின்ற சிவனையும் பிரமனையும் போலே பகவானுக்கு எதிர்த்தட்டாகப் பேசி "இவளும் பரப்ரஹ்ம பூதையே" என்று சொல்லுகிருர்களாகையாலே பகவத்பரத்வ நிர்ணயபரமான இந்த கிரந்தத்தில், பிராட்டி பகவத்ஸ்வரூப நிரூபக பூ₄தையேயொழிய, பரப்ரஹ்மபூதையல்லள் என்பதை நிர்ணயிக்கவேண்டியது ஆவச்யகமாகையாலும், பிராட்டியின் ஸ்வரூபரூபகுணவிபூதிகளை மிகத்தெளிவாக விவரிக்கும் "ஸ்ரீஸூக்தம்" அடுத்தபடியாக வியாக்கியானம் செய்யப்படுகிறது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஸ்ரீஸூக்த வ்யாக்யானம்

यत्सङ्कल्पाद्भवति विविधा जङ्गमस्थावराणां
सृष्टिस्थैर्यप्रलयरचना तस्य भर्तुर्मुरारेः।
पत्नीमम्बां निखिलजगतां तां नमस्कृत्य लक्ष्मीं
तस्याः सूक्तं सकलफलदं विश्रुतं व्याकरोमि॥

**யத்ஸங்கல்பாத்$_3$ ப$_4$வதி விவித$_4$ா ஜங்க$_3$மஸ்த$_2$ாவராணாம்**
**ஸ்ருஷ்டிஸ்தை$_2$ர்யப்ரளயரசநா தஸ்ய ப$_4$ர்த்துர் முராரே:।**
**பத்நீமம்ப$_3$ாம் நிகி$_2$லஜக$_3$தாம் தாம் நமஸ்க்ருத்ய லக்ஷ்மீம்**
**தஸ்யா: ஸூக்தம் ஸகலப$_2$லத$_3$ம் விச்ருதம் வ்யாகரோமி ||**

*[அசைவனவும், அசையாதனவுமான உலகினுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ப்ரளயங்கள் எந்த பகவானுடைய ஸங்கல்பத்தினுல் ஏற்படுகின்றனவோ, பர்த்தாவான அந்த முராரியினுடைய பத்னியாகவும், உலகிற்கெல்லாம் தாயாகவுமிருக்கும் பெரியபிராட்டியாரை நமஸ்கரித்து, எல்லாப் பலன்களையும் அளிக்கவல்லதும் ஸுப்ரஸித்தமானதுமான ஸ்ரீஸூக்தத்தை வ்யாக்யானம் செய்கிறேன்.]*

“மாத்ருதே$_3$வோ ப$_4$வ, பித்ருதே$_3$வோ ப$_4$வ, ஆசார்யதே$_3$வோ ப$_4$வ, அதிதி$_2$தே$_3$வோ பவ” (தை-ஶீக்ஷா 11-2) *[தாயைத் தெய்வமாகக் கொள்; தந்தையைத் தெய்வமாகக்கொள்; ஆசார்யனைத் தெய்வமாகக்கொள்; விருந்தாளியைத் தெய்வமாகக்கொள்]* என்று மறை அறையாநின்றது. இவ்வாக்கியத்திற்கு ஸாமான்யமானதொரு பொருள் உண்டு. உட்பொருள் ஒன்றுமுண்டு. இவ்வுலகிலே கர்மம் காரணமாக ஏற்பட்ட தாய், தந்தை முதலானாரிடத்திலே தெய்வமென்னும் நினைவுகொள்ளவேண்டுமென்று விதிப்பது ஸாமான்யமான பொருள். “ஸர்வலோகாநாம் மாதா” (வி-பு) *[எல்லாவுலகிற்கும் தாய்]* என்று சொல்லப்படும் அகிலஜகந்மாதாவான பெரியபிராட்டியாரிடமும், “பூ$_4$தாநாம் அவ்யய: பிதா”

( ஸஹஸ்ர நாமாத்யாயம் ) [உலகிற்கெல்லாம் அழிவற்ற தந்தை] "தே₃வதே₃வோ ஹரி: பிதா" (வி-பு) [தேவதேவரான ஹரி தந்தை யாவர்] என்கிறபடியே உலகிற்கெல்லாம் தந்தையாயிருக்கும் ஸர்வேச்வரனிடமும், அறியாதன அறிவித்த ஆசார்யனிடமும், "விருந்தாகும் பெருந்தக்கோர்" என்கிறபடியே பகவத்விஷயமாகிற பரமபோக்ய போஜனத்தை அளிக்கத்தக்க விருந்தாளிகளான பாகவதர்களிடமும் பரதேவதை என்னும் நினைவைக் கொள்வாயாக என்பதே இவ்வாக்கியத்தின் உட்பொருள். இவர்கள் அனைவரும் ஒரு சேதனனுக்குப் பேருபகாரம் செய்பவர்களாகையாலே பர தேவதையிடம் வைக்கவேண்டிய பிரீதியை இந்நால்வரிடத்துமே வைக்கவேண்டும் என்று பாவம். இவ்வர்த்தத்தை "சீதையென்ப தோர் தெய்வம்" (பெரியதிரு 10-2-5) "திருமங்கை நின்றருளும் தெய்வமே நாவாழ்த்தும்" (இர-திருவ 57) "தேவு மற்றறியேன்" (கண்ணிநுண் 2) "குலதெய்வம்" (திருவாய் 2-6-4) என்று இந் நால்வரிடமும் தேவதாசப்தத்தைப் பிரயோகிப்பதன் மூலம் ஆழ்வார் களும் அனுஸந்தித்துக் காட்டினார்கள்.

இந்நால்வருக்குள்ளும் மிகவும் உபகாரம் செய்பவராகையாலே "மாத்ருதே₃வோ ப₄வ" என்று முதலிற்படிக்கப்பட்டார் பெரிய பிராட்டியார். இவர் இவர்களுக்குள் மஹோபகாரகையாவது எப்படியென்னில்: "பேராளன் பேரோதும் பெரியாரை ஒருகாலும் பிரிகிலேனே" (பெரியதிரு 7-4-4) "ஒளிக்கொண்ட சோதியமாய் உடன் கூடுவதென்றுகொலோ......மாயப்பிரான் அடியார்கள் குழாங்களையே" (திருவாய் 2-3-10) "அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை" (திருவாய் 10-9-11) என்கிறபடியே பரமப்ராப்யபூதரான பாகவதர் களை அநுபவிக்கப்பெறுவது ஆசார்யனால் ப்ராப்யோபதேசம் பெற்றபின்பேயாகையாலும் பாகவதகோஷ்டியைப் பெருகச்செய் பவன் ஆசார்யனேயாகையாலும் பாகவதலாபம் ஆசார்யனாலேயா யிருக்கும். ஒரு ஜீவனுக்கு ஸதாசார்யஸம்பந்தம் ஏற்படுவது ஸர் வேச்வரனுடைய நிர்ஹேதுகக்ருபையாலேயாகையாலே ஆசார்ய லாபம் ஈச்வரனாலேயாயிருக்கும். ஸ்வதந்த்ரனான அவ்வீச்வரனை யும் இச்சேதனனுடன் சேரவிடுபவள் புருஷகாரபூதையான அப் பிராட்டியே யாகையாலே ஈச்வரலாபம் இப்பிராட்டியாலேயா யிருக்கும். ஆக, இப்படிப் பரமோபகாரகையாகையாலே பெரிய பிராட்டியை தெய்வமாகக்கொள்ளென்று முதன்முதலில் பேசிற்று பண்டைமறை. மேலும், இப்பிராட்டியினுடைய ஸ்வரூபரூபகுணங்

களின் பெருமை புருஷோத்தமனுடைய ஸ்வரூபரூபகுணங்களின் பெருமையிலும் விஞ்சியிருக்கும், இவளுடைய ஸ்வரூபம் அவனையும் "ந ஜீவேயம் க்ஷணமபி" (ரா-ஸு 66-10) [தேவியைவிட்டு ஒரு கணமும் பிரிந்து வாழமாட்டேன்.] என்னப்பண்ணும்படி இனிமையிலே விஞ்சி நிற்கும். இவளுடைய ரூபமோவெனில் ஜிதேந்திரியனை ஹநுமானையும் "ராக₄வோர்ஹதி வைதே₃ஹீம் தம் சேயம்" (ரா-ஸு 16-5) [ராகவன் வைதேஹிக்குத் தகுந்தவர்; இவளும் அவருக்குத் தகுந்தவர்] என்பதுடன் நிறுத்தாமல், "அஸிதேக்ஷணா" [கறுத்த கண்ணழகிலே அவனையும் விஞ்சியிருப்பவள்] என்று அதிக விசேஷணமிடப்பண்ணும்படி அவனுடைய ரூபத்திலும் அழகு விஞ்சியிருக்கும், "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்" [கறுத்த கண்களை உடைய அப்பிராட்டியைவிட்டுக் கணநேரமும் வாழமாட்டேன்.] என்று அந்த பகவானையும் 'தண்ணீர் தண்ணீர்' என்று தவிக்கச்செய்யவல்லதாயிருக்கும். இவளுடைய குணங்களோவென்னில்,

"மாதர் மைதி₂லி ராக்ஷஸீஸ் த்வயி தடைவார்த்₃ராபராத₄ாஸ் த்வயா
ரக்ஷந்த்யா பவநாத்மஜால்லகு₄தரா ராமஸ்ய கோ₃ஷ்டீ₂ க்ருதா।
காகம் தஞ்ச விபீ₄ஷணம் ஶரணமித்யுக்திக்ஷமௌ ரக்ஷத:
ஸா நஸ் ஸாந்த்₃ரமஹாக₃ஸஸ் ஸுக₂யது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ ॥"

(ஸ்ரீகுண 50)

[தாயே மைதிலி! அப்போதே அபராதம் செய்த ராக்ஷஸிகளை ஹநுமானிடமிருந்து ரக்ஷித்த உன்னாலே, காகாஸுரனையும், விபீஷணனையும் சரணம் என்னும் வார்த்தையைச் சொன்னபிறகு ரக்ஷித்த ராமனுடைய கோஷ்டியானது சிறிதாக்கப்பட்டது. அப்படிப் பட்ட உன்னுடைய நிர்ஹேதுக்ருபையானது பெரும்பாவிகளான எங்களையும் ஆநந்திப்பிக்கட்டும்.] என்று பட்டர் அருளிச்செய்த படியே அவனுடைய குணங்களிலும் விஞ்சியிருக்கும். உண்மையை ஆராயப்புகுந்தால், "ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமஶ்நுதே" [பிராட்டியினாலேயே நாராயணன் தேவனாயிருக்கும் தன்மையை அடைகிறான்.] "யஸ்ய ஸா ஜநகாத்மஜா-அப்ரமேயம் ஹி தத்தேஜ:" [ஜநகராஜன் திருமகளைத் தனக்கென்று இட்டுப் பிறந்து வைத்திருக்கும் அப்பேரொளியானது அளவிடவொண்ணாதது.] என்கிற

படியே, இவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப்பெருமைகளும் அவ ளாலேயாயிருக்கும். "அழகு அவளாலே; குணங்கள் அவளாலே; மேன்மை அவளாலே; நீர்மை அவளாலே; நிரூபித்தால் அடங்கலும் அவளாலேயாயிருக்கும்" என்று திருப்பாவை ஆறுயிரப்படியிலே அருளிச்செய்வர். "திருநின்ற பக்கம் திறவிது" என்று திருமழிசை ஆழ்வாரும், "அபாங்கா$_3$ பூ$_4$யாம்ஸோ யது$_3$பரி பரம்ப்$_3$ரஹ்ம தத$_3$பூ$_4$த்" [பிராட்டியின் அதிகமான கடாக்ஷங்கள் எதன்மீது விழுந்தனவோ அது பரப்ரஹ்மமாயிற்று] என்று ஆழ்வானும் அருளினரன்றோ. இத்துடனன்றியில், ஸ்வதந்த்ரனாய், கர்மாநுகுணமாகப் பலமளிப்ப வனாய், பரப்ரஹ்ம பூதனாகையாலே விஜாதீயனாயிருக்கும் அவனைப் போலில்லாமல், பாரதந்த்ரியப் பெருஞ்செல்வத்தையுடையவளாய், க்ருபையே வடிவெடுத்தவளாய், சேதனரோடு ஸஜாதீயையாயிருக்கும் பெரியதோர் பெருமையும் இப்பிராட்டிக்குண்டு. மேலும், மாதா பிதாக் கள் இருவரினுள்ளும், நன்மையைத் தேடும் தந்தையிடமிருப்பதை விடப் பிரியத்தை விரும்பும் தாயிடம் குழந்தைக்கு அன்பு அதிக மாயிருக்கும். இக்காரணங்களாலே வேதபுருஷனாகிற ஜீவன் தாயாகிற பிராட்டியை முதலிலேயிட்டுப் பேசுகிறான்.

இப்படிப் பெரியபிராட்டியாரானவர் பலவிதத்திலும் பகவானைக் காட்டிலும் பெருமைபெற்றவராகில் நாராயணனுக்கே உரித்தான தான பரப்ரஹ்மத்வம் என்னும் பெருமை எப்படி நிலைநிற்கும்? ஸ்வரூபரூபகுணாதிகளால் நிரதிஶய ப்ருஹத்தாயிருக்கை – தனக்கு மேல் ஒன்றில்லை என்னும்படி பெருமைபெற்றிருக்கை—என்கிற பர ப்ரஹ்மலக்ஷணம் அப்பெருமானிடம் எப்படிப்பொருந்திநிற்கும்? என்னும் ஸந்தேஹம் ஏற்படலாம். இப்பிராட்டி இயற்கையிலேயே அப்பெருமானுடைய உடைமைப் பொருளாயிருக்கையாலே, இவ ளுடைய இப்பெருமைகள் எல்லாம் இவளை உடையவனாகிற அவ னுடைய பெருமையாகவே முடிந்து நிற்குமாகையாலே அவனுடைய நிரதிஶய ப்ருஹத்வரூபமான பரப்ரஹ்மத்வத்திற்கு ஒரு குறையும் வாராது. தன்னிலும் விஞ்சிய பல பெருமைகளையும் உடைய இப்பிராட்டிக்கும் ஸ்வாமியாயிருப்பவன் என்னும் பெருமை வேறொரு வருக்கும் இல்லையன்றோ. ரத்தினமானது தன் ஒளியினாலேயே பெருமை பெறுகிறது என்பதைக் காணுநிற்கிறோம். ஆயினும் அவ்வொளியானது ரத்தினத்தின் ஸ்வாபாவிகதர்மமாய் உடைமைப் பொருளாயிருக்கையாலே, அதன் பெருமையெல்லாம் ரத்தினத்தின் பெருமையாகவே முடிகின்றது. மாணிக்கமானது ஒளியாலேயே

பெருமை பெற்றிருந்தபோதிலும் இயற்கைப் பெருமையில்லாதது, வேறொன்றால் பெருமை பெறுவது என்று ஒருவரும் உரைக்கமாட்டார்களன்றோ. அப்படியே "அநந்யா ராக₄வேணாஹம் பா₄ஸ்கரேண ப்ரபா₄ யதா₂" [ஸூர்யனை அதன் ஒளியானது விட்டுப்பிரியமாட்டாதது போல் நானும் ராகவரை விட்டுப்பிரியமாட்டேன்] "அநந்யா ஹி மயா ஸீதா பா₄ஸ்கரேண ப்ரபா₄ யதா₂" [ஸூர்யனுடைய ஒளிபோல் என்னை விட்டுப்பிரிய மாட்டாதவளாயிருப்பவள் ஸீதை] என்று திவ்யதம்பதிகள்தாமே ஸ்ரீராமாயணத்திலே சோதிவாய் திறந்து அருளிச்செய்தபடியே,பிராட்டியானவள் பகவானுக்கு ஒளிபோலே ப்ரகாரமாயிருப்பவளாகையாலே அப்புருஷோத்தமனுடைய பரப்ரஹ்மத்வமாகிற பெருமைக்கு ஒரு குறைவும் வாராது. இவ்வர்த்தத்தையே பட்டர் ஸ்ரீகுணரத்னகோசத்திலே (31)

"ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி தத ஏவைஷ ப₄க₃வாந்
த்வத₃ாயத்தர்த்₃தி₄ர்த்வேऽபி அப₄வத் அபராதீ₄நவிப₄வ:|
ஸ்வயா தீ₃ப்த்யா ரத்நம் ப₄வத₄பி மஹார்க்க₄ம் ந விகு₃ணம்
ந குண்ட₂ஸ்வாதந்த்ரியம் ப₄வதி ச ந சாந்யாஹிதகு₃ணம்||"

[பிராட்டியே! இயற்கையிலேயே நீ பகவானுடைய உடைமையாயிருக்கிறாய். இதனாலேயே இந்த பகவான் உன்னாலே வந்த பெருமையை உடையவனாயிருந்தபோதிலும், இயற்கையான பெருமையை உடையவனானான். தன்னுடைய ஒளியினாலே விலையுயர்ந்ததாகும் ரத்தினம் (அக்காரணத்தினால்) தாழ்ந்ததாகவோ இயற்கைப் பெருமையற்றதாகவோ மற்றொன்றினாலுண்டான பெருமையை உடையதாகவோ ஆகிறதில்லையன்றோ.] என்று அருளிச்செய்தார். ஆகையால் இவளுடைய பெருமைகளெல்லாம் பகவானுடைய பரப்ரஹ்மத்வத்தை ஸ்தாபித்துத் தருமேயொழிய அதைக் குலைக்காது.

இப்படிப்பட்ட பிராட்டியின் பெருமையைப் பேசும் ஸூக்தங்கள் ச்ரத்தாஸூக்தம், மேதாஸூக்தம், அதிதிஸூக்தம், வாக்ஸூக்தம் ஸ்ரீஸூக்தம் என்று பலவும் உண்டு. "மேத₄ா ஶ்ரத்₃த₄ா ஸரஸ்வதீ" (வி-பு 1-9-119) [வேதங்களிலே 'மேதை' 'ச்ரத்தா' 'வாக் (ஸரஸ்வதி)' என்றும் சொல்லப்படுபவள் லக்ஷ்மீதேவியே] என்று பராசர பகவான் உபப்ரும்ஹணம் செய்திருக்கையாலே இந்த ஸூக்தங்களெல்லாம் பெரியபிராட்டியாரின் பெருமையைப் பேசுபவையே என்பதை அறியலாம். பல பல ஸூக்தங்கள் பரமபுருஷனின் பெருமையைப் பேசுவனவாக இருந்தபோதிலும், அவனுக்கே

உரித்தானவையான புருஷநாராயண சப்தங்களையும், லக்ஷ்மீபதித்வாதி லிங்கங்களையுமிட்டுப் பேசும் புருஷநாராயணஸூக்தங்கள் மிகவும் உத்தேச்யமாவதுபோலே பிராட்டிக்கே உரித்தான ஸ்ரீ, லக்ஷ்மீ முதலான சப்தங்களையும் ஐச்வர்யப்ரதத்வாதிலிங்கங்களையும் இட்டுப் பேசும் ஸ்ரீஸூக்தம் நமக்கு மிகவும் உத்தேச்யமாகிறது. பூஸூக்த நீளாஸூக்தங்களும் பெரியபிராட்டியாரின் அவயவபூதர்களாகவும், போகோபகரணமாயிருப்பவராகவும், விபூதிபூதராகவும் உள்ள பூமிநீளாதேவிகளின் பெருமையைப் பேசுகின்றன. ஸ்ரீஸூக்தத்திற்குப் பின் இவற்றையும் விவரிப்போம்.

இந்த ஸ்ரீஸூக்தத்திற்கு பட்டருடைய சிஷ்யரான நலந்திகழ் நாராயணச்சீயர் ஒரு பாஷ்யமிட்டிருக்கிறார் என்பது தேசிகக்ரந்தங்களிலிருந்து விளங்குகிறது. நாராயணமுநி என்று பலவிடங்களிலும், பெரியஜீயர் என்று சிலவிடங்களிலும் இவரைக் குறிப்பிட்டிருக்கிறார் தேசிகர். இவர் பட்டருடைய சிஷ்யர் என்பதைக் காட்டும் சுலோகமொன்றை ஸ்ரீதேசிகர் எடுத்திருப்பதைமட்டும் கொண்டு நஞ்சீயரே ஸ்ரீஸூக்தபாஷ்யகர்த்தா என்று நவீனவித்வான்களில் சிலர் எழுதிவைத்தார்கள். புதுக்கோட்டையில் வாழும் ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸராகவன் ஸ்வாமி அவர்கள் கோமட ரங்கநாத பாஷ்யம் என்று பல ஓலைச்சுவடிகளிலே பெயர்பெற்றிருப்பதொரு ஸ்ரீஸூக்தபாஷ்யத்தை, பல ப்ரக்ஷிப்த பங்க்திகள் நிறைந்ததொரு ஓலைச்சுவடியை முக்கியமான ஆதாரமாகக்கொண்டு ரங்கநாதமுனி ( அல்லது நஞ்சீயர் ) ஸ்ரீஸூக்தபாஷ்யம் என்னும் தலைப்பிலே ஒரு நூலை 1937-ல் அச்சிட்டார். அந்நூல் நஞ்சீயருடையதாயிருக்க ப்ரஸக்தியேயில்லை, நாராயணமுநியுடையதுமன்று என்று அஸ்மத்தாதபாதர்கள் மிக விரிவாக தூஷண நிராஸம் என்னும் கிரந்தத்திலும் பல வியாஸங்களிலும் நிரூபித்தருளினார். ப்ரதிபக்ஷிகளாலும் அந்நிருபணங்களுக்கு இன்றளவும் மறுப்பெழுத முடியவில்லை. ஸுதர்சனம் 58-ல் வெளியிடப்பட்ட சுருக்கமானதொரு வியாஸத்தின் பகுதியை மட்டும் இங்கு தருகிறோம்:—

"ஸ்ரீஸூக்த பாஷ்ய விஷயமாக நாம் வெளியிட்டிருக்கும் ஆராய்ச்சிகளை இங்கு ஸங்க்ரஹிக்கிறோம். இதில் இரண்டு விஷயங்களுள்ளன. முதலாவது விஷயம்:—ஸ்ரீ தேசிகரால் ப்ரமாணமாக எடுக்கப்பட்ட ஸ்ரீஸூக்தபாஷ்யம் **நஞ்சீயருடையதா?** அல்லவா? நஞ்சீயருடையதல்ல. இதற்குக் **காரணங்கள்:**— (1) ஸ்ரீ தேசிகர் ஸ்ரீஸூக்த பாஷ்யகர்த்தாவை (பராசரபட்ட சிஷ்யரான)

பெரியஜீயர், நாராயணமுனி என்னும் பெயர்களாலே பலவிடங்களில் குறிப்பிடுகிறார். ஓரிடத்தில் நஞ்ஜீயர் என்று ஒருவரையெடுக்கிறார். பூர்வாசாரியர்கள் பல்லாயிரக்கணக்கான விடங்களில் நஞ்ஜீயரை எடுக்கும்போது ஓரிடத்திலாவது அவரைப் பெரியஜீயர் என்றோ நாராயணமுனியென்றோ எடுத்ததில்லை. நஞ்சீயர், ஜீயர், வேதாந்தி முனி என்றே எடுக்கிறார்கள். இக்காரணங்களால் ஸ்ரீஸூக்த பாஷ்யகர்த்தா நஞ்ஜீயரைக்காட்டிலும் வேறானவர் என்பது தெளிவு. (2) ஈட்டின் ப்ரமாணத்திரட்டிலிருந்தும், அரும்பதவுரைகளிலிருந்தும் "நாராயணமுனி, நலந்திகழ்நாராயணச்சீயர்" என்னும் திருநாமங்களையுடைய ஒருவர் புருஷஸூக்த நாராயணஸூக்த விஷ்ணுஸூக்த பாஷ்யங்கள் செய்திருப்பதாகத் தெரிகிறது. இவரே ஸ்ரீஸூக்த பாஷ்யகர்த்தாவாயிருக்கத்தகும். (3) மாமுனிகள் காலத்திலிருந்தவர்களால் இயற்றப்பட்ட ஓரான் வழி, பெரியதிருமுடியடைவுகளிலிருந்து, பட்டருக்கு நலந்திகழ்நாராயணச்சீயரென்று ஒரு சிஷ்யருண்டென்றும் அவர் உபநிஷத்துக்களுக்கும், ஸ்தோத்ரரத்னத்திற்கும் பாஷ்யம் செய்திருக்கிறாரென்றும், ஸுதர்சனசதகம் இயற்றியுள்ளாரென்றும் வெளியாகிறது. கோயிலொழுகும் இவ்விஷயங்களைக் காட்டித்தருகிறது. ஸமயாசார நிஷ்கர்ஷமும் நலந்திகழ் நாராயணச்சீயரென்றொருவர் நஞ்சீயர் காலத்திருந்ததை உணர்த்துகிறது. ஆகையால் தேசிகரெடுத்த நாராயணமுனி இவரே என்பதில் ஐயமில்லை. (4) தேசிகர், இந் நாராயணமுனி ஸ்தோத்ரபாஷ்யம் செய்திருக்கிறார் என்று காட்டுவதோடன்றியில் இவர் வங்கிபுரத்து நம்பியின் சிஷ்யர் என்றும் அருளியிருக்கிறார். இவை நலந்திகழ் நாராயணச்சீயரே ஸ்ரீஸூக்த பாஷ்யகர்த்தா என்பதையும் அவர் நஞ்சீயரைக்காட்டிலும் வேறுபட்டவர் என்பதையும வயதில் பெரியவர் என்பதையும் வலியுறுத்துகின்றன. (5) இவ்வளவு ப்ரமாணங்களுக்கு எதிராக மாமுனிகளுக்குப் பிற்பட்ட, தவறுகள் நிறைந்த குருபரம்பரை நூலில் நஞ்சீயரைப் பெரிய ஜீயரென்று ஓரிடத்தில் குறித்திருப்பது கொண்டு தேசிக ஸூக்திக்கு அர்த்தநிர்ணயம் செய்வது தகாது. குருபரம்பரையை எழுதியவர்கள் மிகவும் ப்ராசீநரான நஞ்சீயரைப் பெரிய ஜீயரென்று குறித்திருக்கலாம். அதிலிருந்து நஞ்சீயருக்கு மிகவும் ஸமீப காலத்திலிருந்த தேசிகரால் குறிக்கப்படும் பெரியஜீயர் நஞ்சீயரென்றாகிவிடாது.

"இனி, இரண்டாவது விஷயம்:— தேசிகரால் எடுக்கப்பட்ட ஸ்ரீஸூக்த பாஷ்யமும், இப்போது அச்சிடப்பட்டிருக்கும் பாஷ்யமும்

ஒன்று? இவையிரண்டும் ஒன்றேயென்பதற்குச் சில அகச்சான்று களைக் காட்டினார்கள். இவ்வகச்சான்றுகள் பக்ஷபாதிகளிடமிருந்த ப்ரக்ஷிப்தம் நிறைந்த கோசத்திலேயே உள்ளனவென்பதைக் காட்டினோம். கோமட ரங்கநாதரே இந்த பாஷ்யகர்த்தாவென்பதையும், அவர் தேசிகருக்குப் பிற்பட்டவரென்பதையும் நிரூபித்தோம். இவற்றுக்கு ஒன்றும் பதிலில்லை. பரமகாருணிகர்களான பெரியவாச்சான் பிள்ளையும், நஞ்சீயரும், நலந்திகழ் நாராயணச்சீயரும், தேசிகரும் இவ்விசாரத்தில் வெற்றிபெற்றார்கள். சிறிய ஞானத்தனாகிய அடியேன் வெற்றிபெற்றதாக ஒருவரும் கருதவேண்டா.''

கீழே எடுக்கப்பட்ட கோமட ரங்கநாதபாஷ்யத்தின் அச்சுப் பிரதியில் ப்ரக்ஷிப்தபங்க்திகள் அதிகமாயுள்ளன; ஆழ்வார்களும் ஆசார்யர்களும் பிராட்டிவிஷயமாகக் கொண்டிருந்த முடிவுகளைக் கண்டிக்கும் வாக்கியங்களும் உள்ளன. கருணைக்கடல்களான நம்முடைய ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளையும், ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸபுராண வசநங்களையும், ஸ்ரீபாஞ்சராத்ர வாக்யங்களையும் துணைகொண்டு, அஜ்ஞனையும் ஸர்வஜ்ஞனாக்கவல்ல பெரியபிராட்டியாருடைய கருணைகடாக்ஷத்தையே பற்றாசாகக்கொண்டு, அறிவரிய பெருமையையுடைய ஸ்ரீஸூக்தத்தை விவரிக்கத் துணிகின்றேன்.

## ஸ்ரீஸூக்தத்தின் ஆவிர்ப்பாவமும் பெருமையும்

பாஞ்சராத்ர சாஸ்த்ரத்திலே பிராட்டியின் பெருமையைப் பேசும் பகுதி ஒன்றுண்டு. 'லக்ஷ்மீதந்த்ரம்' என்று அதற்குப் பெயர். இந்திரனுக்குப் பிராட்டியே தன் பெருமையை வெளியிடுவதாக அமைந்துள்ளது அது. ஐம்பது அத்தியாயங்கள் கொண்ட அந்த சாஸ்த்ரத்தின் கடைசி அத்தியாயம் ஸ்ரீஸூக்தத்தின் பெருமையையும் பொருளையும் விளக்குவதாகும். அதில் ஸ்ரீஸூக்தத்தின் தோற்றமும் ஏற்றமும் பின்வாறு விவரிக்கப்படுகிறது.

''ஸ்ரீருவாச:—

தே₃வோ நாராயணோ நாம ஜக₃தஸ் தஸ்து₂ஷ: பதி: |
ஆத்மா ச ஸர்வலோகாநாம் ஷாட்₃கு₃ண்யாநந்த₃விக்₃ரஹ: ||
ஸர்வப்ரக்ருதிரீசாந: ஸர்வஜ்ஞஸ் ஸர்வகார்யக்ருத் |
நிரநிஷ்டோऽநவத்₃யச்ச ஸர்வகல்யாணஸம்ச்ரய: ||

தமஸாம் தேஜஸாம் சைவ ப₄ாஸக: ஸ்வப்ரகாஶத;।
அந்தர்யாமீ நியந்தா ச ப₄ாவாப₄ாவவிப₄ாவந: ||
ஶக்திமாந் ஸகலாத₄ார: ஸர்வஶக்திர் மதீ₃ஶ்வர: ।
தஸ்யாऽஹம் பரமா ஶக்திரேகா ஸ்ரீர் நாம ஶாஶ்வதீ ||
நிரஸ்தநிகி₂லாவத்₃யா ஸர்வகாமது₃க₄ா விபே₄: ।
ஆத்மபி₄த்தி ஸமுந்மீலச்சுத்₃த₄ாசுத்₄த₄ாத்₄வ வர்க்கி₃ணீ ||
அநுவ்ரதா ஹ்ருஷீகேஶம் ஸர்வதஸ் ஸமதாம் க₃தா ।
தாவாவாம் பரமே வ்யோம்நி பிதரௌ ஜக₃த: பரௌ ||
அநுக்₃ரஹாய லோகாநாம் ஸ்தி₂தௌ ஸ்வ: பரயா ஶ்ரியா ।
கத₃ாசித் க்ருபயாவிஷ்டௌ ஜீவாநாம் ஹிதகாம்யயா ||
ஸுகி₂ந: ஸ்யுரிமே ஜீவா: ப்ராப்நுயுர் நௌ கத₂ம் த்விதி ।
உபாயாந்வேஷணே யத்தௌ பரமேண ஸமாதி₄நா ।
மத்₂நீவஸ் ஸ்மாதிக₃ம்பீ₄ரம் ஶப்₃த₃ப்₃ரஹ்ம மஹோத₃தி₄ம் ||
மத்₂யமாநாத் ததஸ் தஸ்மாத் ஸாமர்க்₃யஜுஷஸங்குலாத் ।
தத்ஸூக்தமிது₂நம் தி₃வ்யம் த₃த்₄னோ க்₄ருதமிவோத்தி₂தம் ||
அநாஹதமஸந்தி₃க்₃த₄ம் அநஸ்பஷ்டமநஶ்வரம் ।
ஸர்வைஶ்வர்யகு₃ணோபேதம் அநாகுலபத₃ாக்ஷரம் ||
ஆத்₃யோஸ் தத₂ாந்தயோ:ஶஶ்வத் அந்யோந்யாக்ஷரமிஶ்ரிதம் ।
ஶக்திஶக்திமத₃ாவித்₃த₄ம் தத்தத₃க்ஷரமிஶ்ரிதம் ||
தத்ர பும்லக்ஷணம் ஸூக்தம் ஸத்₃ப்₃ரஹ்மகு₃ணபூ₄ஷிதம் ।
ஸ்வீசகாராரவிந்த₃ாக்ஷ: ஸ்வமஹிம்நி ப்ரதிஷ்டி₄தம ||
தத்ர ஸ்த்ரீலக்ஷணம் ஸூக்தம் ஸத்₃ப்₃ரஹ்மகு₃ணபூ₄ஷிதம் ।
ஸ்வீசகாராஹமவ்யக்₃ரா ஸ்வமஹிம்நி ப்ரதிஷ்டி₂தம் ||
த ஏதே பரமே ஸூக்தே மஹர்ஷிக₃ணஸேவிதே ।
அதீ₄தே ச விம்ருஷ்டே ச நயேதாம் பரமாம் க₃திம் ||"

*[அசைவனவும் அசையாதனவுமான எல்லாப் பொருள்களுக்கும் ஸ்வாமியாய், நாராயணன் என்னும் பெயரையுடையவரான தேவன் எல்லா உலகிற்கும் ஆத்மாவாகவும், ஜ்ஞாநஶக்தி பலைஶ்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஆறு குணங்களும் ஆநந்த குணமும் வடிவெடுத்தவராயுமிருப்பவர். எல்லாப் பொருளுக்கும் உபாதானகாரணமாகவும், நியமிப்பவராகவும், எல்லாமறிந்தவராகவும், எல்லாச் செயலையும் செய்பவராகவுமுள்ளவர். அநிஷ்டம்*

இல்லாதவராகவும், குற்றமற்றவராகவும், எல்லாக் கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமாயுள்ளவராகவும், தாமே தம்முடைய ஒளியாலே ஒளியற்றவைகளையும் ஒளியுள்ளவைகளையும் பிரகாசிக்கச்செய்பவராகவும், (ஹ்ருதயத்தில் விக்ரஹத்துடன் கூடி) அந்தர்யாமியாயிருப்பவராகவும், (அந்நிலையில்) நியமிப்பவராகவும், உள்ளதையும் இல்லதையும் உண்டாக்குபவராகவும் இருப்பவர். அதிகமான சக்திகளை உடையவராகவும், எல்லாவற்றுக்கும் ஆதாரமாயிருப்பவராகவும், எல்லா சக்தியையும் உடையவராகவும், (மேலான சக்தியான) எனக்கும் ஈச்வரராயுமிருப்பவர். 'ஸ்ரீதேவி' என்னும் பெயரையுடைய நான் அவருக்கு மேலானதாய் ஒப்பற்றதாய். நித்யமானதான சக்தியாயிருக்கிறேன். நான் தாழ்வுகள் ஒன்றுமற்றவள்; ஸர்வவ்யாபியான பகவானுக்கு எல்லா போகங்களையும் அளிப்பவள். தன் மனத்திலிருந்து வெளிப்படும் சுத்தாசுத்தகதிகளை உடையவள். (அதாவது,-சுத்தகதிகளான பரமபதத்தையும் கைவல்யத்தையும், அசுத்த கதிகளான ஸம்ஸார கதிகளையும் தன் ஸங்கல்பத்தாலே உண்டாக்குபவள். "ச்ரேயோ ந ஹ்யரவிந்த$_3$லோசநமந: காந்தாப்ரஸாத$_3$ாத் ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்$_4$வஸு நருணாம் ஸம்ப$_4$ாவ்யதே கர்ஹிசித்" என்ற ஆளவந்தார் வாக்கை அனுஸந்திப்பது.) (இப்படி ஸகலபலப்ரதையாயிருப்பதற்குக் காரணம்,-) ஹ்ருஷீகேசனை பகவானைப் (புருஷகாரபூதையாய்ப்) பின்தொடர்ந்திருப்பவள். (பாபிகளோடு, சுபர்களோடு வாசியற) எல்லாச் சேதனர்களையும் ஒன்றாக நோக்கும் காருண்யகுணத்தையுடையவள். உலகிற்கு மேற்பட்டவர்களாய், தாய்தந்தையாயிருக்கும் நாங்களிருவரும், உலகங்களை அநுக்ரஹிப்பதற்காக, மேலான ஒளியுடன் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கிறோம். ஒரு காலத்தில் ஜீவர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று விருப்பங்கொண்டு, கருணை நிறைந்தவர்களான நாங்களிருவரும் "(அசித்ஸமர்களாய் ஸுகமற்றுக்கிடக்கும்) இந்த ஜீவர்கள் ஸுகமடைவதற்கும், நம்மை அடைவதற்கும் என்ன வழி" என்று மேலான தியானயோகத்திலே உபாயசிந்தனையில் ஈடுபட்டோம். அப்போது, மிகவும் ஆழ்ந்ததான ஶப்தப்ரஹ்மமாகிற—வேதமாகிய—பெருங்கடலைக் கடைய ஆரம்பித்தோம். ருக்யஜுஸ் ஸாமமந்திரங்கள் நிறைந்த அந்த வேதக்கடலிலிருந்து, தயிரைக்கடையும்போது வெண்ணெய் உண்டாவதுபோல், இரண்டு திவ்யஸூக்தங்கள் உண்டாயின. அவ்விரண்டும் தோஷங்களால் தடைபடாமலும், ஸந்தேஹமில்லாமலும், தெளிவின்மையில்லா

மலும், அழிவில்லாமலும், (ஶப்தத்திற்குள்ள) எல்லாச் செல்வங்களும் குணங்களும் நிறைந்திருப்பவையாகவும், கலக்கமற்ற பதங்களேயும் எழுத்துக்களேயும் உடையவையாகவும் விளங்கின. முதலிலும், முடிவிலும் ஒன்றிலுள்ள அக்ஷரங்கள் மற்றொன்றில் சேர்க்கப்பட்டு விளங்கின. (அதாவது,— ஸ்ரீஸூக்தத்தின் முதலில் "லக்ஷ்மீம் ஜாதவேதோ ம ஆவஹ" என்றவிடத்திலுள்ள லக்ஷ்மீ ஶப்தம் புருஷஸூக்தத்தின் கடைசியில் "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" என்றவிடத்திலும் புருஷஸூக்தத்தின் முதலில் "ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:" என்றவிடத்திலுள்ள புருஷஶப்தம் ஸ்ரீஸூக்தத்தின் கடைசியில் "விந்தேயம் புருஷாநஹம்" என்றவிடத்திலும் படிக்கப்பட்டிருக்கை) ஶக்தியாகிற என்னுலும், ஶக்திமானுகிற பரமபுருஷனுலும் நிறையப்பெற்றவையாய், எங்களிருவர்களுடைய நாமங்களாகிற புருஷன், ஜாதவேதஸ், லக்ஷ்மீ, ஸ்ரீ முதலான சப்தங்கள் கலந்ததாயிருந்தன. அவ்விரண்டில் புருஷனேச் சொல்லுவதும் நல்ல ஶப்தகுணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், தன் பெருமையிலேயே நிலேநிற்பதுமான புருஷஸூக்தத்தைப் புண்டரீகாக்ஷனை பகவான் தன்னுடையதாக ஏற்றுக்கொண்டார். அவற்றில் ஸ்த்ரீயைச்சொல்லுவதும, நல்ல ஶப்த குணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், தன் பெருமையிலேயே நிலேநிற்பதுமான ஸ்ரீஸூக்தத்தை நான் என்னுடையதாக ஏற்றுக்கொண்டேன. மேலானவையான இவ்விரண்டு ஸூக்தங்களும் மஹர்ஷிஸமூஹங்களால் பாடப்படுபவை; அத்தியயனம் செய்த மாத்திரத்திலும், (பொருளே) நினேத்தமாத்திரத்திலும் மேலான கதிக்கு அழைத்துச் செல்லுபவை.]

இப்படிப்பட்ட பெருமையையுடைய இந்த ஸ்ரீஸூக்தத்தின் ரிஷி, சந்தஸ். தேவதைகளும், விநியோகமும் லக்ஷ்மீதந்த்ரத்தில் பின்வருமாறு படிக்கப்படுகின்றன.

"மாமேவாஸ்ய முநிம் வித்₃யாத் ச₂ந்த₃: ஸ்ரீர்நாம கத்₂யதே |
தே₃வதா ஸகலாத₄ாரா விஷ்ணுபத்ந்யஹமீஶ்வரீ |
விநியோகோ₃ऽஸ்ய ஸூக்தஸ்ய லக்ஷ்மீநாராயணர்ச்சநே |
அங்கஸ்தா₂ம் பா₄வயேல்லக்ஷ்மீம் விஷ்ணோர்மாம் பரமேஶ்வரீம்
வாமேநாலிங்கி₃தாம் ஶஶ்வத் பா₃ஹுநா பரமாத்மந: |
த₃ம்ஸலக்₃நபா₃ஹும் ச தி₃வ்யபங்கஜதா₄ரிணீம் ||
அத₂ மாமர்ச்சயேத் ரிக்₃பி₄: ப்ரயத: பரமேஶ்வரீம் |

வாமோத்ஸங்க₃நிஷண்ணும் மாம் தே₃வதே₃வஸ்ய
ஶார்ங்கி₃ண: ।
குர்யாத் ப்ரத₂மயா சர்சா த்வாவாஹநமதந்த்₃ரித: ||
த்₃விதீயயாऽஸநம் த₃த்₃யாத் தே₃வதே₃வஸ்ய ஶார்ங்கி₃ண: ||
த்ருதீயயார்க்₄யமீஶாநே பாத்₃யம் சாபி ப்ரகல்பயேத் ।
சதுர்த்₂யாசமநம் சைவ பஞ்சம்யா சோபஹாரகம் ||
ஷஷ்ட்₂யா ஸ்நாநம் ப்ரகுர்வீத ஸஹ நௌ ஸாத₄கோத்தம: ।
ஸப்தம்யா வாஸஸீ த₃த்₃யாத் அஷ்டம்யா பூ₄ஷணே ச ||
க₃ந்த₄ம் த₃த்₃யாந்நவம்யா து த₃ஶம்யா ஸுமநஶ்சயம் ।
பராப்₄யாம் தூ₄பதீ₃பௌ து பரயா மது₄பர்க்ககம் ||
ப்ராபணம் ச சதுர்த₃ஶ்யா பஞ்சத₃ஶ்யா நமஸ்க்ரியா: ।
தாரிகாமநுதாரம் ச ப்ரயுஞ்ஜீயாத₃த₂ாந்தத: ||
ப்ரத்ய்ருசம் ப்ரயதோ மந்த்ரீ ஜபேச்ச₂க்த்யா யத₂ாவிதி₄ ।
ஸூக்தஸ்ய விலயம் பஶ்சாத் தாரிகாயாமநுஸ்மரேத் ||
தாரிகாஸ்தௌ₂ ச நௌ த்₄யாத்வா ஸ்மரேத் ஸர்வக₃திம் ச
ரிக்பி₄ஶ் சதஸ்ருபி₄ர் யத்₃வா பூர்வமாவாஹநக்ரியா । [நௌ
பஞ்சம்யா து ப்ரபத்₃யேத ஶ்ரியம் மாம் ஶுத்₃த₄சேதஸா ||
ஆப இத்யநயா குர்யாத் அர்க்₄யபாத்₃யாசமக்ரியா: ।
ஆர்த்₃ராமிதி ச மத்ஸ்நாநம் கர்த்த₃மேநேதி சாம்ப₃ரம் ||
கந்த₄த்₃வாரேதி க₃ந்த₄ா: ஸ்யு: உபைது ஸ்யாத₃லங்க்ருதி: ।
காம் ஸோஸ்மி தூ₄பதீ₃பௌ ச ஷஷ்ட்₂யா சைவோபஹாரகம் ||
மநஸ: காமமித்யேவ மது₄பர்க்கம் ப்ரகல்பயேத் ।
க்ஷுத்பிபாஸாமிதி ஹ்யேஷா ப்ராபணப்ரதிபாதி₃கா ||
அந்த்யயா து நமஸ்கார: ஶிஷ்டம் பூர்வவதா₃சரேத் ||

*[இந்திரனே! எனனுடைய ஸூக்தத்தினுடைய ப்ரயோகவிதானம் விதிக்கப்பட்டிருக்கிறபடியைக் கேட்பாயாக. என்னையே இதற்கு ரிஷியாக அறியவேண்டும். இதன் சந்தஸ் "ஶ்ரீ:" என்று சொல்லப் படுவது. இதன் தேவதையும், ஸர்வாதாரையும, விஷ்ணுபத்னி யும் ஈச்வரியுமான நானேயாவேன். லக்ஷ்மீநாராயணர்களைப் பூஜிப்பதில் இந்த ஸூக்தம் விநியோகிக்கப்படுகிறது. பரமேஶ் வரியாய் லக்ஷ்மியென்னும் திருநாமமுள்ள என்னை விஷ்ணுவினுடைய மடியிலே எழுந்தருளியிருப்பவளாகவும், பரமாத்மாவின் இடது*

திருக்கையாலே ஆலிங்கனம் செய்யப்பெற்றவளாகவும், அவருடைய தோளிலே வைக்கப்பட்ட கையை உடையவளாகவும், திவ்ய கமலத்தை தரித்திருப்பவளாகவும் எப்போதும் தியானிக்கக் கடவன். சார்ங்கமென்னும் வில்லாண்ட தேவதேவனுடைய வலது தொடையில் அமர்ந்திருப்பவளும், பரமேச்வரியுமான என்னை, நியமங்களுடன் கூடியவனாய், ஸ்ரீஸூக்தமந்திரங்களால் அர்ச்சிக்கக் கடவன். சோம்பலில்லாதவனாய் முதல் மந்திரத்தால் என்னை ஆவாஹனம் செய்யக்கடவன். இரண்டாவது மந்திரத்தால் தேவ தேவனை பகவானுக்கும் (எனக்கும்) ஆஸனத்தை அளிக்கக் கடவன். மூன்றாவது மந்திரத்தால் ஸர்வேச்வரனுக்கு அர்க்ய பாத்யங்களைக் கொடுக்கக்கடவன். நான்காவது மந்திரத்தால் ஆசமனத்தையும், ஐந்தாவதால், உபஹாரங்களையும் ஸமர்ப்பிக்க வேண்டும். அர்ச்சகச்ரேஷ்டனாயிருப்பவன் ஆறாவது மந்திரத்தால் எங்களிருவருக்கும் ஸ்நாநத்தைச் செய்விக்கவேண்டும். ஏழாவது மந்திரத்தால் வஸ்த்ரங்களையும் எட்டாவதால் பூஷணங்களையும் அணிவிக்க வேண்டும். ஒன்பதாவதால் கந்தத்தையும் பத்தாவதால் புஷ்பஸமூஹங்களையும், பதினொன்று பனிரண்டாவது ரிக்குகளால் தூபதீபங்களையும், பதின்மூன்றாவதால் மதுபர்க்கத்தையும், பதினான்காவது மந்திரத்தால் ப்ராபணத்தையும் (ப்ரதிஷ்டா பனத்தையும்), பதினைந்தாவதால் நமஸ்காரத்தையும் செய்ய வேண்டியது. 'தாரிகை' என்னும் மந்திரத்தையும், அதற்குப் பின் 'தாரம்' எனப்படும் ஓங்காரத்தையும் ஒவ்வொரு மந்திரத்தின கடைசியிலும் நியமத்துடன் கூடியவனாய மந்த்ரஜ்ஞன் ப்ரயோகம் செய்யவேண்டும். இயன்றவரையில் விதிப்படி ஜபிக்கவும் வேண்டும். ஸூக்தமந்திரங்கள் கடைசியிலுள்ள தாரிகாமந்திரத்தில் லயமடைவதாகவும் நினைக்கவேண்டும். தாரிகையில் இருப்பவர்களாக எங்களை நினைத்து எங்களையே ஸர்வப்ராப்யமாகவும் நினைக்கவேண்டும். இது ஒரு விநியோகப்ரகாரம். வேறொரு ப்ராகாரம் பின்வருமாறு:— முதல் நான்கு ரிக்குகளாலே எங்களை ஆவாஹனம் செய்யவேண்டும். நன்னெஞ்சுடன ஐந்தாவது ரிக்காலே ஸ்ரீதேவியாகிய என்னை சரணமடையவேண்டும். "ஆப:" என்று தொடங்கும் மந்திரத்தாலே அர்க்யபாத்யாசமநங்களைக் கொடுக்கவேண்டும். 'ஆர்த்ராம்' என்னும் மந்திரத்தால் ஸ்நாநத்தையும், 'கர்த்தமேந' என்னும் மந்திரத்தால் வஸ்திரத்தையும், 'கந்தத்வாராம் என்னும் மந்திரத்தால் கந்தத்தையும், 'உபைது' என்று தொடங்கும் மந்திரத்தால் அலங்காரத்தையும், "காம்

ஸோஸ்மிதாம்'' என்னும் மந்திரத்தால் தூபதீபங்களையும், ஆறு வது மந்திரத்தால் உபஹாரங்களையும், "மநஸ: காமம்" என்று தொடங்கும் ரிக்கால் மதுபர்க்கத்தையும் கொடுக்கவேண்டியது. ''க்ஷுத்பிபாஸாம்'' என்னும் மந்திரம் ப்ராபணத்தைச் சொல்லு வது. கடைசி ரிக்கால் நமஸ்காரம் செய்யவேண்டியது. மற்றவை முன்போல் செய்யவேண்டியது.]

நிற்க; ஸ்ரீஸூக்தத்திற்கு ஸ்ரீதேவியின் புத்ரனை ஹிரண்ய கர்ப்பன் (ப்ரஹ்மா) ரிஷியென்று சொல்லுவாருமுண்டு. நான்காவது ஐந்தாவது மந்திரங்கள் த்ரிஷ்டுப் சந்தஸ் என்றும் மற்றவை அநுஷ்டுப்புக்களென்றும் சொல்லுவதுமுண்டு. மூன்றுவதும்கடைசியு மான மந்திரங்களை ப்ருஹதீ என்று சிலர் கூறுகிறார்கள். பகவான் போதாயனர் ஸ்ரீஸூக்தஹோமம் செய்யும் முறையையும், அதனல் பெருஞ்செல்வமுண்டாகுமென்றும் கூறியிருக்கிறார். வஸிஷ்ட ஸ்ம்ருதியிலும் ஸ்ரீஸூக்தஹோமப்ரகாரம் விதிக்கப்பட்டுள்ளது. ஒரு வருஷம் அதை அநுஷ்டிப்பவர்களுக்குப் பெருஞ்செல்வ முண்டாகிறது என்று உத்கோஷிக்கப்பட்டுள்ளது. மற்றும் பல ஸ்ம்ருதிபுராணங்களிலும் ஸ்ரீஸூக்தவிநியோகமுறையும், அதன் பலனும் விளக்கப்படுகின்றன.

''மல்லிகை: ஶ்வேதபத்$_3$மைர் வா ஜாதிபுஷ்பைரத$_2$ாபி வா |
மந்த$_3$ாரகுஸுமம் வாபி பூஜாயாம் க்$_3$ருஹ்யதே ஶ்ரிய: ||
ஆத்$_3$யயாऽऽவாஹயேத்$_3$ தே$_3$வீம் ஸ்ரீஸூக்தஸ்ய ந்ருபேஶ்வரீம்|
த்$_3$விதீயயாஸநம் த$_3$த்$_3$யாத் பாத்$_3$யம் சைவ த்ருதீயயா ||
சதுர்த்$_2$யார்க்$_4$யப்ரத$_3$ாநம் ஸ்யாத் பஞ்சம்யாசமநீயகம் |
ஷஷ்ட்$_2$யா ஸ்நாநம் ப்ரகுர்வீத ஸப்தம்யா வஸ்த்ரமேவ ச ||
முக்தாஸம்வீதமஷ்டம்யா பூ$_4$ஷணநி ச பார்த்தி$_2$வ |
க$_3$ந்த$_4$ம் த$_3$த்$_3$யாந் நவம்யா து த$_3$ஶம்யா புஷ்பமேவ ச ||
ஏகாத$_3$ஶ்யா தத$_2$ா தூ$_4$பம் த்வாத$_3$ஶ்யா ஜ்யோதிரேவ ச |
பாயஸம் க்$_4$ருத ஸம்யுக்தம் க$_2$ண்ட$_3$ஶர்க்கரஸம்யுதம் ||
நிவேத$_3$யேத் த்ரயோத$_3$ஶ்யா சதுர்த$_3$ஶ்யா ப்ரத$_3$க்ஷிணம் |
உத்$_3$வாஸயேத் பஞ்சத$_3$ச்யா லக்ஷ்மீம் தாம் லோகமாதரம் ||''

[மல்லிகைப் பூக்கள், வெண்தாமரைப் புஷ்பங்கள், சாதிப்பூக் கள், மந்தாரபுஷ்பம் ஆகிய இவைகளில் ஏதேனும் ஸ்ரீதேவியைப் பூஜிக்க ஏற்றது. ஸ்ரீஸூக்தத்தின் முதல்மந்திரத்தால் தேவியை

ஆவாஹனம் செய்யவேண்டும். இரண்டு, மூன்று, நான்கு, ஐந் தாவது மந்திரங்களால் (முறையே) ஆஸனம், பாத்யம், அர்க் யம், ஆசமநீயம் ஆகியவற்றை அளிக்கவேண்டும். ஆருவதால் ஸ்நாநத்தையும், ஏழாவதால் வஸ்திரத்தையும் ஸமர்ப்பிக்கவேண்டும். முத்துமாலையையும் மற்ற பூஷணங்களையும் எட்டாவதாலும், ஒன்பதாவதால் கந்தத்தையும், பத்தாவதால் புஷ்பத்தையும், பதி னென்று பன்னிரண்டாவது ரிக்குகளால் தூபத்தையும் தீபத்தை யும், நெய்யும் சர்க்கரையும் சேர்ந்த பாயஸத்தைப் பதின்மூன்று வதாலும் அளிக்கவேண்டும். பதினுன்காவதால் ப்ரதக்ஷிணம் செய்து, உலகிற்கெல்லாம் தாயான லக்ஷ்மியைப் பதினைந்தாவது மந்திரத்தால் ப்ரதிஷ்டாபனம் செய்விக்கவேண்டும்] என்று தொடங்கிப் பாத்மபுராணத்திலும்,

**"ஶ்ரிய: பஞ்சத₃ஶர்ச்சம் து ஶ்ரீகாமஸ் ஸததம் ஜபேத்"**

[பதினைந்து மந்திரங்கொண்ட ஸ்ரீஸூக்தத்தைச் செல்வத்தைவிரும்பு மவன் எப்போதும் ஜபிக்கவேணடும்] என்றும்,

**"ய: ஶ்ரீஸூக்தம் ஜபேந் நித்யம் ரிக்₃பி₄ஸ் தாமர்ச்சயேச்ச்₂ரியம்|**
**ஶ்ரீகாமோ ஜுஹுயாத₃க்₃நௌ பத்₃மைர் பி₃ல்வைஸ் தத₂ா**
**ப₂லை: ||**

[செல்வத்தை விரும்புமவன் தினந்தோறும் ஸ்ரீஸூக்தத்தை ஜபிக்கக் கடவன்; அதன் மந்திரங்களாலே ஸ்ரீதேவியைப் பூஜிக்கக்கடவன்; தாமரையையாவது வில்வப்பழங்களையாவது கொணடு மந்திரங் களால் அக்னியில் ஹோமமும் செய்யக்கடவன்] என்றும் மற்ற ஸ்ம்ருதிபுராணங்களிலும் விதிக்கப்பட்டது.

ரிஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் முதலானவைகள் அவசியம் அறியவேண்டியவையேயென்பது,

**"யோ ஹ வா அவிதி₃தார்ஷேயச்ச₂ந்தோ₃தைவத ப்₃ராஹ் மணேந மந்த்ரேண யஜதி யாஜயதி வா, அத்₄யாபயதி வா ஸ்த₃ாணுவர்ச்சூதி கர்த்தம் வாऽऽபத்₃யதே ப்ர வா மீயதே பாபீயாந் ப₄வதி யாதயாமாங்யஸ்ய ச₂ந்த₃ாம்ஸி ப₄வந்தி। அத₂ யோ மந்த்ரே வேத₃ ஸ ஸர்வமாயுரேதி அயாத்யாமாங் யஸ்ய ச₂ந்த₃ாம்ஸி ப₄வந்தி ||"**

[எவனொருவன் ரிஷி, சந்தஸ், தேவதை, ப்ராஹ்மணம் ஆகிய இவை அறியப்பெருத மந்திரத்திஞல் யாகம் செய்கிருனே, அல்லது யாகம் செய்விக்கிருனே, அல்லது அத்யயனம் செய்விக்கிருனே அவன் அசையாப்பொருளாகிருன் ; பள்ளத்தில் வீழ்கிருன் ; இறந்துபடுகிருன் ; பாவியாகிருன். அவனுடைய வேதாத்யன மெல்லாம் வீணுகின்றது. எவனொருவன் மந்திரத்தில் இவற்றை அறிகின்ருனே அவன் நூருண்டு வாழ்கின்ருன். அவனுடைய வேதாத்யயனம் முழுவதும் ஸபலமாகின்றது.] என்றும்,

" அவிதி₃த்வா ரிஷிம் ச₂ந்தே₃ா தை₃வதம் யோக₃மே₃வ ச।
யோऽத்₄யாபயேத்₃ யாஜயேத் வா பாபீயாந் ஜாயதே
து ஸ:॥ "

[ரிஷியையும், சந்தஸ்ஸையும், தேவதையையும், விநியோகத்தையும் அறியாமல் எவனொருவன் அத்யயனம் செய்விக்கிருனே, அல்லது யாகம் செய்விக்கிருனே, அவன் மஹாபாபியாகிருன்.] என்றும் சாஸ்திரங்களில் கோஷிக்கப்பட்டது. மந்திரங்களின் அர்த்தஜ்ஞானமும் ஆவச்யகமே என்பது,

"ஸ்த₂ாணுரயம் ப₄ாரவஹ: கிலாதீ₄த்ய
வேத₃ம் ந விஜாநாதி யோऽர்த்த₂ம் ।
யோர்த்த₂ஜ்ஞ இத் ஸகலம் ப₄த்₃ரமஶ்நுதே
ஸ நாகமேதி ஜ்ஞாநவிதூ₄த பாப்மா ॥"

[எவனொருவன் வேதத்தை அத்யயனம்செய்தும், அதன் பொருளை அறியாமலிருக்கிருனே அவன் (வேத)பாரத்தைத் தாங்கும் சுமை தாங்கிக் கல்லாகவே இருக்கிருன். எவனொருவன் வேதப்பொருளை உணர்கின்ருனே அவன் எல்லா நன்மைகளையும் அடைகிருன். அர்த்தஜ்ஞானத்தாலே பாபம் நீங்கப்பெற்றுப் பரமபதத்தை அடைகிருன்] என்று உத்கோஷிக்கப்பட்டது. இவ்வர்த்தஜ்ஞானத்தை அனைவரும் அடைவதற்காக, பிராட்டி தானே சோதி வாய்திறந்து அருளிச் செய்த லக்ஷ்மீதந்த்ர வசனங்களையும், பராஶராதிபரமரிஷிகளின் வாக்குகளையும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களையும், ஆசார்ய ச்ரேஷ்டர்களின் ஸ்ரீஸூக்திகளையும் துணையாகக்கொண்டு இந்த ஸ்ரீஸூக்தத்தின் பொருளைத் தமிழில் விவரிக்கின்ருேம்.

हरिः ओं॥ हिरण्यवर्णां हरिणीं सुवर्णरजतस्रजां।
चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह॥ १॥

ஹரி ஓம்: ||

1. ஹிரண்ய வர்ணாம் ஹரிணீம் ஸுவர்ணரஜத ஸ்ரஜாம் |
சந்த்$_3$ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ$_3$ ம ஆவஹ ||

பதவுரை:— ஜாதவேத:—வேதங்களைப் பிறப்பித்த எம் பெருமானே! ஹிரண்யவர்ணாம்—அழகிய நிறத்தை உடையவளும், ஹரிணீம்—மான்போன்றவளும், ஸுவர்ண ரஜத ஸ்ரஜாம்—பொன் மாலைகளையும், வெள்ளி மாலைகளையும் உடையவளும், சந்த்ராம்-சந்திரனைப்போல் ஆநந்திப்பவளும், ஹிரண்மயீம் — ஸுவர்ணமயமானவளுமான, லக்ஷ்மீம்—லக்ஷ்மீதேவியை, மே—என்னிடத்தில், ஆவஹ—ஆவிர்ப்பவிக்கச்செய்வீராக.

மறைநான்கு முன்னோதிய ஸர்வேச்வரனை அழைத்து, ஶ்ரேஷ்த்வ லக்ஷணம் நிரம்பியிருப்பவளாய், உனக்கேற்கும் பெருமைபெற்றவளான லக்ஷ்மீதேவியை என்னிடத்தில் நிலைநிறுத்தவேண்டும் என்று பிரார்த்திக்கிறான் இம்மந்திரத்தில்.

(ஹிரண்யவர்ணாம்) பொன்போன்ற நிறத்தையுடையவளை. "ஹிரண்மய: புருஷ:" [ஸுவர்ணமயனான புருஷன்] எனப்படும் அவனுக்குத் தகுந்தவள் என்கை. ஹேமஸமானவர்ணனுக்குப் பத்நியாம்போது ஹிரண்யவர்ணையாகவேண்டுமன்றோ.

" துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபி$_4$ஜநலக்ஷணாம் |
ராக$_4$வோऽர்ஹதி வைதே$_3$ஹீம் தம் சேயமஸிதேக்ஷணா ||"

[ஒத்த குணம், வயது, நடத்தை ஆகியவைகளை உடையவளும், ஒத்த குடிப்பிறப்பையும், லக்ஷணங்களையும் உடையவளுமான வைதேஹிக்கு ராமனே தகுந்தவர்; (அப்படிப்பட்ட) அவருக்கும் கறுத்த கண்களையுடைய இவளே தகுந்தவள்] என்றன்றோ திருவடியும் அருளிச்செய்தது. உண்மையில் கொண்டல்வண்ணனை அவன் ஸுவர்ணமயன் ஆவதும் இவளுடைய நித்யஸந்நிதியாலேயன்றோ.

(ஹிரண்யவர்ணாம்) ஹிரண்யம்—பொன்; வர்ண:—அக்ஷரம். பொன்போல் பூதங்களில் மறைந்திருப்பவளாகவும், வர்ணாத்மிகை யாகவுமிருப்பவள். அன்றிக்கே, ஹிரண்யம்போலே ஸ்ப்ருஹணீய மான (ஆசைப்படத்தக்க) சப்தத்தை உடையவள் என்றுமாம். "பால் மொழியாய்"[பெரியாழ் திரு 3-10-5]'மது₄ரா மது₄ராலாபா கிமாஹ மம பா₄மிநீ" [ரா-ஸு 66-15] [இனியவளும், இனியபேச்சை உடையவளு மான சீதை எனக்கு என்ன சேதி சொன்னாள்?] என்கிறபடியே.

"நிஹிதா ஸர்வபூ₄தேஷு (வ்)ரணே ப்₄ருங்க₃வதூ₄ரிவ ।
ஜநயந்தி பரம் நாத₃ம் தைலத₄ாராவத₃ச்யுதம் ॥" [37]

[புண்ணிலே (போக்யபுத்தியுடன்) பெண்வண்டு இருப்பதுபோல், நான் என் (உடைமைப்பொருள்களான) எல்லா பூதங்களிலும் (போக்யபுத்தியுடன்) எண்ணெ தாரையைப்போலே இடைவிடாத மேலான நாதத்தை எழுப்பிக்கொண்டு எழுந்தருளியிருக்கிறேன்] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலே இப்பொருள்கள் ஆதரிக்கப்பட்டன. 'ரணே' [சப்திக்கிறேன்.] என்றும் பாடம்; அப்போது 'ஹி' என்னும் எழுத்து 'நிஹிதா' [அந்தர்யாமியாயிருப்பவள்] என்றும் 'ரண்' என்பது 'ரணே' [சப்திக்கிறேன்] என்றும், 'ய' என்பது 'ஜநயந்தீ' என்றும் விவரிக்கப்பட்டதாகக் கொள்வது. 'நிஹிதா' என்னும் இத்தால் பகவான் ஸர்வாந்தர்யாமியாயிருக்கும் நிலையிலே இப்பிராட்டியும் கூட எழுந்தருளியிருக்கிறாள் என்னுமர்த்தம் அறி விக்கப்பட்டதாகிறது. "அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து" என்று பெரியாழ்வாரும், "திருமால் வந்தென் நெஞ்சு நிறையப்புகுந்தான்" என்று நம்மாழ்வாரும் இவ்வரும்பொருளை அருளிச்செய்தார்கள். பொன்போலிருப்பவள் என்றதால், நிறத் திலும், அழகிலும் பெருவிலையனாயிருக்கை, ஸாதனமாகவும், ஸாத்ய மாகவும் இருக்கை முதலான குணங்களிலும் பொன்னை ஒத்திருப் பவள் என்றதாகிறது. (ஹிரண்யவர்ணாம்) ஸ்ப்ருஹணீயவர்ண காரணபூ₄தாம்.

"மூலமாத₄ாரமாரப்₄ய த்₃விஷ்ட்காந்தமுபேயுஷீ ।
உதி₃தாநேகஸாஹஸ்ர ஸூர்ய வஹ்நீந்து₃ஸந்நிப₄ா ॥
சக்ரவத்புநராத₄ாராத் ஶாந்தா பஶ்யாத₂ மத்₄யமா ।
வைக₂ரீ ஸ்த₂ாநமாஸாத்₃ய தத்ராஷ்டஸ்த₂ாநவர்த்திநீ ॥
வர்ணாநாம் ஜநநீ பூ₄த்வா பே₄ாக்யாந்₃ ப்ராஸ்நௌமி கௌ₃ளரிவ।
ஹிரண்யவர்ணேத்யேவம் மாம் ப்ரஜாபதிருத₃ாரதீ₄: ॥

ஸ்துத்வா து மத்ப்ரஸாத₃ாத் ஸ யோக₃ாநாம் த₄ர்மமூசிவாந் |
ப்ரணவாதி₃ர் நமோந்தோऽயம் மந்த்ரோ மம நவாக்ஷர: ||
ஶப்₃த₃ப்₃ரஹ்மமய: ஸாக்ஷாத் யோகி₃நாம் யோக₃ஸாத₄க: ||''

[ (வயிற்றின் அடிப்பாகத்திலேயுள்ள) மூலாதாரப்ரதேசத்திலிருந்து தொடங்கி, (தலையில் ப்ரஹ்மரந்த்ரப்ரதேசத்திலிருந்து பன்னிரண்டு விரற்கடை தாண்டியுள்ள) த்விஷட்காந்த ஸ்தானம் வரையிலும் வீற்றிருப்பவளாய், பல்லாயிரம் சூரியர்களும், அக்னிகளும், சந்திரர்களும் சேர்ந்து உதித்தாற்போன்ற ஒளியுள்ளவளாய், சக்ராகாரமாயிருக்கும் மூலாதாரப்ரதேசத்திலிருந்து சாந்தை என்றும், பஶ்யை என்றும், மத்₄யமை என்றும் பெயரை உடைய த்வனிகளாக ஆகி, வைகரீஸ்தானத்தை அடைந்து, அங்கு (கண்டம் முதலிய) எட்டு இடத்திலே இருப்பவளாய், சப்தங்களுக்குத் தாயாயிருந்து கொண்டு பசுவைப்போல் போக்யங்களைப் பொழிகிறேன். இதனாலேயேசிறந்த புத்தியையுடைய பிரமன் 'ஹிரண்யவர்ணை' (அழகிய த்வனிகளுக்கு உத்பாதிகையாயிருப்பவள்) என்று என்னைத் துதித்து, என் அருளாலே யோகதர்மத்தை உரைத்தான். ப்ரணவத்தோடு தொடங்கி, நமஸ்ஸுடன் முடியும். (ஓம் ஹிரண்யவர்ணாயை நம:) என்னும் இந்த மந்திரம் ஒன்பது அக்ஷரங்கள் கொண்டது. ஸாக்ஷாத்வேதமயமானது; யோகிகளுடைய யோகத்தை ஸாதித்துக் கொடுப்பது] என்று பிராட்டி லக்ஷ்மீதந்த்ரத்தில் அருளிச்செய்தபடியே மனிதர்கள் உச்சரிக்கும் அழகிய சப்தங்களுக்குக் காரணபூதையாயிருப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

(ஹரிணீம்) மான்போலேயிருப்பவள். (ஹிரண்யவர்ணாம் ஹரிணீம்) பொன்னிற மான்போலே உள்ளவள். துவட்சியிலும், கண்ணின் மருட்சியிலும் மானை ஒத்தவள். யோகிகளாகிற வேடர்களாலே, பக்தியாகிற வலையால் கட்டப்படும் மானாயிருப்பவள். ''ஹரந்தி-ப₃த்₄நந்தி-ஏநாமிதி ஹரிணீ'' என்று வ்யுத்பத்தி.

''தூ₃ராத்₃ தூ₃ரதரம் யாமி ஹரிணீ யோகி₃மாநஸாத் |
ப₃க்த்யா ப₃த்₄நந்தி நிஜயா யோகி₃நோ மாம் யதவ்ரதா: |
ஷஷ்டி ரஷ்டஸஹஸ்ராணி யோகி₃நோ மத்பராயணா: |
ஹரிணீம் மாமநுத்₄யாய ப்ரத்யாஹாரம் பரம் க₃தா: || ''

[மான்போன்றவளான நான் யோகிகளின் மநஸ்ஸிலிருந்து வெகு தூரம் செல்கிறேன். விரதங்களை அனுஷ்டிப்பவர்களான யோகிகள் என்னைத் தங்கள் பக்தியாலே கட்டுகிறார்கள். நாற்பத்

தெண்ணுயிரம் யோகிகள் என்னையே மேலான ப்ராப்யமாகக் கொண்டு என்னைப் பெண்மாஞக தியானித்து மேலான ப்ரத்யாஹார நிலையை அடைந்தார்கள்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலே இப்பொருள் ஆதரிக்கப்பட்டது.

(ஹரிணீம்) ஹரிணுஜினத்தாலே (மான்தோலாலே) சுற்றப் பட்டவள் என்னுதல்; மான்தோல்விரிப்பை உடையவள் என்னுதல்; ஹரியினுலே ஆலிங்கனம் செய்யப்பெற்ற இடையை உடையவள் என்னுதல்; மான்கண்போன்ற நீண்ட கண்ணை உடையவள் என்னுதல்.

" ஹரிணுஜிநஸம்வீதாம் ஹரிணுஜிநஸம்ஸ்தராம் |
ஹரிணுஶ்லிஷ்டமத்$_4$யாம் தாம் ஹரிணுயதலோசநாம் ||
ஹரிணீம் மாமநுஸ்ம்ருத்ய பராம் ஶாந்திமவாப்நுயாத் || "

[மான்தோலாலே சுற்றப்பட்டவளும், மான்தோல்விரிப்பை உடையவளும், ஹரியினுலே ஆலிங்கனம் செய்யப்பெற்ற இடையை உடையவளும், மான்போன்று நீண்ட கண்களை உடையவளுமான என்னை 'ஹரிணீ' என்று தியானித்து மேலான சாந்தியை அடையலாம்.] என்று தந்த்ரத்திலே சொல்லப்பட்து. (ஹரிணீம்) "ஹரிம் நயதீதி ஹரிணீ" [பகவான் ஹரியைக் காரியங்கள் செய்யும்படி தூண்டுபவள்] என்றும் பொருள் கொள்ளலாம். ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள், மோக்ஷபலப்ரதானம் முதலான காரியங்களில் ஈடுபடும்படி பகவானைத் தூண்டுபவள் அவனுக்கு ஸஹதர்மசாரிணியாய், புருஷகாரபூதையாயிருக்கும் இவளேயன்றே.

"ஈஷத் த்வத்கருணு நிரீக்ஷணஸுதா$_4$ ஸந்து$_4$க்ஷுணுத்$_3$ ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத$_3$லாப$_4$தஸ் த்ரிபு$_4$வநம் ஸம்ப்ரத்யநந்தோத$_3$யம்|
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த$_3$லோசந மந:காந்தாப்ரஸாத$_3$ாத்$_3$ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்$_4$வஸு ந்ருணும் ஸம்ப$_4$ாவ்யதே
கர்ஹிசித் ||"

[உன் கடாக்ஷம் இல்லாமையாலே, முன் நசித்துக்கிடந்ததான மூவுலகமும், இப்போது சிறிதுபோது உன்னுடைய கருணுகடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினுல் அவளற்ற பெருமையை உடையதாகும்படி ரக்ஷிக்கப்படுகிறது. மனிதர்களுக்கு ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் இவைகளில் மேன்மையானது தாமரைக் கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதேவியின் அருளில்லாமல் ஏற்படாதன்றே.] என்று ஆளவந்தாரும்,

**ஸ்வஸ்தி ஸ்ரீர் தி3ஶதாத3ஶேஷஜக3தாம் ஸர்க்கோ3பஸர்க்க3 ஸ்தி2தீ:**
**ஸ்வர்க்க3ம் து3ர்க்க3திமாபவர்க்கி2கபத3ம் ஸர்வம் ச குர்வன்ஹரி:|**
**யஸ்யா வீக்ஷ்ய முக2ம் ததி3ங்கி3தபராதீ4னோ வித4த்தேऽகி2லம்**
**க்ரீடே3யம் க2லு நான்யதா2ऽஸ்ய ரஸதா3 ஸ்யாதை3கரஸ்யாத் தயா ||**

*[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்கநரக மோக்ஷங்களைக் கொடுப்பதையும் செய்யும்போது பகவான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கிதத்திற்கு வசப்பட்டவனாய் எல்லாக்காரியங்களையும் செய்கிறானோ, அந்தப்பிராட்டி (நமக்கு) மங்களத்தை அளிக்கட்டும்; பகவான் அவளுடன் ஒரே அபிப்பிராயத்தை உடையவனாயிருக்கிற படியால், அவளுடைய இங்கிதபராதீனனாகக் காரியங்களைச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.]* என்று ஆழ்வானும்,

**"யத்3ப்4ரூப4ங்க3ா: ப்ரமாணம் ஸ்தி2ரசரரசநா தாரதம்யே முராரே:"**

*[எவளுடைய புருவநெறிப்புகள் பகவானுடைய ஸ்தாவரஜங்கம ஸ்ருஷ்டியிலுள்ள ஏற்றத்தாழ்வுக்குக் காரணமோ...]* என்றும்,

**"நம: ஸ்ரீரங்க3நாயக்யை யத்3ப்4ரூவிப்4ரமபே4த3த: |**
**ஈஶேஶிதவ்ய வைஷம்ய நிம்னோன்னதமித3ம் ஜக3த் ||"**

*[எவளுடைய புருவநெறிப்புகளின் வித்தியாசத்தாலே இவ்வுலகம் நியமிப்பவர்களும், நியமிக்கப்படுபவர்களுமாகிற பேதத்தினால் ஏற்றத்தாழ்வுகளை உடையதாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட ஸ்ரீரங்கநாயகிக்கு நமஸ்காரம்.]* என்றும்,

**ஶ்ரியை ஸமஸ்தசித3சித்3 வித4ாநவ்யஸநம் ஹரே: |**
**அங்கீ3காரிபி4ராலோகைஸ் ஸார்த்த2யந்த்யை க்ருதோஞ்ஜலி:||**

*[ஸகல சேதநாசேதனங்களையும் படைப்பதால் பகவானுக்குண்டாகும் சிரமத்தைத் தன் அங்கீகாரத்தைக் காட்டும் கடாக்ஷங்களாலே ஸபலமாகச் செய்கின்ற பிராட்டியின் பொருட்டு அஞ்ஜலியானது (அடியேனால்) செய்யப்பட்டது.]* என்றும்,

**உல்லாஸபல்லவிதபாலித்ஸப்தலோகீ-**
**நிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் |**

ஸ்ரீரங்க₃ஹர்ம்யதலமங்க₃ளதீ₃பரேக₂ாம்
ஸ்ரீரங்க₃ராஜமஹிஷீம் ஶ்ரியமாஶ்ரயாம: ||

[ஏழுலகங்களையும் (பகவான்) படைத்தவுடன் தளிர்விடுவதாகவும், (அவனாலே) ரக்ஷிக்கப்பட்ட ஏழு உலகங்களின் நிர்வாஹத்தினால் மொட்டுவிடுவதாகவுமிருக்கிற அர்த்த₄கடாக்ஷலீலையை உடையவளும் திருவரங்க மாளிகைக்கு (ஒரு) மங்கள தீபக்கொழுந்து போலிருப்பவளும், ஸ்ரீரங்கநாதனுடைய திவ்ய மஹிஷியானவளுமான ஸ்ரீதேவியை ஆஶ்ரயிக்கிறோம்.] என்றும் பட்டரும் பகவானுடைய ஜகத்வ்யாபாராதி ஸர்வகார்யங்களிலும் இவளுக்கு ப்ரேரகத்வரூபமான அந்வயம் உண்டென்று அருளிச்செய்தார்களன்றோ. இவற்றுக்கெல்லாம் அடியாக ஆழ்வாரும்

''அல்லிமலர்மகள் போகமயக்குகளாகியும் நிற்குமம்மான்
எல்லையில் ஞானத்தன் ஞானமஃதேகொண்டு எல்லாக்
கருமங்களும்செய் எல்லையில் மாயன்'' [திருவாய் 3-10-8]

என்று இவனுடைய எல்லாக் காரியங்களிலும பிராட்டிக்கும் அந்வயமுண்டு என்று அருளிச்செய்தாரன்றோ. இவ்விடத்தில் '''இப்படி ஜகத்காரணத்வத்தில் இவளுக்கு அந்வயமுண்டோ?' என்று ப்ரச்னம் பண்ணின நடாதூரம்மாளைக் குறித்துப் பிள்ளான் இவ்வர்த்தத்தில் ஸந்தேஹமுண்டோ? ஆவாப்₄யாம் கர்மாணி கர்த்தவ்யாநி ப்ரஜாஶ்ச உத்பாத₃யிதவ்யா:' [நம்மிருவராலும் கர்மங்கள் செய்யப்படவேண்டும். குழந்தைகளும் பிறப்பிக்கப்படவேண்டும்.] என்று ப்ரமாணம் சொல்லுகையாலே ஸஹதர்மசாரிணியான இவளுக்கும் அந்வயமுண்டு' என்று அருளிச்செய்தார்'' என்னும் ஐதிஹ்யம் அநுஸந்திக்கத்தக்கது. 'ஹரியைத் தூண்டுபவள்' என்னும் பொருளுள்ள இந்தநாமத்திலிருந்தும், இந்த ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் பெரியபிராட்டியாருக்கு ஜகத்வ்யாபாரத்திலும், முக்தி ப்ரத₃ானத்திலும் ப்ரேரகத்வரூபமான அப்ரத₄ானமான அந்வயம் உண்டேயொழிய, ஸாக்ஷாத் கார்யகரத்வரூபமான ப்ரத₄ானமான அந்வயம் இல்லையென்றும் தெளிவாகிறது. ஆகையாலேயே

''யதோ வா இமாநி பூ₄தாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி|
யத்ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி தத்₃ விஜிஜ்ஞாஸஸ்வ தத்₃
ப்₃ரஹ்மேதி ||

[எதனிடமிருந்து இந்த பூதங்கள் உண்டாகின்றனவோ, எதனால் உண்டான இவை வாழ்கின்றனவோ. எதை (ப்ரளயகாலத்தில்) அடைகின்றனவோ, (மோக்ஷத்தில்) எதனுள் நுழைகின்றனவோ அதையே ப்ரஹ்மமென்று அறிவாயாக.] என்று வேதங்களிலும் " ஜந்மாத்₃யஸ்ய யத: " [இவ்வுலகிற்குப் பிறப்பு முதலானவை எதனிடமிருந்தோ அது ப்ரஹ்மம்] என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் சொல்லப்பட்ட ஜகத்காரணத்வம் முக்திபலப்ரதத்வம் என்னும் பரப்ரஹ்ம லக்ஷணங்களுக்கு இவளிடத்திலே அதிவ்யாப்தி வாராது என்று தெளிவாகிறது. வேதாந்ததேசிகரும் சதுஃச்லோகீபாஷ்யத்திலே "கிஞ்ச, யதா₂ முக்தஸ்ய ப₄க₃வதா பரமஸாம்யே ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃ஸித்₃தே₄பி ஜக₃த்வ்யாபாரவர்ஜம்' இதி லக்ஷணஸூ₁த்ரைராகாரை: வைஷம்யம் ஸ்தா₂ப்யதே ததா₂ இஹாபி ப₄வதி"[மேலும், எப்படி முக்தனுக்குப் பரமாத்மாவுடன் மேலான ஒற்றுமை 'பரமம் ஸாம்யமுபைதி' 'மம ஸாத₄ர்ம்யமாகதா₂:' இத்யாதி ச்ருதிஸ்ம்ருதிகளால் ஸித்தித்திருந்தபோதிலும, 'ஜகத்வ்யாபாரத்தைத் தவிர மற்ற விஷயகளிலேயே ஸாம்யம்' [ப்ரஹ்மஸூத்ரம்] என்று லக்ஷணமாயிருக்கும் ஆகாரங்களாலே வேறுபாடு ஸ்தாபிக்கப்படுகிறதோ அப்படியே இப்பிராட்டி விஷயத்திலுமாகும்.] என்று அருளிச்செய்தார். லோகத்திலும், யஜ்ஞாதிகளில் பத்னிக்கு அந்வயமுண்டென்பதையும், ஆனால் அது அப்ரதானமான அந்வயமே என்பதையும் காணாநின்றோம். 'ஸஹத₄ர்மசரீ தவ' என்று சொல்லப்படும் இப்பிராட்டிக்கு ஜகத்வ்யாபாரத்திலும், முக்திப்ரதானத்திலும் அந்வயமில்லையென்று சொல்வார் ஸ்ரீவைஷ்ணவர்களில் ஆருமில்லை. ஆனால், 'ஸஹயுக்தேப்ரதா₄நே' என்னும் வ்யாகரணஸூத்ரத்திற்கும், இயற்கையான இவளுடைய பாரதந்த்ரியத்திற்கும் சேர அவ்வன்வயம் அப்ராதானமானதாகவேயிருக்கும். ஆகையாலேயே பரப்ரஹ்மலக்ஷணம் இவளிடத்தில ஏறாது.

(ஹரிணீம்) "ஹரிணா நீயதே இதி ஹரீணீ" [ஹரியினாலே (எல்லா காரியங்களிலும்) அழைத்துக்கொள்ளப்படுகிறாளாகையாலே ஹரிணீ என்னும் பெயருள்ளவளாகிறாள்.] என்கிறபடியே எல்லாக்காரியங்களிலும், எல்லா அவதாரங்களிலும், எல்லா நிலைகளிலும் ஹரியினாலே அழைத்துச்செல்லப்படுகிறாளாகையாலே, இப்பிராட்டிக்கு "ஹரிணீ" என்னும் பெயர் ஏற்பட்டிருப்பதாகவும் கொள்ளலாம். (ஹரீணீம்) ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகள் முக்திப்ரதானாதிகள் ஆகிய காரியங்களிலே எம்பெருமானாலே அழைத்துக்

கொள்ளப்படுபவள். "க்ரீடே₃யம் க₂லு நாந்யத₂ாஸ்ய ரஸத₃ா"[ஜகத் ஸ்ருஷ்ட்யாதிகளாகிற இவ்விளையாட்டு, இப்பிராட்டியின் முக மலர்த்திக்காகச் செய்யப்படாவிடில் இந்த பகவானுக்கு ரஸத்தை யளிக்காது] என்று ஆழ்வான் அருளியபடியே இவளை அழைத்துக் கொள்ளாவிடில் ஆநந்தமில்லாமையாலே நியமேந எல்லாக் காரியங்களிலும் அவனால் அழைத்துக் கொள்ளப்படுபவள். (ஹரிணீம்) எல்லா அவதாரங்களிலும் அவனால் அழைத்துச்செல்லப்படுபவள்.

**புநஶ்ச பத்₃மா ஸம்பூ₄தா ஆதி₃த்யோऽபூ₄த் யதா₃ ஹரி:।**
**யதா₃ து ப₄ார்க்க₃வோ ராமஸ் தத₃ாஸீத₃ த₄ரணீ த்வியம்॥**
**ராக₄வத்வேऽப₄வத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி।**
**அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாऽநபாயிநீ॥**
**தே₃வத்வே தே₃வதே₃ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ।**
**விஷ்ணோர் தே₃ஹாநுரூபாம் வை கரோத்யேஷாऽऽத்மநஸ் தநும்॥**

[பகவான் ஆதித்யனாய் அவதரித்தபோது பிராட்டி பத்மையானாள், பரசுராமனானபோது தரணியானாள்; ராகவனானபோது சீதையாகவும், க்ருஷ்ணாவதாரத்தில் ருக்மிணியாகவும் ஆனாள். மற்ற அவதாரங்களிலும் இவள் பகவானைப் பிரியாதவளாயிருக்கிறாள். அவன் தேவனாயவதரிக்கும்போது இவளும் தேவதேஹமெடுக்கிறாள்; மநுஷ்யனாகும்போது இவளும் மநுஷ்யையாகிறாள். விஷ்ணுவின் தேஹத்திற்குத் தகுந்ததாகத் தன் தேஹத்தை அமைத்துக்கொள்கிறாள் இப்பிராட்டி.] என்று பராசரமஹர்ஷியாலே விஷ்ணு புராணத்திலும் பேசப்பட்டதன்றோ.

**"க்ருஷ்ணாஜிநேந ஸம்வ்ருண்வந் வதூ₄ம் வக்ஷ:ஸ்த₂லாலயாம்"**
[மார்விலேயிருக்கும் லக்ஷ்மீதேவியை மான்தோலாலே மறைத்துக் கொண்டு (பலியின் யாகசாலைக்கு எழுந்தருளினான் வாமனன்.)] என்கிறபடியே நித்யப்ரஹ்மசாரியாய் அவதரித்தபோதும் மார்விலே இருத்தி மறைத்து அழைத்துச் செல்லும்படியன்றோ இவன் இவளிடத்திலே ஈடுபட்டிருப்பது.

**"யதி₃ மநுஜதிரஶ்சாம் லீலயா துல்யவ்ருத்தே**
**ரநுஜநுரநுரூபா தே₃வி நாவாதரிஷ்ய:॥**
**அஸரஸமப₄விஷ்யந் நர்ம நாத₂ஸ்ய மாதர்**
**த₃ரத₃ளத₃ரவிந்தே₃ாத₃ந்த காந்தாயதாக்ஷி॥"**

[சிறிது மலர்ந்த செந்தாமரையை ஒத்த அழகிய திருக்கண்களை யுடைய பிராட்டியே! லீலையின்பொருட்டு (தேவ) மனுஷ்யதிர்யக் (ஸ்தாவரங்) களுடன் ஒருபடிப்பட்டவனாய் அவதரிக்கும் ஸ்ரீரங்க நாதனுடைய அவதாரம்தோறும் அநுரூபையாக நீர் அவதரியா மலிப்பீராகில், அந்த நாதனுடைய விளையாட்டானது சுவையற்று விடும்.]

" அநுஜநுரநுரூபரூப சேஷ்டா
ந யதி$_3$ ஸமாக$_3$மமிந்தி$_3$ராऽகரிஷ்யத்।
அஸரஸமத$_2$வாऽப்ரியம்ப$_4$விஷ்ணு
த்$_4$ருவமகரிஷ்யத ரங்க$_3$ராஜநர்ம ॥

[ரங்கநாதரே! பிராட்டியானவள் (தேவரீருடைய) அவதாரம் தோறும் தேவரீருக்கு ஒத்த உருவத்தையும் லீலைகளையும் உடைய வளாய்க் கொண்டு சேர்ந்து அவதாரம் செய்யாதிருந்தாளாகில் உம்முடைய (அவதாரமாகிற) விளையாட்டை சுவையற்றதாகவோ அல்லது வெறுக்கத்தக்கதாகவோ செய்திருப்பாள்; இது நிச்சயம்.] என்று பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்திலும் [48], ஸ்ரீரங்கராஜஸ்தவத் திலும் [2-49] அருளிச்செய்தபடியே இவளை அழைத்துச்செல்லா விடில் அவனுடைய அவதாரங்கள் ஆநந்தமற்றவையாகிவிடு மன்றோ. (ஹரிணீம்) விபவாவதாரங்களில்மட்டுமன்றிக்கே வ்யூ ஹாந்தர்யாமயர்ச்சாவதாரங்கள் எல்லாவற்றிலும் ஹரியினாலே அழைத்துச்செல்லப்படுபவள். "திருமால் கடல்" என்றும், "அமரர் தொழப் பணங்கொள் பாம்பில் சந்தணிமென்முலைமலராள் தரணி மங்கை தாமிருவர் அடிவருடும் தன்மையானை" என்றும் க்ஷீராப்தி முதலான வ்யூஹங்களிலும், "மாதவா! கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா" "சீமாதவன் கோவிந்தன்" என்று விபவாவதாரங்களிலும், "திருமால் வந்தென் நெஞ்சு நிறையப்புகுந்தான்" "அரவிந்தப்பாவையும், தானும் அகம்படி வந்து புகுந்து" என்று அந்தர்யாமிநிலையிலும், "திருவுடையாள் மணவாளா திருவரங்கத்தேகிடந்தாய்" "வேங்கடத்தென் திருமாலும போந்தானே" என்று அர்ச்சாவதாரத்திலும் இவளுடன் சேர்ந்தே எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான் என்னுமர்த்தத்தை ஆழ் வார்கள் ஆதரித்தார்களன்றோ.

(ஹரிணீம்) " ந ஜீவேயம் க்ஷணமபி " என்று அவளைவிட்டுக் கணநேரமும் தரிக்கமாட்டாமையாலே காடுசென்றபோதோடு, நாடு

திரும்பிய போதோடு வாசியற அவனால் அழைத்துச்செல்லப் பட்டாளன்றோ. (ஹரிணீம்) "மாம் நயேத்₃ யதி₃ காகுத்ஸ்த₂ஸ் தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்" [என்னை எம்பிரான் அழைத்துச் செல்லுவானாகில் அது அவனுக்கே தகும்,] என்றல்லவோ இப் பிராட்டியும் அருளினாள். (ஹரிணீம்) "ஹரிம் நயதி" [ஹரியை அழைத்துச்செல்லுபவள்] என்னும் வ்யுத்பத்தியாலே "நின் அன்பின் வழிநின்று சிலைபிடித்து எம்பிரான் ஏக" [பெரியாழ்-திரு 3-10] என்கிறபடியே ஸர்வேஶ்வரன் இப்பிராட்டிக்கு ப்ரேமபர தந்திரன் என்னும் அர்த்தம் அறிவிக்கப்படுகிறது. "ஹரிணா நீயதே" [ஹரியினாலே அழைத்துச்செல்லப்படுபவள்] என்னும் வ்யுத்பத்தி யாலே இப்பிராட்டி ஸ்வரூபத்தினாலேயே இந்த பகவானுக்குப் பர தந்திரை என்னும் அரும்பொருள் அறிவிக்கப்படுகிறது. இப்படிக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமென்? இருவரும் ஒருவருக்கொருவர் ப்ரேமபரதந்திரர்களேயொழிய ஸ்வத: ஶேஷபூதர்களல்லர் என்று கொள்ளலாகாதோ என்னில்: "விஷ்ணுபத்நீ" [விஷ்ணுவுக்குப் பத்னியாயிருப்பவள்] "லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" "விஷ்ணோ: ஶ்ரீ:" [விஷ்ணுவுக்கு உடைமைப்பொருளாயிருப்பவள்] என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகளிலும், "ஸ்வத: ஶ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி" [பிராட்டியே! நீ இயற்கையாகவே விஷ்ணுவுக்குஉடைமைப்பொருளா யிருக்கிறாய்] என்று ஆசார்யஶ்ரேஷ்டரான பட்டராலும் அருளிச் செய்யப்பட்டிருக்கையாலே, சந்தணிமென்முலைமலரால் தரணிமங்கை தாமிருவர் அடிவருடும் தன்மையானை தாமோதரனுக்கு, கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள் என்னுமிப்பேற்றுக்கு இட்டுப்பிறந்திருக் கும் பெரிய பிராட்டியார் இயற்கையாகவே ஶேஷபூதை என்றே கொள்ளவேண்டும். இல்லையேல், ச்ருதிஸ்ம்ருதிகள் பிராட்டியின ஶ்ரீஸூக்திகள், ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய எல்லாம் விரோதிக்கும்.

(ஹரிணீம்) "ஹாரிணீ ஏவ ஹரிணீ" [பாபங்களையும் துக்கங் களையும்) அடியார்க்குப் போக்குபவள் ஹரிணியாவாள்] என்றும் பொருள் கொள்ளலாம். "ஸம்ஸாரார்ணவதாரிணீம்" "ப₄வப₄ங்க₃ா பஹாரிணீ" என்று ஸ்ம்ருதிகளிலும், "செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே" [பெருமாள் 4-9] "தீவினைக்கருநஞ்சைப் பூவினை மேவிய தேவி மணாளனை" [திருவிருத்தம்-89] "செடியா ராக்கை அடியாரைச்சேர்தல் தீர்க்கும் திருமாலை" [திருவாய் 1-5-7] "திருமகளார் தனிக்கேள்வன் இருமைவினை கடிவாரே"[திருவாய்1-6-9]

" கடிவார் தீய வினைகள் வடிவார் மாதவனாரே " [திருவாய் 1-6-10]
" வேரி மாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே " [திருவாய் 4-5-11]
என்று ஆழ்வார்களாலும் இவ்வர்த்தம் அறிவிக்கப்பட்டது. இங்கு ஒரு ஸந்தேஹம் எழக்கூடும், முக்திப₂லப்ரத₃த்வம் என்பது ப்ரப்ரஹ்மத்திற்கே உரியதானதொரு லக்ஷணம். அது இஷ்ட ப்ராப்தியென்றும், அநிஷ்டநிவ்ருத்தியென்றும் இருவகைப்படும். அதில் இஷ்டப்ராப்தியாவது:— ஸ்ரீவைகுண்டத்திற்சென்று, ஸ்வ ஸ்வரூபாவிர்ப்பாவம் பெற்று ஒளிக்கொண்ட சோதியராய் அடியார்கள் குழாங்களை உடன் கூடி ஸர்வேச்வரனுக்கேயான கைங்கரியத்தைச் செய்கை. அநிஷ்டநிவ்ருத்தியாவது:— ஸ்வரூபப்ராப்தமான இக்கைங்கர்யத்துக்கு விரோதியான புண்யபாபங்கள், ஸம்ஸாரஸம்பந்தம் முதலானவைகளைப் போக்கடிக்கை. "ஹரிணீ" என்னும் திருநாமத்திலிருந்தும், மேலே எடுத்த ப்ரமாணங்களிலிருந்தும் பாபாதி நிவர்த்தனமாகிற அநிஷ்டநிவ்ருத்தியைப் பெரிய பிராட்டியார் செய்கிறார் என்று ஏற்படுவதால் அவருக்கும் மோக்ஷோபாயத்வம் உண்டென்றும், அதனால் அவரும் பரப்ரஹ்மமே என்றும் தெளிவாகிறதே என்னில்: ஆகாது. பெரிய பிராட்டியார் பாபத்தைப் போக்குவது எவ்வழியாலே என்பதை முதலில் சிந்திக்கவேண்டும். " புண்யாபுண்யாவீஶ்வர ப்ரீதி கோபௌ " [புண்யமும், பாபமும் பரப்ரஹ்மத்தினுடைய ப்ரீதி கோபங்களேயாகும்] என்றும், " யத் த்வத்ப்ரியம் ததி₃ஹ புண்யம புண்யமந்யத் " [யாதொன்று உனக்குப் பிரியமாயிருக்கின்றதோ அது புண்யமாகும்; உனக்கு அப்ரியமானது பாபமாகும்.] என்றும் சொல்லுகிறபடியே பரப்ரஹ்மத்தினுடைய ப்ரீதிகோபங்களே புண்ய பாபங்களாகின்றன. அப்பரவஸ்துவானது 'பொறுத்தேன்' என்றவுடன் அழியக்கூடியவை இவை. ஆக, 'பொறுத்தேன்' என்னத் தீரக்கூடியவையும் சேதனருடைய கர்மானுகுணமானவையுமான ப்ரீதி கோபங்களை உடையதொரு வஸ்துவே பரப்ரஹ்மமென்று ஏற்படுகிறது. இப்பிராட்டியோவெனில் "அஜ்ஞாதநிக்₃ரஹா" [கோபமென்பதையே அறியாதவள்] என்று பெயர்பெற்றிருப்பவள். " க: குப்யேத் வாநரோத்தம! " [வாநரஶ்ரேஷ்டனே! ஆர் கோபிக்கமுடியும்?] என்று அருளிச்செய்பவள். ஆகையால், இவள் சேதனருடைய கர்மானுகுணமாகக் கோபங்கொள்வதற்கும் அதைப் 'பொறுத்தேன் என்பதற்கும் ப்ரஸக்தியே இல்லை. இனி, இவள் பாபத்தைப்போக்கும் வழியென்னென்னில்:

ஜீவனுடைய பாபச்செயல்களைக்கண்டு சீறிச்சிவந்து நிற்கும் ஸர்வேச்வரனைத் தன் வடிவழகாலும், போக்யதையாலும் மயக்கி, உசிதோபாயங்களாலே அவனுடைய சீற்றத்தை ஆற்றி, அவனைப் 'பொறுத்தேன்' என்னப் பண்ணுகையே இவள் பாதகத்தைப் போக்கும் வழியாகும். இதை நினைத்தே ஆழ்வார்களும் பல பாசுரங்களிலும் பிராட்டியுடன் கூடிய ஸர்வேச்வரன் வினைகளைப் போக்குகிறான் என்று அருளிச்செய்வதன்மூலம் பாபத்தைப் போக்கடிப்பதில் ஸர்வேச்வரனுடைய அந்வயம் ப்ரதானமானது என்பதையும், இவளுடையது அப்ரதானமானது என்பதையும் காட்டினார்கள். "ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி" என்னும் பாபநிவர்த்தன ஸங்கல்பம் ஸர்வேச்வரனுடையதே. அவனை அப்படி ஸங்கல்பிக்கும்படி செய்பவள் இப்பிராட்டியாவாள். ஸ்வதந்த்ரனை அவனுக்குள்ளது உபாயத்வம்; பரதந்திரையான இவளுக்கு இருப்பதும் பெருமைதருவதும் புருஷகாரத்வமே. ஆகையினாலேயே அஜ்ஞாதநிக்ரஹையென்றும், அநுக்ரஹபரையென்றும் * பெருமைபெற்றவளான இவளுக்குப் பரப்ரஹ்மத்வமாகிற * தோஷமில்லை.

(ஹரிணீ) மஞ்சள் நிறமுள்ளவள் என்றும் பொருள்கொள்ளலாம். இப்பொருள்களெல்லாம்,

"ஹரிம் நயாமி கார்யேஷு நீயே ச ஹரிணா ஸ்வயம் |
ஸதா$_3$ ஹரிணப$_4$ாஸாऽஹம் ஹாரிணீ து$_3$ரிதம் ஸதாம் ||
ப்ரணவாதி$_3$ நமோந்தஶ்ச மந்த்ரோऽயம் மே ஷட$_3$க்ஷர: |
ஸர்வார்த்த$_2$ஸாத$_4$கஸ் ஸாக்ஷாத் யோக$_3$ஸாத$_4$நமுத்தமம் ||"

[எல்லாக்காரியங்களிலும் ஹரியைத் துண்டுகிறேன். ஹரியினால் எப்போதும் அழைத்துச்செல்லப்படுகிறேன். என்றும் மஞ்சள்

* பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வமுண்டென்று சொல்லும் சிலர் பிராட்டிக்குப் பெருமையை ஸ்தாபிப்பதாக நினைக்கின்றனர். உண்மையில் பகவானுக்குப் பரதந்த்ரையான பிராட்டியைப் பேச நின்ற பிராட்டியாக்கும் அவர்கள் பிராட்டிக்கு ஒரு தோஷத்தையே ஏறிடுகின்றனர். "புருஷனுக்கு ஸ்தநோத்பேதமும், ஸ்த்ரீக்கு ச்மச்ருஸம்யோகமும்போலே பரதந்த்ரனுக்கு ஸ்வாதந்த்ர்யம் ஹேயம்" என்று பெரியவாச்சான்பிள்ளை கத்யவ்யாக்யானத்தில் அருளியபடியே ஒருவர்க்குப் பெருமையாயிருப்பது மற்றொருவருக்கு தோஷமாவது ப்ரஸித்தமன்றோ.

நிறமுள்ளவளாயிருக்கிறேன். நல்லோர்களுடைய பாபத்தை அபஹரிக்கிறேன். (இக்காரணங்களால் 'ஹரிணீ' என்று சொல்லப்படுகின்றேன்.) ப்ரணவத்தை முதலிலும், நமஸ்ஸை முடிவிலும கொண்ட "ஓம் ஹரிண்யை நம:" என்னும் ஆறு அக்ஷரங்கள் கொண்ட இம்மந்திரம் எல்லாப் பலன்களையும் ஸாதித்துக் கொடுக்கும்; மேலான யோகஸாதனமுமாகும்] என்று லக்ஷ்மி தந்த்ரத்திலே பிராட்டியாலேயும் ஆதரிக்கப்பட்டன. ஆக, இப்படிப் பலபொருள்கள் உண்டாயினும், பிராட்டியின் விக்ரஹ ஸௌந்தர்யத்தையே இம்மந்திரம் வர்ணிப்பதாகையாலே கண் முதலியவற்றில் மானை ஒத்திருப்பவள் என்னும் பொருளே முக்கியமாகக்கடவது. "மானமருமென்னோக்கிவைதேவீ" [பெரியாழ்திரு 3-10-4] "மாழைமான் மடநோக்கி உன் தோழி" [பெரியதிரு 5-1-8] என்று ஆழ்வார்களும் இவ்வர்த்தத்தை ஆதரித்தருளினார்கள்.

(ஸுவர்ணரஜதஸ்ரஜாம்) பொன்னாலும், வெள்ளியாலுமான மாலைகளை உடையவள். இது 'ஸுவர்ணஸ்ரஜாம்' என்றும். 'ரஜதஸ்ரஜாம்' என்றும் இரண்டு திருநாமங்களாக லக்ஷ்மீதந்த்ரத்திலே கணக்கிடப்பட்டது. (ஸுவர்ணஸ்ரஜாம்) தங்கத்தாமரையாலான மாலைகளை உடையவள். "பொற்றாமரையாள்" [பெரிய திரு 5-1-10] என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தார்.

"ஸௌவர்ணை: கல்பிதா நித்யம் மம மாலா ஸரோருஹை:"

[நான் எப்போதும் தங்கத்தாமரையாலான மாலையையே அணிபவளாகையால் 'ஸுவர்ணஸ்ரஜா' என்னும் பெயருள்ளவளாகிறேன்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. (ரஜதஸ்ரஜாம்) வெள்ளித்தாமரையாலான மாலையை அணிந்தவள்; அன்றிக்கே விராஜமானமான-(விளங்காநிற்கும்)-மாலையை உடையவள்.

"ராஜதைர் மே ஸ்ரஜ: பத்₃மை: ராஜந்தே ச ஸ்ரஜோऽமலா:"

[வெள்ளித்தாமரையாலான மாலைகளை நான் அணிவதாலும், என்மாலைகள் எப்போதும் தோஷமற்றவையாய் விளங்காநிற்கையாலும் நான் ரஜதஸ்ரஜையாகிறேன்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் இப்பொருள்கள் ஆதரிக்கப்பட்டன. இத்தால் "திவ்யமால்யாம்ப₃ரத₄ரா" [வி-பு 1-9-105] என்று பராசரமஹர்ஷி அருளியபடியே அப்ராக்ருதமான மாலைகளை உடையவள் என்னுமர்த்தம் அறிவிக்கப்பட்டதாயிற்று.

(ஸுவர்ணஸ்ரஜாம்) "ஸுவர்ணந் ஸ்ருஜதி இதி ஸுவர்ண ஸ்ரஜா" [சோபநமான வர்ணங்களை ஸ்ருஷ்டிக்கிருளாகையால் ஸுவர்ணஸ்ரஜை எனப்படுகிருள்] என்றும் பொருள்கொள்ளலாம். "ஸ்ருஜாமி ஶோப₄நாந் வர்ணாந்" [அழகிய வர்ணங்களை ஸ்ருஷ்டி செய்கையாலே ஸுவர்ணஸ்ரஜையாகிறேன்.] என்று லக்ஷ்மீ தந்த்ரத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. 'வர்ணங்கள்' என்றுல் சப்தங்கள் என்றும், ப்ராஹ்மணக்ஷத்ரிய வைச்ய ஶூத்ரர்களாகிற நான்கு ஜாதிகள் என்றும் பொருள்படும். இரண்டு பொருள்களும் இங்கு ஏற்கும். 'சதுர்வர்ணங்களை ஸ்ருஷ்டிக் கிறவள்' என்று பொருளானபோது "ஶாஸ்த்ரத்₃ருஷ்ட்யா தூப தே₃ஶ:" என்று ப்ரஹ்ம ஸூத்ரத்தில் சொன்னபடியே அந்தர் யாமியான பரமாத்ம த்ருஷ்டியாலே சொன்னதாகக் கொள்ள வேண்டும். அன்றிக்கே, 'ஸ்ருஷ்டிப்பவள்' என்றது அந்தர்ப் ப₄ாவிதணிச்சாய் 'ஸ்ருஷ்டிக்கச் செய்பவள்' என்று கொள்ள வேண்டும். "சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்" என்று கண்ணன் கீதையில்வர்ணஸ்ருஷ்டியைத்தன்னுடையதாகவேசொன்னுனன்றே.

இத்திருநாமங்களுக்கு மந்த்ரஶாஸ்த்ர ப்ரக்ரியையை அனு ஸரித்து அக்ஷரஸாம்யங்களைக்கொண்டு சில பொருள்கள் லக்ஷ்மீ தந்த்ரத்திலே விவரிக்கப்பட்டுள்ளன. உதாஹரணமாக "ஹிரண்ய வர்ணும்" என்னும் திருநாமத்திற்கு

"நிஹிதா ஸர்வபூ₄தேஷு ரணே ப்₄ருங்க₃வதூ₄ரிவ |
ஜநயந்தீ பரம் நாத₃ம் தைலத₄ாராவத₃ச்யுதம் ||"

[தைலதாரையைப்போல் இடைவிடாத நாதத்தை எழுப்பும் நான், எல்லாபூதங்களிலுமிருந்துகொண்டுபெண்வண்டைப்போலேசப்திக் கின்றேன்.] என்று பொருள் விளக்கப்பட்டுள்ளது. 'ஹிரண்யவர்ணு' என்னும் பதத்தில் 'ஹி' என்னும் எழுத்துக்கு எல்லா பூதங்களிலும் நிஹிதையாய்-மறைந்திருப்பவளாய்-உள்ளவள் என்று பொருள் கொள்ளப்பட்டது. 'ஹி-க₃தௌ' என்று தாது. 'ரண-ஶப்தே' என்று தாதுவாகையாலே 'ரண்' என்னும் எழுத்துக்களுக்கு 'ரணே' [சப்திக்கிறேன்] என்று பொருள்கொள்ளப்பட்டது. 'ஸுவர்ணரஜதஸ்ரஜாம் என்றதுக்கும் இப்படிக்காட்டப்பட்டி ருக்கும் பொருள்களை அடுத்தபடி விளக்குவோம்.

(ஸுவர்ணஸ்ரஜாம்) ஸுவர்ணையாகவும், ஸ்ரஜையாகவுமிருப் பவள். ஸுவர்ணு— 'ஸு' என்னும் பதம் ஸ்ருஷ்டியைச் சொல்லு

கிறது; ஸ்ருஷ்டிக்காக பகவானை (அல்லது உலகை) வரிப்பவள் ஸுவர்ணையாகிருள். "ஸ்ரஷ்டும் விச்வம் வ்ருணோமி வா" [ஸ்ருஷ்டிப்பதற்காக விச்வமென்னும் (முதற்பெயர் பெற்ற) பகவானை (அல்லது உலகை) வரிக்கிறேனுகையாலும் ஸுவர்ணையாகிறேன்.] என்று தந்த்ரத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. ஸ்ருஷ்டிக்காக ஸர்வேச்வரனைக் கர்த்தாவாகவும் உலகத்தை விஷயமாகவும் வரிப்பவள் என்றபடி. ஸ்ரஜா—ஸ்ருதா: அஜா: யயா ஸா [பிறப்பற்றவர்களான நித்யமுக்தபத்தசேதனர்கள் எவளால் வியாபிக்கப்பட்டு விளங்குகிருர்களோ அவள் ஸ்ரஜையாகிருள்.] என்கிறபடியே த்ரிவிதசேதனர்களையும் வியாபித்து விளங்குபவள் என்கிறபடி. "ஸ்ரு-க$_3$தௌ" என்று தாது.

"ஸ்ருதாஶ்சாபி மயாஜஸ்ரம் ப$_3$த்$_3$த$_4$முக்தாத$_3$யோ ஹ்யஜா:"

[அஜர்களான—பிறப்பற்றவர்களான—பத்தமுக்தாதிகள் என்னுல் எப்போதும் வியாபிக்கப்பட்டு விளங்குகிருர்களாகையால் நான் ஸ்ரஜையாகிறேன்.] என்று தந்த்ரத்திலும் இப்பொருள் பேசப்பட்டது. இங்கு சொல்லப்படும் வ்யாப்தி, குணத்தாலும் திவ்ய மங்களவிக்ரஹத்தாலும் என்று கொண்டால் அது எல்லா ஆசாரியர்களும் உகந்ததாகும். ஸ்வரூபத்தாலும் ஸகல ஜீவர்களையும் வியாபித்திருக்கை இங்கு விவக்ஷிதம் என்று கொண்டால் அதில் விசாரிக்கவேண்டிய அம்சங்கள் சிலவுண்டு.

"யத$_2$ா ஸர்வக$_3$தோ விஷ்ணுஸ் ததை$_2$வேயம் த்$_3$விஜோத்தம|"

[ப்$_3$ராஹ்மணஶ்ரேஷ்டரே! ஸர்வவ்யாபியான விஷ்ணு எப்படிப்பட்டவரோ அப்படிப்பட்டவளே இப்பிராட்டியும்] என்றும்,

"த்வ்யா ச விஷ்ணுநா சாம்ப$_3$ ஜக$_3$த்$_3$ வ்யாப்தம் சராசரம்"

[தாயே! உம்மாலும் பகவானுலும் அசைவனவும், அசையாதனவுமான இவ்வுலகெல்லாம் வியாபிக்கப்பட்டுள்ளது.] என்றும், "ஸர்வபூ$_4$த ஸ்திதா" [எல்லாபூதங்களிலும் மறைந்துறைபவள்] என்றும் சாஸ்திரங்களிலே இதரஜீவவிலக்ஷணமானதொரு வியாப்தி இப்பிராட்டிக்குச் சொல்லப்பட்டிருப்பது ஸுவ்யக்தம். இவ்வியாப்தி எப்படிப்பட்டது என்னும் விஷயத்தில் மஹாசார்யர்களுக்குள்ளும் அபிப்ராயபேதம் விளைந்துள்ளது. மேலே எடுத்த விஷ்ணுபுராண வசனங்களுக்கு முன்னும் பின்னுமுள்ள ப்ரகரணங்களிலிருந்து இவ்வசனங்கள் விக்$_3$ரஹ வ்யாப்திபரங்களே என்பது விளங்கும் என்று ஆசாரியர்கள் பலருடைய கருத்து.

''க்ஷீரோத3ாச்ச்2ரீஸ் ஸமுத்பந்நா ஶ்ரூயதேऽம்ருத மந்த2நே।
ப்4ருகே3ா: க்2யாத்யாம் ஸமுத்பந்நேத்யேதத3ாஹ கத2ம்ப4வாந்॥''

[பாற்கடலிலிருந்து அம்ருதம் கடையும்போது ஸ்ரீதேவியுண்டானு ளென்று சொல்லப்படுகிறது. ப்ருகுமஹர்ஷிக்குக் கியாதியென்னும் பத்தினியிடம் பிறந்தாளென்று தாங்கள் சொல்லுவது எப்படி ஒட்டும்?] என்னும் கேள்வியெழ,

''நித்யைவைஷா ஜக3ந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ।
யத2ா ஸர்வக3தோ விஷ்ணுஸ் ததை2வேயம் த்3விஜோத்தம ॥''

[விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவளும், விட்டுப் பிரியாதவளு மான இப்பிராட்டி நித்யமானவளே;—எப்படி விஷ்ணுவானவர் எல்லாயோனிகளும் அவதரிக்கிருரோ அப்படியே இவளும்.] என்று பதில் சொல்லப்பட்டிருக்கிறதாகையாலே அவதாரரூபமான வ்யாப்தியை இங்கு சொல்லுவது தகுந்ததேயொழிய ஸ்வரூப வ்யாப்தியை சொல்லுவதில் ஸ்வாரஸ்யமில்லை; ''ராக4வத்வேப4வத் ஸீதா'' என்று தொடங்கிப் பின்னுல் வரும் விவரணங்களும் இதையே வலியுறுத்துகின்றன என்பது அவர்களுடைய கருத்தாகும். அப்படியே இவ்வசனங்கள் ஸ்வரூபவ்யாப்தியைச் சொல்லுகின்றன என்று கொண்டாலும், ப்ரமாணங்களைக்கொண்டு பார்க்கும்போது, ''ஈசதே தே3வ ஏக:'' ''ஏக: ஶாஸ்தா'' ''ஏக: ஸ்வதந்த்ர:'' ''ஸதே3வ'' ''ஏகமேவ'' என்று ஈஸ்வரன் ஒருவனேயாகையாலும், ''விபு4த்வே ஸதி சேதநத்வம்'' [ஸர்வவ்யாபியாயிருக்கும் சேதனன் ஈச்வரனு வான்] என்று அவனுக்கு லக்ஷணமாகையாலும், அந்த லக்ஷணம் இவளிடமும் அதிவ்யாப்தமாகாமைக்காக இவளுடைய வ்யாப்தி அகடித கடநாஶக்தியாலேயாகையாலே ஔபாதிகமென்று கொள்ள வேண்டும் என்றும் அவ்வாசாரியர்கள் அருளிச்செய்துள்ளனர். எங்களாழ்வான், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, நாயனாராச்சான்பிள்ளை முதலான மஹா சார்யர்கள் இப்பக்ஷத்தை ஆதரித்தவர்கள். ''யத2ா ஸர்வக3தோ விஷ்ணு:'' என்றவிடத்து வியாக்யானத்தில் ''அத2வா ப4க3வாந் விபு4த்வேந ஸர்வக3த:। அஸ்யாஸ்து ஶக்திவஶாத் தத்ரதத்ர (ஸர்வத்ர?) ஸந்நித4ாநாத் ஸர்வக3தத்வ முக்தம்। இயஞ்ச ஸர்வக3தா॥'' [அன்றிக்கே, பகவான் விபுவாயிருந்துகொண்டு ஸர்வகதன்; சக்தியாலே ஆங்காங்கு எழுந்தருளியிருப்பதால் இப்பிராட்டிக்கு ஸர்வவ்யா பகத்வம் சொல்லப்பட்டது. ஆகையால் இவளும் ஸர்வவ்யா

பினியே] என்று அருளிச்செய்தார் எங்களாழ்வான். பரமகாருணிக ரான பெரியவாச்சான்பிள்ளை பரந்தரஹஸ்யத்திலும், வடக்குத் திருவீதிப்பிள்ளை அஷ்டாக்ஷரதீபிகையிலும்,

" 'அணுரேஷ ஆத்மா' என்று, ஆத்மஸாமாந்யப்ரயுக்தமாய் இவளுக்கு வரும் அணுத்வமும், 'யத$_2$ா ஸர்வக$_3$தோ விஷ்ணுஸ் ததை$_2$வேயம் த்$_3$விஜோத்தம' இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஈச்வரனுபாதி இவளுக்கு ஸர்வவ்யாபகத்வமும் தன்னில் தான் விருத்தமாய், ஏகாஶ்ரயஸ்தமாகக் கூடாமையாலே இரண்டும் கூடுகைக்காக, 'அநுபபத்$_3$யமாநார்த்த$_2$த$_3$ர்சநாத் உபபத்$_3$யமாநார்த்த$_2$ாந்தர கல்பநமர்த்த$_2$ாபத்தி:' என்கிற அர்த்தாபத்தியினபடியே, அபரிச்சேத்யமான ஸ்வரூபவைபவத்தையுடையனை ஈச்வரன் அத்யந்த ஸூக்ஷ்மமான பதார்த்தங்களிலே பண்ணும் ஸமாப்யவ்யாப்திக்கு ஒரு சக்திவிசேஷத்தைக் கொள்ளுமோபாதி, இவளும் ஒரு சக்தி விசேஷத்தாலே வ்யக்த்யாஶ்ரயமான ஜாதிபோலே, ஈச்வரன் வ்யாபித்தவிடமெல்லாம் வ்யாபிக்கக்கடவளாகையாலே, ஈச்வர ஸ்வரூபநிரூபகை எனனுமிடம் ஸம்ப்ரதிபந்நம்" என்று அருளிச்செய்தனர். வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரும்,

" 'யத$_2$ாஸர்வக$_3$தோ விஷ்ணுஸ் ததை$_2$வேயம் த்$_3$விஜோத்தம |
'ஸர்வபூ$_4$தஸ்தி$_2$தே'த்யாதே$_3$: ஶ்ரீவிபு$_4$த்வப்ரமாணதா ||
இதிசேத்தந்ந, தத்$_3$வாக்யாத$_3$விபு$_4$த்வேந ச ஶ்ரிய: |
'ஶக்த்யா ஸர்வத்ர ஸாந்நித்$_4$யாத் ஸர்வக$_3$த்வமுதீ$_3$ரிதம் ||'
இதி ஶ்ரீவிஷ்ணுசித்தார்யைர் வ்யாக்$_2$யாநாத்து ந ஸாத$_4$நம் ||"

[''யத$_2$ாஸர்வக$_3$தோ...'' ''ஸர்வபூத$_1$ஸ்தி$_2$தா'' முதலிய வாக்கியங்கள் ஸ்ரீதேவிக்கு விபுத்வத்தை ஸாதித்துத்தரும் ப்ரமாணங்களாக மாட்டா. ''சக்தியினுலே எங்கும் ஸாந்நித்யமிருப்பதாலே ஸர்வ வ்யாபித்வம் சொல்லப்பட்டது'' என்று ஸ்ரீவிஷ்ணுசித்தரென்னும் எங்களாழ்வான் வியாக்கியானம் செய்கையாலே அவ்வாக்கியங்கள் விபுத்வ ஸாதனமாகமாட்டா.] என்று ரஹஸ்யத்ரயகாரிகாவளியில் அருளினர். நிற்க.

சோமாசியாண்டான், ஸ்ரீவேதாந்ததேசிகர் முதலான ஆசாரியர்கள் இப்பிரமாணங்கள் பிராட்டி தன் ஸ்வரூபத்தாலேயும் எல்லாவுலகையும் வியாபித்திருக்கிருள் என்று சொல்லுவதாகக் கருதினர்கள். இவர்களுடைய பக்ஷத்தின்படி பிராட்டியும் ஈச்வர

கோடியிலேயே சேர்ந்தவளாவள். அப்படியானால் ஈச்வரத்₃வித்வ மென்னும் தோஷம் வாராதோ வென்னில்: பிராட்டிக்கு ஈச்வரத்வ முண்டானாலும், அவளுக்கு ஸர்வேச்வரத்வமாகிற ப்ரப்ரஹ்மத்வ மில்லை; அவளுக்கும் நாராயணன் இயற்கையாகவே ஈச்வரனா யிருக்கையாலும், அவள் அவனுக்குப் பத்னியாய் இயற்கையாகவே ஶேஷபூதையாயிருக்கையாலும். நாராயணனுக்குப்போலே ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶயேஶித்ருத்வமாகிற ப்ரப்ரஹ்மத்வம் அவளுக் கில்லை. "விபு₄த்வே ஸதி சேதநத்வம்" என்னும் பரப்ரஹ்மலக்ஷணம் இவளுக்கு வாராதோ என்னில்: இவளுக்குள்ள ஸர்வவ்யாபகத்வம் ப₂லபர்யந்தமல்லாததாகையால் வாராது. "அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" [ஸர்வாந்தர்யாமியான பரமாத்மா ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.] என்கிறபடியே புண்ய பாபகர்மாநுகுணமாக நியமிக்கை வ்யாப்திபலமாகும். இது த₃ணட₃ த₄ரனான ஸர்வேச்வரனுக்கு ஒட்டுமேயொழிய, அஜ்ஞாநிக்ரஹை யான இவளுக்கு ஒட்டாது. "விபு₄த்வே ஸதி சேதநத்வம்" என்பது பரப்ரஹ்மலக்ஷணமாம்போது விபுத்வம் கர்மாநுகுண நியமனமாகிற பலத்துடன் கூடிய ஸர்வவ்யாபித்வத்தைச் சொல்லுகிறதாகையாலே அப்படிப்பட்ட விபுத்வமற்ற இவளிடம் அதிவ்யாப்தி வாராது. "விபு₄த்வே ஸதி சேதநத்வம்" என்பது ஈச்வரஸாமாந்யத்துக்கு லக்ஷணமாம்போது ஸர்வவ்யாபித்வத்தை மட்டும் சொல்லுகையாலே ஈச்வரகோடிக₄டிதையான இவளுக்கும் லக்ஷணமாகும். ஜகத்துக்கு ஈச்வரர்கள் இருவர். ஆனால் ஸர்வேச்வரனை பரப்ரஹ்மம் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே என்பது இவ்வாசார்யர்களின் கருத்து. ஆக, பிராட்டி ஜீவகோடியைச் சேர்ந்தவளா ஈச்வர கோடியைச் சேர்ந்தவளா என்பதில் அபிப்ராயபேதம் நம் ஆசார்யர்களுக்குள் இருந்தபோதிலும் நாராயணன் ஒருவனே பரப்ரஹ்மம் என்பது ஆசார்யர்கள் அனைவரும் அங்கீகரித்த விஷயமாகும். ஸ்ரீமந்நாரா யணன் பரப்ரஹமம் என்னும் வார்த்தையில் விவாதலேஶமுமில்லை. ஸ்ரீநாராயணர்கள் பரப்ரஹ்மபூதர்கள் என்னும் வார்த்தை ஆசார்ய கோ₃ஷ்டீ₂ப₃ஹிஷ்ட₂மேயாகும்.

ஆக, இவ்வளவால், பிராட்டிக்குச் சொல்லப்படும் ஸ்வரூப வ்யாப்தி அக₄டிதக₄டநாஶக்தி வசத்தாலேயே என்பது பல ஆசார்யர் களுடைய கருத்து என்பதையும், இவளுக்கு ஸ்வாப₄ாவிகமான ஸ்வரூபவ்யாப்தியை ஒப்புக்கொள்ளும் ஆசாரியர்களும் இவளுக்கு ஈச்வரத்வத்தை ஆதரித்தார்களேயொழிய பரப்ரஹ்மத்வத்தை இசையவில்லையென்பதையும் காட்டினோம். ஜகத்காரணத்வம்,

ஶேஷித்வம், ப்ராப்யத்வம், முக்திப₂லப்ரத₃த்வம், ஸர்வவ்யாபகத்வம் முதலானவற்றில் அப்ரதானமான அந்வயம் இப்பிராட்டிக்கும் உள்ளதாகையால் இவளையும் ஈச்வரகோடியிலேயே சேர்க்கலாம் என்பது தேசிகர் முதலானோருடைய கருத்து. ஆனால், அவர்கள் பிராட்டியும் பரப்ரஹ்ம பூதையே என்று கருதவுமில்லை; அப்படி எங்கும் எழுதியிருக்கவுமில்லை. ஜீவஸமூஹமானது நித்யர், முக்தர், பத்தர் என்று மூவகைப்பட்டிருப்பது போலவும், அசேதனம், சுத்தஸத்வம், மிச்ரஸத்வம், காலம் என்று மூவகைப்பட்டிருப்பது போலவும் ஈச்வரதத்வமானது பரப்ரஹ்மபூதனான பகவான் என்றும் ஈச்வரியான பிராட்டியென்றும் இருவகைப்பட்டது என்பது இவர்களுடைய கருத்தாகும். எங்களாழ்வான், பெரியவாச்சான்பிள்ளை முதலானோரோவெனில்: ஈச்வரன் ஒருவனே என்று சாஸ்திரங்கள் முறையிடுகையாலும், பிராட்டிக்கு ஈச்வரத்வம் உண்டென்று கொண்டாலும் அது ப₄க₃வதி₃ச்ச₂ாயத்தமாயிருக்க வேண்டுமாகையாலே ஔபாதி₄கமேயாக வேண்டுகையாலும் பிராட்டியை ஜீவகோடியிலே சேர்ப்பதே பொருந்தியதும் பெருமை தருவதுமாரும் என்று கருதினர். ஈச்வரத்வம் த்₃விநிஷ்டம்; பரப்₃ரஹ்மத்வம் ஏகநிஷ்டம் என்பது தேசிகருடைய கருத்து; ஈஶ்வரத்வமும் ஏகநிஷ்ட₂மே என்பது மற்ற ஆசாரியர்களுடைய கருத்து. “ஜ்ஞாநாநந்த₃ாத்₃யத்யந்த ஸாம்யாத் ஜக₃ஜ்ஜநகத்வஶேஷித்வ ஶரண்யத்வாதி₃ஸாம்யாச்ச ஸாம்யகி₃ராம் நிர்வாஹோ வ்யக்த:” [ஞாநம், ஆநந்தம முதலியவற்றில் மிகவும் ஒற்றுமை உள்ளதாகையாலும், ஜகத் காரணத்வம், ஶேஷித்வம், ஶரண்யத்வம், விபு₄த்வம முதலானவற்றில் ஒற்றுமை உள்ளதாகையாலும் (பகவானுக்கும் பிராட்டிக்கும ஒற்றுமையைச் சொல்லும் வசனங்கள் பொருந்துகின்றனவென்பது தெளிவு.] என்று ஸ்ரீதேசிகர் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் அருளியிருப்பதை அநுஸந்திப்பார்க்குத் தேசிகருடைய கருத்து புலனாகும். ஜ்ஞாநாநந்தாதிகளில் அத்யந்த ஸாம்யமென்றவர், மற்றவைகளில் ஸாம்யம் என்றருளியிருப்பதை உற்று நோக்கவேணும். ஆக, இவ்வளவால் பிராட்டிக்கு ஸ்வாப₄ாவிகமான விபு₄த்வத்தை ஒபபுக் கொள்ளும் பக்ஷத்தோடு அதை ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தோடு வாசியற அவளுக்குப் பரப்ரஹ்மத்வமாகிற தோஷமில்லையென்று நிர்ணயிக்கப்பட்டதாயிற்று.

“ஸௌவர்ணஸ்ரஜமித்யேவம் கு₃ஹ்யகாநாமதீ₄ச்வர:।
மேரௌ சிரமுபஸ்த₂ாய த₄நேஶத்வமவாப்தவாந்॥”

[ "ஸுவர்ணஸ்ரஜம்" என்று யக்ஷர் தலைவனான குபேரன் மேருமலையிலிருந்து நெடுங்காலம் என்னை தியானித்து செல்வங்களுக்கு அதிபதியாயிருக்கும் தன்மையை அடைந்தான்.] என்று தந்த்ரத்திலே இத்திருநாமத்தின் பெருமை பேசப்பட்டது.

(ரஜதஸ்ரஜாம்) "ராஜஸா: ஏவ ரஜதா:" என்று ரஜதஶப்தம் ரஜோகுணப்ரசுரர்களைச் சொல்லுவதாகக் கொண்டு, "ரஜதா: ஸ்ரஜா: யயா ஸா" என்று ரஜோகுணப்ரசுரர்களான ப்ரஹ்மாதிகளை ஜகத் ஸ்ருஷ்டி செய்யும்படியாகச் செய்பவள் என்றும் பொருள்கொள்ளலாம். இப்பிராட்டியினாலே ப்ரேரிதனாய் (தூண்டப்பட்டவனாய்) பகவான் ப்ரஹ்மாதிகளை ஸ்ருஷ்டி செய்கிறான்;

"ப்₃ரஹ்மோத்பந்நஸ் ஸதேநோக்த: ப்ரஜா: ஸ்ருஜ மஹாமதே" என்றும்,

" நாட்டைப்படையென்று அயன் முதலாத்தந்த
நளிர்மாமலருந்தி
வீட்டைப்பண்ணி விளையாடும் விமலன்" என்றும்

சொல்லுகிறபடியே பகவானாலே ப்ரேரிதனாய் ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டி செய்கிறார்கள். ஆகையால், இப்பிராட்டியாலே ப்ரேரிதர்களாய் ப்ரஹ்மாதிகள் ஸ்ருஷ்டிக்கிறார்கள் என்று சொல்லக்குறையில்லையன்றோ.

"ராஜஸாஶ்ச ஸ்ரஜ: ஸர்வே ஸ்ரஷ்டாரோ ஜக₃தாம் மயா"

[ரஜோகுணம் நிறைந்த எல்லாரும் என்னால் தூண்டப்பட்டே ஸ்ருஷ்டிக்கிறார்களாகையாலே நான் ரஜதஸ்ரஜையாகிறேன்.] என்று தந்த்ரத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது.

"ரஜதஸ்ரஜமித்யேவ ருத்₃ராணும் ப்ரவர: புரா।
கைலாஸே ஸமுபஸ்த₂ாய ரஜதாதி₄பதாம் யயௌ।
அஷ்டாக்ஷராவிமௌ மந்த்ரௌ ஸதாரநமஸா யுதௌ।
ஜபார்ச்சநஹுதத்₄யாநாத₃பீ₄ஷ்டம் ஸாத₄யிஷ்யத:॥

["ரஜதஸ்ரஜம்" என்று ஏகாதஶருத்ரர்களுக்கும் தலைவனான சிவன் (தன் இருப்பிடமான) கைலாஸத்தில் என்னை தியானித்து வெள்ளிக்கு அதிபதியானான். ஓங்காரநமஸ்ஸுகளுடன் சேர்ந்து எட்டு அக்ஷரங்களாயிருக்கும் "ஓம் ஸுவர்ணஸ்ரஜே நம:" "ஓம்

ரஜதஸ்ரஜே நம:'' என்னும் இவ்விரண்டு மந்திரங்களும் ஜபத்தாலும், அர்ச்சனையாலும், ஹோமத்தாலும், தியானத்தாலும் விரும்பியதையெல்லாம் ஸாதித்துக்கொடுக்கும்.] என்று மந்த்ர வைபவமும் தந்த்ரத்திலே பேசப்பட்டது.

( சந்த்ராம் ) '' சங்க்ரம்யமாணு ( து₃ஷ்க்ருதம் ) த்₃ராவயதி இதி சந்த்₃ரா'' [ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவளாய் (பாபத்தைப்) போக்கடிக்கிருளாகையாலே 'சந்த்ரா' எனப்படுகிருள்.] என்று ஸப்தார்த்தம். விஹார ரஸிகையான ராஜஹம்ஸியைப்போலே ஹ்ருதய கமலத்திலே ஹம்ஸநாமகனுேடுகூட ஸஞ்சரித்துக் கொண்டிருப்பவளாய். புருஷகாரக்ருத்யத்தாலே சேதனருடைய பாபங்களைப் போக்கடிப்பவள் என்றபடி. '' ஹரிணீ '' என்றது பரதசையில் பாபஹரணத்தையும் இது அந்தர்யாம்யவஸ்தையில் பாபநிப₃ர்ஹணத்தையும் சொல்லுகையாலே புநருக்தியில்லை.

''சங்க்ரம்யமாணு ப₄க்தாநாம் த்₃ராவயாமி ச து₃ஷ்க்ருதம் ||''

[ஸஞ்சரித்துக்கொண்டிருப்பவளாய், பக்தர்களின் பாபத்தைப் போக்கடிக்கிறேன்.] எனறு தந்த்ரத்தில் இவ்வர்த்தம் ஆதரிக்கப் பட்டது. (சந்த்ராம்) சந்திரனைப்போன்றவள்.

''சந்த்₃ரவத் ஸததம் சித்தம் ப₄க்தாநாம் த்₃ராவயாமி ச |
உதே₃மி யோகி₃நாமந்தராநந்த₃ஸ்பந்த₃லக்ஷணு ||
சதுர்த்தீ₂ம் து த₃ஸாம் தேஷாம் சந்த்₃ரவத்₃ ப₄ாஸயாமி ச ||
யோக₃ாந்தராயநிஹதோ வஸிஷ்ட: பரமோ முநி: |
அந்தஸ்சந்த்₃ரமயீம் ஸுத்₃த₄ாம் சித₃ாநந்த₃மஹோத₃தி₄ம் ||
நாடீ₃ஸ்த₂ாம் மாமநுஸ்ம்ருத்ய புநஸ்தம் யோக₃மாப்தவாந் |
ஆநந்த₃ஜநகஸ் ஸத்₃யோ மந்த்ரோऽயம் மே ஷட₃க்ஷர: ||
ப₄வத₃ாவாக்₃நித₃க்₃த₄ாநாம் நிர்வ்ருதிம் ப்ரகரோத்யயம் ||''

[சந்திரனைப்போலே பக்தர்களுடைய நெஞ்சை உருகச் செய்கிறேன். ஆநந்தப்ரவாஹமே வடிவெடுத்தவளான நான் யோகிகளின் ஹ்ருதயத்திலே (சந்திரனைப்போலே) உதிக்கிறேன். அவர்களுடைய நாலாவது நிலையான தியானநிலையை சந்திரனைப்போலே ஒளி விடச்செய்கிறேன். யோகம் தடைபட்ட பரமரிஷியான வஸிஷ்டர், சந்திரமயியாகவும், பரிசுத்தையாகவும், ஜ்ஞாநாநந்தப் பெருங் கடலாகவுமுள்ள என்னை சரீரத்தினுள் ஸுஷும்நாநாடியிலிருப்ப

வளாக தியானிகது மறுபடியும் யோகத்தைப் பெற்ருர். ஆறு அக்ஷரமுள்ள (ஓம் சந்த்ராயை நம:) என்ற இம்மந்திரம் உடனே ஆநந்தமளிக்கும். ஸம்ஸாரக் காட்டுத்தீயினுல் வேவுண்டவர்களுக்கு இது ஆநந்தமளிக்கும்] என்று இப்பொருளும் மந்திரப்பெருமையும் தந்த்ரத்திலே பேசப்பட்டன.

(ஹிரண்மயீம்) "ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்₃ரஹ்ம நிஷ்களம்" [முண்ட 2-2-10] [பொன்மயமான மேலான உலகத்தில் அழுக்கற்றதும், அவயவமற்றதுமான ப்ரஹ்மமுள்ளது] என்கிற படியே ஹிரண்மயமென்று கீர்த்திபெற்ற பொன்மயமான உலகத்தில் எழுந்தருளியிருப்பவளாகையாலே 'ஹிரண்மயீ' எனப்படுபவள்.

"வைகுண்டே₂ து பரே லோகே ஶ்ரியா ஸார்த்த₄ம் ஜக₃த்பதி: |
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப₄க்தைர் பா₄க₃வதைஸ்
ஸஹ ||"

[வைகுண்டமாகிற மேலான உலகத்தில் ஜகத்ஸ்வாமியாய் நினைத்தற்கரியவனை விஷ்ணு ஸ்ரீதேவியோடுகூட பக்த பாகவதர்கள் புடைசூழ எழுந்தருளியிருக்கிருன்.] என்று புராணங்களிலும் இவ்வர்த்தம் ஆதரிக்கப்பட்டது.

"குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்
நிழற்போல்வனர் கண்டு நிற்குங்கொல் மீளுங்கொல்
தண்ணந்துழாய்
அழல் போலடும் சக்கரத்தண்ணல் விணேோர்
தொழக்கடவும
[திருவிருத்தம் 2] எனறும,

தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றமரராட் செய்வார்
[திருவாய் 8-1-1]

என்றும், "திருமால் வைகுந்தம்" [திருவாய் 10-7-8] என்றும், "மாதவன் வைகுந்தம்" [திருவாய் 10-9-8] என்றும் தமிழ் மறைகளும்,

"ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ அஹோராத்ரே பார்ஶ்வே"

[ஸ்ரீபூமிதேவிகள் உன் பத்தினிகள்; இராப்பகலாய் அருகிலுள்ளனர்] என்று பண்டை நான்மறையும் இவ்வர்த்தத்தை ஆதரித்தன. (ஹிரண்மயீம்) ஹிதமாகவும்—(நன்மை பயப்பதாகவும்)— ரமணீய

மாகவும் —(அழகியதாகவும்)— இருப்பதாகையாலே வேதமானது ஹிரண்யமெனப்படுகிறது. அவ்வேதஸ்வரூபமாக உபனிஷத்துக்களிலே கீர்த்திக்கப்படும் ஸூர்யமண்டலம் 'ஹிரண்மயம்' எனத் தகுந்தது. வேதஸ்வரூபமாகையாலே ஹிரண்மயமான ஸூர்ய மண்டலத்தில் எழுந்தருளியிருக்கிறாளாகையாலே 'ஹிரண்மயீ' எனப்படுவதாகவும் கொள்ளலாம். ஸவித்ருமண்டலமத்யவர்த்தியான நாராயணன் ஸூர்யமண்டலத்திலும் என்றும் அகலகில்லாத பிராட்டியோடு கூடவே —ஸ்ரீதரனாகவே— எழுந்தருளியிருக்கிறான் என்னுமர்த்தத்தை

"செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச்
சிரீதரன் மூர்த்தி யீதென்னும்"

*[திருவாய் 4-5-2]* என்று ஆழ்வார் அருளிச்செய்தருளினார். ஹிரண்மய லோகமான பரமபதத்திலும், ஸூர்யமண்டத்திலும் எழுந்தருளியிருக்கையாலே ஹிரண்மயியெனப்படுகிறாள் பிராட்டி என்னுமிவ்வரும்பொருள்,

"ப்ரக்ருதேஶ்ச பரே வ்யோம்நி மண்டலே ச த்ரயீமயே ।
ஹிரண்மயேऽவதிஷ்டேऽஹம் ஹிதாய ஜகதாம் ஸதா ॥"

*[ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பாற்பட்டதும், பொன்மயமானதுமான பரமபதத்திலும், பொன்மயமும் வேதமயமுமான ஸூர்ய மண்டலத்திலும் நான் எல்லாவுலகிற்கும் நன்மையளிப்பதற்காக எழுந்தருளியிருப்பவளாகையாலே ஹிரண்மயியெனப்படுகிறேன்.]* என்று தந்த்ரத்தில் பிராட்டியாலும் பேசப்பட்டது. *(ஹிரண்மயீ)* பொன்போலே ஹிதரமணீயையாயிருப்பவள் என்றுமாம்; ப்ராப்யையாகவும், ப்ராபகையாகவுமிருப்பவளென்கை. பரமபதத்திலே இவன் சென்று அநுபவிப்பது ஒரு மிதுனத்தையேயாகையாலும், புருஷகார பூதையான இவளில்லாவிடில் பலஸித்தியில்லையாகையாலும் இவளை உபாயோபேயபூதை என்னக்குறையில்லை. *(ஹிரண்மயீ)* பொன்மயமான திவ்யமங்கள விக்ரஹத்தை உடையவள் என்றுமாம். "ஞாலப் பொன்மாதின் மணாளன்" *[திருவிருத்தம்-40]* என்றார் ஆழ்வார். *(ஹிரண்மயீம்)*

"ஆதாரப்ஜாத் த்விஷட்காந்தம் ஸௌத்ர(ர்ய) பாஸா ஹிரண்மயீ ।
உதேமி ஸததம் ப்ரோக்தா ஶப்தஸங்கல்பகோரகை: ॥"

[(வயிற்றின் அடிப்பாகத்திலுள்ள மூலாதார பத்மத்திலிருந்து, (ப்ரஹ்மரந்த்ரத்திற்குப் பன்னிரண்டு அங்குலம் அப்பாலுள்ள) த்வாதசாந்த ஸ்தானம் வரையில் பொன்மயமான நூல்போலே ஒளிவிடுபவளாய், சப்தஸங்கல்பங்களை மொட்டுக்களாகக் கொண்டவளாய் எப்போதும் (யோகிகளின் நெஞ்சில்) உதிக்கிறேன்] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் சொல்லியபடியே, யோகிகளின் சரீரத்திலுள்ள ஸுஷும்நா நாடியில் ஸங்கல்பமாகிற மொட்டுக்களையுடைய பொன்மயமானதொரு கொடிபோலே காட்சியளிப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம். (ஹிரண்மயீம்) "ஹிரண்மய: புருஷ:" என்று வேதங்களிலே புகழப்படும் பரம புருஷனுடைய பத்தினியென்றுமாம். (ஹிரண்மயீம்) அவன் ஹிரண்மயனாயிருப்பதுபோலே, அவனுக்கு அனுரூபையான இவளும் ஹிரண்மயியாயிருக்கிறாளென்கை. "துல்யசீல வயோ வ்ருத்தாம் துல்யாபி₄ஜநலக்ஷணாம்" [ஒத்த குணத்தையும், வயதையும், நடத்தையையும், குலத்தையும், லக்ஷணங்களையும் உடைய ஸீதையை] என்றும், "தத்₃த₄ர்மத₄ர்மிணீ" [அவனுடைய தன்மைகளையே உடையவள்] என்றும், "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" [திருவாய் 10-10-6] என்றுமன்றோ சொல்லப்படுகிறது. (ஹிரண்மயீம்) பொன்முதலிய ஸர்வதனங்களையுடையவள் என்றுமாம். "வாமஹஸ்த வஸுப்ரத₃ாம்" என்று லக்ஷ்மீத்யானத்திலும்,

"வஸுத₄ாராமுத₃ாராம் ச ஹரிணீம் வஸுவர்ஷிணீம் ।
த₄நத₄ாந்யகரீம் ஸித்₃தி₄ம் வஸுத₄ாம் வஸுத₄ாரிணீம் ॥
நிதி₄த்₃வயேநாபி த₄நம் ப்ராபயந்தீம் மநோரத₂ாந் ॥"

[தனத்தின் பெருக்காயிருப்பவளும், வண்மை மிக்கவளும், ஹரிணியும், பணத்தைப் பொழிபவளும், தநதாந்யங்களைக் கொடுப்பவளும், ஸித்தியாயிருப்பவளும், செல்வத்தைத் தன்னுட்கொண்டவளும், செல்வத்தைத் தரிப்பவளும், சங்கபத்ம நிதிகளாலே பணத்தையும், எண்ணினதனத்தையும் அடைவிப்பவளுமான ஸ்ரீதேவியை] என்றும்,

"ஶங்க₂பத்ம₃நிதீ₄ லக்ஷ்ம்யா: பாத₃யோரக்₃ரத: ஸ்தி₂தௌ ।
பஶ்யந்தௌ முக₂மந்யோந்யம் வமந்தௌ விபுலம் த₄நம் ॥"

[சங்கநிதியும் பத்மநிதியும் ஒன்றையொன்று நோக்கிக்கொண்டும், பெருந்தனத்தைக் கக்கிக்கொண்டும் ஸ்ரீதேவியின் திருவடிகளின் நுனியில் கிடக்கின்றன] என்றும் சாஸ்திரங்களிலேயும் கோஷிக்கப்படுகிறதன்றோ.

''தாம் மாம் ஹிரண்மயீத்யேவம் முநயோ வேத₃பாரக₃ா: |
ஸ்துத்வா ஸமாப்நுவந் காமம் யோகி₃நோ யோக₃முத்தமம்
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகாமார்த்த₂ஸாத₄க: ||''

[அப்படிப்பட்ட என்னை வேதங்கரைகண்ட முனிவர்கள் இப்படியே 'ஹிரண்மயீ' என்று துதித்து விரும்பியதை அடைந்தனர். மேலான யோகத்தை யோகிகளும் பெற்றனர், "ஓம் ஹிரண்மய்யை நம:" என்னும் ஏழு அக்ஷரங்களைக்கொண்ட இம்மந்திரம் எல்லாப் பொருள்களையும், விருப்பங்களையும் தரும்.] என்று தந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டது.

(லக்ஷ்மீம்) "லக்ஷயதீதி லக்ஷ்மீ:" [(ஸகலசேதனருடையவும் நன்மைதீமைகளை) சிந்திக்கிறாளாகையாலே லக்ஷ்மீயாகிறாள்.] என்னும் வ்யுத்பத்தியின்படியே ஸர்வபூதஸாக்ஷிணியாயிருந்து கொண்டு அனைவர்க்கும் நன்மைதீமைகளை ஆராய்ந்து ஆவன செய்கிறாள் என்னும் பொருளுடையதாகிறது லக்ஷ்மீ ஶப்தம். "லக்ஷ-த₃ர்ஶநே" "லக்ஷ-ஆலோசநே" என்று தாது. இப்பொருள்,

" ஸாக்ஷிணீ ஸர்வபூ₄தாநாம் லக்ஷயாமி ஶுபா₄ஶுப₄ம் "

[எல்லா ஜீவராசிகளையும் நேரே காண்பவளாய், அவர்களுடைய நன்மைதீமைகளைச் சிந்திக்கிறேன்] என்று தந்த்ரத்திலே ஆதரிக்கப் பட்டது, இப்பிராட்டி சேதனர்களுடைய நன்மை தீமைகளைக் காண்பது ஸர்வேச்வரனைப்போலே அவற்றுக்குத் தகுந்த பலனைக் கொடுக்கைக்காகவன்று: பின் எதற்காகவென்னில்: "ந கஶ்சிந் நாபராத்₄யதி" [ரா-யு 116-14] "இமேதந் நிர்தோ₃ஷ; க இஹ ஜக₃தி" [ஸ்ரீகுண-52] [இஃதென்? இவ்வுலகில் தோஷமற்றவன் யார்?] என்றாப்போலே சில சொல்லி மறைக்கைக்காகவே இவள் தீமையைக் காண்பது. ஒன்று பத்து நூறாகக்காட்டிச் சேதனனை அடிசேர்ப்ப தற்காகவே நன்மையைக் காண்பது. ஆக, இப்படி இவளுடைய காட்சியானது அவனுடையதிலும் விலக்ஷணமாகவும், ஶுக மொன்றையே விளைப்பதாகவுமிருக்கையாலே "லக்ஷ்மீ:" [காண் பவள்] என்றே பெயர்பெற்றிருக்கிறாள். (லக்ஷ்மீம்) காண்பவளை; அநுக்₃ரஹ நிக்₃ரஹங்களுக்குப் பொதுவான அவனுடைய காட்சியும் ஒரு காட்சியோ? அநுக்ரஹத்துக்கே காரணமான இவளுடைய தன்றோ காட்சியாகும். இவளன்றோ காண்பவளாகிறாள். (லக்ஷ்மீம்) விஷ்ணுவுக்குச் செல்வமாயிருப்பவளை என்றும் பொருள் கொள்ள

லாம். "லக்ஷ்மீஸ் சாஸ்மி ஹரேர் நித்யம்" [எப்போதும் ஹரிக்குச் செல்வமாயிருப்பவள்] என்று பிராட்டியாலேயும் தந்த்ரத்தில் இப்பொருள் பேசப்பட்டது.

"நித்யைவைஷா ஜக₃ந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ"

[விஷ்ணுவுக்கு விட்டுப்பிரியாத செல்வமாயிருப்பவளும் உலகிற்குத் தாயுமான இப்பிராட்டி நித்யையே] என்று விஷ்ணுபுராணத்தில் பராசரபகவானும், "உன் தாமரை மங்கையும் நீயும்" [திருவாய் 9-2-3] என்று ஆழ்வாரும் "ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி'' [ஸ்ரீதேவியே! இயற்கையாகவே தேவரீர் விஷ்ணுவுக்குச் செல்வமாயிருக்கிறீர்.] என்று பட்டரும் இவ்வர்த்தத்தை அறிவுறுத்தினார்கள். இத்தால் இப்பிராட்டி எம்பெருமானுக்கு இயற்கையாகவே அசித்வத்-(அசேதனப் பொருளைப்போலே)-பரதந்திரை என்னும் பரமார்த்தம் ப்ரகடீகரிக்கப்பட்டதாயிற்று. தன் இச்சையினாலேயே பிராட்டியானவள் பகவானுக்கு சேஷபூதையாயிருக்கிறாளேயொழிய, இயற்கையாகவே பரதந்திரையல்லள் என்னும் பக்ஷமும் தள்ளுண்டதாயிற்று. "ஸ்ரீருபப₃ர்ஹணம்" [ஸ்ரீதேவி காலுக்கு அணையாவாள்] என்று வேதபுருஷனும்,

"வடிவிணையில்லா நிலமகள் மற்றைமலர்மகள் பிடிக்கும்
மெல்லடியை"
[திருவாய் 9-2-10] என்றும்,

"சந்தணிமென்முலைமலராள் தரணிமங்கை
தாமிருவர் அடிவருடும் தன்மையானை"
[பெரியதிரு 2-10-2] எனறும்,

"பெண்மையைத் தலையுடைத்தாக்கும் வண்ணம்
கேசவநம்பியைக் கால்பிடிப்பாள் என்னுமிப்பேறு'
[நாச்-திரு 1-8] என்றும்,

ஆழ்வார்களும் நாய்ச்சியார்தானும் அருளிச்செய்தபடி பிராட்டிமார் அனைவரும் அச்சுதனுக்கு இயற்கையாகவே அடிமைப்பட்டவர்கள். இப்படி அடிமைப்பட்டிருக்கையையே பெரும்பேறாக நினைத்திருப்பவர்கள்.

"மாம் நயேத்₃ யதி₃ காகுத்ஸ்த₂: தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்"

[என்னைக் காகுத்தர் அழைத்துச் செல்லுவாராகில் அது அவருடைய ஸ்வரூபத்திற்கே தகுந்தது] என்று சோதிவாய் திறந்து அருளிச் செய்த பெரிய பிராட்டியாரும் இப்படிப்பட்டவரே என்பதில் ஸந்தேஹலேசமும் இருக்கமுடியுமோ? பெரிய பிராட்டியாருக்குப் பாரதந்திரியமே பெருஞ்செல்வமாகும். அதுவே அவருடைய ஸ்வரூபமாகும். அதை இல்லைசெய்வார் அவருடைய ஸ்வரூபத்தை இல்லை செய்தவரேயாவர். ஆசாரியர்களில் எவரும் பிராட்டியின் ஶேஷத்வம் ஔபாதிகம் என்று எழுதவில்லை. கோமடரங்கநாத பாஷ்யத்திலுள்ள சில ப்ரக்ஷிப்தபங்க்திகளில் தவிர, மற்ற எந்த ப்ராசீநக்ரந்தத்திலும் இவ்வார்த்தையைக் காண முடியாது. பிராட்டிக்கு ஈச்வரத்வமுண்டென்றும், பரப்ரஹ்மத்வமுண்டென்றும் கூடச் சொல்லும் தேசிகஸம்ப்ரதாயஸ்தர்களிலும் ப்ராமாணிகரா யுள்ளவர்கள் பிராட்டியின் ஶேஷத்வம் ஸ்வதஸ்ஸித்தமேயென்பதை மறுக்ககில்லார்கள். இங்கு மற்றொரு விஷயமும் அறியத்தக்கது. பிராட்டிக்கு ஸ்வதஸ்ஸித்தமான பாரதந்திரியமிருக்கிறது என்பதை இசைந்தபின்பு, அவளும் பரப்ரஹ்மபூதையே என்று வாய்திறக்க வழியில்லை. பரப்ரஹமத்வமும், பாரதந்திரியமும், இருளும் ஒளியும் போலே ஓரிடத்திலிருக்கமுடியாத விருத்த தர்மங்கள். பிராட்டிக்கும் ஸ்வாமியாயிருப்பவன் நாராயணன் என்றுரைத்த பின்பு, பிராட்டியும் பரப்ரஹ்மபூதையே என்று சொல்லுமிது "என்தாய் மலடி" என்னும் பேச்சுப்போன்றதேயாகும். ஸ்வரூபத்தாலும், குணங்களாலும் தனக்குமேல் ஒன்றில்லை என்னும்படியிருக்கும் பொருளே பரப்ரஹ்மமாகும். நாராயணன் பிராட்டிக்கும் ஸ்வாமியா யுள்ளான் என்றிசைந்த பின்பு பிராட்டியும் ப்ரப்ரஹ்மபூதையே என்று வாய்திறக்க வழியேது? "ப்3ரஹ்மஶப்3தே3ந ச ஸ்வப4ாவதோ நிரஸ்தநிகி2லதே3ாஷ:, அநவதி4காதி ஶயாஸங்க்2யேய கல்யாணகு3ண க3ண: புருஷோத்தமோபி4தீ4யதே। ஸர்வத்ர ப்3ருஹத்வகு3ணயோகே3ந ஹி ப்3ரஹ்மஶப்3த3:। ப்3ருஹத்வஞ்ச ஸ்வரூபேண கு3ணைஶ்ச யத்ராந வதி4காதிஶயம் ஸோஸ்ய முக்2யோர்த்த2:। ஸ ச ஸர்வேஶ்வர ஏவ। அதோ ப்3ரஹ்மஶப்3த3ஸ் தத்ரைவ முக்2யவ்ருத்த:॥"

[இயற்கையாகவே எல்லா தோஷமும் நீங்கப்பெற்றவனும், எல்லை யற்ற மேன்மையையுடைய எண்ணற்ற நற்குணங்களையுடையவனு மான புருஷோத்தமன் ப்ரஹ்மஶப்தத்தாலே சொல்லப்படுகிறான். எல்லாவிடத்திலும், பெருமைக்குணமிருப்பதாலேயன்றோ ப்ரஹ்ம ஶப்தம் பிரயோகிக்கப்படுகிறது. ஸ்வரூபத்தாலும், குணத்தாலும்

எவனுடைய பெருமையானது ஒப்புயர்வற்றதோ அவனே ப்ரஹ்ம ஶப்தத்திற்கு முக்கியார்த்தமாவான். அவன் ஸர்வேச்வரன் ஒருவனே.] என்றார் பாஷ்யகாரர்.

"ஸ்வாப₄ாவிகாநவதிக₄ாதிஶயேஶித்ருத்வம்
நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதி₃க: க:"

[நாராயணனே! இயற்கையானதாய், எல்லையற்ற மேன்மையை யுடையதான பரப்ரஹ்மத்வத்தை உன்னிடத்திலே எந்த வைதிகன் தான் ஒப்பமாட்டான்.] என்ற ஆளவந்தார்,

"க: ஶ்ரீ: ஶ்ரிய: பரமஸத்வ ஸமாஶ்ரய: க:
க: புண்ட₃ரீகநயந: புருஷோத்தம: க:"

[திருவுக்கும் திருவாகிய செல்வன் யார்? மேலான ஸத்வத்திற்கு இருப்பிடமாயிருப்பவன் யார்? தாமரைக்கண்ணன் யார்? புருஷோத்தமன் யார்?] என்று பரப்ரஹ்மத்தின் தனிச்சிறப்புக்களைச் சொல்லப்புகுமிடத்தில் ஶ்ரிய: பதித்வத்தை முதலிலேயிட்டார். ஶ்ரிய: பதித்வமும் புருஷோத்தமத்வமும், நாரீணாமுத்தமையான பிராட்டிக்கு ஸித்திக்குமன்றுகிடீர் பர்ப்ரஹ்மத்வமும் ஸித்திப்பது. ஆக, இவ்வளவால் விஷ்ணுவுக்கு உடைமைப்பொருளாயிருப்பவள் என்னும் பொருளுள்ள 'லக்ஷ்மீ:' என்னும் திருநாமத்தையுடைய வளாகையாலே பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வமாகிற தோஷமுண்டாக ப்ரஸக்தியேயில்லையென்று நிரூபிக்கபபட்டதாயிற்று. (லக்ஷ்மீ:) "லக்ஷ்யம் ஸர்வமிதேரஹம்" [நான் எலலா அறிவுகளுக்கும்-(மிதிகளுக்கும்)--இலக்காகிறேனுகையாலும் இலக்குமியாகிறேன்.] என்று தந்த்ரத்தில் சொன்னபடியே, எல்லா அறிவுகளுக்கும் லக்ஷ்யமாயிருப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம். "எப்பொருட்கும் நின்று" [நாச்-திரு 11-6] என்றும், "ஏகவிஜ்ஞானேந ஸர்வவிஜ்ஞாநம்" [ப்ரஹ்மம ஒன்றையறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்] எனறும சொல்லப்படுகிற ஸர்வபூ₄தாந்தராத்மாவான பரமபுருஷனுக்கன்றோ இப்பெருமை ஒட்டுவது? பிராட்டிக்கு எப்படிப்பொருந்தும்? எனில்: க₄டவ்யக்திக்கு க₄டத்வஜாதி போலேயும், குணிக்கு நிரூபககுணம போலேயும், பிராட்டியானவள் பரமபுருஷனுக்கு ஸ்வரூப நிரூபக பூதையாயிருக்கையால், அவனைப்பற்றிய அறிவு அவளையும் விஷயீகரிததலலது நில்லாது; ஆகையால் பொருந்தும். எல்லா அறிவுக்கும் இருவருமே விஷயமாகின்றனர். அவன் விஶேஷ்யமாக விஷயமாகிறான். இவள் விஶேஷணமாக விஷயமாகிறாள். இவ்வளவே வாசி. இதையே பொய்கையாழ்வாரும், "ஒண் தாமரையாள் கேள்

வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" [முதல்திருவ 67] என்று அருளிச்செய்தார்.

இனி, லக்ஷ்மீஶப்தத்தின் ஒவ்வொரு அக்ஷரத்திற்குமுள்ள பொருள்கள் விவரிக்கப்படுகின்றன. (லக்ஷ்மீ:) "லா—த₃ாநே" என்று தாதுவாகையாலே, எல்லாவற்றையும் கொடுப்பவள் என்னும் பொருளையுடையதாகிறது லகாரம். "ஐஶ்வர்யமக்ஷாக₃திம்" என்று தொடங்கும் பட்டருடைய சுலோகத்தையும், "உத₃ாராம்" என்ற திருநாமத்தின் வியாககியானத்தின்கீழ் நாம் எடுக்கப்போகும் ப்ரமாணங்களையும் இங்கும் அநுஸந்திப்பது. "க்ஷிப-ப்ரேரணே" என்று தாதுவாகையாலே "பத்தமுக்தநித்யர்களென்றும், சுத்த ஸத்வ மிஶ்ரஸத்வ காலங்களென்றும் மூவகைப்பட்ட சேதநா சேதநங்களைத் தூண்டுபவள்" என்னும் பொருளையுடையதாகிறது க்ஷகாரம்; அன்றிக்கே, க்ஷகாரம் மநோவாக்காயங்கள் மூன்றையும் தூண்டுபவள் என்கிறதாவுமாம்; அன்றிக்கே, சிதசிதீச்வரர்களாகிய தத்வத்ரயங்களையும் தூண்டுபவள் என்றும் பொருள் கொள்ளலாம். இப்பிராட்டியுடைய அன்புக்கு வசப்பட்டு, இவளால் தூண்டப் பட்டன்றோ அவன் ஸர்வகார்யங்களையும் செய்வது. "அல்லி மலர் மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்......எல்லாக்கருமங் களும் செய்' [திருவாய் 3-10-8] என்றூரன்றோ ஆழ்வார். "மந—ஜ்ஞாநே" என்று தாதுவாகையாலே ஜ்ஞாநஸ்வரூபையாயிருப்பவள் என்னும் பொருளைத்தருகிறது மகாரம். "லக்ஷணீயா மிதௌ மிதௌ" என்கிறபடியே மூன்று எழுத்துக்களும் சேர்ந்து, "ஒவ்வொரு அறிவிலும்காணப்படுபவள்" என்னும் பொருளைத்தருகின்றன. இப் பொருள்களெல்லாம்,

"த₃த₃தீ க்ஷேபணீ சாஸ்மி நித்யா த்ரிப்ரேரிணீ தத₂ா ।
தத₂ா ஜ்ஞாநஸ்வரூபாஹம் லக்ஷணீயா மிதௌ மிதௌ ॥"

[கொடுப்பவளாகவும், நிதயையாகவும், மூவகைப் பொருள்களையும் தூண்டுபவளாகவும், ஜ்ஞாநஸ்வரூபையாகவும் ஒவ்வொரு அறிவிலும் அறியப்படுகிறேனகையால் லக்ஷ்மியாகிறேன்] என்று தந்த்ரத்தில் பேசப்பட்டன.

(லக்ஷ்மீ:) லகாரம் லயத்தையும், 'க்ஷி-நிவாஸே' என்று தாது வாகையாலே, க்ஷகாரம் ஸ்திதியையும், 'மாங்-மாநே' என்று தாது வாகையாலே மகாரம் நிர்மாணமாகிற ஸ்ருஷ்டியையும் குறிப்பதாகக் கொண்டு ப்ரக்ருதியை ஸ்ருஷ்டிஸ்திதிலயங்களடையச் செய்பவள் லக்ஷ்மீ என்றும் பொருள் கொள்ளலாம்.

''லயே நிவாஸே நிர்மாணே ப்ரேரணீ ப்ரக்ருதேரஹம் |''

[ப்ரக்ருதியை, ஸ்ருஷ்டிஸ்திதிலயங்களுக்காகத் தூண்டுபவளாகையாலேயும் நான் லக்ஷ்மீயெனப்படுகிறேன்] என்று தந்த்ரத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. (லக்ஷ்மீ:) ''லக்ஷ்யதே அநேந இதி லக்ஷ்ணு'' என்னும் வ்யுத்பத்தியின்படி எப்பொருள்களையும் காண்கைக்கு உபகரணமாயிருக்கும் காலம் 'லக்ஷ்ணு' எனப்படுகிறது. ''லக்ஷ'' என்னும் எழுத்துக்கள் இதைக்குறிக்கின்றன.'' ''டு$_3$மிஞ்—ப்ரக்ஷேபணே'' என்று தாதுவாகையாலே, 'மி' என்னும் எழுத்து 'லக்ஷ' ஶப்தவாச்யமான காலத்தைத் தூண்டுபவள் என்னும் பொருளைத்தருகிறது. ''லக்ஷ்யந்தே இதி லக்ஷணநி'' என்கிற வ்யுத்பத்தியின்படி காணப்படும் எல்லாப்பொருள்களையும் 'லக்ஷ' ஶப்தத்தாலே சொல்லி, அவற்றைக் காலமாயிருந்து தூண்டுபவள் லக்ஷ்மி என்கிறதாகவுமாம்.

''லக்ஷ்ணுக்$_2$யஸ்ய ப$_4$ாவஸ்ய கலாகாஷ்ட$_2$ாதி$_3$ரூபிணீ |
அவ்யக்தவ்யக்தஸத்வஸ்த$_2$ா ப்ரேரயித்ரீ ஸத$_3$ாஸ்ம்யஹம் ||''

['லக்ஷ்ணு' என்னும் பெயருள்ள பதார்த்தத்தை, (அதன் அவயவங்களான) கலாகாஷ்டாதிரூபிணியாயிருந்துகொண்டு, ஸ்தூல ஸூக்ஷ்மப்பொருள்களிலிருப்பவளாய், எப்போதும் நான் தூண்டுகிறேன்] என்று தந்த்ரத்திலும் பேசப்பட்டது. இவையும், பின் வருபவையும் தனக்கு அந்தர்யாமியான பரமாத்மத்ருஷ்டியாலே சொல்லப்பட்டவை, இவையெல்லாம் பிராட்டியினுடைய கடல் ஞாலம்'' [திருவாய் 5-6] ஆகும். (லக்ஷ்மீ:) யோகிகளுக்குத்தன்னை லக்ஷ்யையாக—காணத்தக்கவளாக—ஆக்குகிருள் என்றும் பொருள் கொள்ளலாம். ''லா-ஆத$_3$ாநே'' என்று தாதுவாகையாலே, ப்ரளய காலத்தில் எல்லாப் பொருள்களையும் தன்னுள் எடுத்துக்கொள்பவள் என்னும் பொருளைத் தருகிறது லகாரம். 'க்ஷிப' தாதுவிலிருந்துண்டான க்ஷகாரம் அவற்றை ஸ்ருஷ்டிகாலத்தில் வெளிப்படுத்துபவள் என்னும் பொருளைத்தருகிறது. 'க்ஷிப' 'க்ஷப' 'க்ஷிணு' என்னும் தாதுக்களும் தூண்டுவது என்னும் பொருளைத் தருவனவாகையாலே நல்லோர்களுடைய பாபத்தை (அவர்களை) விட்டுப் போம்படியாகத் தூண்டுபவள் என்னும் பொருளையும் தருகிறது க்ஷகாரம். ''க்ஷமூ-ஸஹநே'' என்று தாதுவாகையாலே, க்ஷமிப்பவள், க்ஷமையாயிருப்பவள் என்னும் பொருள்களையும் தருகிறது. ''டு$_3$மிஞ்-ப்ரக்ஷேபணே'' என்று தாதுவாகையாலே, 'மி' என்னும் எழுத்து, 'ஸ்ருஷ்டிக்கிறேன், ஸ்ருஷ்டிக்கப்படுகிறேன்' என்னும்

பொருள்களைத்தருகிறது. "மாங்-மாதே" என்று தாதுவாகையாலே மகாரம் 'ஸ்ருஷ்டித்தவைகளை அளக்கிறேன்' என்று பொருள் படுகிறது. இவ்வரும்பொருளனைத்தும்;

"லக்ஷம் நயாமி சாத்மாநம் லாமி சாந்தே க்ஷிபாமி ச।
க்ஷிபாமி க்ஷபயாம்யேகா க்ஷிணோமி து₃ரிதம் ஸதாம்॥
க்ஷமே க்ஷமா ஹி பூ₄தாநாம் மிமே மம்யே ச மாமி ச॥"

[என்னை (பக்தர்களுக்கு) இலக்காக்குகிறேன்; (எல்லாப்பொருள் களையும்) என்னுள் ப்ரளயகாலத்தில் இழுத்துக்கொள்கிறேன்; (ஸ்ருஷ்டி காலத்தில்) வெளிவிடுகிறேன்; நல்லோர்களின் பாபத்தை நானே போக்கடிக்கிறேன்; பொறுக்கிறேன்; சேதனர்களின் பொறு மையாகவேயிருக்கிறேன்; (உலகை) ஸ்ருஷ்டிக்கிறேன்; (உலகாக) ஸ்ருஷ்டிக்கப்படுகிறேன்; (உலகை) அளக்கிறேன்] என்று லக்ஷ்மீ தந்த்ரத்தில் உத்கோஷிக்கப்பட்டன.

"கடல் ஞாலம் செய்தேனும் யானேயென்னும்
கடல் ஞாலமாவேனும் யானேயென்னும்
கடல் ஞாலம் கொண்டேனும் யானேயென்னும்"

என்று தொடங்கும் திருவாய்மொழி முழுவதும் இங்கு அநுஸந் திக்கத்தக்கது. ஸ்ரீதேவியின் தனிப்பெயரான இத்திருநாமத்தின் பெருமை

"இத்யேதாந் மயி த்₃ருஷ்ட்வார்த்த₂ாந் பரமர்ஷிருத₃ாரதீ₄:।
லக்ஷ்மீர் லக்ஷய மேத்யேவ கபிலோ முநிருக்தவாந்॥
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ர: பாதாளக₃திஸாத₄ந:।
தி₃வ்யாந்தரிக்ஷபௌ₄மாநாம் போ₄கா₃நாமுபபாத₃ந:॥
தநுர் ஜ்ஞாநமயீ ஸா மே விஷ்ணோர் ஹ்ருதி₃ ச வர்த்ததே।
ஆத்மஜ்ஞாநமித₃ம் புண்யம் யோக₃ஜ்ஞாநமித₃ம் பரம்॥"

[இப்படிப்பலவிதமான பொருள்களை இத்திருநாமத்தில் கண்டு, 'லக்ஷ்மியே! என்னைக்கடாக்ஷிப்பாயாக' என்று கபிலமுனிவர் உரைத்தார். ஐந்து எழுத்துக்கள் கொண்டதான **"ஓம் லக்ஷ்ம்யை நம:"** என்னும் இம்மந்திரம் பாதாளலோகத்தை ஸாதித்துக் கொடுக்கும்; தேவலோகத்திலும், அந்தரிக்ஷலோகத்திலும், பூமி யிலுமுள்ள போகங்களையெல்லாம் தரும்; எனக்கு ஞானமயமான சரீரமான இந்த லக்ஷ்மீஶப்தம் பகவான் விஷ்ணுவின் நெஞ்சிலும்

உள்ளது. இதுவே ஆத்மஜ்ஞானமாகும்; இதுவே புண்ணியமாகும்; இதுவே மேலான யோகஜ்ஞானமாகும்.] என்று லக்ஷ்மீ தந்த்ரத்திலே கோஷிக்கப்பட்டது. "ஸ்ரீ:" என்னும் முதற்பெயருக்கு அடுத்தபடியாக, லோகவேதங்களில் ஸுப்ரஸித்தமாகப் பிராட்டிக்கு வழங்கும் திருநாமமன்றோ இது.

(லக்ஷ்மீம் ஜாதவேதோ₃ ம ஆவஹ) எம்பெருமானே! லக்ஷ்மீ தேவியை எனக்கு அளிப்பாயாக: அவளுடைய கடாக்ஷத்தை என் பால் பெருகச்செய்வாயாக என்று தாத்பர்யம். (ஜாதவேத:) "ஜாதா: வேதா₃: யஸ்மாத் ஸ:" [எவனிடமிருந்து வேதங்கள் பிறந்தனவோ அவன் ஜாதவேதனுகிறான்.] என்கிறபடியே இத்திருநாமம் மறைநான்குமுன்னோதிய பரமபுருஷனைச் சொல்லுகிறது. இங்கு அபௌருஷேயமான வேதத்திற்குச் சொல்லப்படும் பிறப்பு ப்ரஹ்மாவுக்கு முதன்முதலில் செய்த உபதேசரூபமானதென்று கொள்ளவேண்டும்.

"யோ ப்₃ரஹ்மாணம் விதத₃தா₄தி பூர்வம்
யோ வை வேதா₃ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை"

[எவனொருவன் பிரமனை முன் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசிக்கிறனோ] என்றல்லவோ சொல்லப்பட்டது. (ஜாதவேத:) "ஜாதம்—ஸ்வதஸ்ஸித்₃த₄ம்வேத₃:,–த₄நம் வா, ஜ்ஞாநம் வா. யஶோ வா யஸ்ய ஸ:– ஜாதவேத₃:" [எவனுக்கு இயற்கையான தனமோ, அறிவோ, கீர்த்தியோ உள்ளதோ அவன் ஜாதவேதனுகிறான்.] என்றும் பொருள் கொள்வர். 'ஜாதவேதஸ்' என்பது அக்னிக்கு ப்ரஸித்தமான பெயரானாலும் பிராட்டி விஷயமாயிருக்கும் ப்ரகரண ஸ்வாரஸ்யத்தாலே, இந்த சப்தம் இங்கு எம்பெருமானையே குறிக்கிறதென்று கொள்ளவேண்டும். அன்றிக்கே, அக்னிக்கு அந்தர்யாமியான பரமபுருஷனைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். (லக்ஷ்மீம் மே ஆவஹ) அந்த ஸ்ரீதேவியை எனக்கு எல்லா நன்மையும் உண்டாகும் பொருட்டு அளிப்பாயாக; (ஆவஹ) ஸாந்நித்யம் செய்விப்பாயாக. (மே) எனக்காக. எனக்கு ஸர்வமங்களமும் ஸித்திப்பதற்காக. லக்ஷ்மியின் கடாக்ஷ லேசத்தாலேயே ஸர்வ மங்களங்களும் ஸித்திக்கின்றனவென்பது

"ஸ ஶ்லாக்₄ய: ஸ கு₃ணீ த₄ந்ய: ஸ குலீந: ஸ பு₃த்₃தி₄மாந் ।
ஸ ஶூர: ஸ ச விக்ராந்த: யம் த்வம் தே₃வி நிரீக்ஷஸே ॥
[1-9-131]

[தேவி! எவனை தேவரீர் கடாக்ஷிக்கிறீரோ, அவனே சிறந்தவன்; அவனே குணவான்; அவனே பாக்யவான்; அவனே நற்குடிப் பிறந்தவன்; அவனே புத்திமான்; அவனே சூரன்; அவனே வீரன்.] என்றும்

“த$_3$ாரா: புத்ராஸ் தத$_2$ாக$_3$ாரஸுஹ்ருத்$_3$த$_4$ாந்யத$_4$நாதி$_3$கம் ।
ப$_4$வத்யேதந் மஹாப$_4$ாகே$_3$ நித்யம் த்வத்$_3$வீக்ஷணாந் ந்ருணாம் ॥
[1-19-124]

[மஹாபாக்யவதியே! பெண்டுபிள்ளைகளும், வீடும், நண்பரும், தாந்யதநாதிகளும், மனிதர்களுக்கு உன்னுடைய கடாக்ஷத்தாலேயே என்றும் கிடைக்கின்றன.] என்றும் விஷ்ணுபுராணத்திலும்,

“........திருமாமகள் தன்னருளாலுலகில்
தேர்மன்னராயொலிமா கடல்சூழ்
செழுநீருலகாண்டு திகழ்வர்களே”

என்று திருமங்கைமன்னனாலும்,

“ யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணமீஶ்வராணாம்
ஐஶ்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத் ”

[எவளுடைய கடாக்ஷம், ஒவ்வொருக்ஷணமும் ஈச்வரர்களுடைய ஐச்வர்யத்திற்குக் காரணமானதென்பது எல்லா மனிதரும் அறிந்ததோ...] என்று ஆழ்வானாலும், “ ஏகோ முக்தாதபத்ர ” என்று தொடங்கி பட்டராலும் உத்கோஷிக்கப்பட்டது. (மே ஆவஹ) எனக்கு அளிப்பாயாக. இத்தால், தனக்கு இஷ்டவிநியோகார்ஹமாக்கலாம்படி பிராட்டியானவள் பரமபுருஷனுக்குப் பரதந்திரை என்னும் அர்த்தம் உணர்த்தப்படுகிறது.

तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् ।
यस्यां हिरण्यं विन्देयं गामश्वं पुरुषानहम् ॥ २ ॥

2. தாம் ம ஆவஹ ஜாதவேதோ$_3$ லக்ஷ்மீமநபக$_3$ாமிநீம் ।
யஸ்யாம் ஹிரண்யம் விந்தே$_3$யம் க$_3$ாமஶ்வம் புருஷாநஹம் ॥

பதவுரை;–ஜாதவேத$_3$:–எம்பிரானே! யஸ்யாம்–யாதொரு பிராட்டியிடம், ஹிரண்யம்—பொன்னையும், க$_3$ாம்–பசுவையும், அஶ்வம்—குதிரையையும், புருஷாந்–வேலைக்காரரையும்,

அஹம் விந்தே₄யம்—*நான் அடைவேனே*, தாம்—*அப் பிராட்டியை*, மே—*எனக்கு*, ஆவஹ—*அடைவியும்*.

இரண்டாவது மந்திரத்தாலே, தான் பிராட்டியிடம் பெறவிருக் கும் பலன்களைப் பேசி, அப்படிப்பட்ட பிராட்டியை எனக்காக ஸாந் நித்யம் செய்விக்கவேண்டும் என்று மறுபடியும் பிரார்த்திக்கிறான்.

( தாம் ம ஆவஹ ஜாதவேத: ) எம்பிரானே! அப்படிப்பட்ட பிராட்டியை எனக்கு அளிக்கவேண்டும். பிராட்டியைக் காண வேணும் என்னும் ஆசையாலே மறுபடியும் பிரார்த்திக்கிறான். நினைத்தவர்க்கெல்லாம் அளிக்கலாம்படி எனக்கு வசப்பட்டிருப்ப வளோ அவள்?' என்று பகவானுக்குக் கருத்தாக,—( லக்ஷ்மீம் ) உனக்கு உடைமைப்பொருளாயிருப்பவளன்றோ அப்பிராட்டி. **"லக்ஷ்ம அஸ்யா அஸ்தீதி லக்ஷ்மீ:"** [பாரதந்திரியமாகிற ஜீவலக்ஷணம் இவளிடம் இருக்கையாலே இவள் லக்ஷ்மியாகிறாள்] என்கிற வ்யுத் பத்தியின்படியே பாரதந்த்ரியலக்ஷணத்தைப் பூர்ணமாக உடைய வள் என்றும் பொருள்கொள்ளலாம். ( லக்ஷ்மீம் ) "ஸர்வலக்ஷண ஸம்பந்நாம்" என்கிறபடியே ஸர்வலக்ஷணங்களும் பொருந்தி யிருக்கப்பெற்றவள் என்றும் பொருள்கொள்ளலாம்.

"என்றால் அளிக்கத்தக்கவளாயிருந்தால்மட்டும் போதுமோ? அவள் நிலைநில்லாதவளென்று பிரஸித்தி பெற்றவளாயிற்றே; உன்னிடம் நிலைத்து நிற்பளோ?" என்று கருத்தாக, உரைக்கிறான்: (அநபகாமிநீம்) "அகலகில்லேனிறையும்" என்று உன்னை விட்டுப் பிரியாமலிருப்பவளல்லவோ இப்பிராட்டி; நீ நினைக்கில் இவளுடைய கடாக்ஷம் என்னையும் விட்டுப்பிரியமாட்டாது என்கிறான்.

**"அநந்யா ஹி மயா ஸீதா ப₄ாஸ்கரேண ப்ரப₄ா யதா₂"**
*[ஸீதையானவள், ஸூர்யனை விட்டுப்பிரியமாட்டாத ஒளிபோலே, என்னிடம் ஒன்றியிருப்பவள்]* என்றும்,

**"அநந்யா ராக₄வேணாஹம் ப₄ாஸ்கரேண ப்ரப₄ா யதா₂"**
*[ஸூர்யனை விட்டுப்பிரியமாட்டாத ஒளிபோலே, நான் ராகவரிடம் ஒன்றியிருப்பவள்]* என்றும் திவ்ய தம்பதிகள் தாமே ஸ்ரீராமா யணத்தில் சோதிவாய்திறந்து அருளிச்செய்தனர். "**விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ**" என்றார் பராசரபகவான். இப்படி பகவானை விட்டுப் பிரியாமலிருக்கையாலே "அநபக₃ாமிநீ" என்னும் பெயருடைய வளாகிறாள் என்னுமிவ்வர்த்தம்

பா₄நாமிவ க₃தா காந்தி: ஶீதரஶ்மௌ ஸதா₃ ததா₂ ।
ஶக்தி: ஶக்திமதோ விஷ்ணோ: ஸ்தி₂தாஹமநபாயிநீ ॥

[கிரணங்களின் ஒளியானது சந்திரனிடத்திலேயே எப்போதும் ஒன்றிநிற்பதுபோல் ஸர்வசக்தியான பகவானுக்கு விட்டுப்பிரியாத சக்தியாயிருக்கிறேன் நான்.] என்று தந்த்ரத்திலும் ஆதரிக்கப் பட்டது.

(அநபகாமிநீம்) தன்னுடைய பதியினிடத்திலே ஆநுகூல்ய மற்றவர்களிடம் நிலைநில்லாதவளாகையாலே 'அபக₃ாமிநீ' என்றும், ஆநுகூல்யமுடையாரிடம் நிலைநிற்பவளாகையாலே 'அநபக₃ாமிநீ' என்றும். இரண்டு திருநாமங்களாலும் கீர்த்திக்கப்படுபவள்.

''அபஶ்சாஹமயாம்யேகா த்₃ரவோ பூ₄த்வா கு₃ணே மஹாந்''

[த்₃ரவத்வமாகிற குணமாகி நான் ஜலத்தை அடைகிறேனாகையாலே அபகாமிநியாகிறேன்.] என்று தந்த்ரத்திலே 'அபக₃ாமிநீ' என்னும் நாமத்திற்கு ஓர் வ்யுத்பத்தி காட்டப்பட்டது. ''புனற்கண்ணின்ற நான்குமாய்'' [திருச்சந்த-1] என்கிறபடியே ஜலம் முதலிய ஸர்வ பதார்த்தங்களிலுமுள்ள குணங்களெல்லாம் தானிட்ட வழக்காக்கிக் கொண்டிருக்கும் பரமாத்மாவின் பா₄வனையாலே சொன்னபடி. அன்றிக்கே, அவனையும் தானிட்டவழக்காகக் கொண்டிருப்பவள் இப் பிராட்டியாகையாலே இவையும் இவளிட்ட வழக்கென்னக் குறை யில்லை. 'அபக₃ாமிநீ', 'அநபக₃ாமிநீ' என்னும் இரண்டு திருநாமங் களும் பிராட்டிக்கேற்பட்டதற்கு ஒரு விருத்தாந்தமும் லக்ஷ்மீதந்த்ரத் திலே சொல்லப்படுகிறது.

''அபாவாஹயமாதௌ₃ச முநிம் பூ₄த்வா ஸரஸ்வதீ ।
ஸாரஸ்வதே ஜலே பூர்வம் விஶ்வாமித்ரோதி₃தா ஸதீ ॥
அபோவாஹ வஸிஷ்ட₂ம் தம் ஸத்யஸந்த₄ா ஸரஸ்வதீ ।
ருஷய: ப்ராஹுரேவம் மாம் வஸிஷ்டே₂ ஸ்ரோதஸா ஹ்ருதே
ஸத்யே ஸத்யப்ரியம் பாஹி வஸிஷ்ட₂ம் ஶாத்ரவாதி₃தி ।
ஸாஹம் ஸரஸ்வதீ பூ₄த்வா தமபோவாஹ ஶாத்ரவாத் ॥
ருஷயோ நாம சக்ருர் மே ததா₃ ஹ்யநபக₃ாமிநீ ।
நவாக்ஷரோ ஹ்யயம் மந்த்ர: ஸர்வாபத்₃விநிவாரண: ॥''

[முற்காலத்தில் (விஶ்வாமித்ர வஸிஷ்டர்களுக்குள்ளே கலஹம் விளைந்த போது) விச்வாமித்ரராலே பிரார்த்திக்கப்பட்ட நான்

ஸரஸ்வதீ நதியாகி, வஸிஷ்டமுனிவரை நீரிலே அடித்துச்சென்றேன்; ஸத்யத்தை மீருததான ஸரஸ்வதீ நதி (விச்வாமித்ரருக்குக் கொடுத்த வாக்கின்படி) வஸிஷ்டரை இழுத்துச்சென்றது. வஸிஷ்டர் அப்படி நீரில் இழுத்துச்செல்லப்படுகையில், மற்றுமுள்ள முனிவர்கள் "ஸத்யையே! ஸத்யப்ரியரான இம்முனிவரை உன்னுடைய கோபத்திலிருந்து காத்தருளவேணும்" என்று ப்ரார்த்தித்தார்கள். ஸரஸ்வதியாகி நான் வஸிஷ்டரை நீரில் இழுத்துச்சென்றதாலே அபகாமினியாயிருந்தேன். (அவர்கள் ப்ரார்த்தித்தபின்) கோபத்தினின்றும் வஸிஷ்டரை விடுவித்தேன். அப்போது 'அநபகா₃மிநீ' (இழுத்துச் செல்லாதவள்) என்று முனிவர்கள் எனக்குப் பெயர் வைத்தனர். ஒன்பது அக்ஷரங் கொண்ட "ஓம் அநபகா₃மிந்யை நம:" என்னும் இம்மந்திரம் (இக்காரணத்தாலேயே) எல்லா ஆபத்துகளிலிருந்தும் விடுவிக்கும்.] என்று இத்திருநாமம் ஏற்பட்ட விதமும் இதன் பலனும் லக்ஷ்மீ தந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டன.

நீ அவளைக்காணவிரும்புவது எதற்காக, என்ன,—(யஸ்யாம்) ஸகலபலங்களையும் அளிக்கவல்லவளாகப் ப்ரஸித்திபெற்றவளான யாதொரு பிராட்டியிடம். (ஹிரண்யம் விந்தேயம் காமச்வம் புருஷாநம்) பொன்னையும், பசுக்களையும், குதிரைகளையும் வேலைக்காரர்களையும் அடைவேனோ. 'தாம் ம ஆவஹ' [அப்படிப்பட்ட பிராட்டியை என்னை அடைவியும்] என்று அந்வயம். இத்தால் பிராட்டியானவள் ஐச்வர்யத்தைத் தானே கொடுக்கிருள் எனனுமர்த்தம் அறிவிக்கப்படுகிறது. ஸ்ரீதேவிககு ஐச்வர்யப்ரத₃த்வம் ஸாத்வதாதி ஶாஸ்த்ரங்களிலும் உத்கோஷிக்கப்பட்டது. முமுக்ஷுவாயிருப்பவன் ஐச்வர்யத்தைப் பிரார்த்திக்கலாமோவென்னில்: பகவத்ப்ராப்தி ஸாதனமான யஜ்ஞாதிகளுக்கு ஐஶ்வர்யம் அவஶ்யாபேக்ஷிதமாகையாலும், பகவத் பாகவதாராதனங்களுக்கு உறுப்பாகக் கூடுமாகையாகையாலும், அவைகளுக்காக அபேக்ஷிப்பதில் தோஷமில்லை. தனக்காக விரும்புவதே தாழ்வானது,

अश्वपूर्वां रथमध्यां हस्तिनादप्रबोधिनीम्।
श्रियं देवीमुपह्वये श्रीर्मा देवी जुषताम्॥ ३॥

3. அஶ்வபூர்வாம் ரத₂மத்₄யாம் ஹஸ்திநாத₃ப்ரபோ₃தி₄நீம் ।
ஶ்ரியம் தே₃வீமுபஹ்வயே ஸ்ரீர் மா தே₃வீ ஜுஷதாம் ॥

பதவுரை:—அம்ஶ்வபூர்வாம்—(யோகத்தின்) ஆரம்பதசையில் குதிரைபோல் சப்திப்பவளாய், ரத$_2$மத்$_4$யாம்-நடுநிலையில் ரதம்போலே த்வனிப்பவளாய், ஹஸ்திநாத$_3$ப்ரபே$_3$ாதி$_4$நீம்—முடிவில் யானையைப்போலே கோஷிப்பவளாயுள்ள, ஶ்ரியம் தேவீம்—ஶ்ரீதேவியை, உபஹ்வயே—(இங்கு) அழைக்கிறேன். மா—என்னிடம், ஶ்ரீ:—அந்த ஶ்ரீதேவி, ஜுஷதாம்—ப்ரீதியுள்ளவளாகட்டும்.

பிராட்டியை அடைவிக்கவேண்டும் என்று ஸர்வேச்வரனை நோக்கிப் பிரார்த்தித்தான் முன் இரண்டு மந்திரங்களாலே. இதில், எம்பெருமானுடைய அனுமதிபெற்றுப் பிராட்டியை அழைத்து, என்னிடம் ப்ரீதியடையவேண்டுமென்று வேண்டுகிறான்.

(அம்ஶ்வபூர்வாம்) ஹ்ருதயமாகிற புரத்தையிழுக்கும் அம்ஶ்வமாகவும், ஹ்ருதயபுரமாகவும், அந்த ஹ்ருதயபுரத்தை வாஹனமாகக் கொண்டவளாகவுமிருப்பவள். (பூர்வாம்) புத்தி, ப்ராணன், சரீரம் என்னும் புரங்களிலே வஸிப்பவள் என்றுமாம். இப்பொருள்கள்

"அம்ஶ்வா பூர் வாஹநீ சாஸ்மி வஸாமி ச புரே ஸத$_3$ா।
பு$_3$த்$_3$தி$_4$ப்ராணஶரீராக்$_2$யே த்ரிவிதே$_4$ த்ரிவித$_4$ாத்மநா॥"

[குதிரையாகவும், புரமாகவும், வாஹனத்தையுடையவளாகவுமிருக்கிறேன்; புத்தி, ப்ராணன், சரீரம் என்னும் மூன்றுபுரங்களிலும் மூன்றுவிதமாக எப்போதும் வஸிக்கிறேன்] என்று தந்த்ரத்திலே ஆதரிக்கப்பட்டன.

(அம்ஶ்வபூர்வாம் ரத$_2$மத்$_4$யாம் ஹஸ்திநாத$_3$ப்ரபே$_3$ாதி$_4$நீம்) யோகத்தின் ஆரம்பநிலையிலே குதிரைபோலே கனைப்பவளாகவும், நடுநிலையிலே ரதத்வனிபோலே சப்திப்பவளாகவும், முடிவிலே பிடியைப்போலே பிளிறுபவளாகவுமுள்ளவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

"அம்ஶ்வாநாம் ஹேஷவந்நாத$_3$ம் யோக$_3$ாரம்பே$_4$ கரோமி ச।
நாபீ$_4$மத்$_4$யம் ஸமாயாதா கரோமி ரத$_2$வத்$_3$ த்$_4$வநிம்॥
வ்யோமரந்த்$_4$ரமநுப்ராப்தா ஹஸ்திநாத$_3$விநாதி$_3$நீ॥"

[யோகத்தின் ஆரம்பத்திலே (ஸுஷும்நாநாடியின் அடியிலிருந்து கொண்டு) குதிரைகளின் கனைப்பைப்போன்ற ஒலியை வெளிவிடு கின்றேன்; (யோகத்தின் நடுவில்) ஸுஷும்நாநாடியின் நடுவை அடைந்தவளாய், ரதம்போலே ஒலிசெய்கிறேன்; (யோகத்தின் முடிவில்) ப்ரஹ்மரந்த்ரதேசத்திலேயிருந்துகொண்டு யானையைப் போலே முழங்குகின்றேன்.] என்னும் லக்ஷ்மீதந்த்ர வசநம் காண்க. (அஶ்வபூர்வாம்) "அஶூவ்யாப்தௌ" என்று தாதுவாகையாலே 'அஶ்வ' ஶப்தம் ஸர்வவ்யாபியான ஸர்வேச்வரனைக் குறிக்கிறதாகை யாலே 'அஶ்வபூர்வா' என்னும் நாமம், ஆஶ்ரிதரக்ஷணாதி விஷயங் களில் அவனிலும் முன்னிற்பவள் என்று பொருள்படுவதாகவும் கொள்ளலாம்.

"யதி₃ த்வம் ப்ரஸ்தி₂தோ வீர வநமத்₃யைவ ராக₄வ।
அக்₃ரதஸ்தே க₃மிஷ்யாமி ம்ருத்₃நதீ குஶகண்டகாந்"

[ராகவரே! நீர் இன்றே வனத்திற்குப் புறப்பட்டாலும், குஶங்களை யும், முட்களையும் மிதித்துக்கொண்டு, உமக்கு முன்னே நான் செல்வேன்] என்றல்லவோ அன்னை அருளிச்செய்தது. (அஶ்வ பூர்வாம்) "அஶ்வ: பூர்வோ யஸ்யாஸ் ஸா" [ஸர்வேச்வரனை முதலிற் கொண்டவள்] என்றும் பொருள்கொள்ளலாம். அதாவது,— ஜகத்ஸ்ருஷ்டி, சேதனரக்ஷணம், ஜகத்வ்யாப்தி ஆகிய ஸர்வ காரியங்களிலும், ஸ்வதந்த்ரனை ஸர்வேஶ்வரனுக்கு ப்ராதாந் யத்தையளித்து, பரதந்திரையான தான் தன் ஸ்வரூபத்திற்குச் சேர அவனைப் பின்தொடர்ந்து நிற்பவள் என்கை. 'அவனுக்கும் முன்னிற்பவள் என்னும் தத்புருஷஸமாஸத்தாலே இவளுடைய கருணைகுணம் வெளிப்படுகிறது; அவனை முதலாகக்கொண்டவள் என்னும் பஹுவ்ரீஹிஸமாஸத்தாலே இவளுடைய பாரதந்திரிய ஸ்வரூபம் வெளிப்படுகிறது. (ரத₂மத்₄யாம்)

"ஆத்மாநம் ரதி₂நம் வித்₃தி₄ ஶரீரம் ரத₂மேவ ச" [கட 3-3]

[ஜீவாத்மாவை ரதத்தைஆள்பவனாகவும், சரீரத்தை ரதமாகவும் அறி வாயாக.] என்கிறபடியே ரதமாகச் சொல்லப்படும் சரீரத்தின் நடுவிலே எம்பெருமானுடன் எழுந்தருளியிருப்பவள் என்றுமாம். அன்றிக்கே, ரதமென்று ஸர்வேஶ்வரனுடைய அப்ராக்ருத ஶரீரத்தைச் சொல்லுவதாகக்கொண்டு, அதன் நடுவிலே எழுந் தருளியிருப்பவள் என்றும் கொள்ளலாம். (ரத₂மத்₄யாம்) "ஓங்காரம் ரத₂மாருஹ்ய" [ ] [ஓங்காரமாகிற ரதத்திலேறி] என்று

ரதமாகச் சொல்லப்படும் ஓங்காரத்தின் நடு எழுத்தாகிய உகாரத்திற்குப் பொருளாயிருப்பவள் என்றுமாம்.

"அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஸ்வரோ ஹரி:।
உத்$_3$த்$_4$ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா$_3$ ||
மகாரஸ்து தயோர் தா$_3$ஸ:- இதி ப்ரணவலக்ஷணம் ||"

[ஸர்வலோகேஸ்வரராய், ஸர்வவ்யாபியாயுள்ள ஹரி அகாரத்தினுல் சொல்லப்படுகிருர். அந்த பகவானுல் மார்பிலே எப்போதும் உத்தரிக்கப்பட்டவளான லக்ஷ்மீதேவி உகாரத்தால் சொல்லப்படுகிருள். மகாரம் அவர்களிருவர்க்கும் தாஸன் என்னும் பொருளையுடையது. இது ப்ரணவத்தின் லக்ஷணமாகும்.] என்று வேதத்திலும் உத்கோஷிக்கப்பட்டதன்ருே. ( ஹஸ்திநாத$_3$ப்ரபே$_3$ாதி$_4$நீம் ) பத்மவனத்திலே வஸிக்கையாலே, பத்மத்தில் ப்ரீதிகொண்ட யானைகளின் நாதத்தாலே உணருபவள் என்றுமாம். தன் ஆஸநபத்மத்திலே நிற்கும் குல்குலு, குரண்டகன், த$_3$மகன், ஶலிலன் முதலான யானைகளின் முழக்கத்தாலே திருப்பள்ளியுணருமவள் என்றுமாம்.

" ஆக்$_3$நேயாதி$_3$த$_3$ளஸ்த$_2$ாஸ்தே கு$_3$ல்கு$_3$லுஶ்ச குரண்ட$_3$க:।
த$_3$மக: ஶலிலஶ்சேதி க்$_2$யாதா: புஷ்ணந்து மே ஶ்ரியம் || "

[ஆஸநபத்மத்தின் ஆக்நேயாதி திக்குகளிலுள்ள இதழ்களிலிருக்கும் குல்குலு, குரண்டகன், தமகன், ஶலிலன் என்று பிரஸித்திபெற்ற யானைகள் எனக்கு எல்லாவிதமான செல்வத்தையும் வளரச் செய்யட்டும்.] என்று மங்கணஸம்ஹிதையிலும்,

" ஐராவதாத்ி$_3$பி$_4$: ஸம்யக் ஸாமஜைராவ்ருதாம் ஶுப$_4$ாம் "

[ஐராவதம் முதலிய யானைகளாலே சூழப்பட்டவளும், மங்களகரையுமான பிராட்டியை] என்று காஶ்யபீயத்திலும்,

" கோணப$_4$த்ரக$_3$தைர் தி$_3$வ்யைர் ஹிரண்யகலஶோத$_3$கை:।
ஸம்ப்ரீதை: ஸ்நாப்யமாநாம் தாம் போ$_3$த்$_4$யமாநாம் ச
ஶைர்க$_3$ஜை:|| "

[ஆஸனத்தாமரையின் ஒவ்வொரு கோணத்திலுமிருக்கும் பேரன்பு கொண்ட திவ்யகஜங்களாலே பொற்குடநீர்கொண்டு திருமஞ்சனம் செய்விக்கப்படுபவளாகவும், பள்ளியுணர்த்தப்படுபவளாகவுமுள்ள பிராட்டியை] என்று ஸ்வாயம்புவத்திலும் சொல்லப்பட்டது.

"ஆத்₃யாவஷ்டாக்ஷரௌ மந்த்ரௌ அந்ய ஏகாத₃ஶாக்ஷர: ।
அபீ₄ப்ஸித ப்ரதா₃ ஹ்யேதே த்ரயோ மந்த்ரா ஹி மந்மயா: ॥"

["ஓம் அச்வபூர்வாயை நம:" "ஓம் ரதமத்யாயை நம:" என்னும் முதலிரண்டு மந்திரங்களும் எட்டு அக்ஷரங்கொண்டவை; "ஓம் ஹஸ்திநாதப்ரபோதிந்யை நம:" என்னும் மற்ற மந்திரம் பதினோ ரெழுத்துக்கள் கொண்டது; எனக்கு வாசகமான இம்மூன்று மந்தி ரங்களும் வேண்டியதெல்லாம் கொடுக்கும்] என்று லக்ஷ்மீ தந்த் ரத்திலே இம்மூன்று மந்திரங்களின் பெருமையும் பேசப்பட்டது.

(ஶ்ரியம் தேவீம்) ஶ்ரீதேவியை: (ஶ்ரியம்) பெரிய பிராட்டியா ருடைய தனிப்பெயரைப் படிக்கிறது. நாராயணஶப்தத்துக்குப் போலே இதற்கும் பொருள்கள் அநந்தம். ஆயினும்,

"ஶ்ருணோதி நிகி₂லாந் தோ₃ஷாந் ஶ்ருணோதி ச கு₃ணைர் ஜக₃த்
ஶ்ரீயதே சாகி₂லைர் நித்யம் ஶ்ரயதே ச பரம் பத₃ம் ॥
ஶ்ரயந்தீம் ஶ்ரீயமாணாஞ்ச ஶ்ருண்வதீம் ஶ்ருணதீமபி ॥"

[ஆச்ரிதருடைய தோஷங்களைப் போக்குகிறாள்; (அவர்களுடைய) அத்வேஷம், ஆபிமுக்யம் முதலான குணங்களைப் பெருக்குகிறாள்; அடியார்களாலே தினந்தோறும் ஆச்ரயிக்கப்படுகிறாள்; பரமப்ராப் யனான பகவானை ஆச்ரயித்திருக்கிறாள்; அடியாருடைய கூக்குரலைக் கேட்கிறாள்; அவற்றை எம்பிரானைக் கேட்பிக்கிறாள்] என்னும் ஆறு பொருள்கள் பகவச்சாஸ்திரங்களிலே மிகவும் ஆதரிக்கப்பட்டன. இவற்றை விவரிப்போம்.

(ஶ்ரீயம்) "ஶ்ரீஞ்-ஸேவாயாம்" என்று தாதுவாகையாலே, "ஶ்ரயத இதி ஶ்ரீ:" [(பரமாத்மாவை) ஆஶ்ரயித்திருக்கிறாளாகை யாலே ஶ்ரீயாகிறாள்] என்னும் வ்யுத்பத்தியாலே ஸர்வேச்வரனை ஆச்ரயித்திருக்கிறாள் என்னும் பொருளைத் தருகிறது ஶ்ரீஶப்தம். இத்தால், இதரசேதனர்களைப்போலே பிராட்டியும் தன்னுடைய ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளனைத்தும் எம்பெருமானிட்ட வழக்கா யுள்ளவள் என்னும் பரமார்த்தம் உணர்த்தப்படுகிறது. ஸகல சேதநாசேதநங்களும் ஸர்வேச்வரனை ஆச்ரயித்திருக்க, இதையே யிட்டு நிரூபிக்கவேண்டும்படி, பிராட்டிக்குள்ள விசேஷமென் னென்னில்; அச்சுதனை ஆச்ரயித்திருப்பவர்களில் தலைவியாகை யாலும், வ்யக்தியை ஆஶ்ரயித்திருக்கும் ஜாதிபோலே ஸ்வரூப நிரூபகபூதையாய் அவனுள்ளவிடமெங்கும் வியாபித்திருக்கையாலும், அதுக்குமேலே

"கா சாந்யா த்வாம்ருதே தே₃வி ஸர்வயஜ்ஞமயம் வபு: ।
அத்₄யாஸ்தே தே₃வதே₃வஸ்ய யோகி₃சிந்த்யம்க₃த₃ாப்₄ருத:॥"

[ஹே தேவி! கதையை தரித்தவனும், தேவதேவனுமான எம்பெருமானுடைய யோகிகளால் நினைக்கத்தககதும், ஸர்வயஜ்ஞமயமுமான திருமேனியில் உன்னைத்தவிர வேறு எவள் இருக்கிருள்?] என்று விஷ்ணு புராணத்திற் சொல்லியபடியே, அவனுடைய நன் மார்பின் மேலேயும் எழுந்தருளியிருக்கிருளாகையாலும் இவளுடைய ஆஶ்ரயணம் அநிதர ஸாத₄ாரணமானது; அதனுலேயே இதையே யிட்டு நிரூபிக்கப்படுகிருள் ஸ்ரீதேவி.

(ஶ்ரியம்) "ஸ்ரீயதே இதி ஸ்ரீ:" [(ஸர்வசேதனராலும்) ஆச்ரயிக்கப்படுகிருளாகையாலே ஸ்ரீயாகிருள்] என்னும் வ்யுத்பத்தியாலே, நித்ய முக்த பத்த சேதனர்கள் அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படுபவள் என்னும் பொருளைத் தருகிறது. இத்தால் ஜகத்துக்கு ஶேஷியாயிருப்பது ஒரு மிதுனம் என்னுமர்த்தம் அறிவிக்கப்படுகிறது. "காந்தஸ் தே புருஷோத்தம:" என்று முதற்பொருளையும் "ப₂ணிபதி: ஶய்யா" என்று தொடங்கி, "த்வத்₃த₃ாஸ த₃ாஸீக₃ண:" என்னுமளவாக இரண்டாவது பொருளையும் அறிவித்து, "ஸ்ரீரித்யேவ ச நாம தே" என்று இவ்விரண்டு பொருள்களும் 'ஸ்ரீ:' என்னும் திருநாமத்திலிருந்தே கிடைக்கின்றன என்று ஆளவந்தார் அருளிச்செய்தார். (ஶ்ரியம்) "ஶ்ரு-ஹிம்ஸாயாம்" என்று தாதுவாகையாலே, தோஷங்களை ஹிம்ஸிப்பவள்-என்னும் பொருளையும் உடைத்தாகிறது ஸ்ரீஶப்தம். "தேந மைத்ரீ ப₄வது தே" [ராவண! ராகவரிடம் உனக்கு நட்புண்டாகட்டும்.] என்ருப் போலே இச்சேதனனுக்கும், "கிமேதந் நிர்த்தே₃ாஷ: க இஹ ஜக₃தி" [ஸ்ரீகுண 52] [இவ்வுலகில் தோஷமற்றவன் எவன்] என்ருப் போலே பரமபுருஷனுக்கும் உபதேசித்துச் சேதனனிடமுள்ள தோஷங்களையும், ஈச்வரனிடமுள்ள ஸ்வாதந்தர்யமாகிற தோஷத்தையும் போக்கடிப்பவள் என்று பாவம். (ஶ்ரியம்) "ஶ்ரு விஸ்தாரே" என்று தாதுவாகையாலே குணங்களை விஸ்தரிப்பிப்பவள் என்றும் பொருள்படுகிறது. முற்கூறிய உபதேசங்களாலேயே சேதநேச்வரருடைய குணங்களைப் பெருக்குபவள் என்கை. (ஶ்ரியம்) "ஶ்ரு-ஶ்ரவணே" என்னும் தாதுவிலே, "ஶ்ருணோதீதி ஸ்ரீ:" "ஶ்ராவயதீதி ஸ்ரீ:" என்னுமிரண்டு வ்யுத்பத்திகளாலே அடியார்களுடைய தீனச்சொற்களைக் கேட்கிருள்; அவற்றை எம்பெருமானைக் கேட்பிக்

கிருள் என்னும் இரண்டு பொருள்களை உடையதாகிறது பிராட்டியானவள் கேட்பதும், கேட்பிக்கையுமாகிற இச்செயல்களைச் செய்யும் வழியைப் பரந்தரஹஸ்யத்திலே பெரியவாச்சான்பிள்ளை மிக அழகாக விவரித்தருளிய ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்தேயம்.

ஆக, இவ்வாறு பொருள்களாலும் பிராட்டிக்குள்ள புருஷகாரத்வம் பூண் கட்டப்பட்டதாயிற்று. "புருஷகாரத்வேந ஶரண்யையாயிருக்கிருள்" என்னும் பொருளும் ஸ்ரீஶப்தத்துக்குண்டு. புருஷகாரமாயிருப்பவர் சேதநேஶ்வரிருவரோடும் ஸம்பந்தமுடையவராயிருக்கவேணும். "ஈச்வரனை ஆச்ரயித்திருக்கிருள்: சேதனராலே ஆச்ரயிக்கப்படுகிருள்" என்னும் பொருள்களாலே இது உண்டென்று உணர்த்தப்பட்டது. ஸம்பந்தமுண்டானாலும் கூக்குரலைச் செவிகொடுத்துக் கேளாத கல்நெஞ்சராயிருந்தால் புருஷகாரபூதராகமுடியாது. தான் கேட்டாலும், ஸர்வேச்வரனைக் கேட்பிக்கக் கூடிய ஸாமர்த்யமிருந்தாலொழியக் கார்யகரமாகாது. இவையிரண்டும் உண்டென்பதை "கேட்கிருள்; கேட்பிக்கிருள்" என்னுமிரண்டு பொருள்களும் காட்டின. இவையெல்லாமுண்டானாலும், குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருக்கும் ஜீவனுடைய தோஷங்களைப் போக்கி, நன்மைகளைப் பெருக்காவிடில் புருஷகாரக்ருத்யம் நிறைவேருது; ஸர்வேஶ்வரனிடமுள்ள ஸ்வாதந்த்யமாகிற தோஷத்தை தன் அழகாலே திருத்தி, வாத்ஸல்யாதி குணங்களைப் பெருக்காவிடிலும் கார்யகரமாகாது. இதையும் செய்கிருளென்பதை "தோஷங்களை ஹிம்ஸிக்கிருள்; குணங்களைப் பெருக்குகிருள்" என்னுமிரண்டு பொருள்களும் காட்டித்தந்தன. ஆகவிப்படிப் புருஷகாரத்வமே ஸ்வரூபமாயிருப்பவளிவள் என்பதை "ஸ்ரீ:" என்னும் தனிப்பெயர் காட்டித்தருகிறது.

**ஆகிஞ்சந்யைகஶரணு: கேசித் ப₄ாக்₃யாதி₄கா: புந:।**
**மத்பத₃ாம்பே₄ாருஹத்₃வந்த்₃வம் ப்ரபத்₃ய ப்ரீதமாநஸா:॥**
**லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந।**
**மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவ மாம்॥**
**லப்₃த்₄வா க்ருதார்த்த₂ா: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்யமாநஸா:॥**

[அழகிய முகத்தையுடைய சேநாபதியே! ஒரு கைம்முதலும் அற்றிருக்கையையே பற்றுசாகக்கொண்ட சில பாக்யசாலிகளோவெனில், என் திருவடித்தாமரையிணையை அன்புடன கூடிய மனத்தராய்ச் சரணடைந்து, லக்ஷ்மீதேவியைப் புருஷகாரமாகப் பற்றி, என்

பொறுமைக்கு இலக்காகி. என்னையே ப்ராப்யப்ராபகங்களாக அடைந்து கிருதார்த்தர்களாய், வேறொன்றிலும் நெஞ்சு செல்லப் பெருதவர்களாய் என்னையே அடைவார்கள்]

அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால் லக்ஷ்மீபதி: ஸ்வயம்।
லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப₄ா ப்ராப்தியோகி₃நீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோ ऽயம நிக₃மாந்தேஷு ஶப்₃த்₃யதே ॥

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன். என் பிரியை லக்ஷ்மியானவள் புருஷகாரத்தினுல் என்னை அடைய உதவிபுரிகிருள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதாந்தங்களில் சொல்லப்படுகிறது.]

மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத₄: ।
லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி₃ஷ்டா பரமர்ஷிபி₄: ॥
மமாபி ச மதம் ஹ்யேதந் நாந்யதா₂ லக்ஷணம் ப₄வேத் ॥

[ஸம்ஸாரத்தில் கீழே விழுகின்ற ஜந்துக்களுக்கு என்னை அடையும் விஷயத்தில் லக்ஷ்மீதேவியானவள் பரமரிஷிகளாலே புருஷகாரத்வத்தில் நியமிக்கப்பட்டிருக்கிருள். எனக்கும் இதுவே இஷ்டம்; வேருன (உபாயத்வமாகிற) ஆகாரம் இல்லை.] என்னும் ஸ்ரீபாஞ்சராத்ரவசநங்கள் இங்கு அனுஸந்திக்கத்தக்கவை. பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றியே எம்பெருமானைப் பற்றவேணும் என்னும் பரமார்த்தத்தை,

"அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா
நிகரில் புகழாய் உலகம் மூன்றுடையாய் என்னையாள்வானே
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே"

என்று ஆழ்வாரும், சது:ச்லோகீ, கத்யத்ரய, ஸ்ரீஸ்தவ, ஸ்ரீகுணரத்னகோஶ ஸ்ரீஸ்துத்யாதிகளிலே ஆசார்யர்களும் வெளியிட்டனர். இவளை முன்னிட்ட இளையபெருமாள், திருவடி, விபீஷணன் முதலானோர் கார்யஸித்தியடைந்தனர். இவளை க்ரமமாக பற்ருததாலே தங்கை மூக்கறுப்புண்டாள்; தமயன் தலையறுப்புண்டான். நிற்க. இவ்வாறு பொருள்களில் சிலவும், இவைகளாலுண்டான புருஷகாரத்வமாகிற ஶரண்யத்வமும்

''ஶ்ருணோமி கருணம் வாசம் ஶ்ருணுமி து₃ரிதம் ஸதாம் ।
ஶ்ருணுமி ச கு₃ணைர் விச்வம் ஶரணம் சாஸ்மி ஶாஶ்வதம் ||''

[அடியாருடைய தீனச்சொல்லைக் கேட்கிறேன். . அவர்களுடைய பாவத்தைப் போக்கடிக்கிறேன்; அவர்களுடைய குணங்களைப் பெருக்குகிறேன்; (இக்காரணங்களாலே) என்றும் ஶரணமாக—புருஷகாரபூதையாக-இருக்கிறேன்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலும் ஸ்ரீஶப்தார்த்தமாக அனுஸந்திக்கப்பட்டன. ஸ்ரீஶப்தத்துக்குள்ள மற்ற சில பொருள்களையும் காண்போம். (ஶ்ரியம்) பகவானுடைய சரீரமாயிருப்பவளை. ''ஶரீரம் ச ஹரேரஸ்மி'' [நான் ஹரியினுடைய ஶரீரமாயிருக்கிறேன்.] என்று தந்த்ரத்திலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. இதிலிருந்தும், பிராட்டியானவள் பரமபுருஷனுக்கு அத்யந்த பரதந்திரையென்பதும், '' அந்யஶரீரத்வாபா₄வே ஸதி ஸர்வஶரீரித்வம்'' [வேறொருவருக்கு சரீரமாயிராமல், எல்லாரையும் சரீரமாயுடைத்தாயிருக்கை] என்னும் பரப்ரஹ்மலக்ஷணம் பிராட்டிக்கு வாராதென்றும் தெளிவாகிறது. (ஶ்ரியம்) ''ஶ்ரத்₃த₄யா சேப்ஸிதா ஸுரை:'' [தேவர்களாலே ச்ரத்தையோடு ஈப்ஸிதை (அடைய விரும்பப்படுபவள்) ஆகையாலேயும் 'ஸ்ரீ' எனப்படுகிறேன்.] என்றும் தந்த்ரத்திலே ஒரு பொருள் உரைக்கப்பட்டது. தங்கள் தங்கள் இஷ்டங்களைப் பெறுவதற்காகப் பிராட்டியை முன்னிட்டு பகவானைப் பற்றுபவர்களாகையாலே இவள் தேவர்களாலே விரும்பப்படுபவள் என்று பாவம்.

''நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான் முகனும் முறையால்
சீரேறு வாசகம் செய்ய நின்ற திருமால்'' [பெரியாழ்திரு 4-1-5]
என்று பெரியாழ்வாரும்,

'' எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
வண்ணமலரேந்தி வைகலும்—நண்ணி
ஒருமாலையால் பரவி ஓவாதெப்போதும்
திருமாலைக் கைதொழுவர் சென்று. '' [52] என்று

பொய்கையாழ்வாரும் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தனர். றிக்கே நித்யஸூரிகளாலே விரும்பப்படுபவள் என்றுமாம்.

'' நிகரில் அமரர் விரும்பும்–அலர்மேல்மங்கையுறைமார்பா

என்றார் நம்மாழ்வார். பத்தமுக்தநித்யரான ஸகல சேதனராலும், பரமசேதனனாலும் ச்ரத்தையோடு விரும்பப்படுபவள் என்றுமாம். ஐஶ்வர்யப்ரதையான இவளை பத்தசேதனரும் விரும்புகின்றனரன்றோ.

(ஸ்ரீயம்) த்வனிஸ்வரூபமாயிருப்பவள் என்றும் பொருள்படும். த்வனியானது வயிற்றின் அடிப்பாகத்திலேயிருந்து கிளம்பும்போது 'ஶாந்தா' என்று பெயர் பெற்றிருக்கிறது. அது ஸ்ரீஶப்தத்திலுள்ள ஶகாரத்திற்குப் பொருள். நாபிப்ரதேசத்திலிருந்து வரும்போது 'பஶ்யா' என்றும் 'ரந்தீ' என்றும் பெயர் பெறுகிறது. இது ஶகாரத்திற்கும் ரேபத்திற்கும்-('ர' என்னும் எழுத்துக்கும)-ஈகாரத்திற்கும் பொருளாகிறது. மத்யஸ்தானமெனப்படும் கண்டத்திலிருந்து வரும்போது "ப்ரேரணீ" என்று பெயர்பெற்றிருக்கிறது. இது ரேபத்திற்கும ஈகாரத்திற்கும் பொருளாகிறது. கடைசியாக, த்வனியானது வாயிலிருந்து வெளிப்படும்போது 'ஸ்ருஷ்டி' என்று பெயர் பெறுகிறது. இதுவும் இகாரத்திற்குப் பொருளாகிறது. இப்பொருள்களனைத்தும் அக்ஷரஸாம்யங்களைக்கொண்டு சொல்லப்படுபவையாகும. ஆகவிப்படி ஶகாரம், ரேபம், ஈகாரம் ஆகிய இவற்றுக்குப் பொருளாய், நாலு ஸ்தாநங்களிலே ஶாந்தாபச்யாதி நாமங்களையுடைய த்வனிஸ்வரூபமாயிருப்பவளாகையாலே "ஸ்ரீ:" என்று சொல்லப்படுகிருள் என்று பாவம். இப்பொருள்

"ஶாந்தாऽऽதா$_4$ரபத$_3$ஸ்த$_2$ாஸ்மி பஶ்யா ரந்தீ ச நாபி$_4$ஜா।
ப்ரேரணீச தி$_4$யாம் மத்$_4$யா ஸ்ருஷ்டிர் வக்த்ரே தத$_2$ார்ணஸாம்॥
சது:ஸ்த$_2$ாநஸ்தி$_2$தா சைவம் ஶாந்தாபஶ்யாதி$_3$பே$_4$தி$_3$நீ॥"

[ஆதாரஸ்தானத்திலே ஶாந்தையாயிருக்கிறேன்; நாபியிலிருந்துண்டான பஶ்யையாகவும் ரந்தியாகவுமுள்ளேன். மத்யஸ்தானத்திலே அறிவுகளுக்கு ப்ரேரணியாகவும், வாயில் ஸ்ருஷ்டியாகவுமிருக்கிறேன். இப்படி ஶாந்தாபஶ்யாதி$_3$பேதங்களுடன் நாலு ஸ்தானங்களிலுள்ள த்வனிகளாயிருப்பதால் ஸ்ரீயாகிறேன்.] என்று தந்த்ரத்தில் ஆதரிக்கப்பட்டது.

(ஶ்ரியம்) 'ஶக்நோமி' [(அடியாருடைய இஷ்டப்ராப்தி அநிஷ்டநிவ்ருத்திகளைச் செய்விக்க) ஶக்தியுடையவளாகிறேன்] என்னும் பொருளைத் தருகிறது ஶகாரம்; ஶக்திமட்டுமன்று, ப்ராப்தியுமுண்டென்கிறது ரேபம். "ரி-ஹிம்ஸாயாம்" என்று தாதுவாகையாலே "ஆஶ்ரிதருடைய அநிஷ்டங்களைப் போக்கடிக்கிருள்" என்றும், "ரா—த$_3$ாநே" என்று தாதுவாகையாகையாலே "அடியார்க்கு இஷ்டங்களை அளிக்கிருள்" என்றும் பொருள்படுகிறது ரேபம். ஆக, இஷ்டப்ராப்த்யநிஷ்டநிவ்ருத்திகளைச் செய்விக்க சக்தியும் ப்ராப்தியுமுள்ளவள் என்றதாயிற்று. இவைகளைத் தான்

நேரேயோ செய்வது? என்னில்: (ஶ்ரியம்) "ஶக்தேருஜ்ஜ்வலிநீ சாஸ்மி" [(பரமாத்மாவினிடமிருக்கும்) இஷ்டப்ராபகத்வ அநிஷ்ட நிவர்த்தகத்வ ஶக்தியை விளங்கச்செய்கிறேனுகையாலும் ஶ்ரீயாகிறேன்.] என்று தந்த்ரத்தில் சொல்லியபடியே, பரமாத்மாவினுடைய சக்தியைத் தூண்டிவிடுவதன்மூலம் செய்கிருள் என்கை. (ஶ்ரியம்) 'ஶம்' என்னும் பதம் மங்களத்தைக் குறிக்கிறதாகையாலே அதினுடைய பகுதியான ஶகாரம் பரமமங்களஸ்வரூபை என்று பொருள் படுகிறது. "மங்களம் மங்களாநாம்" என்ருரன்ரே ஶ்ரீவேதாந்த தேசிகர். 'ரதி:' என்னும் பதம் ஆநந்தமென்னும் பொருளுடையதாகையாலே, அதன் முதலெழுத்தான ரேபம் ஆநந்தஸ்வரூபை என்று பொருள்படுகிறது. "ஈப்ஸிதா" [அனைவராலும். விரும்பப்படுபவள்] என்னும் பொருளைத் தருகிறது ஈகாரம். ஆக, "ஶ்ரீ:" என்று பரமமங்களாகாரையாய், ஆநந்தமயியாய், அனைவராலும் விரும்பப்படுபவளாயுள்ளவள் என்றதாயிற்று, இப்பொருள்களெல்லாம்,

"ஶ்ரயாமி ஶ்ரயணீயாஸ்மி ஶக்நோமி ரேமி ராமி ச |
ஶக்தேருஜ்ஜ்வலிநீ சாஸ்மி ஶந்தமா ரதிரீப்ஸிதா ||
இதி த்ரய்யந்ததத்வஜ்ஞா: ஶ்ரியம் மாம் விது₃ரஞ்ஸா ||"

[பரமாத்மாவை ஆச்ரயித்திருக்கிறேன்; (மற்றுள்ளாரால்) ஆச்ரயிக்கப்படுகிறேன்; (இஷ்டப்ராப்தி அநிஷ்டநிவ்ருத்திகளைச் செய்விக்க) சக்தியுடையவளாகிறேன்; அநிஷ்டங்களைப் போக்குகிறேன்; இஷ்டத்தை அளிக்கிறேன்; (பரமாத்ம) சக்தியைத்தூண்டுகிறேன்; மங்களாகாரையாகவும், ஆநந்தமயியாகவும், விரும்பப்படுபவளாகவுமிருக்கிறேன். இக்காரணங்களாலே மறைமுடியின் முடிவு கண்டவர்கள் என்னை ஶ்ரீதேவியென்று நன்கு அறிகின்ருர்கள்] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டன. "ஶக்நோமி ரேமி" என்பதற்கு பதிலாக "ஶக்திபீ₄ரேமி" என்றும் பாடம் காண்கிறது; 'என்னுடைய சக்திகளைக்கொண்டு இஷ்டப்ராப்தியையும், அநிஷ்டநிவ்ருத்தியையும் செய்விக்கிறேன்" என்று பொருள்.

"அபி நாதே₂ா விபூ₄த்யர்ணே த்ரைலோக்யம் ஸேஶ்வராமரம் |
பராம் மதீ₃யவர்ணஸ்ய கலாம் நார்ஹதி ஷோட₃ஶீம் ||
ஆத்₃யே பத₃த்ரயே வர்ண: ஶ்ரீம் ஹ்ரீம் ஓமிதி மந்மயா: |
ஏஷ ஷைவபி₄ஶ்சதுர்பி₄ஸ் தைர் மதீ₃யம் த₄ார்யதே வபு: ||

ஏகைகஶோ த்₃விஶோ வாபி த்ரிஶோ வா ஸர்வ ஏவ வா ।
ஜப்தார்ச்சித ஹுததத்₄பாதாஸ் ஸாத₄யேயுரபீ₄ப்ஸிதம் ॥
ப்ரயத்நேனைவ கே₃ாப்யம் ததே₃தத் ரத்நசதுஷ்டயம் ।
அந்யோந்யப₂லிதம் ஸர்வைரஶேஷைரதி₄கம் கு₃ணை: ॥''

[என்னுடைய விபூதிகளைச்சொல்லும் மந்திரங்களுள் தலையானதான 'லக்ஷ்மீ:' என்னும் மந்திரமும், தேவர்களையும், தேவர் தலைவர் களையும் கொண்ட மூவுலகும், என்னுடையதான 'ஸ்ரீ:' என்னும் வர்ணத்தில் பதினறில் ஒரு பகுதிக்குக்கூட ஒப்பாகமாட்டா. ஆதி காலத்திலுண்டான 'ஸ்ரீம்', 'ஹ்ரீம்' 'ஓம்' என்னும் மூன்றுபதங் களும் என்னைப்பொருளாகக் கொண்டவை. இம்மூன்றிலும், அச்வ பூர்வா, ரதமத்யா, ஹஸ்திநாதப்ரபோதிநீ, ஸ்ரீ: என்னும் இந் நான்கு திருநாமங்களிலும் என் திருமேனியானது தரிக்கப்படுகிறது. இந்நான்கு திருநாமங்களும், ஒன்ருென்ருகவாவது, இரண்டி ரண்டாகவாவது, மூன்று மூன்ருகவாவது, நாலும்சேர்ந்தாவது ஜபம் செய்யப்பட்டாலும், அர்ச்சிக்கப்பட்டாலும், ஹோமம் செய்யப் பட்டாலும் இஷ்டத்தை ஸாதித்துக்கொடுக்கும். ஒன்ருேடொன்று சேர்ந்து பலன் தருபவையும், எல்லாக்குணங்களும் நிறைந்தவை யும் நான்கு ரத்தினங்கள் போன்றவையுமான இத்திருநாமங்கள் நான்கும் முயற்சி செய்தாவது (அநதிகாரிகளுடைய செவியில் படாமல்) ரக்ஷிக்கப்படவேண்டியவையாகும்.] என்று பிராட்டியின் ஸ்வரூப ரூப குண விபூதிகளையெல்லாம் தெளியச்சொல்லும் ஸ்ரீஶப்தத்தின் பெருமையும், 'அச்வபூர்வாம்' என்று தொடங்கி, 'ஶ்ரியம்' என்னுமளவாகவுள்ள நான்கு திருநாமங்களின் ஏற்ற மும் லக்ஷ்மீ தந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டது. "ஏஷா வைபி₄:'' என்றவிடத்தில் "ஏஷ வைபி₄:" என்றும் பாடம் காண்கிறது; "ஸ்ரீம், ஹ்ரீம், ஓம், ஓம் ஸ்ரீயை நம: என்னும் நாலு மந்திரங்களும் என்னைப் பொருளாகக் கொண்டவை; இவற்ருல் (என் மந்த்ராத் மகமான) திருமேனி தரிக்கப்படுகிறது'' என்று பொருள். (ஶ்ரியம் தேவீ முபஹ்வயே) ஸ்ரீதேவியை அருகிலே அழைக்கிறேன். எதற்காக வென்னில்: (ஸ்ரீர் மா தேவீ ஜுஷதாம்) 'மா' என்றும், 'தேவீ. என்றும் பெயர்பெற்றவளான பிராட்டி (என்னிடம்) ப்ரீதியடை யட்டும். அதற்காகவே அழைக்கிறேன் என்று ப₄ாவம்.

(மா) இது லக்ஷ்மியின் பிரஸித்தமான திருநாமங்களில் ஒன்று. இதன் பொருள்களைக் காண்போம்: (மா) இருபத்தைந்தாவது தத்துவமாகையாலே, இருபத்தைந்தாவது அக்ஷரமான மகாரத்

தால் சொல்லப்படும் ஜீவர்களனைவர்க்கும் ஸ்வாமினியாயிருந்த போதிலும், தானும் தன் பாரதந்திரிய ஸ்வரூபத்திற்குச்சேர மகார வாச்யையாய், ஜீவகோடியிலே சேர்ந்திருப்பவள். ஓங்காரத்திலுள்ள மூன்று அக்ஷரங்களிலும் அந்வயமுள்ளவள் பிராட்டி. அகார வாச்யனான ஸர்வேச்வரனுக்கு ஸ்வரூபநிரூபக பூதையாயிருக்கை யாலே அகாரத்திற்கும் பொருளாயிருப்பவள்; 'அவன் மார்பை விட்டுப்பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது' என்னும் பகவத் ஸேநாபதிமிச்ரர் வாக்யத்தை நினைப்பது.

" உத்$_3$த்$_4$ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா$_3$ "

[பகவானாலே என்றும் (மார்பிலே) உத்தரிக்கப்பட்டவளான லக்ஷ்மீ தேவி உகாரத்தினால் சொல்லப்படுகிறாள்.] என்னும் ச்ருதியின்படி உகாரத்தினுட்பொருளாகவும் ஆகிறாள். ஜீவகோடியில் சேர்ந்த வளாகையாலே மகாரத்திற்கும் பொருளாகிறாள். " பர்த்தாவி னுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப்போலே ப்ரதமசரமபதங்களை விடாதேயிருக்கும் இருப்பு. ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போலே" என்று ஆசார்யாக்ரேஸரரான பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியிலே அருளிச்செய்வர். (மா) ''மாங்-மாநே'' ''மா-மாநே'' என்று தாதுவாகையாலே, எல்லாவற்றை யும் அளப்பவள், அதாவது வியாபித்திருப்பவளென்றும், ப்ர மாணங்களாலே அளக்கப்படுபவள் என்றும், ப்ரளயகாலத்தில் உலகம் முழுவதும் தன்னில் அடங்கப்பெறுபவள் என்றும் பொருள்படுகிறது.

" மிமே மியேऽகி$_2$லைர் மானைர் மயி மாதி ஜக$_3$த் க்ஷயே "

[(எல்லாவற்றையும்) அளக்கிறேன்; எல்லா ப்ரமாணங்களாலும் அளக்கப்படுகிறேன்; ப்ரளயகாலத்தில் உலகம் என்னிடம் அளவு படுகிறது] என்னும் லக்ஷ்மீதந்த்ர வசனத்தை அநுஸந்திப்பது. (மா) 'மந—ஜ்ஞாநே' என்று தாதுவாகையாலே மகாரம் அறிவையே ஸ்வரூபமாகவும், குணமாகவும் கொண்ட ஜீவர்களையும் ஸர்வேச் வரனையும் குறிக்கும். இவர்களெல்லோரையும் தனக்கு வசப்பட்ட வர்களாக உடையவளாகையாலே 'மா' எனப்படுவதாகவும் கொள்ள லாம். ஜீவர்கள் பிராட்டிக்கு இயற்கையாகவே சேஷபூதர்களாகை யாலும், பரமபுருஷன் பிராட்டிக்கு ப்ரேமபரதந்திரனாகையாலும் இவளுக்குச் சேதநரோடு பரமசேதனனோடு வாசியற எல்லோரும் வசப்பட்டவரேயன்றோ. (மா) 'மாங்-மாநே' என்னும் தாதுவிலே

எல்லாவற்றையும் அளப்பவள் என்றுபொருளாகி, எல்லாவற்றையும் வியாபித்திருப்பவள் என்று பொருள்படுகிறது. 'ஸ்ரஜா' என்றவிடத்தைக்காண்க. (மா) மகாரத்திலும், மச்சப்தத்திலும் சொல்லப்படும் ஆத்மஸ்வரூபத்தைப்போலே ஒவ்வொருவராலும் மிகவும் விரும்பப்படுபவளாகையாலும் 'மா' எனப்படுகிருள். இம் மூன்று பொருள்களும்

'ஆத்மேஶ்வரவதீ சாஹம் வ்யாப்நாயாம் மயி மேதி தீ₄: ।
ஆத்மவச்சேப்ஸிதாத்யர்த்த₂மதோ மாம் மத்₃விதே₃ா விது₃: ॥"

[ஆத்மாக்களையும் ஈச்வரனையும்—(அல்லது, தனக்குத்தானே ஈச்வரனை பகவானை)—உடையவளாயிருக்கிறேன் நான; ஸர்வவ்யாபினியாகையாலேயும் என்னை 'மா' என்று அறிகிருர்கள். அனைவராலும் தம்மைப்போலே விரும்பப்படுகிறேன. ஆகையால் என்னையறிந்தவர்கள் என்னை 'மா' என்று சொல்லுகிருர்கள்.] என்று தந்த்ரத்தில் ஆதரிக்கப்பட்டன.

"பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ர: ஸர்வகாமப₂லப்ரத₃:"

["ஓம் மாயை நம:" என்னும் ஐந்து அக்ஷரங்கள் கொண்ட இம் மந்திரம் எல்லாக்காமங்களையும் பலன்களையும் அளிப்பது] என்று மந்திரத்தின் பெருமையும் பேசப்பட்டது. (மா ஜுஷதாம்) என்னை அடையட்டும் என்று பொருள் கொணடார் கோமடரங்கநாதர். (தேவீ) தேவனுடைய பத்னி. "தி₃வு-க்ரீட₃ா விஜிகீ₃ஷா வ்யவஹார த்₃யுதி ஸ்துதி மோத₃ மத₃ ஸ்வப்ந காந்தி க₃திஷு" என்று தாதுபாடம். (தேவீ) "தி₃வு-க்ரீட₃ா" உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடையவன் தேவனாகிருன. அவ்விளையாட்டாகிற ஸ்ருஷ்ட்யாதி யஜ்ஞத்தில் அவனுடன் சேர்ந்து அனுபவிக்கும் பத்னியாகையாலே இவள் தேவியாகிருள்.

"உலகும் உலகிறந்த ஊழியும் ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும்—உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும் திருமால் தன்
புந்தியிலாய புணர்ப்பு" என்று

பொய்கையாழ்வார் அருளிச்செய்தபடியே பிராட்டியாலே தூண்டப்பட்டே ஸ்ருஷ்ட்யாதிஸங்கல்பங்களை ஸர்வேச்வரன் செய்கிருனகையாலும்,

''ஸ்வஸ்தி ஸ்ரீர் தி₃ஶதாது₃ஶேஷஜக₃தாம் ஸர்க்கோ₃பஸர்க்க₃ ஸ்தி₂தீ:

ஸ்வர்க்க₃ம் து₃ர்க்க₃தி-மபவர்க்கி₃கபத₃ம் ஸர்வம் ச குர்வந்ஹரி: ।

யஸ்யா வீக்ஷ்ய முக₂ம் ததி₃ங்கி₃தபராதீ₄நோ வித₄த்தேऽகி₂லம் க்ரீடே₃யம் க₂லு நாந்யதா₂ऽஸ்ய ரஸதா₃ ஸ்யாதை₃கரஸ்யாத் தயா ॥

[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்கநரக மோக்ஷங்களைக்கொடுப்பதையும் செய்யும்போது பகவான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கிதத்திற்கு வசப்பட்டவனாய் எல்லாக்காரியங்களையும் செய்கிறானோ, அந்தப்பிராட்டி (நமக்கு) மங்களத்தை அளிக்கட்டும்: பகவான் அவளுடன் ஒரே அபிப்ராயத்தை உடையவனாயிருக்கிறபடியால், அவளுடைய இங்கிதபராதீனனாகக் காரியங்களைச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.] என்று ஆழ்வானும்,

''ஶ்ரியை ஸமஸ்தசித₃சித்₃ விதா₄நவ்யஸநம் ஹரே: ।

அங்கீ₃காரிபி₄ராலோகைஸ் ஸார்த்த₂யந்த்யை க்ருதோஞ்ஜலி: ॥''

[ஸகல சேதநாசேதநங்களையும் படைப்பதால் பகவானுக்குண்டாகும் சிரமத்தைத் தன் அங்கீகாரத்தைக் காட்டும் கடாக்ஷங்களாலே ஸபலமாகச் செய்கின்ற பிராட்டியின்பொருட்டு அஞ்ஜலியானது (அடியேனால்) செய்யப்பட்டது.] என்று பட்டரும் அருளிச்செய்தபடியே ஜகத்ஸ்ருஷ்யாதிலீலையிலே பிராட்டியும் போக்தாவாக அந்வயிக்கிறாளாகையாலும் இவள் 'தேவீ' [ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளை லீலையாக உடையவள்] என்று பெயர் பெற்றிருக்கிறாள். (தேவீ) ''தி₃வுவிஜிகிஷா'' எல்லாரையும் ''ஜிதம் தே'' என்றும், ''தோற்றோம்'' என்றும் தோல்வியுறச் செய்பவனாகையாலே அவன் தேவனாகிறான். அவனிடம் தோற்பதற்குமுன், புருஷகாரபூதையான இப்பிராட்டியின் குணங்களுக்கு முதன் முதலில் தோல்வியுறுகிறார்களாகையாலும், அவனிடம் தோல்வியுறச்செய்பவள் இவளாகையாலும் இவள் தேவியாகிறாள். (தேவீ) ''தி₃வு-வ்யவஹார'' வேதம் முதலிய சாஸ்திரங்களை முதன முதலில் வ்யவஹரித்தவனாகையாலே அவன் தேவனாகிறான். ''மறையுரைத்த

திருமாலே'' [பெரிய திரு 5-6-1] என்கிறபடியே அதிலும் இப்பிராட்டிக்கு ப்ரேரகத்வேந அந்வயமுண்டாகையாலும், லக்ஷ்மீ தந்த்ராதிகளைத் தான் நேரே வ்யவஹரிக்கையாலும் இவள் தேவியாகிருள்.

(தேவீ) ''தி₃வு-த்₃யுதி'' ''தமேவ பா₄ந்தமநுபா₁தி ஸர்வம் தஸ்ய பா₁ஸா ஸர்வமித₃ம் விபா₄தி'' [ஒளிவிடும் அவனையே எல்லாப் பொருளும் பின்பற்றி ஒளிவிடுகின்றன. அவனுடைய ஒளியாலே இவையெல்லாம் பிரகாசிக்கின்றன.] என்றும், ''நாராயணபரோ ஜ்யோதி:'' என்றும் சொல்லுகிறபடியே ஒளிமயனுன அவன் தேவனுகிருன்.

''வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கை'' என்றும்,

''திகழ்கின்ற திருமார்பில் திருமங்கைதன்னேடும்
திகழ்கின்ற திருமாலார்......'' என்றும்,

''அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா''

[ஜனகராஜன் திருமகளைத் தனக்கென்ன இட்டுப்பிறந்த தத்துவத்தின் தேஜஸ் அளவிடவொண்ணுதது.] என்றும் சொல்லுகிறபடியே அவனுக்கும் ஒளி கொடுப்பவளாயிருக்கும் இவள் தேவியாகிருள். ''பா₄ஸ்கரேண ப்ரபா₄ யதா₂'' [ஸூர்யனை விட்டுப் பிரியாத ஒளிபோல்] என்று சொல்லப்படுபவளன்றே இவள். (தேவீ) ''தி₃வு-ஸ்துதி'' துதிக்கப்படுபவன் தேவனுகிருன். எவரைத் துதித்தாலும் இவனையே துதித்ததாகும். இவனுக்கு நிரூபகபூதையாகையாலே இவளையும் துதித்ததாகும். ஆகையாலே இவளே தேவியாகிருள்.

''ஓதுவாரோத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும்
சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை
போதுவாழ் புனந்துழாய் முடியுனய் பூவின்மேல்
மாதுவாழ் மார்பினுய்!'' [திருவாய் 3-1-6]

என்று நம்மாழ்வார் அருளினுர். (தேவீ) ''தி₃வு-மோத₃'' ஆநந்தமயனுன அவன தேவன்; ஆநந்தமயியான இவள் தேவி. (தேவீ) ''தி₃வு-மத₃'' ''அவாக்யநாத₃ர:'' [வார்த்தைசொல்லாதவன்; அன்பற்றவன்] என்று மதித்திருக்குமவன் தேவன். ''த்வம் நீச ஶஶவத் ஸ்ம்ருத:'' [நீசனுன ராவணனே! நீ முயல்போன்றவன்]

" த்ருணமந்தரத: க்ருத்வா " என்று மதிப்புடனிருக்குமிவள் தேவி யாகிறுள். (தேவீ) "தி₃வு-காந்தி" உலகிற்கெல்லாம் இனியவன் தேவனுகிறுன். அவனுக்கும் இனியவள் தேவியாகிறுள். "லோகா பி₄ராமம் ராமம்" எனப்படுபவன் அவன்; "ராமஸ்ய ச மந: காந்தா" [ரா-ஸு (55-26)] எனப்படுபவள் இவள். " ஶ்ரிய: காந்த: " [வேதாந்ததீபம்] என்றும், "புருஷோத்தமஸ் தே காந்த:" [சது: ச்லோகீ] என்றும் சொல்லப்படுபவன் அவன். "அரவிந்த₃லோசந மந: காந்தா" எனப்படுபவள் இவள். " தி₃வு-க₃தி " " ஶரணம் க₃திர் நாராயண: " " நாராயணம் பராயணம் " என்கிறபடியே ப்ராப்யப்ராபகங்களாயிருப்பவன் தேவனுகிறுன். அவ்விரண்டு தசையிலும் அந்வயமுள்ள இவள் தேவியாகிறுள். "தருமவரும் பயனுய திருமகளார் தனிக்கேள்வன்" என்கிறபடியே ஸாதனதசை யில் புருஷகாரபூதையாகவும், " கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ" என்கிறபடியே போகவேளையில் போகவர்த்தகை யாகவும் அந்வயிக்கிறுளன்றே அன்னை. ஆக, இவ்வளவால் "தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" "ஸாக்ஷாத் தே₃வ: புராணோ ஸௌ" [பார-ஆர 88-25] [புராதனனுன இவனே நிருபாதிகதேவனு வான்] என்னும் அவனைப்போலே இவளும் தேவியென்று புகழத் தக்கவள் என்று நிரூபிக்கப்பட்டது. உண்மையில் " ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமஶ்நுதே " [ச்ரத்தா சப்தத்தால் சொல்லப்பெறும் பிராட்டியாலே தேவன் தேவனுகிறுன்.] என்கிறபடியே அவன் தேவனுவதும் தேவியான இவளாலன்றே. (தே₃வீ) 'த₃ா'தாதுவும். ' அவ ரக்ஷணே ' என்னும் த₄ாதுவும் சேர்ந்து ' தே₃வீ ' என்னும் ஶப்தம் உண்டானதாகக் கொண்டால், எல்லாக் காமங்களையும் அளிப்பவள்; எல்லாக் கர்மங்களையும் ரக்ஷிப்பவள் என்னும் பொருளைத்தருகிறது. இப்பொருள்களுப, இம்மந்திரப்பெருமையும்,

"ப்ரத₃ாத்ரீ ஸர்வகாமாநாம் அவித்ரீ ஸர்வகர்மணும் |
தே₃வஸ்ய த₃யிதா சாஸ்மி தே₃வீம் மாம் முநயோ விது₃: |
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ பு₄க்திமுக்திப₂லப்ரத₃: ||'

[எல்லாக்காமங்களையும் அளிப்பவள்; எல்லாக்கர்மங்களையும் ரக்ஷிப் பவள்; (இயற்கையிலேயே) தேவனுயிருப்பவனின் பத்தினியாயிருப் பவள்; ஆகையாலே என்னை முனிவர்கள் ' தே₃வீ ' என்று அறிந்தனர். ' ஓம் தே₃வ்யை நம: ' என்னும் ஐந்து அக்ஷரங் கொண்ட இம்மந்திரம் போகமோக்ஷங்களாகிற பலன்களை அளிக்க வல்லது.] என்று தந்திரத்திலே உத்கோஷிக்கப்பட்டன.

कां सोऽस्मितां हिरण्यप्राकारामार्द्रां ज्वलन्तीं तृप्तां तर्पयन्तीं।
पद्मे स्थितां पद्मवर्णां त्वामिहोपह्वये श्रियम्॥ ४॥

4. காம் ஸோஸ்மிதாம் ஹிரண்யப்ராகாராம்
ஆர்த்$_3$ராம் ஜ்வலந்தீம் த்ருப்தாம் தர்ப்பயந்தீம்।
பத்$_3$மே ஸ்தி$_2$தாம் பத்$_3$மவர்ணாம்
த்வாமிஹோபஹ்வயே ஶ்ரியம்॥

பதவுரை:— **காம்**—*சப்திப்பவளாகவும்,* **ஸோஸ்மிதாம்**—*(ப்ரஹ்மத்தின்) பெருமைக்குக் காரணமாயிருப்பவளாகவும்,* **ஹிரண்யப்ராகாராம்**-*அழகிய ஸ்வபாவத்தை உடையவளாகவும்.* **ஆர்த்$_3$ராம்**-*ஈரநெஞ்சை உடையவளாகவும்.* **ஜ்வலந்தீம்**-*ஒளிவிடுபவளாகவும்,* **த்ருப்தாம்**-*நித்யதிருப்தியுடையவளாகவும்,* **பத்$_3$மே ஸ்தி$_2$தாம்**—*தாமரையில் நிற்பவளாகவும்,* **பத்$_3$மவர்ணாம்**—*தாமரைபோன்ற திருநிறத்தை உடையவளாகவுமுள்ள,* **ஶ்ரியம் த்வாம்**—*ஸ்ரீதேவியான தேவரீரை,* **இஹ**—*இங்கு,* **உபஹ்வயே**—*அழைக்கிறேன்.*

*சென்ற மந்திரத்தில் அழைக்கப்பட்ட பிராட்டி ஆவிர்ப்பவிக்க, தன் அருகிலேயே எழுந்தருளியிருக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறான் இம்மந்திரத்தில்.*

(காம்) "கை-ஶப்$_3$தே$_3$" என்று தாதுவாகையாலே சப்திப்பவள் என்றும், (எல்லா வேதங்களாலும்) சப்திக்கப்படுவள்—என்றும் பொருள் கொள்ளலாம். 'க' என்னும் எழுத்து ஸுகத்தையும் குறிக்குமாகையால் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபையாயிருப்பவள், ஜீவேச்வரர்களுக்கு ஸுகமளிப்பவள் என்றும் பொருள்கொள்ளலாம்.

"ப்ரியா து ஸீதா ராமஸ்ய தா$_3$ரா: பித்ருக்ருதா இதி।
கு$_3$ணாத்$_3$ ரூபகு$_3$ணாச்சாபி ப்ரீதிர் பூ$_4$யோப்$_4$யவர்த்த$_4$த॥"

*[தந்தையால் மணம் செய்விக்கப்பட்ட மனைவி என்னும் காரணத்தாலேயே ஸீதை ராமனுக்கு இனியவளாயிருந்தாள். (ஸீதையினுடைய) ஆத்மகுணங்களாலும், ரூபகுணங்களாலும் அன்பு மேலும் பெருகிற்று.] என்றும்*

''நமாமி ப$_4$ார்க்க$_3$வீம் க்$_2$யாதிம் ஸுக$_2$ாம் ஸௌம்யாம்
ஸுக$_2$ப்ரத$_3$ாம்''

*[பிருகுவின் புத்திரியும், கியாதியெனப்படுபவளும். ஸுகரூபையும், அழகியவளும், ஸுகத்தையளிப்பவளுமான பிராட்டியை வணங்கு கிறேன்.] என்றும் உத்கோஷிக்கப்பட்டதன்றே. எல்லா ஜீவராசி களாலும் 'கா' [எவள்] என்று தேடப்படுபவளாகையாலே 'கா' எனப்படுகிருள் பிராட்டி என்றும் கொள்ளலாம்.* ''கதமா கா யா ஸா ஸத்யா'' *[தை-உப 2-21] என்று தைத்திரீய உபனிஷத்திலும் கீர்த்திக்கப்பட்டாளன்றே பிராட்டி. இம்மூன்று அர்த்தங்களும்,*

''ஶப்$_3$த$_3$ாயே ஸர்வபூ$_4$தாநாமந்தஸ்த$_2$ா சிந்மயீ ஸத$_3$ா।
காயே ச நிகி$_2$லைர் வேதை$_3$ரந்விஷ்யே கேதி சாகி$_2$லை: ||''

*[ஜ்ஞாநாநந்தமயியாய் எல்லா பூதங்களினுள்ளும் இருந்துகொண்டு எப்போதும் சப்திக்கிறேன் நான்; எல்லாவேதங்களாலும் சப்திக்கப் படுகிறேன்: 'கா' (எவள்) என்று எல்லாராலும் தேடப்படுகிறேன்.] என்று தந்திரத்திலும் ஆதரிக்கப்பட்டன. (காம்)* ''க இதி ப்$_3$ரஹ் மணோ நாம'' *[ஹரிவம்சம்] ['க' என்பது ப்ரஹ்மாவின் நாம மாகும்] என்கிறபடியே ககாரவாச்யனை ப்ரஹ்மாவினுள் இருந்து கொண்டு, வேதங்களை சப்தித்துக்கொண்டு, விதவிதமான உலகங் களை ஸ்ருஷ்டிப்பவள் என்றும் கொள்ளலாம். ஶாந்தா பஶ்யாதி த்வனிஸ்வரூபிணியாயிருப்பவள் பிராட்டியே என்று கீழே நிரூபிக்கப் பட்டிருக்கையாலும்,* ''அர்த்தோ$_2$ா விஷ்ணுரியம் வாணீ'' *[பகவான் பொருளாகவும், பிராட்டி சொல்லாகவுமிருப்பவள்] என்று விஷ்ணு புராணத்திலும் பிராட்டியை சப்தஸ்வரூபிணியாகச் சொல்லி யிருக்கையாலும், வேதசப்தமாகவுமிருப்பவள் பிராட்டியே என்று கொள்ளக்குறையில்லை.*

''நாமரூபஞ்ச பூ$_4$நாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம்।
வேத$_3$ஶப்$_3$தே$_3$ப்$_4$ய ஏவாதௌ$_3$ தே$_3$வாதீ$_3$நாம் சகார ஸ: ||''

*[அந்த ப்ரஜாபதியானவர் தேவர் முதலான ஜீவராசிகளின் நாம ரூபங்களையும், கர்மஸ்வரூப விவரணத்தையும்* வேதசப்தங்களைக் கொண்டே *செய்தார்] எனறு சொல்லியிருக்கையாலே வேதசப்த ஸவரூபிணியான பிராட்டியாலேயே பிரமன் நடத்தும் படைப்புத் தொழில் நடைபெறுகிறதென்பது பொருந்தும். அன்றிக்கே,* ''ப்$_3$ரஹ்மா நாராயண:'' *என்று வேதங்களிலும்,*

"மத்₃ரூபமாஸ்தா₂ய ஸ்ருஜத்யஜோ ய:
ஸ்தி₂தௌ ச யோऽஸௌ புருஷஸ்வரூபீ।
ருத்₃ரஸ்வரூபேண ச யோத்தி விஶ்வம்
த₄த்தே தத₂ாऽநந்தவபுஸ் ஸமஸ்தம்॥ [4-1-56]

[பிறப்பற்றவனை எவனொருவன் பிரமனாகிற என்னுருக்கொண்டு உலகை ஸ்ருஷ்டிக்கிறானோ, புருஷனாகிற தன்னுருக்கொண்டு ரக்ஷிக்கிறானோ, ருத்ரரூபத்தாலே அழிக்கிறானோ, அவன் அளவற்ற உருவங்களாலே எல்லாவற்றையும் தரிக்கிறான்.] என்று விஷ்ணு புராணத்திலும்,

"அரன் அயனென உலகழித்து அமைத்துளனே"
[திருவாய் 1-1-8]

என்று ஆழ்வாராலும் கீர்த்திக்கப்பட்ட பரமாத்மாவின் நினைவாலே சொல்லுவதாகவும் கொள்ளலாம். முன் சொன்ன பொருள்களோடு இப்பொருளும்,

ப்₃ரஹ்மரூபத₄ரா சாஹம் ஜடாமண்ட₃லத₄ாரிணீ।
ஸ்ருஜாமி விவித₄ாந் ஸர்வாந் ஸ்வாத்₄யாயாத்₄யாயதத்பரா॥
அத: காமிதி மாம் ப்ராஹுர் முநயோ வேத₃பாரக₃ா:।
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ர: ஸ்வாத்₄யாயப₂லத₃ாயக:॥"

[ஜடாமண்டலங்களை தரித்துநிற்கும் பிரமனுருக்கொண்ட நான், வேதமோதிக்கொண்டு விதவிதமான பூதங்களெல்லாவற்றையும் படைக்கிறேன். இந்நான்கு பொருளையும் கொண்டு வேதங்களை கண்ட முனிவர்கள் என்னை 'கா' என்று உரைத்தனர். ஐந்து எழுத்துக்கள் கொண்ட "ஓம் காயை நம:" என்னும் இம்மந்திரம் வேதாத்தியயன பலத்தை அளிக்கும்.] என்று தந்திரத்திலே ஆதரிக்கப்பட்டது; மந்திரத்தின் பெருமையும் பேசப்பட்டது.

'கா' என்னும் பெயர் எல்லா வேதங்களாலும் சப்திக்கப்படுவள் என்னும் பொருளையுடையதென்று மேலே நிரூபிக்கப்பட்டது; பிராட்டியைப் பேசும் வேதவாக்கியங்கள் சிற்சிலவே இருக்கும் போது, 'எல்லா வேதங்களாலும் சப்திக்கப்படுபவள்' என்பது பொருந்துமோ என்னும் ஸந்தேஹமெழ, அதற்கு ஸமாதான முரைக்கிறது. அடுத்த திருநாமம்:- (ஸோஸ்மிதாம்)

"ய ஏஷோऽந்தராதி₃த்யே ஹிரண்மய: புருஷோ த்₃ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ருர் ஹிரண்யகேஶ ஆப்ரணக₂ாத் ஸர்வ ஏவ ஸுவர்ண:
தஸ்ய யதா₂ கப்யாஸம் புண்ட₃ரீகமேவமக்ஷிணீ தஸ்ய உதி₃தி நாம" [சாந் 1-6-7]

[ஸூர்யனுக்கு நடுவில் தங்கம்போல் அழகிய உருவையுடைய எந்த இந்தப் பரமபுருஷன் காணப்படுகிறானே. அவன் ஸுவர்ணம்போன்று அழகான மீசையையும், கேசங்களையும், எல்லா அவயவங்களையுமுடையவன்; அவனுககு ஸூர்யனால் மலர்ந்த தாமரைபோன்ற இருகண்கள் உள. அவனுக்கு 'உத்' என்று பெயராகும்.] என்கிறபடியே 'உத்' என்பது புண்டரீகாக்ஷனாய் உத்தமபுருஷனான பரப்ரஹ்மத்தின் திருநாமமாகும். 'அஸ்மிதா' என்றிருக்கவேண்டியது 'ஸ்மிதா' என்று முதற்குறையாகக்கிடக்கிறது. அஸ்மிதையாவது பெருமை. ஆக, 'உத்' என்னும் பரம புருஷனின் பெருமையைக்குறிக்கிறது 'உத்ஸ்மிதா' என்னும் பதம். வேதமாகையாலே தகாரம் நழுவி, இப்பதம் 'உஸ்மிதா' என்றாகிறது. "உஸ்மிதயா ஸஹ வர்த்ததே-இதி ஸோஸ்மிதா" [உஸ்மிதையாகிற பரப்ரஹ்மத்தின் பெருமையோடுகூட (அதற்குக் காரண பூதையாய்) இருப்பவளாகையாலே 'ஸோஸ்மிதை' எனப்படுகிறாள் பிராட்டி] என்பது ஸோஸ்மிதா சப்தத்தின் வ்யுத்பத்தி. பகவானுடைய 'அஸ்மிதை' [பரப்ரஹ்மமாயிருக்கும் தன்மை] எப்படி அவனுக்கு அந்தரங்க நிரூபகமோ, அப்படியே இப்பிராட்டியும் அவனுக்கு அந்தரங்க நிரூபக பூதையாயிருந்துகொண்டு, அவனுடைய அஸ்மிதையாகிற பரப்ரஹ்மத்வத்துக்கும் காரணமாயிருப்பவள் என்பது 'ஸோஸ்மிதா' என்னும் திருநாமத்தின் திரண்ட பொருள். ஆக இப்படி நிரூபகபூதையாயிருப்பவளாகையாலே அவனைச் சொன்னவிடத்திலெல்லாம் இவளையும் சொன்னதாகிறது; ஆகையால் "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீதை] [எல்லா வேதங்களாலும் நானே அறியப்படுவன்] என்றும் "ஸர்வே வேதா₃:—க்ருஷ்ண:" [பாரதம்] என்றும் "மறையாய நால்வேதத்துள் நின்ற மலர்ச்சுடர்" [திருவாய்மொழி] என்றும், "நான்மறைகள் தேடியோடும் செல்வன்" [பெரிய திரு] என்றும் அவன் ஸர்வவேதப்ரதிபாத்யன் ஆவதுபோல இப்பிராட்டியும் ஸர்வவேதப்ரதிபாத்யை என்று சொல்லக்குறையில்லை என்றுபாவம். கடத்தைச் சொன்னால், அதற்கு நிரூபகமான க₄டத்வமும் தன்னடையே சொல்லப்பட்டதாகுமன்றோ. இவ்வர்த்தத்தையே பரமாசார்யரான பட்டரும்,

''ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் ப₄க₃வத இத₃ம் சந்த்₃ரவத₃னே
த்வத₃ாஶ்லேஷோத்கர்ஷாத்₃ ப்₄வதி க₂லு நிஷ்கர்ஷஸமயே ।
த்வமாஸீர் மாத: ஸ்ரீ: கமிதுரித₃மித்த₂ந்த்வவிப₄வஸ்
தத₃ந்தர்ப்ப₄ாவாத் த்வாம் ந ப்ருத₂க₃பி₄த₄த்தே ஶ்ருதிரபி ॥

[சந்திரன்போன்ற திருமுகத்தையுடைய தாயே மஹாலக்ஷ்மி! பரதத்துவ நிர்ணய காலத்தில் பகவானுடைய இந்த ஸ்வரூபமும் ஸ்வாதந்திரியமும் உன்னுடைய ஆலிங்கனப்பெருமையாலேயே அறுதியிடப்படுகிறதன்றோ. உன் கணவனுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் விளக்கும் அந்தரங்கவிசேஷணமாகிறாய் நீ. வேதமும் (அவனுடைய ஸ்வரூபநிரூபகபூதையாக) அவனுடன் நீ ஒன்றிநிற்கையால் உன்னைத் தனித்துப்படிப்பதில்லை.] என்று ஸ்ரீகுணரத்நகோசத்திலே அருளிச்செய்தார். ப்ராஸங்கிகமாக, இந்தசுலோகத்தின் தாத்பர்யத்தைச்சிறிது விசாரிப்போம் இங்கு. ''ததந்தர்ப்பாவாத்'' என்று தொடங்கும் கடைசி அடிக்கு இருவகையாகத் தாத்பர்யம் சொல்லலாம். முதற்பொருளாவது: வேதத்திலே பல்லாயிரக்கணக்கான வாக்கியங்களிலே பரமபுருஷனுடைய ஸ்வரூபாதிகள் பேசப்படுகின்றன: ஒருசில வாக்கியங்களே பிராட்டியைப்பேசுகின்றன; இதற்குக் காரணமென்ன என்னும் ஸந்தேஹமெழ, இந்தச்லோகத்தாலே அதைப்பரிஹரிக்கிறார் பட்டர். பிராட்டியானவள் பகவானுக்கு ஸ்வரூபநிரூபகபூ₄தையாகையாலே, பரமபுருஷனைச் சொல்லும் வாக்கியங்களிலெல்லாம் ஸ்வரூபநிரூபகபூதையான இவளும் சொல்லப்பட்டவளாகவே ஆகிறாளாகையாலே இவளும் ஸர்வவேதவாக்ய ப்ரதிபாத்யையே என்று பரிஹாரம். இப்பொருளில் பரமபுருஷனைமட்டும் சொல்லும பல்லாயிரக்கணக்கான வேதவாக்யங்கள் 'ச்ருதி' சப்தத்துக்கு அர்த்தம். இரண்டாவது பொருளாவது:— ''ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ'' ''அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ'' 'ஈஶாநா தே₃வீ பு₄வநஸ்யாதி₄பத்நீ'' ''ஸ்ரீரஸி இந்த்₃ரபத்நீ ''லக்ஷ்மீம் ஜாதவேதே₃ா ம ஆவஹ'' என்று பற்பல வாக்கியங்களில் பிராட்டியைப்படிக்கும்போது பரமபுருஷனோடு சேர்த்தே படிப்பதற்குக் காரணமென்ன ? என்னும்கேள்வியெழ, பிராட்டியானவள் அந்தரங்கவிசேஷணமாயிருக்கையாலும், விசேஷ்யத்தைவிட்டு விசேஷணத்துக்கு ஸத்தையில்லாமையாலும் இவ்வாக்கியங்களிலெல்லாம் பிராட்டியானவள் **தனித்துப்** படிக்கப்படாமல் பரமபுருஷனோடு சேர்த்தே படிக்கப்படுகிறாள் என்று பதிலுரைக்கிறது இந்தசுலோகம்

ஆக முதற்பொருளிலே, கடத்தைச்சொல்லும்போது கடத்வமும் சொல்லப்பட்டதாவதுபோலே ஸர்வேச்வரனைச் சொல்லும் வாக்கியங்களிலெல்லாம் இவளும் சொல்லப்படுகிருள் என்றதாகிறது. இரண்டாவது பொருளில், பகவானுக்கு ப்ரகாரபூதையாகவேயிருக்கையாலே இப்பிராட்டி பல வாக்கியங்களில் பகவானேடு சேர்த்தே படிக்கப்படுகிருள் என்றதாகிறது. சிலர், 'ததந்தர்ப்பாவாத்' என்னும் இந்த அடியிலே "எம்பெருமானுக்குள்ள பரப்ரஹ்மத்வம், ஜகத்காரணத்வம், மோக்ஷோபாயத்வம் முதலானவையெல்லாம் பிராட்டிக்கும் உண்டு; ஆனால் பிராட்டியானவள் பகவானேடு அந்தர்ப்பவித்திருப்பதால் வேதம் இப்பெருமைகளைப் பிராட்டிக்குத் தனித்துப் படிக்கவில்லை" என்னும் அர்த்தம் சொல்லப்படுவதாகக் கூறிவருகின்றனர். [ஸமீபத்தில் வெளியான வடமொழி நூலொன்றில் "ஸ்ரீமத்பட்டார்யர் சொன்ன பிராட்டிவிஷயமான ததந்தர்ப்பாவந்யாயத்திற்கு மோக்ஷோபாயத்வவிஷயத்தில் தடைவிதிக்கும் வசனம் ஒன்றையும் காண்கின்றிலோம்" என்று பொருள்படும் வாக்கியமொன்றில் இக்கொள்கை ஆத்ரிக்கப்பட்டுள்ளது.] இது தவறு. "ததந்தர்ப்ப$_4$ாவாத்" என்பதற்கு முன் அடியிலே பிராட்டியானவள் பரமாத்மாவுக்கு இத$_3$ந்த்வமாகவும், இத்த$_2$ந்த்வமாகவுமிருப்பவள் என்று கோஷிக்கப்படுகிறது. அதாவது:—பகவானுக்கு அஹந்தையாகவும், அஸ்மிதையாகவுமிருப்பவள் என்றபடி. பகவானுக்கு ஸ்வரூபநிரூபக பூதையாயிருப்பவள் என்பது திரண்டபொருள். ஒருபொருளைச் சொல்லுமிடங்களிலெல்லாம், அப்பொருளின் ஸ்வரூபநிரூபக தர்மங்களெல்லாம் தன்னடையே சொல்லப்பட்டதாகின்றன என்னும் நியாயம் லோகப்ரஸித்தமானது. [கடவ்யக்தியைச் சொன்னல் கடத்வஜாதியும் சொல்லப்பட்டதாவது போலே.] ஆனால், இந்த நியாயத்தால், நிரூப்யத்தைச் சொல்லுமிடங்களிளெல்லாம் நிரூபகதர்மத்தை நிரூப்யதர்மியாகவேயோ, அல்லது, அதற்கு ஸமானமானதாகவோ சொன்னதாக ஆகிவிடாது. தர்மியிலுள்ள தர்மங்களெல்லாம், நிரூபகத்திலும் உண்டு என்று சொன்னதாகவும் ஆகிவிடாது. கடத்தைச்சொன்னல் கடத்வத்தைச் சொன்னதாக ஆகும் என்பது உண்மை; ஆனால், கடத்திலுள்ள நீலத்வம் முதலான தர்மங்களெல்லாம் கடத்வத்திலுமுண்டு என்று சொன்னதாக ஆகாது. ஆகையால் இப்படிப் பொருள்கொள்வது நியாயவிருத்தமாகும். "ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி" என்றும், "கமிதுரித$_3$மித்த$_2$ந்த்வவிப$_4$வ:" என்றும் அருளிய பட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும்

விருத்தமாகும். நிற்க; "ஸோஸ்மிதா" என்னும் இத்திருநாமம் பகவானுடைய அஸ்மிதையாகிற பெருமைக்குக் காரணமாகவும் அந்த அஸ்மிதையைப்போல் அந்தரங்க விசேஷணமாகவும் இருப்ப வள் பிராட்டி என்னும் பொருளை உடையதென்று நிர்ணயிக்கப் பட்டது. "ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமஶ்நுதே" [ஶ்ரத்தாசப்த வாச்யையான பிராட்டியாலேயே தேவன் தேவனாயிருக்கும் தன்மையை அடைகிருன்.] என்று வேதத்திலும் இவ்வர்த்தம் வலியுறுத்தப்பட்டது.

**அஹந்தா ப்₃ரஹ்மணஸ் தஸ்ய ஸாऽஹமஸ்மி ஸநாதநீ।**
**ஆத்மா ஸ ஸர்வபூ₄தாநாமஹம்பூ₄தோ ஹரி: ஸ்ம்ருத:॥**
**அஹந்தயா விநாऽஹம் ஹி நிருபாக்₂யோ ந ஸித்₃த்₄யதி।**
**அஹமர்த்த₂ம் விநாऽஹந்தா நிராத₄ாரா ந ஸித்₄த்₄யதி॥**
[ல-த 17-30 & 31]

[பழைமையானவளான நான் ப்ரஹ்மமாகிற அந்த பகவானுக்கு அஹந்தை (நானென்னும் தன்மை) யாயிருக்கிறேன். ஸர்வபூதங் கட்கும் ஆத்மாவான ஹரியானவர் அஹம்பூதராயிருக்கின்ருர். அஹந்தையை விட்டு அஹமர்த்தமானது பெயரற்றதாய் ஸித்திக் காது. அஹமர்த்தத்தை விட்டு அஹந்தையானது ஆதாரமற்றதாய் ஸித்திக்காது.] என்பது முதலான ஸ்ரீபாஞ்சராத்ர வசநங்களிலே பிராட்டியை 'அஹந்தை' என்றும், 'அஸ்மிதை' என்றும் சொல்லு வதற்குக் காரணம் அவள் இப்படி ஸோஸ்மிதையாகவும் ஸோஹந்தையாகவுமிருப்பதே என்று தெளிவாகிறது. ரத்நப்ரப₄ா புஷ்பபரிமளந்யாயத்தாலே பகவானுடைய பெருமை பிராட்டி யினுலேயே என்பதையும், அதனுல் பகவானுடைய பரப்ரஹ்மத் வத்திற்கு ஒரு குறையும் வாராது என்பதையும் "ஸ்வத: ஸ்ரீஸ்த்வம்" எனனும சுலோகத்திலே பட்டர் அருளிச்செய்ததை முன்பே காட்டினேம். பகவானுடைய அஸ்மிதைக்கு-(பெருமைக்கு)-காரண மாயிருப்பவளாகையாலே பிராட்டி ஸோஸ்மிதையாகிருள் என்னும் இப்பொருளும் மந்த்ரவைபவமும்,

**"உதி₃தி ப்₃ரஹ்மணோ நாம விகஸ்திஸ் தஸ்ய துஸ்மிதா।**
**மய்யாயத்த விகஸ்திஸ்ஸா ஸோஸ்மிதாம் மாம் ததோ விது₃:॥**
**ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ விகஸ்திம் பூ₄யஸீம் வஹேத்॥"**

['உத்' என்று ப்ரஹ்மத்தின் பெயர்; (அ)ஸ்மிதையாவது அவருடைய பெருமை; (ப்ரஹ்மத்தின்) அப்பெருமை என்னுலேற் படுவது. அதனுலேயே என்னை 'ஸோஸ்மிதா' என்று அறிகின்றனர். " **ஓம் ஸோஸ்மிதாயை நம:** " என்னும் ஏழு அக்ஷரங்கொண்ட இமமந்திரம் மேலான பெருமையைத்தரும்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டது. மற்ற பலவிடங்களிற்போலவே இங்கும், பிராட்டி ஆதரித்த இப்பொருளைத் தொடாமல், "பகவத் ஸம்லேஷத்தாலுண்டான பேரானந்தத்தில் மூழ்கியிருக்கையால் **எப்போதும் புன்சிரிப்புடன் ( அல்லது கர்வத்துடன் ) இருப்பவள்**" என்று பொருள்கொண்டார் கோமடரங்கநாதர். "**ஸோஸ்மயாம்**" என்று சிலர் படிக்கிருர்கள். பிராட்டி ஆதரித்த பாடமன்று அது. அப்பாடத்தில் கோமடரங்கநாதபாஷ்யத்தில் சொன்னதே பொருளாகும்.

இப்படி பகவானுக்கு அந்தரங்கவிசேஷணபூதையாயிருப்பவளாகில் காருண்யரூபையாக சாஸ்திரங்களில் சொல்லப்படும் இவள் அவனுடைய தயாதிகுணங்களில் ஒன்ருய், தர்மமாத்ரமாயிருப்பவளோ? தர்மியல்லவோ? என்னும் ஸந்தேஹமெழ அதைத் தவிர்க்கிறது அடுத்த திருநாமம்,– ( ஹிரண்யப்ராகாராம் ) ஹித ரமணீயமான ப்ரகாரங்களை–(குணங்களை)–உடையவளை என்கை. "**ப்ரகார ஏவ ப்ராகார:**" ஜீவர்களை உய்விப்பதாகவும், அழகியதாகவுமிருக்கும் குணங்களை உடையவள் என்கை. ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவுமிருக்கும் குணங்களையுடையவள் என்று பாவம். **ஹிதம்**—ப்ராபகம்; **ரமணீயம்**—அழகாயிருக்கையாலே ப்ராப்யம். ஹிரண்யமாகிற பொன்னும் ஸ்வயம் ப்ராப்யமாகவும், இதர புருஷார்த்தங்களுக்கு ப்ராபகமாகவும் இருக்கிறதன்றே. அன்றிக்கே ப்ராகாரமென்று, பிராட்டியினுடைய திவ்யமங்களவிக்ரஹத்தைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். " **ஹிரண்மய; புருஷ:** " எனப் படும் அவனைப்போலே பொன்மயமான சுத்தஸத்வத்திருமேனியை உடையவள் என்றபடி. இதனுலேயன்றே "பொன்மாது" [திருவிருத்தம்-40] என்று கீர்த்திக்கப்படுகிருள் பிராட்டி. இவ்விரண்டு பொருள்களும், இம்மந்திரப்பெருமையும்

**"ஹிதா ச ரமணீயா ச மதீ₃யா ப்ரக்ருதி: பரா |**
**தாம் ஸத்வரூபாமாலமப₃ய தரந்தி முநயஸ் தம: ||**
**அதோ ஹிரண்ய ப்ராகாராம் ருஷயோ மாமுபாஸதே |**
**த₃ஶாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகாம ஸம்ருத்₃தி₄த₃: ||**

[உபாயோபேயமாயிருப்பது-(பொன்போலேயிருப்பது)-என்னுடைய மேலான ஸ்வபாவம் (விக்ரஹம்). (சுத்த) ஸத்வரூபமான அதை தியானித்து முனிவர்கள் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள். ஆகையால் என்னை ஹிரண்யப்ராகாரையாக ரிஷிகள் உபாஸிக்கிறார்கள். பத்தெழுத்துள்ள "ஓம் ஹிரண்ய ப்ராகாராயை நம:" என்னும் இம்மந்திரம் எல்லா விருப்பங்களேயும் பெருக்கித்தரும்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் ஆதரிக்கப்பட்டன. "மணியும் பொன்னும் வேய்ந்த ப்ராகாரங்களாலே சூழப்பட்ட ஆநந்தமயமான திவ்ய மண்டபத்தினுள் எழுந்தருளியிருப்பவள்" என்னும் பொருளை கோமடரங்கநாதர் ஆதரித்தார். "தே₃வாநாம் பூ₂யோத்₄யா தஸ்யாம் ஹிரண்மய: கோஶ: ஸ்வர்க்கோ₃ லோகோ ஜ்யோதிஷாவ்ருத:" [தை-ஆர 1-27-116] [பிறரால் முற்றுகையிட முடியாததாகையால் அயோத்யை என்று பெயர்பெற்ற பரமபதம் நித்யஸூரிகள் வாழுமூராகிறது. அதிலே பொன்மயமான சிறந்த லோகமொன்று ஒளிமயமான மதிளால் சூழப்பட்டதாய் விளங்குகிறது] என்று வேதத்திலும்,

"மாஹேந்த்₃ரமண்ட₃பம் ஹேமஸாலகோ₃புரலக்ஷணம் ।
சதுர்த்₃வாரம் மஹத்₃ தீ₃ப்தம் யத் தத் புஷ்ணாது மே ஶ்ரியம் ॥"

[பொன்மயமான மதிளும் கோபுரமும் உடையதும் நான்கு துவாரங்களை உடையதும், பெரிதும், ஒளிவிஞ்சியதும் பரமேச்வரனை பகவானுடையதுமான அந்த மண்டபம் எனக்குச் செல்வத்தை அளிக்கட்டும்.] என்று மங்கண ஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டதை அநுஸந்திப்பது.

"ஹிரண்ய ப்ராகாரம்" என்று "அழகிய ஸ்வபாவங்களை உடையவள்" என்னுமர்த்தம் அறிவிக்கப்பட்டது. அந்த ஸ்வபாவங்களிலே சிலவற்றைப் படிக்கிறது மேலே. (ஆர்த்ராம்) த₃யார்த்₃ர ஹ்ருத₃யாம். ஈரநெஞ்சை உடையவள் என்றபடி. பரம புருஷனைக் காட்டிலும் பிராட்டிக்குப் பெருமையளிப்பது இக்குணமேயாகையாலே இதை முதலிற்படிக்கிறது பழமறை. கர்மாநுகுணமாகப் பலனளிப்பவனுயையாலே அவனுடைய தயை க்ஷமை முதலான குணங்கள் ஸ்வாதந்த்ரியம் முதலான குணங்களாலே அபி₄பூ₄தங்களாய் மறைந்துகிடக்கும். அஜ்ஞாதநிக்ரஹையான இப்பிராட்டியின் கருணையோவென்னில் பெருக்காறுபோலே மேன்மேலும் பெருகிவரும். இதனாலேயேயன்றோ, "தே₃வ்யா காருண்ய

ரூபயா" [ல-த-18] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலும், "கருணா ப$_4$க்த வத்ஸலா" என்று ஸ்ரீஸஹஸ்ரநாமத்திலும், "கருணாம் லோக(வேத$_3$) மாதரம்" என்றும் அஷ்டோத்தரசதநாமத்திலும் கருணையே வடி வெடுத்தவளாகக் கீர்த்திக்கப்படுகிறாள். இதைத் திருவுள்ளம்பற்றி யன்றோ ஸ்ரீபராசரபட்டார்யரும்

**மாதர் மைதி$_2$லி ராக்ஷஸீஸ் த்வயி ததை$_3$வார்த்$_3$ராபராத$_4$ாஸ் த்வயா**
**ரக்ஷந்த்யா பவநாத்மஜால் லகு$_4$தரா ராமஸ்ய கோ$_3$ஷ்டீ$_2$ க்ருதா ।**
**காகம் தஞ்ச விபீ$_4$ஷணம் ஶரணமித்யுக்திக்ஷமௌ ரக்ஷத:**
**ஸா நஸ் ஸாந்த்$_3$ரமஹாக$_3$ஸஸ் ஸுக$_2$யது க்ஷாந்திஸ் தவாகஸ்மிகீ ||**
[ஸ்ரீகுண-50]

[தாயே மைதிலி! * அப்போதே அபராதம் செய்த ராக்ஷஸிகளை ஹனுமானிடமிருந்து ரக்ஷித்த உன்னாலே, காகாஸுரனையும், விபீஷணனையும் சரணம் என்னும் வார்த்தையைச் சொன்னபிறகு ரக்ஷித்த ராமனுடைய கோஷ்டியானது சிறிதாக்கப்பட்டது. அப்படிப்பட்ட உன்னுடைய நிர்ஹேதுக்ருபையானது பெரும்பாவி களான எங்களையும் ஆநந்திப்பிக்கட்டும்.] என்று அருளிச்செய்தார்.

**"தா$_3$ஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ து$_3$ர்ப்ப$_3$லா"**
[ரா-யு 116-41]

[ (பிறர் கண்கலங்கக்காணமாட்டாத) மநோதௌர்ப்பல்யத்தை யுடைய நான் ராவணனுடைய தாஸிகளாகிற இவர்களை மன்னிக் கிறேன் ] என்று தானே சோதிவாய்திறந்து அருளிச்செய்தபடியே * ஆர்த்$_3$ராபராதை$_4$களான ராக்ஷஸிகளிடமும் சென்று வெள்ளமிடும் படியானதன்றோ ஆர்த்$_3$ரையான இவளுடைய இளகிய நெஞ்சி லிருந்து புறப்படும் இரக்கம். உண்மையில் இவளுடைய ஸாந் நித்யத்தாலன்றோ அவனும் "அளி நன்குடைய திருமால்" [நாச் திரு 14-8] ஆகிறான். ப்ரஹ்மசாரி நாராயணனாயிருந்தானாகில்

---

* "ஆர்த்$_3$ராபராத$_4$ா:" என்னும் பட்டர் ஸ்ரீஸூக்திக்கு "ஆர்த$_3$ரா" எனப்படும் ஈரநெஞ்சினளான பிராட்டிவிஷயத்தில் அபராதம் செய்தவர்கள் என்னும் பொருளும் த்வனிப்பது உணரத்தக்கது.

அபராத₄பூ₄யிஷ்ட₂ர்களான சேதனர்க்கு உய்வென்பதே இல்லையாங் கிடீர்! (ஆர்த்ராம்) தாமரையாளான பிராட்டி ஒரு தாமரையிலே எழுந்தருளியிருப்பவள்; இது ஆஸனபத்மமெனப்படும்; சிர:பத்ம மெனப்படும் மற்றொரு தாமரையானது மேலே குடைபோலே கவிழ்ந்து வர்ஷாதபவாரணமாய்க் காட்சியளிக்கும். அப்ராக்ருத மான அத்தாமரையிலிருந்து அம்ருதத₄ாரையானது எப்போதும் பெருகிக்கொண்டிருக்கும். அந்த அம்ருதத₄ாராப்ரவாஹத்தாலே என்றும் நனைந்திருக்கும் திருமேனியை உடையவள் என்றும் இத்திருநாமத்துக்குப் பொருள்கொள்ளலாம். ஸ்வாதந்திரியாக்னி யாலே தஹித்துக்கொண்டிருக்கும் ஸர்வேச்வரனைத் தன் திருமேனி ஸம்பந்தத்தாலேயே நீராக்கவல்லவள் என்கை. (ஆர்த்ராம்) "ஆராத் த்₃ராவயதீதி ஆர்த்₃ரா" [ஆச்ரிததோஷங்களை வெகு தூரம் ஓடச்செய்பவளாகையாலே ஆர்த்ரையாகிருள்] என்னும் வ்யுத் பத்தியின்படியே அடியார்களின் பாபங்களையும் தோஷங்களையும்,

"சும்மெனுதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே"
[பெரியாழ்-திரு 5-4-3]

"வானே மறிகடலோ மாருதமோ தீயகமோ
காேைன ஒருங்கிற்றுக் கண்டிலமால்" [இர-திருவ54]

என்னும் நிலையை அடையச்செய்பவள் ஆர்த்ரை என்றும் கொள்ளலாம். இம்மூன்று பொருள்களும்,

"ஆராத₃பேஷதே₃ாஷாணும் த்₃ராவிணீ மாமுபேயுஷாம் ।
அதே₄ாமுக₂ாத் ஶிர:பத்₃மாத் ஸ்ருதயாம்ருதத₄ாரயா ॥
அபி₄ஷிக்தா ஸதா₃ார்த்₃ராஸ்மி த₃யயார்த்₃ராந்தராஸ்மி ச ॥

[என்னை அடைந்தவர்களுடைய தோஷங்களை வெகுதூரம் ஓடச் செய்கிறேன்; தலைகீழாகவுள்ள சிர:பத்மத்திலிருந்து பெருகும அம்ருததாரையாலே அபிஷேகம் செய்யப்பட்டு எப்போதும் நனைந் திருக்கிறேன்; இரக்கத்தாலே நனைந்த நெஞ்சை உடைய வளாயிருக்கிறேன்.] என்று லக்ஷ்மீதந்திரத்திலும் ஆதரிக்கப்பட்டன. (ஆர்த்₃ராம்)

"தி₃க்₃க₃ஜேந்த்₃ரை: ஸ்நாப்யமாநாம்
காஞ்சநை: கலஶோத₃கை:"

[பொற்குடநீர்களைக்கொண்டு திக்கஜங்களாலே ஸ்நாநம் செய் விக்கப்படுபவளை] என்று ஈச்வரஸம்ஹிதையில் சொல்லியிருக்கை யாலே நனைந்த திருமேனியை உடையவள் என்று கோமட ரங்கநாதர் பொருள்கொண்டார்.

நனைந்திருப்பவளாகில், நனைந்த நெருப்பைப்போலே ஒளியற்ற வளாயிருப்பளோ? என்ன,—(ஜ்வலந்தீம்) கொழுந்துவிட்டெரியும் நெருப்புப்போலே ஜ்வலிப்பவள் என்கிறது. எல்லா பூதங்களி னுள்ளும் பரமபதத்திலும் இருந்துகொண்டு உபயவிபூதியிலும ஒளிவிடுபவள் என்று பொருள்.

**"ஸ்ரீமத்₃வைகுண்டை₂ச்வர்யாதி₃ தி₃வ்யலோகம் ஆத்ம காந்த்யா விஶ்வமாப்யாயயந்த்யா ஶ்ரியா ஸஹாஸீநம்"**

[ஸ்ரீமத்வைகுண்டதிவ்யலோகம் முழுவதையும் தன் ஒளியாலே நிறைத்துக்கொண்டு நிற்கும் ஸ்ரீதேவியோடு கூட எழுந்தருளி யிருக்கும் எம்பிரானை] என்று ஸ்ரீவைகுண்டகத்யத்திலே எம் பெருமானர் அருளிச்செய்தார்.

**"தமேவ ப₄ாந்தமநுப₄ாதி ஸர்வம்**
**தஸ்ய ப₄ாஸா ஸர்வமித₃ம் விப₄ாதி"** [கட 2-5]

[பிரகாசிக்கும்படியான அவனைப்பின்பற்றியே எல்லாம் பிரகாசிக் கின்றன. அவனுடைய ஒளியினுலேயே இவையெல்லாம் ஒளிவிடு கின்றன] என்று போற்றப்படும் அவனுக்கும், நீலமேகத்தின் நடுவிலுள்ள மின்னற்கொடிபோலே இருக்கும் இவள், ப்ரகாஶகை யாகவன்றே எழுந்தருளியிருக்கிருள். இதனுலன்றே

**தயா ஸ ராஜர்ஷிஸுதோऽபி₄ராமயா**
**ஸமேயிவாநுத்தமராஜகந்யயா ।**
**அதீவ ராம: ஶுஶுபே₄ऽதிகாமயா**
**விபு₄: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர: ॥**

[ரா·பா 77-30]

[அழகியவளாய், உத்தம ராஜபுத்திரியான அந்த ஸீதையுடன் கூடிய ராஜரிஷிபுத்ரனை ராமபிரான், மிகவும் விரும்பத்தக்க ஸ்ரீதேவியுடன் கூடிய அமரர்களதிபதியான விஷ்ணுபகவானைப் போல் மிகவும் விளங்கினுன்.] என்று வால்மீகிமஹர்ஷியும்,

''திகழ்கின்ற திருமார்வில் திருமங்கை தன்னோடும்
திகழ்கின்ற திருமாலார்'' [திருவாய் 10-6-9]

என்று ஆழ்வாரும் அருளிச்செய்தது. உபயவிபூதியும் விளங்கும்படி ஒளிவிடுபவள் என்னுமிவ்வர்த்தத்தை

''ஜ்வலாமி ஸர்வபூ₄தாந்தர் க₃க₃நே பரமே ஸதா₃ ।
ஶுத்₃தா₄ நிரஞ்ஜநா ஸத்யா ப₄ாஸயந்தீ ஜக₃த் த்விஷா ॥''

[எல்லா பூதங்களினுள்ளும் பரமபதத்திலும் இருப்பவளும், பரிசுத்தையும், தோஷமற்றவளும், விகாரமற்றவளுமான நான் உபய விபூதியையும் என் ஒளியாலே பிரகாசிக்கச் செய்கிறேன்] என்று தந்திரத்திலே பிராட்டியும் ஆதரித்தாள்.

''அஶிகா₂ த்ரிஶிகா₂ சாஹம் பஞ்ச பஞ்சஶிகா₂வதீ ।
ஸப்ததா₄ ச புநஸ் த்ரேதா₄ ஜ்வலாமி வபுஷி ஸ்தி₂தா'' ॥

[அகாரவாச்யனை சிகையாகக்கொண்டவளாகவும், மூன்று பிரிவையுடைய ஜாடராக்னியாகிற மூன்று சிகையையுடையவளாகவும், இருபத்தைந்து தத்துவங்களையும் சிகையாகக்கொண்டவளாகவும், ஸப்ததாதுக்களாகிற ஏழு சிகையையும் உடையவளாகவும், ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களான முக்குணங்களாகிற மூன்று சிகையை உடையவளாகவும் தேஹத்திலே இருந்துகொண்டு அக்னிபோலே நான் ஜ்வலிக்கிறேன்.] என்று மற்றொருபொருளும் பிராட்டியாலேயே தந்திரத்தில் உத்கோஷிக்கப்பட்டது. அக்னியாகில் பல சிகைகளை—ஜ்வாலைகளை—உடையதாயிருக்குமன்றோ; அப்படியே தேஹத்தின நடுவில் எழுந்தருளியிருக்கும் தானுமிருப்பவள் என்று நிரூபிக்கிறபடி. (அசிகா) தேஹத்தின் நடுவில் ''வந்ஹிசிகா₂'' [நாராயணஸூக்தம்] என்று சொல்லப்படும் அகாரவாச்யனை பகவானுடைய திருமேனியின் நடுவில் எழுந்தருளியிருப்பவளாகையாலும், தான் ஹிரண்யவர்ணையாகையாலும் இப்பிராட்டியானவள் வந்ஹியாகவும், பகவான் இவளுடைய சிகையாகவும் நிரூபிக்கப்படுகின்றனர். (த்ரிசிகா) '' அந்நமஶிதம் த்ரேதா₄ விதீ₄யதே '' என்கிறபடியே உணவை மூன்று விதமாகப் பிரிப்பதற்காக மூவகைப்பட்டிருக்கும் ஜாடராக்னியை சிகையாக உடையவள். (பஞ்சபஞ்சசிகாவதீ) சரீரத்தினுள்ளும் வியாபித்திருக்கும் ப்ரக்ருதி மஹததிகளான இருபத்தைந்து தத்துவங்களாகிற சிகையை உடையவள். (ஸப்ததா₄) சரீரத்திலுள்ள ஏழு

விதமான தாதுக்களை சிகையாகக்கொண்டிருப்பவள். (புநஸ் த்ரேதா) தேஹத்திலுள்ள ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களென்னும் முக் குணங்களாகிற சிகைகளை உடையவள். இவையெல்லாம் இப் பிராட்டிக்கு விதேயமாயிருப்பவை என்றபடி.

"ஷட₃க்ஷராவிமௌ மந்த்ரௌ நிர்வ்ருத்த்யௌஜ்ஜ்வல்யத₃ாய கௌ"

[ஒவ்வொன்றும் ஆறு எழுத்துக்கொண்ட "ஓம் ஆர்த்₃ராயை நம:" "ஓம் ஜ்வலந்த்யை நம:" என்னும் இவ்விரண்டு மந்திரங்களும் ஆநந்தத்தையும் பிரகாசத்தையும் தரும்.] என்று "ஆர்த்₃ரா" "ஜ்வலந்தீ" என்னும் இரண்டு திருநாமங்களின் பெருமையும் பேசப்பட்டது.

அக்நிபோலே ஜ்வலிப்பவளாகில், "அநலம்" [ந வித்₃யதே அலம் யஸ்ய]என்று பெயர்பெற்று எவ்வளவு உணவையிட்டாலும் பசி தீராத அவ்வக்நிபோலே திருப்தியற்றவளாயிருப்பளோ? என்ன: (த்ருப்தாம்) எப்போதும் திருப்தியுடையவளாயிருப்பவள் என் கிறது. இடைவிடாத பகவத்ஸம்ஶ்லேஷத்தாலுண்டான பேரானந் தத்தாலே எப்போதும் திருப்தியுடையவள் என்றபடி. ப்ராக்ருத போகங்களில்லாமலே அவாப்தஸமஸ்தகாமையாயிருப்பவளென்று ப₄ாவம். "பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம்" [கீதை] என்னும் அவனைப் போலே பக்தர்கள் அன்புடன் இடும் சிறுபொருளைக்கொண்டும் மிகவும் திருப்தியடைபவள் என்றுமாம். "ஐஶ்வர்யம்" என்று தொடங்கும் சுலோகத்திலே பட்டர் இப்பிராட்டி அஞ்ஜலிமாத்ர ஸந்துஷ்டை என்னுமர்த்தத்தை அருளிச்செய்தாரன்றே. "த்ருப-த்ருப்தௌ" என்று தாது. (த்ருப்தாம்) "த்ருப ப்ரீணநே" என்றும் தாதுவாகையாலே பரமபுருஷனிடம் எப்போதும் ப்ரீதியுள்ளவள் என்றும் கொள்ளலாம். "அகலகில்லேன் இறையும்" [திருவாய் 6-10-10] என்றும், "ந ச ஸீதா த்வயா ஹீநா" [ரா-பா 53-31] என்றும்,

"யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ₃ நிரயோ யஸ்த்வயா விநா ।
இதி ஜாநந் பராம் ப்ரீதிம் க₃ச்ச₂ ராம மயா ஸஹ ॥"

[ரா-அ 30-18]

[ராகவரே! 'உம்முடன் கூடியிருக்கும் இருப்பே எனக்கு ஸ்வர்க்கம்; உம்மைப்பிரிந்திருக்கும் இருப்பு நரகம்' என்னும்படியான

என்னுடைய மேலான ப்ரீதியை அறிந்து என்னுடன் கூடவே வனம்செல்வீராக] என்றும் பிறரோடு தன்னோடு வாசியறச் சொல்லும்படியன்றோ இவளுடைய ப்ரீதியிருப்பது.

"இன்துணைப் பதுமத்தலர்மகள் தனக்கும் இன்பன்"
[பெரியதிரு 2-3-5]

"நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பன்" [திருவாய் 4-5.8]

"உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கன்பாகிற
என்னன்பேயோ" [திருவாய் 10-10-6]

"வாள்நெடுங்கண்ணி மதுமலராள் கண்ணுளா"
[பெரியதிரு 8-10-4]

"வடிக்கோல வாள்நெடுங்கண் மாமலராள், செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னுள்" [இர-திருவ 82]

என்று ஆழ்வார்களும் இவ்வர்த்தத்திலே ஆழங்காற்பட்டனரன்றோ,

"ஹரௌ ப்ரீதிமதீ நித்யம் த்ருப்தா ப$_4$க்தேஷு நித்யத$_3$ா |
ப்ராக்ருதைஶ்ச விநா போ$_4$கை$_3$ர் நித்யத்ருப்தாஸ்ம்யஹம் ஸ்வத: ||

தாம் மாம் த்ருப்தாமநுத்$_4$யாய முநயோ யோக$_3$பாரக$_3$ா: |
ஜ்ஞாநமூலாம் பராம் த்ருப்திம் நித்யாம் ப்ராப்தா: ஸுதா$_4$மயீம் ||

ஷட$_3$க்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் தர்ப்பயத்யகி$_2$லம் ஜக$_3$த்" ||

[பகவானிடத்திலே எப்போதும் ப்ரீதியுடையவளாயிருக்கிறேன்; பக்தர்களிடம் எப்போதும் திருப்தியுடையவளாயிருக்கிறேன்; ப்ராக்ருத போகங்களில்லாமலேயே இயற்கையாகவே நித்யதிருப்தி உடையவளாயிருக்கிறேன். யோகத்தின் கரைகண்ட முனிவர்கள் 'த்ருப்தா' என்று என்னை தியானித்து தத்வஜ்ஞானத்தை மூலமாகக்கொண்டதும், நித்யமானதும், அம்ருதமயமானதுமான மேலான திருப்தியை அடைந்தனர். ஆறு அக்ஷரங்கொண்ட "ஓம் த்ருப்தாயை நம:" என்னும் இம்மந்திரம் எல்லா உலகையும் திருப்தி செய்விக்கும்.] என்று இவ்வர்த்தங்கள் லக்ஷ்மீதந்திரத்திலும் அருளிச்செய்யப்பட்டன; மந்திரத்தின் பெருமையும் பேசப்பட்டது.

தான் திருப்தியுடையவளாயிருக்குமளவேயோ? என்ன, (தர்ப்பயந்தீம்) சேதனர்கள் அனைவரையும் பரமசேதனனையும் திருப்தி செய்விக்குமவளே. (தர்ப்பயந்தீம்) ο பஞ்சியமெல்லடியினுலும், ο கலையிலங்கு ο பட்டரவேர் அகலல்குலாலும், ο மின்னொத்த நுண்ணிடையாலும், ο முற்றுரா ο வாரணிந்த முலைகளாலும், ο சங்கு தங்குமுன்கையினுலும், ο காந்தள்முகிழ் விரல்களாலும், ο வேய் போலுமெழில் ο பணைநெடும்தோள்களாலும், ο திவளும் வெண்மதிபோல் திருமுகத்தாலும், ο பவளச்செவ்வாயினுலும், ο பண்ணுலாவு மென்மொழியினுலும், ο பண்ணைவென்ற ο பாலாமின் சொற்களாலும், ο கதிர்முத்த வெண்ணகையினுலும், ο வாயமுதத்தாலும், ο கனங்குழைகளாலும், ο செவ்வரிநற்கருநெடும் ο பிணைநெடும் ο வேல்நெடுங்கண்களாலும், ο மானமருமென்னேக்கினுலும், ο வில்லேர் நுதலினுலும், ο மட்டவிழும் ο மைத்தகுமா ο நெறிந்த கருங்குழல்களாலும், ஆகவிப்படிப் பாதாதி கேசாந்தமான தன் திவ்யமங்களத்திருமேனியாலும், ஸ்வரூபகுண விபவங்களாலும், ο போகமயக்குக்களாலும் ஸர்வேச்வரனைத் திருப்தி செய்விப்பவளாகையாலே பெரிய பிராட்டியார் 'தர்ப்பயந்தீ' எனப்படுகிருர். (தர்ப்பயந்தீம்) அமலனுதி பிரானுடைய கமல பாதத்தாலும், சிவந்த ஆடையாலும், எழிலுந்தியாலும், உதரபந்தனத்தாலும், திருவாரமார்பினுலும், முற்றுமுண்ட கண்டத்தாலும், செய்ய வாயினுலும், நீண்டவப் பெரியவாய கண்களாலும், நீலமேனியாலும், மற்றுமுள்ள ஸ்வரூபகுண விபூதிகளாலும் தன்னைத் திருப்தி செய்வித்துக்கொள்ளுகையாலே 'தர்ப்பயந்தீ' எனப்படுவதாகவும் கொள்ளலாம். (தர்ப்பயந்தீம்) பகவானைத்திருப்தி செய்விக்கிறவள்; அல்லது பிரீதியடையச் செய்கிறவள். இத்தாலேயன்றே, "அமுதில் வரும் பெண்ணமுது உண்ட எம்பெருமானே!" [பெரியதிரு 6-1-2] என்றும், "வண்டார் பூமாமலர்மங்கை மணநோக்கம் உண்டானே!" [ஷை 8-10-1] என்றும கலிகன்றி அருளிச்செய்தார். 'திருப்தி செய்விக்கிறவள், என்கிற நிகழ்காலத்தாலே, தன் ஸ்வரூபரூபகுண விபூதி முதலானவற்றுலே காலதத்வமெல்லாம் அநுபவிப்பியா நின்ருலும் எம்பெருமானைச் சலிப்படையாமலிருக்கச் செய்யும்படி அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமாயிருப்பவள் பிராட்டி எனறு தெரிவிக்கப்படுகிறது.

---

ο இவையெல்லாம், அன்னையைப்பற்றிய ஆழ்வார்களின் அமுதன்ன அருளிச்செயல்கள்.

''கலையிலங்குமகலல்குல் கமலப்பாவை
கதிர்முத்தவெண்ணகையாள் கருங்கணுய்ச்சி
முலையிலங்குமொளிமணிப்பூண் வடமும் தேய்ப்ப
மூவாதவரைநெடுந்தோள் மூர்த்திகண்டீர்''

[பெரியதிரு 4-4-5]

என்றன்றோ திருமங்கைமன்னன் அருளிச்செய்தார். (தர்ப்பயந்தீம்) பகவத் ஸ்வரூபாதிகளாலே தன்னைத்திருப்தி செய்விக்கிறவள். நிகழ்காலத்தாலே, '' பே₄ாகே₃ாபோத்₃க₄ாத கேளீசுளகித ப₄க₃வத்₃ வைஸ்வரூப்யாநுப₄ாவா ஸ்ரீ: '' [ஸ்ரீகுண-4] [பகவானுடைய விச்வரூப ஸ்வரூபத்தை அனுபவிப்பதும் போகத்தின் ஆரம்பவிளையாட்டே யாகப்பெற்ற ஸ்ரீதேவி] என்று பட்டரருளிச்செய்தபடியே பகவத் ஸ்வரூபரூபாதிகளைக் காலதத்வமெல்லாம் அநுபவியாநின்றாலும் தானும் சலிப்படையாமலிருப்பவள் என்று உணர்த்தப்படுகிறது.

'' தர்ப்பயாமி கு₃ணைர்விஷ்ணுமாத்மாநம் தத்₃கு₃ணைரபி ''

[என்னுடைய குணங்களாலே விஷ்ணுவைத்திருப்திசெய்விக்கிறேன் என்னை அவருடைய குணங்களாலே திருப்திசெய்வித்துக்கொள்ளு கிறேன்.] என்று இவ்விரண்டு பொருள்களும்,

''த்₃விஸப்தத்யாஸஹஸ்ரேண நாடீ₃நாம் தே₃ஹஸாக₃ரம்
தர்ப்பயாமி ரஸைர் நித்யம் ப்ராணாநாம் ப்ரேரணவஶாத்
ஸௌஷும்நேநாத்₄வநா நித்யம் பரம் ப₄ாவமுபேயுஷாம்
பி₃ம்ப₃ப₄ாவமுபேதாஹம் விமலே யோக₃த₃ர்ப்பணே ||
ஆத்மபி₃ம்ப₃ ஸமுத்₃பூ₄தை: பரமார்த்தை₂ஸ் ஸுத₄ாரஸை: ||
சின்மயைஸ் தர்ப்பயாம்யந்தர் யோகி₃நாம் ஸத்வமுத்தமம் ।
ப்ரக்ருத்யாதி₃ விஶேஷாந்தம் பரிணாமோந்முக₂ம் ஸதா₃ ।
கார்யப₄ாவம் ஸமாபந்நமக்ஷிண்வந்தீ நிஜைர் பு₃லை: ||
ஆபக₃ாபி₄ரிவாம்போ₄தி₄ம் ப்ராணதா₄நேந தர்ப்பயே ।
ஸ்நேஹேநேவ ஸதா₃ தீ₃பம் ப்ராணிநாம் கரணாநி ச ||
நிஜஸம்வித்₃ரஸேநைவ தர்ப்பயாம்யக்ஷமாத்மநா ।
தர்ப்பயந்தீதி மாம் ப்ராஹுர் யோகி₃நோ யோக₃பாரக₃ா: ||'

[1. (பஞ்சவ்ருத்தி) ப்ராணன்களாகிற காற்றைத் தூண்டுவதன் மூலம், எழுபத்திராயிரம் (72000) நாடிகளாகிற நதிகளாலும், (அவற்றில் ஓடும் ஆநந்தம் முதலிய) ரஸங்களாகிற நீர்களாலும் தேஹமாகிற

ஸமுத்திரத்தை தினந்தோறும் திருப்தி-(பூர்த்தி)-செய்விக்கிறேன். 2. ஸுஷும்நா நாடியின்மூலம் பரமபதம் செல்லும் யோகிகளுடைய அழுக்கற்ற யோகமாகிற கண்ணாடியிலே எப்போதும் பிம்பமாய் விளங்குகிறேன் நான். என் ஸ்வரூபரூபங்களிலிருந்து உண்டாகும் மிகச்சிறந்த ஞானமயமான அமுதரஸங்களாலே யோகிகளின் சிறந்த மனத்தை திருப்திசெய்விக்கிறேன். 3. எப்போதும் மாறுபாட்டை அடையத் துடிக்கும் ப்ரக்ருதி முதலிய அசேதனப்பொருள்களை, தேஹம் முதலிய காரியப்பொருள்களாக ஆகும்படி என் பலங்களாலே தூண்டி அவற்றைத் திருப்திசெய்விக்கிறேன். 4. ப்ராணிகளின் இந்திரியங்களையும், எண்ணெயாலே விளக்கைப்போலும், நதிகளாலே கடலைப்போலும் பிராணனைக் கொடுத்துத் திருப்திசெய்விக்கிறேன். என் ஸ்வரூபத்தாலும், என் ஞானரஸத்தாலும் இந்திரியங்களைத் திருப்தி செய்விக்கிறேன். ஆகையாலே, யோகத்தின் கரைகண்ட யோகிகள் என்னை 'தர்ப்பயந்தீ' என்று உரைத்தார்கள்.] என்று மற்றும் நான்கு பொருள்களும் பிராட்டியாலே உத்கோஷிக்கப்பட்டன.

**''ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் தர்ப்பயத் யகி$_2$லம் (யநிஶம்) ஜக$_3$த்''**

[ஏழுஎழுத்துக்கொண்ட ''ஓம் தர்ப்பயந்த்யை நம:'' என்னும் இம் மந்திரம் எல்லா உலகையும் (எப்போதும்) திருப்தியடையச் செய்யும்.] என்று இம்மந்திரத்தின் பெருமையும் பேசப்பட்டது.

இப்படி அனைவரையும் திருப்திசெய்விக்கும் இவளுடைய இனிமையைச் சொல்லுகிறது மேலிரண்டு திருநாமங்களாலே;— (பத்மே ஸ்திதாம்) தாமரையில் நிற்பவளை; தாமரையிலுள்ள அழகும், மணமுமே ஓர் வடிவுகொண்டு நிற்கின்றனவோ என்று சங்கிக்கும்படியாக அதில் நிற்பவள் என்றபடி. இதனாலன்றோ இப்பிராட்டி, ''தாமரையாள்'', ''கமலப்பாவை'' ''வேரிமாறாத பூமேலிருப்பாள்'' ''மலர்மங்கை'' என்றெல்லாம் கீர்த்திக்கப்படுகிறாள். (பத்மே ஸ்திதாம்)

**'' பத்$_3$மமாநம் மிநோதீதி காலம் பத்$_3$மம் ப்ரசக்ஷதே ।**
**காலமப்யகி$_2$லம் ஶஶ்வத் கலயந்தீ ஸ்தி$_2$தா ஸத$_3$ா ।।''**

[''தான் சென்றுகொண்டே, மற்ற பொருள்களை அளக்கிறது'' என்னும் காரணத்தாலே காலத்தைப் 'பத்மம்' என்கிறார்கள். அக்

காலம் அனைத்தையும் எப்போதும் நிர்வஹித்துக்கொண்டு நிற்கிறேன் நான்.] என்று "காலத்திலே (நிர்வாஹிகையாய்) நிற்பவள்" என்று மற்றொரு பொருளும் தந்திரத்திலே தெரிவிக்கப்பட்டது.

" ஸ்துத்வா த்வநேந நாம்நா மாம் காலாதீத: க்ருதீ ப₄வேத் "

["ஓம் பத்₃மே ஸ்தி₂தாயை நம:" என்னும் இம்மந்திரத்தால் என்னைத் துதிப்பவன், செய்யவேண்டியவற்றையெல்லாம் செய்தவனாய், காலத்தைக் கடந்தவனுவான்.] என்று மந்திரத்தின் பெருமையும் விளக்கப்பட்டது.

(பத்மவர்ணும்) தாமரைபோன்ற திருநிறத்தை உடையவளை. இத்தால், காயாம்பூவண்ணனை அவனுடைய திருமேனிக்குப் பரப₄ாக₃ரஸத்தை அளிப்பவள் என்னுமர்த்தம் அறிவிக்கப்படுகிறது. பத்₃யமாநமாய் (அறியப்படுவதாய்) இருக்கையாலும், கோசம், இதழ்கள், இவையிரண்டையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டிருக்கும்பாகம், இப்படி மூன்று பகுதிகளுள்ள தாமரைபோலே சிதசித்துக்களும், அவற்றைச் சேர்த்துப் பிடித்துக்கொண்டிருக்கும் ஈச்வரனுமாகிய மூன்று தத்துவங்களுமிருக்கையாலும், பத்₃மம் எனத்தகுந்த இம்மூன்று தத்துவங்களையும் தாமரையைத் தன் ஒளியாலே நிறம்பெறச்செய்யும் ஸூர்யனைப்போலே, தன் தேஜஸ்ஸாலே நிறம் பெறச்செய்பவளாகையாலே 'பத்மவர்ணு' எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

"பும்ப்ரத₄ாநேஶ்வராந் நித்யம் வர்ணயாம்யாத்மதேஜஸா ।
பத்₃மாகாரைஶ்ச வர்ணைர்மே பூ₄ஷிதா தநுருத்தமை: ॥
பத்₃மவர்ணேதி மாம் ஸ்துத்வா ஶாஸ்த்ரவைஶத்₃ய-
மாப்நுயாத் ॥"

[சிதசிதீச்வரர்களை எப்போதும் என் ஒளியாலே நிறம்பெறச்செய்கிறேன். (அல்லது விஸ்தரிப்பிக்கிறேன்). என் திருமேனி மேலான தாமரையினுடையதுபோன்ற நிறங்களாலே அலங்கரிக்கப்பட்டுள்ளது. "ஓம் பத்₃மவர்ணாயை நம:" என்று என்னைத் துதித்து சாஸ்திரங்களில் தெளிவை அடைவான்.] என்று இவ்விரு பொருள்களும் மந்திரப் பெருமையும் தந்திரத்திலே கோஷிக்கப்பட்டது. இப்படி பத்மேஸ்திதையாகவும், பத்மவர்ணையாகவுமிருக்கும் தன் இனிமையாலேயே ஸர்வேச்வரனை ஈடுபடுத்தி, திருப்திசெய்விக்கிருள் என்னும் இம்மூன்று திருநாமங்களின் திரண்டபொருளும்'

" பத்₃மே ஸ்தி₂தா பத்₃மவர்ணீ பத்₃மநாப₄ப்ரியா ஶுப₄ா ।
ஸதா₃நுக்₃ரஹ ஸம்பந்நா ஸா தே₃வீ மே ப்ரஸீத₃து ॥ "

[தாமரையிலிருப்பவளும், தாமரை நிறத்தாளும், உந்தித்தாமரையை யுடைய பத்மநாபனுக்கு இனியவளும், எப்போதும் அருள் நிரம்பிய வளுமான அந்ததேவி எனக்கும் இரங்குவாளாக.] என்று மங்கண ஸம்ஹிதையிலும் உரைக்கப்பட்டது. (தாம் ஸ்ரீயம்) இப்படியெல் லாம் ஸுப்ரஸித்தையாயிருக்கும் அந்த ஸ்ரீதேவியை. (இஹ உபஹ்வயே) இங்கு அழைக்கிறேன்.

चन्द्रां प्रभासां †यशसां ज्वलन्तीं-
श्रियं लोके देवजुष्टामुदारां।
तां §पद्मनेमीं शरणमहं प्रपद्येऽ-
लक्ष्मीर्मे नश्यतां त्वां वृणे॥ ५ ॥

5. சந்த்₃ராம் ப்ரப₄ாஸாம் †யஶஸாம் ஜ்வலந்தீம்
ஸ்ரீயம் லோகே தே₃வஜுஷ்டாமுத₃ாராம் ।
தாம் §பத்₃மநேமீம் ஶரணமஹம் ப்ரபத்₃யேऽ—
லக்ஷ்மீர் மே நஶ்யதாம் த்வாம் வ்ருணே ॥

பதவுரை:— **சந்த்₃ராம்**—*சந்திரனை (அம்சமாக) உடைய வளும்*, **ப்ரப₄ாஸாம்**-*மிகச்சிறந்த ஒளிகளை உடையவளும்*, **யஶஸாம்**—*புகழுடையவளும்*, **ஜ்வலந்தீம்**—*(ஆறுவிதமான) அக்கினியாய் இருப்பவளும்*, **தே₃வஜுஷ்டாம்**—*தேவனை ஹரியோடு சேர்ந்திருப்பவளும்*, **உத₃ாராம்**—*வண்மைமிக்க வளும்*, **தாம்**— *(பஞ்சக்ருத்யங்களைச்) செய்பவளும்*, **பத்₃ம நேமீம்**—*காலத்திற்கு வெளிப்பட்டவளுமான*, **ஸ்ரீயம்**— *ஸ்ரீதேவியை*, **அஹம்**-*நான்*, **ஶரணம் ப்ரபத்₃யே**-*சரணமடை கிறேன்;* **மே**—*என்னுடைய*, **அலக்ஷ்மீ:** — *தாரித்திரியம்*, **நஶ்யதாம்**—*நசிக்கட்டும்; (அதற்காக)*, **த்வாம்**-*உன்னை*, **வ்ருணே**—*(உபாயமாக) வரிக்கிறேன்.*

---

† (பா) யஶஸா, § (பா) பத்₃மநேமிம்

சென்ற மந்திரத்தில் அழைக்கப்பட்டு அருகிலே ஆவிர்ப்ப வித்த தேவியை, ஆஶ்ரயணத்துக்கு உறுப்பான குணங்களை முன்னிட்டுக்கொண்டு, புருஷகாரமாகப் பற்றுகிருன் இம் மந்திரத்தாலே.

(சந்த்ராம்) '' சதி3ஆஹ்லாத3நே '' என்று தாதுவாகையாலே அனைத்துலகுக்கும் ஆநந்த3கரையாய் இருப்பவளை. '' தேனுகிப் பாலாம் திருமாலே'' [92] என்று முதலாழ்வாரும் அருளிச்செய்தார். ஆநந்தமயமான ஸ்வரூபரூபகுணங்களை உடையவள் என்றுமாம். (சந்த்ராம்) சந்திரனுடைய ஸஹோதரியாயிருப்பவளை. பாற்கடலை தேவாஸுரர்கள் கடையும்போது சந்திரனுக்குப் பின் தோன்றியவளை. சந்திரனைத் தன் அம்சுவாகவும்-கிரணமாகவும்-அம்சமாகவும் உடையவளை என்றுமாம். அகிலலோகத்திற்கும் ஆனந்தத்தையளிக்கும் சந்திரனும் இவளுடைய ஒரு கிரணமாத்ரமாக இருப்பவனென்ருல் இவளுடைய ஆநந்தகரத்வத்தை அளவிட முடியுமோ? ''சந்த்3ரப4ாக3ா'' என்றும், ''சந்த்3ரவத3நா'' என்றும், ''சந்த்3ரஸோத3ரீ'' என்றும், ''சந்த்3ரா'' என்றும், ''சந்த்3ரிகா' என்றும், லக்ஷ்மீ ஸஹஸ்ரநாமம் இத்திருநாமத்தைப் பலபடியாக விவரித்தது.

''உத்3க3த: ப்ரத2மோ யோऽம்ஶு: க்ஷீரஸாக3ர மந்த2நே|
சந்த்3ராக்3ய: ஸ மதீ3யோம்ஶுருத்3க3ச்ச2ந்த்யா: புரஸ்ஸர: ||
ருஷயோ மத்ப்ரப4ாவஜ்ஞா மாம் து சந்த்3ராம் ப்ரசக்ஷதே|
யஸ் ஸ சந்த்3ரோ மத3ம்ஶூநாம் கோடிகோட்யம்ஶகோடிஜ:||
ஷட3க்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ மநோவைமல்யத3ாயக: ||

[பாற்கடலைக்கடைகையில் நான் கிளம்பும்போது எனக்கு முன்னல் என்னுடைய கிரணம்யாதொன்று புறப்பட்டதோ, அதுவே சந்திரனென்று புகழப்படும் என் கிரணமாகும். என் பெருமையை அறிந்த ரிஷிகள் என்னைச் 'சந்த்ரா' என்கிருர்கள். உலகத்தில் சந்திரன் என்று கீர்த்திபெற்றவன் என்னுடைய கிரணங்களில் பலகோடியில் ஒருபகுதியிலிருந்து உண்டானவன். '' ஓம் சந்த்3ராயை நம: '' என்னும் ஆறு அக்ஷரங்கொண்ட இம்மந்திரம் நெஞ்சைப் பரிசுத்தப்படுத்தும்.] என்று லக்ஷமீதந்த்ரத்திலே பிராட்டியாலேயே 'சந்த்ரா' என்னும் திருநாமத்தின் பொருளும் பெருமையும் பேசப்பட்டன.

'சந்த்ராம்' எனப்படுபவளாகில், சந்திரனளவேயோ ஒளியிருப்பது? என்ன,—(ப்ரபாஸாம்) மிகவுயர்ந்த ஒளியை உடையவளை; வேறெந்த ஒளியாலும் வெல்லமுடியாத ஒளியை உடையவளை. " ந தத்ர ஸூர்யோ ப$_4$ாதி " என்று ஒளியுள்ள எல்லாப்பொருள்களுக்கும் ஒளியளிப்பவனை அவனும், ' ஶ்ரத்த$_4$யா தே$_3$வோ தே$_3$வத்வமஶ்நுதே " [பிராட்டியாலே பரமன் பரஞ்சோதியாகிறான்] என்றும் " அதீவ ராம: ஶுஶுபே$_4$ " [ராமன் ஸீதையாலே மிக விளங்கினான்] என்றும், " திகழ்கின்ற திருமார்வில் திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார் " [திருவாய் 10-6-9] என்றும் இவளாலே ஒளிபெறுகிறானாகையால் இவளுடைய ஒளியே மிகவுயர்ந்த ஒளியென்னத்தட்டில்லையன்றோ.

"ப்ரக்ருஷ்யமாணா ப$_4$ாஸோ மே ஸர்வாவஸ்த$_2$ாஸு ஸர்வத$_3$ா।
யேநேச்ச$_2$தி திரோத$_4$ாதும் தந் மே ப$_4$ாஸா திரோஹிதம் ॥
யத$_2$ா ஹி ஸ்வஶிரஶ்ச$_2$ாயா ஸ்வபத$_3$ா நைவ லங்க்$_4$யதே ।
ஸா பத$_3$ாத$_3$க்$_3$ரதோ யாதி யேந லங்க$_4$நமிச்ச$_2$தி ॥
நித்யோதி$_3$தசித$_3$ாநந்த$_3$ா மத்ப்ரப$_4$ா: ஸததோஜ்வலா: ॥"

[எப்போதும் எல்லா நிலைகளிலும் என் ஒளிகள் மிகவுயர்ந்திருக்கின்றன. எந்த ஒளியாலே என் ஒளியை ஒருவன் மறைக்க நினைக்கிறானோ, அந்தஒளி என் ஒளியாலே மறைக்கப்படுகிறது. தன் தலையின் நிழல் தன் காலாலே தாண்டப்படுவதில்லையன்றோ. எந்தக் காலாலே இவன் தாண்ட நினைக்கிறானோ, அந்தக் காலுக்கு முன்னாலேயேயன்றோ அத்தலைநிழல் செல்லுகிறது. என்றுமுள்ள ஞாநாநந்தமயமான என்னுடைய ஒளிகள் (மற்ற ஒளிகளைக் காட்டிலும்) எப்போதும் மிகவிளங்கி நிற்கும்.]என்று பிராட்டியாலேயும் இப்பொருள் தந்திரத்திலே தெரிவிக்கப்பட்டது. (ப்ரபாஸாம்) "ப்ரப$_4$ா: அஸ்யதீதி ப்ரப$_1$ாஸா" [ஒளிகளை (அக்னிகளில்) சேர்க்கிறாளாகையாலே ப்ரப$_4$ாஸையாகிறாள்.] என்றும் பொருள் கொள்ளலாம். ஞானவொளி நிரம்பிய இந்தஜீவன் கர்மபலத்தை அனுபவித்தபிறகு பூமியில் பிறக்கும் பிரகாரத்தைப் பஞ்சாக்னி வித்யை என்னும் வேதபாகம் விவரிக்கிறது. அதிலே, சேதனனாகிற இவ்வொளி ஐந்து பெயர்களுடன் ஐந்து அக்னிகளிலே புகுந்து புறப்பட்டு, தேஹஸம்பந்தம் பெற்றுப் பிறக்கிறான் என்று சொல்லப்படுகிறது. " சிரத்தை: ஸோமன்; ஜலம்; அன்னம்; வீர்யம் " என்னும் பெயர்பெற்று, " ஸ்வர்க்கம்; மேகம்; பூமி, புருஷன்,

ஸ்திரீ " என்னும் ஐந்து அக்னிகளிலே ஆஹுதி செய்யப்பட்டு ஐந்தாவது அக்னியான ஸ்திரீயின் கர்ப்பத்திலிருந்து வெளிப்படுகிறது என்று கோஷிக்கப்படுகிறது. இவ்வைந்து அக்னிகளில் இடப்பெறும் சிரத்தை முதலிய ஐந்து ஒளிகளைத்தவிர, லோக ப்ரஸித்தமான அக்னியிலே ஆஹுதி செய்யப்படும் ஹவிஸ்ஸாகிற ஒளியொன்றுமுண்டு. இவ்வாறு ஒளிகளையும், அந்தந்த அக்னிகளிலே சேர்ப்பிப்பவளாகையாலே பிராட்டி 'ப்ரபாஸா' எனப்படுகிறாள்.

"ஶ்ரத்$_3$த$_4$ாம் ஸோமமபோऽந்நம் ச வீர்யம் ஹவிரிதி க்ரமாத் ।
போ$_4$க்$_3$யஶக்திப்ரப$_4$ா ஏதா அஸ்யந்தீ ஷட்ஸு வஹ்நிஷு ॥
ப்ரப$_4$ாஸா முநிபி$_4$: ப்ரோச்யே தந்த்ரவேத$_3$ாந்தபாரகை$_3$: ॥
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் தேஜஸ் ஸந்ததிஸாத$_4$க: ॥

[1. சிரத்தை, 2. ஸோமன், 3. ஜலம், 4. அன்னம் (உணவு), 5. (புருஷனுடைய) வீரியம். 6. (தேவர்களுடைய) ஹவிஸ் என்னும் இந்த ஆறு போக்யசக்திகளாயிருக்கும் ஒளிகளை ஸ்வர்க்கம் முதலிய அக்னிகளில் வரிசையாகச் சேர்ப்பிப்பவளாகையாலே, தந்த்ர வேதாந்தங்களைக் கரைகண்ட முனிவர்களாலே 'ப்ரப$_4$ாஸா' என்று சொல்லப்படுகிறேன். " ஓம் ப்ரப$_4$ாஸாயை நம: " என்னும் ஏழு எழுத்துக்கொண்ட இம்மந்திரம் ஒளியின் மிகுதியைக் கொடுக்கும] என்று தந்திரத்திலேயும் இம்மந்திரத்தின் இம்மறைபொருளும் பெருமையும் வெளியிடப்பட்டன,

( யஶஸாம் ) புகழையுடையவளை. தேஹகாந்தியோடன்றியில், ஆத்மகாந்தியாகிற புகழையும் உடையவள் என்றபடி. "உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன" [பெரியாழ் திரு 3-8-4] என்று புகழுடையார்க்கு உபமானமாகச் சொல்லும்படி இருப்பவளன்றோ இப்பிராட்டி. "மருத்தார் தொல் புகழ் மாதவனை வரத்திருத்தாய் செம்போத்தே" [பெரிய திரு 10-10-1] "அகல கில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா நிகரில் புகழாய்" [திருவாய் 6-10-10] " மன்னுபெரும் புகழ் மாதவன் " [நாச்-திரு 5-1] என்கிறபடியே அவன் புகழ்பெறுவதும், அவனுடைய புகழ் நிலைநிற்பதும் இவளாலேயன்றோ. அவனுடைய புகழே இவளாலேயான பின்பு,

" யத்$_3$ யத்$_3$வி பூ$_4$திமத் ஸத்வம் ஶ்ரீமதூ$_3$ர்ஜிதமேவ வா ।
தத் ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோம்ஶஸம்ப$_4$வம் ॥ "
[கீதை 10-41]

[ஐச்வர்யம் நிறைந்ததும், காந்தியுள்ளதும், உறுதியானதுமான எந்த எந்தப்பொருள்கள் உள்ளனவோ, அந்த அந்தப்பொருள்களையெல்லாம் என் தேஜஸ்ஸின் ஒரு பகுதியிலேயானதாக அறிவாயாக.] என்று இவளைப்பற்றிப் புகழ்பெறுவனவும் இவளாலேயே புகழ் பெறுகின்றனவென்னத் தட்டில்லையன்றோ. ஆகையால், அனைவருடைய புகழும் தன் அதீனமாயிருக்கப் பெற்றவள் என்னும் பொருளும் இத்திருநாமத்திற்கு ஏற்படுகிறது.

''யஶோ யது$_3$ஜ்ஜ்வலம் லோகே வித்$_3$யாநந்த$_3$ாதி$_3$ஸம்ப$_4$வம் ।
மதீ$_3$யம் தத்$_3$ யஶஸ் தத்ர நாநாரூபம் விப$_4$ஜ்யதே ॥
மாமேவ ப$_4$ாஜநம் வித்$_3$தி$_4$ யஶஸஸ் தேஜஸ: ஶ்ரிய: ।
அதோ யஶஸ்விநீம் தாம் மாம் யஶஸேதி விது$_3$ர் பு$_3$த$_4$ா: ।
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ யஶோதே$_3$ாஜபதோ ப$_4$வேத்॥''

[கல்வி, ஆநந்தம் முதலியவற்றால் உண்டாவதாக உலகில் பலவிதமாகப் பல பொருள்களில் பிரிந்து காணும் புகழ் என் புகழேயாகும். புகழுக்கும், ஒளிக்கும், அழகுக்கும் என்னையே இருப்பிடமாக அறிவாயாக. ஆகையாலே அறிவாளிகள் புகழையுடையவளான என்னை 'யஶஸா' என்று அறிந்தனர். ''ஓம் யஶஸாயை நம:'' என்னும் ஏழு அக்ஷரம் கொண்ட இம்மந்திரத்தை ஜபிப்பவனுக்கு இது புகழைக்கொடுக்கும்.] என்று இப்பொருளையும் மந்திரப் பெருமையையும் பிராட்டியே பேசியருளினாள்.

(ஜ்வலந்தீம்) அக்நியாயிருப்பவளை. ''ப்ரபாஸாம்'' என்ற திருநாமத்திற்கு, பஞ்சாக்நிவித்யையிற்சொன்ன ஐந்து அக்நிகளிலும், லௌகிகாக்நியிலும் ஆறுவிதமான ஒளிகளைச் சேர்ப்பிப்பவள் என்னும் பொருளொன்று உரைக்கப்பட்டதன்றோ. அந்த ஆறுவிதமான அக்நி ஸ்வரூபமாகவும் இருப்பவள் பிராட்டியே என்கிறது இங்கு. ஆகையாலேயே ''ஆர்த்$_3$ராம் ஜ்வலந்தீம்'' என்றவிடத்திலுள்ள ஜ்வலந்தீநாமத்தோடு புநருக்தியில்லை.

''ஸ்வர்க்க$_3$ பர்ஜந்ய பூ$_4$பும் ஸ்த்ரீ வைஶ்வாநரவிப$_4$ாக$_3$த: ।
ஆத$_3$த$_3$ாநா ஹவி: ப்ராப்தம் ஶ்ர(ஶ)த்$_2$த$_4$ா
ஸோமாதி$_3$ஸம்ஜ்ஞிதம் ॥
ஷோ$_4$டாத்மாநம் வி$_4$பஜ்யாஹமக்$_3$நிப$_4$ாவமுபாக$_3$தா ।
ஜ்வலந்தீ முநிபி$_4$ர் கீ$_3$தா பே$_4$ாக்த்ருஶக்திப்ரபே$_4$ாஜ்ஜ்வலா ॥

அக்₃நீஷோமவிப₄ாகேந₃ விஶ்வமேவம் ப₄வாம்யஹம் ।
மந்த்ரேணாநேந மாம ஸ்துத்வா ஸாத₄யேத்₃ யதீ₃ப்₄ஸிதம் ॥'

[(பரிசுத்தையான) நான் 1. ஸ்வர்க்கம், 2. பர்ஜன்யலோகம், 3 பூமி 4. புருஷன், 5. ஸ்திரீ, 6. லௌகிகமான அக்னி என்னும் ஆறு அக்னிகளாக இருந்துகொண்டு, 1. சிரத்தை, 2. ஸோமன, 3. ஜலம், 4. அன்னம், 5. வீரியம், 6. ஹவிஸ் என்னும் ஹவிஸ் ஸுக்களை ஏற்றுக்கொள்ளுகிறேன். பே₄ாக்த்ருசக்திகளாகிற ப்ரபை₄களாலே விளங்கும் அக்னிகளாயிருக்கையாலே, 'ஜ்வலந்தீ' என்று முனிவர்களால் கானம் செய்யப்பெற்றேன் யான். ஆறுவிதமான அக்னிகளாகவும், அவற்றில் ஹோமம் செய்யப்பெறும் ஸோமன முதலான ஒளிகளாகவுமிருந்துகொண்டு ஜ்வலிப்பவளாகையாலே நான் உலகெல்லாமும் ஆகிறேன். "ஓம் ஜ்வலந்த்யை நம:" என்னும் (ஆறு அக்ஷரங்கொண்ட) இம்மந்திரத்தால் என்னைத் துதித்து இஷ்டப்பட்டதையெல்லாம் ஸாதிக்கலாம்.] என்று இப்பொருளும், மந்திரப்பெருமையும் தந்திரத்திலும் கோஷிக்கப்பட்டன.

(யஶஸாஜ்வலந்தீம்) யஶஸ்வினியாகவும், அக்னி ஸ்வரூபிணியாகவுமிருப்பவள் என்று இரண்டு திருநாமமாகப் பிராட்டி திருவுள்ளம் பற்றியிருக்கிறாள். "ப₄கவானுடைய தர்மபத்னி என்பது முதலான புகழாலே ஒளிவிடுபவள்" என்று ஒரே திருநாமமாகப் பொருள் கொண்டார் கோமட ரங்கநாதர்.

(தே₃வஜுஷ்டாம்) "ஜுஷ-ப்ரீதிஸேவநயோ:" என்று தாதுவாகையாலே, தேவனை ஹரியோடு கூடியிருந்து ப்ரீதியடைபவள் என்று பொருள்படுகிறது. பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சா எனப்படும் ஐந்து நிலைகளிலும் எம்பெருமானோடு "அகலகில்லேன் இறையும்" [§ 3355] என்று கூடியிருந்து பிரீதியடைபவள்.

"குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும திருவும்
நிழற்போல்வனர் கண்டு நிற்குங்கொல்" [2480]

"திருமால் வைகுந்தமே" [3740] "மாதவன் வைகுந்தன்" [428]

---

§ இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் திவ்யப்ரபந்தப் பாசுர எண்கள் மயிலை மாதவதாஸன் பதிப்பில் உள்ளவை.

"வடிவுடை மாதவன் வைகுந்தம்" [3762] "வானுடை மாதவா" [384]

*என்று பராவஸ்தையிலும்,*

"திருமால் திருப்பாற்கடலே" [3740]

"அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையும் தானும்" [452]

*என்று வ்யூஹாவஸ்தையிலும்,*

"மைதிலிதன் மணவாளா" [322] "திருமலிந்து திகழு மார்வு" [135]

"ஆயர்குலமுதலே மாதவா மராமரங்களெழுமெய்தாய்" [2724]

"அடலாமையான திருமால்" [1083] "வாமனன் மாதவன்" [1684]

*என்று ஆமையாகவும், ப்ரஹ்மசாரியாகவும். ராமகிருஷ்ணாதிகளாகவும் அவதரித்த ஸர்வ விபவங்களிலும்,*

"அரவிந்தப்பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து" [452]

"மார்வமென்பதோர் கோயிலமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தைநாட்டி" [323]

"திருமார்பனைத் சிந்தையுள் வைத்துமென்பீர்" [1159]

"திருமாலே, பிரியாது வந்தெனது மனத்திருந்த வடமலையை [1404]

"பாவை பூமகள் தன்னொடும் உடனே வந்தாய்
என் மனத்தே மன்னிநின்றாய்" [1609]

"திருமாமகளைப் பெற்றும் என் நெஞ்சகம்
கோயில்கொண்ட பேரருளாளன்" [1797]

"திருமால் வந்தென் நெஞ்சுநிறையப்புகுந்தான்" [3744]

*என்று அந்தர்யாமி நிலையிலும்.*

"திருவுடையாள்மணவாளா திருவரங்கத்தே கிடந்தாய்"[183]

"திருவாளன் திருப்பதி" [411]

'திருவரங்கமென்பதுவே என்திருமால் சேர்விடம்'' [406]

'திருவாளன் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற
திருவரங்கம்'' [421]

'வேங்கடத்தென் திருமால்'' [577]

'வேங்கடத்துத் தன்னுகத் திருமங்கை தங்கியசீர்மார்வற்கு''
[580]

''அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை
உறைமார்பா—திருவேங்கடத்தானே'' [3335]

''திருவிளையாடு திண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி'' [589]

''திருக்கோட்டியூர் திருமாலவன்'' [326]

''திருமால் திருமங்கையோடாடு தில்லைத் திருச்சித்ரகூடம்''
[1161]

''திருமால்தன் கோயில் அரிமேயவிண்ணகரம்'' [1247]

''மலர்மகள் காதல்செய் கணபுரமடிகள்தமிடம்'' [1711]

''திருத்தண்காவில் வெஃகாவில் திருமால்'' [2065]

''ஒருவல்லித்தாமரையாள் ஒன்றிய சீர்மார்வன்
திருவல்லிக்கேணியான்'' [2297]

என்று எல்லா அர்ச்சாவதார ஸ்தலங்களிலும் ஸர்வேச்வரன் பெரிய பிராட்டியாரோடு கூடவே எழுந்தருளியிருக்கிறுன் என்னு மர்த்தத்தை ஆழ்வார்களும் அருளிச்செய்தனரன்றே.

(தேவஜுஷ்டாம்) பிரமன் சிவன் முதலான தேவர்களாலும், அநந்த கருடாதிகளான நித்ய ஸூரிகளாலும் ஸேவிக்கப்படுபவள் என்றும் பொருள்கொள்ளலாம். ''ஜுஷ—ப்ரீதி ஸேவநயோ:'' என்றன்றே தாது.

''திருமாற்கரவு–சென்றுற்குடையாம்....'' [2134]

''அணைவதரவணைமேல் பூம்பாவையாகம் புணர்வது'' [2864]

''நாகணையில் துயில்வானே திருமாலே'' [1616]

''சுடர்ப்பாம்பணை நம்பரனைத்திருமாலை'' [3523]

"பொருசிறைப் புள்ளுவந்தேறும் பூமகளார்" [2765]

"மலிந்து திருவிருந்தமார்வன்—பொலிந்து
கருடன் மேற்கொண்ட கரியான்" [2338]

"தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றமரராட்செய்வார்"
[3447]

*என்று அநந்த கருடாதி நித்யஸூரிகளும்.*

"நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும் முறையால்
சீரேறுவாசகம் செய்யநின்ற திருமால்" [332]

"எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
வண்ணமலரேந்தி வைகலும்—நண்ணி,
ஒருமாலையால் பரவி ஓவாதெப்போதும்
திருமாலைக் கைதொழுவர் சென்று" [2133]

*என்று ப்ரஹ்மருத்ராதி தேவர்களும் பிராட்டியை ஸேவித்திருப்பர்கள் என்னுமர்த்தத்தை ஆழ்வார்களும் அருளிச்செய்தனரன்றே.*

*(தேவஜுஷ்டாம்) "தி₃வு—க்ரீட₃ா" என்னும் தாதுவிலே, ஜீவனுக்கு விஷயாநுபவமாகிற விளையாட்டுக்கு உபகரணமாயிருககும் இந்திரியங்களை 'தேவர்' என்று வேதங்களிலே வ்யவஹரிப்பதுண்டு. அவ்விந்திரியங்களாலே விஷயாநுபவத்தின் பொருட்டு ஆச்ரயிக்கப்படுபவள் என்றும் பொருள் கொள்ளலாம். ஹ்ருஷீகங்களாகிற இந்திரியங்களை நியமிப்பதாலே ஹ்ருஷீகேசன் என்று பெயர் பெற்றவனுடைய பத்தினியாகையாலே இந்த்ரியங்களை நியமிக்கவல்ல ஈச்வரியாயிருப்பவள் என்பது திரண்டபொருள். இதனாலேயேயன்றே திருமங்கையாழ்வார்.*

"கோவாயைவரென் மெய்குடியேறிக்
கூறைசோறிவை தாவென்று குமைத்துப்
போகார் நானவரைப் பொறுக்ககிலேன்
புனிதா புட்கொடியாய் நெடுமாலே
தீவாய் நாகணையில் துயில்வானே
திருமாலே இனிச்செய்வதொன்றறியேன்" [1616]

என்று தன் இந்திரியங்களை நியமிப்பதற்கு பகவானைப் பற்றும் போது பிராட்டியை முன்னிட்டார். (தேவஜுஷ்டாம்) தேவனாகிற ஹரியினாலே பிரீதிவிஷயீக்ருதையென்றுமாம். பகவானுடைய பிரீதிக்குப் பாத்திரமாயிருப்பவள் என்கை.

"தே₃வேந ஹரிணா ஜுஷ்டா ஸதா₃ தே₃வைஶ்ச ஸேவிதா।
தே₃வாஶ்ச மாமுபாஶ்ரித்ய விஷயாந் ப்ரத்யவஸ்தி₂தா:॥
பரிணாமவிஶேஷத்வாத் ப்ரக்ருதேஸ் தே ஹ்யசேதநா:।
அதோ மச்ச₂க்திமாதா₃ய ஶுத்₃த₄ ஸம்வித் க்ரியாமயீம்॥
விஷயேஷு ப்ரவர்த்தந்தே ஶ்ரோத்ரவாங்மந ஆத₃ய:।
வ்ருத்யர்த்தே₂ ஸேவிதாமக்ஷைர் தே₃வஜுஷ்டாம் து மாம் விது₃:॥
ஸர்வஶக்திப்ரதா₃மந்தர் தே₃வஜுஷ்டாமவஸ்தி₂தாம்।
ஶஶ்வந் மாமநுஸஞ்சிந்த்ய தே₃வாந் விஜயதேऽகி₂லாந்॥"

[1. தேவரான ஹரியோடு சேர்ந்திருந்தது ப்ரீதியடைபவள் 2. தேவர்களாலே எப்போதும் ஸேவிக்கப்படுபவள். 3. மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் இந்திரியங்களாகிற தேவர்கள் என்னைப் பற்றிநின்றே விஷயங்களை அனுபவிக்கிறார்கள். அவ்விந்திரியங்கள் ப்ரக்ருதியின் விகாரமாயிருக்கையாலே அறிவற்றவையாம். ஆகையால், சுத்தமான ஞானக்ரியாரூபமாயிருக்கும் என சக்தியை எடுத்துக்கொண்டு அவை விஷயங்களில் ஈடுபடுகின்றன. இந்திரியங்களாலே விஷயாநுபவத்தினபொருட்டு ஸேவிக்கப்படுபவளாகையாலே என்னை 'தே₃வஜுஷ்டா' என்று அறிகிறார்கள். எல்லா சக்திகளையும் கொடுத்துக்கொண்டு உள்ளே எழுந்தருளியிருக்கும் என்னை எப்போதும் "ஓம் தே₃வஜுஷ்டாயை நம:" என்று தியானிப்பவன் நித்யஸூரிகள், ப்ரஹ்மாதிகள், இந்திரியங்கள் என்னும் எல்லா தேவர்களையும் ஜயிக்கிறான்.] என்று இம்மூன்று பொருள்களும் மந்திரத்தின் பெருமையும் பிராட்டியாலே பேசப்பட்டது.

(லோகே தேவஜுஷ்டாம்) இதரசேதனர்களைக்காட்டிலும் பகவானோடு கூடியிருப்பவள் என்னும் பெருமையைத்தான் ஒருத்தியே பெற்றிருப்பவள். மற்றுள்ளார்க்கு இப்பெருமையில்லையோ என்னில்: ஸகலசேதநாசேதனங்களும் எம்பெருமானோடு பிரிக்க

முடியாதபடி கூடியிருந்தபோதிலும், பிராட்டிக்கு அவனோடுண்டான சேர்த்தி லோகவிலக்ஷணமானதாகும். பிராட்டியின் ஸ்வரூபரூபகுண விபூதிகளெல்லாம், ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபாதிகளோடே மிகவும் நெருங்கிச் சேர்ந்திருக்கப்பெற்றவை என்பது ஸகல சாஸ்திர ஸித்தமான அர்த்தமாகும். அவனுடைய ஸ்வரூபமுள்ள விடமெல்லாம், வ்யக்தியை ஆஶ்ரயித்து நிற்கும் ஜாதிபோலே தானும் வியாபித்திருக்கிறாள் பிராட்டி. இப்பெருமை வேறெவருக்குமில்லை. அவனுடைய ஐந்து நிலைகளிலுள்ள ரூபங்களை "அகலகில்லேன் இறையும்" என்று ஆச்ரயித்திருக்கிறாள் பிராட்டி.

"கா த்வந்யா த்வாம் ருதே தே₃வி ஸர்வயஜ்ஞமயம் வபு:।
அத்₄யாஸ்தே தே₃வதே₃வஸ்ய யோகி₃சிந்த்யம் க₃தா₃ப்₄ருத:॥"

[ஹே தேவி! கதையை தரித்தவனும், தேவதேவனுமான எம்பெருமானுடைய யோகிகளால் நினைக்கத்தக்கதும், ஸர்வயஜ்ஞமயமுமான சரீரத்தில் உன்னைத்தவிர வேறு எவள் இருக்கிறாள்?] என்கிறபடியே இப்பெருமையும் வேறு எவருக்குமில்லை. தன்னுடைய குணங்களாலும், ஐச்வர்யங்களாலும் ஈச்வரனுடைய குணங்களையும் ஐச்வர்யங்களையும் ரஸிக்கச்செய்பவளாகையாலே இவளுடைய குணவிபூதிஸம்யோகமும் லோகவிலக்ஷணமாகும். இக்காரணங்களாலே "லோகே தே₃வஜுஷ்டாம்" [உபயவிபூதியிலும் வைத்துக் கொண்டு தேவனோடு சேர்ந்திருந்து இன்புறுமவள்] எனப்படுகிறாள் இப்பிராட்டி.

"ஶாந்தாநந்தமஹாவிபூ₄தி பரமம் யத்₃ ப்₃ரஹ்மரூபம் ஹரே:
மூர்த்தம் ப்₃ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யத₃த்₃புத₄தம்।
யாந்யந்யாநி யதா₂ஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணிதாந்-
யாஹு: ஸ்வைரநுரூபரூபவிப₄வை: கா₃டோ₄பகூடா₄நிதே॥"

[ஷடூர்மிகளற்றதாய், ஆநந்தமயமாய், பெரிய விபூதிகளை உடையதாய், தனக்கு மேலானதற்றதாய், பெரிதாயிருப்பதாலும் (பிறரைப்) பெரிதாகச்செய்வதாலும் ப்ரஹ்மசப்தத்தாலே சொல்லப்படுவதாயிருக்கும் ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, அதைக் காட்டிலும் அந்த பகவானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும், கண்ணால் காணக்கூடியதும், ப்ரஹ்மஶப்தத்தால் சொல்லப்படுவதும், மிகவும் அத்புதமானதுமான யாதொரு ரூபம் உண்டோ, இஷ்டப்படி விளையாடும் எம்பெருமானுக்கு மற்றும் யாவை சில ரூபங்களுண்டோ

அந்தரூபங்களெல்லாம் உனக்குஅஸாதாரணங்களாய் தகுந்தவையா யிருக்கும் திவ்யரூபங்களால் நன்ருக ஆலிங்கனம் செய்யப்பட்டவை யென்று (ப்ரமாணங்கள்) சொல்லுகின்றன.] என்று ஆளவந்தாரும், "ப₄க₃வந்நாராயாணுபி₄மதாநுரூபஸ்வரூபரூபகு₃ண" [பகவானுன நாராயணனுக்கு இஷ்டமாயும, பொருந்தியதாயுமுள்ள ஸ்வரூபரூபகுணங்களையுடைய பிராட்டி] என்று எம்பெருமானுரும்,

"ஆத்மந்யாத்மா வபுஷி ச வபுர் வைப₄வைர் வைப₄வம் சேத்
யாகாரைஸ் தைரநுகு₃ணதயா ஸர்வப₄ாவாநுயாதா
இச்ச₂ா ரூபாண்யபி ப₄க₃வத: ஸ்வாத₃யந்த்யாத்தரூபா"

[பகவத்ஸ்வரூபத்தில் தன் ஸ்வரூபமும், அவனுடைய (பர) தேஹத்தில் தன் தேஹமும், (அவனுடைய) விபூ₄திகளில் தன் வைபவமும் பொருந்தும்படி இப்படிப்பட்ட ஆகாரங்களாலே அவனுக்குத் தகுந்தவளாய், அவனுடைய எல்லா நிலைகளையும் பின்தொடருமவளாய், (அவனுடைய) இச்சையாலெடுக்கப்பட்ட அவதாரரூபங்களையும், (அவற்ருேடு பொருந்திய) உருவங்களை எடுப்பதன் மூலம் இனிக்கச் செய்பவளான பிராட்டி] என்று அபியுக்தரும் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தனரன்ருே.

(ஶ்ரியம் லோகே தே₃வஜுஷ்டாம்) "தே₃வஜுஷ்டாம்" என்று "ஶ்ரீயதே" [அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படுகிருள்] என்றும் "ஶ்ரயதே" [(பகவானை) ஆச்ரயித்திருக்கிருள்] என்றும் இரண்டு வ்யுத்பத்தியாலும் ஸித்தமான அர்த்தத்தைச்சொல்லி, அவ்வர்த்தங்களைக் காட்டும் திருநாமத்தையும் படிக்கிறது 'ஶ்ரியம்' என்று. (ஶ்ரியம்) புருஷகாரத்வத்தைப் பூண்கட்டித்தரும் இத்திருநாமத்திற்குள்ள பற்பல பொருள்களும் முன்பே விளக்கப்பட்டன.

(உதாராம்) வண்மைமிக்கவளை. எல்லாம்கொடுத்தும் ஒன்றும் கொடுத்திலோம் என்னும் வண்மைக்குணத்திற்கு விளைநிலமாயிருப்பவளை.

"ஐஶ்வர்யமக்ஷரக₃திம் பரமம் பத₃ம் வா
கஸ்மைசித₃ஞ்ஜலிப₄ரம் வஹதே விதீர்ய।
அஸ்மை ந கிஞ்சிது₃சிதம் க்ருதமித்யதா₂ம்ப₃
த்வம் லஜ்ஜஸே கத₂ய கோ(அ)யமுதா₃ரப₄ாவ:॥"

[தாயே! ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் ஆகிய இவற்றை ஒரு அஞ்சலிச்சுமையைச் சுமப்பவனுக்குக் கொடுத்து, 'இவனுக்குத் தகுந்ததொன்றும் செய்யப்பெற்றிலோமே' என்று நீ வெட்கப் படுகிறாய்; ஈதென்ன வண்மைக்குணம்! நீயே சொல்வாயாக.] என்று ஸ்ரீபராசரபட்டார்யரும் ஸ்ரீ குணரத்ன கோசத்திலே, இத் திருநாமத்தை வியாக்கியானம் செய்தார். (ஐச்வர்யம் அக்ஷரகதிம்) ஸகலபலப்ரதனாயிருந்தும், மோக்ஷமொழிந்த மற்றைப் பலன்களை இலகுவில் கொடுக்கமாட்டாத ஹிதபரனாய் முந்தைத் தந்தையான ஸர்வேச்வரனைப் போலன்றிக்கே, பிரியபரையாய், அகிலஜகந் மாதாவாகையாலே ஓரஞ்சலிமாத்ரத்திற்கு ஐச்வர்ய கைவல்யங் களையும் அளிக்கவல்லவள். (பரமம் பதம் வா) "ஸித்₃தி₄ர்ப₄வதி வா நேதி ஸம்ஶயோச்யுதஸேவிநாம்। ந ஸம்ஶயோஸ்தி தத்ப₄க்த பரிசர்யாரதாத்மநாம் ||" [அச்சுதனடியார்களுக்கு மோக்ஷஸித்தி உண்டோ இல்லையோ என்பது ஸந்தேஹமே. அவனடியார்க்கடி யார்க்கு இவ்வையமில்லை.] என்கிற நியாயத்தாலே ஸ்வதந்திரனை அவனைப்பற்றினார்க்கும் பரமபதப்ராப்தி நிச்சயமில்லை. இவளைப் பற்றினார்க்கோ அது ஸுநிச்சயம். (கஸ்மைசித்) அவன் எவனா கிலுமாம்; ஆர்த்ராபராதைகளான ராக்ஷஸிகளாகிலுமாம். 'சரணம்' என்னும் உக்தியும் வேண்டியதில்லை. (அஞ்ஜலிப₄ரம்) அஞ்சலிச் சுமையை. அவன் ஓரஞ்சலியைச் செய்யவேண்டியதுதான் தாமதம்; அது பிராட்டியின் திருவுள்ளத்துக்குப் பெருஞ்சுமையாகி விடுகிறது. (அஞ்ஜலிபரம் வஹதே) அஞ்சலிச்சுமையைச் சுமப்பவனுக்கு. அவன் தான் அதிஸுலபமான அவ்வஞ்சலியை எவ்வாறு செய்கின்றான்? ஏதோ பொறுக்கமாட்டாததொரு பாரத்தைத் தன் தலைமேலே ஏற்றிவைத்துக்கொண்டு விட்டதாக நினைக்கிறான், ப்ராப்தவிஷ யத்தில் பழகியறியாதவனாகையாலே. (விதீர்ய) கொடுத்து, பிள்ளை மனம் கல்லாயினும் பெற்றமனம் பித்தல்லவோ. ஆகையாலே, அவனுக்கும் அருளுகிறாள் அன்னை. (அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதம்) ஐயோ! இவன் என்பட்டான்! நாம் என் செய்தோம்? "ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவ மே ஹ்ருத₃யாந் நாபஸர்ப்பதி" [த்ரௌ பதியின் கூக்குரல் வட்டியால் விருத்தியடைந்த கடனைப்போல் என் நெஞ்சைவிட்டு நீங்குகிறதில்லை,] என்றாப்போலே ஆயிற்றே என்று துடிதுடித்துப்போகிறாள் பிராட்டி. இது மட்டுமோ,– (த்வம் லஜ்ஜஸே) அன்னையின் முகத்தைக் காணவும் கூசவேண்டும் படியான பல்லாயிரம் பாவங்களையே செய்த அப்பாவியின் முகத்தைக்காண வெட்கப்படுகிறாள் 'இவன் செய்ததுக்குத் தகுந்த

ப்ரத்யுபகாரம் செய்யப்பெற்றிலோமே' என்னும் லஜ்ஜையாலே. (கத₂ய கோயமுத₃ாரப₄ாவ:) அன்னையே! இப்படிப்பட்ட குணம் உபயவிபூதியிலும் பிறரிடம் நடையாடாததொன்றாயிருந்தது. இதைப்பாசுரமிட்டுப்பேச எங்களால் முடியுமோ? தேவரீரே அருளிச்செய்யவேண்டும் என்கிறார் பரமரஸிகரான பட்டர். "உத₃ாரா" என்று திருநாமம் சூட்டுவதன் மூலம், இத்தை யிட்டே நிரூபிக்கவேண்டும்படி ஔதார்யகுணத்தின் ஆதிக்யத்தையுடையவள் அன்னை என்று அறிவிக்கிறது அருமறை. இவ்வர்த்தத்தை ஆளவந்தார்

"ஈஷத் த்வத்கருணா நிரீக்ஷணஸுதா₄
ஸந்து₄க்ஷணாத்₃ ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத₃லாப₄தஸ்
த்ரிபு₄வநம் ஸம்ப்ரத்யநந்தோத₃யம்
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த₃லோசநமந:
காந்தாப்ரஸாத₃ாத்₃ ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்₄வஸு ந்ருணாம்
ஸம்ப₄ாவ்யதே கர்ஹிசித் ||"

[அந்தக் கடாக்ஷமில்லாமையாலே முன் நசித்துக் கிடந்ததான மூவுலகமும் இப்போது சிறிதுபோது உன்னுடைய கருணைகடாக்ஷமாகிற அமுதமழையினால் அளவற்ற பெருமையை உடைத்தாகும்படி காப்பாற்றப்படுகிறது; மனிதர்களுக்கு ஐச்வர்யம், கைவல்யம, பரமபதம் இவைகளில் மேன்மையானது தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதேவியின் அருளில்லாமல் ஏற்படாதன்றோ.] என்று அந்வயவ்யதிரேகங்களாலே நிலைநாட்டினார். "ஐஶ்வர்யம் மஹதே₃வ" "ஐஶ்வர்யம் யத₃ஶேஷ" "லோக வநஸ்பதி" "யஸ்யா: கடாக்ஷ" என்று தொடங்கும் சுலோகங்களிலே ஆழ்வானும் இவ்வர்த்தத்தை அறுதியிட்டார். இவற்றுக்கெல்லாம் அடியாக,

"..............திருமாமகள்தன் அருளாலுலகில்
தேர்மன்னராய் ஒலிமாகடல்சூழ் செழுநீருலகாண்டு
திகழ்வர்களே" [பெரியதிரு 2-9-10]

"செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலே"
[திருவாய் 1-5-3]

''பூவளரும் திருமகளால் அருள்பெற்றுப்
பொன்னுலகில் பொலிவர்தாமே'' *[பெரியதிரு 11-6-10] என்றும்*
''வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே''
*[திருவாய் 4-5-11] என்றும்,*
''தரும் அவ்வரும்பயனாய திருமகளார்''*[திருவாய் 1-6-9]என்றும்,*

''சார்வு நமக்கென்றும் சக்கரத்தான், தண்டுழாய்
தார் வாழ் வரைமார்பன் தான்முயங்கும்–காரார்ந்த
வானமருமின்னிமைக்கும் வண்தாமரை நெடுங்கண்
தேனமரும் பூமேல் திரு'' *[மூன்-திருவ-100] என்றும்*

*ஆழ்வார்களும் பிராட்டியின் வண்மையாலேயே ஐச்வர்ய கைவல்ய பரமபதங்கள் மூன்றும் சேதனர்க்கு ஸித்திக்கின்றன என்று பாசுரமிட்டனர்.*

''ஸர்வகாமப்ரத₃ாம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் ।
க்ஷிப்ரப்ரஸாதி₃நீம் தே₃வீம் ஶரண்யாம் சிந்தயேதி₃தி ॥''

*[எல்லா இஷ்டங்களையும் தருமவளும், அழகியவளும், ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டுவிப்பவளும், விரைவில் அருள் செய்யுமவளுமான பிராட்டியை சரணமடையத்தகுந்தவளாக நினைக்கக்கடவன்.] என்று ஸ்வாயம்புவத்திலும்,*

''ஆத்மவித்₃யா ச தே₃வி த்வம் விமுக்திப₂லத₃ாயிநீ''

*[ தேவியே! நீயே ஆத்மஜ்ஞானத்தைக் கொடுப்பவளாயும், முக்தி பலத்தைக் கொடுப்பதையே இயற்கையாக உடையவளாயுமிருக்கிறாய்.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும், [1-9-20]*

''ஸக்ருத்₃ விப₄ாதா ஸர்வார்த்தி ஸமுத்₃ரபரிஶோஷிணீ ।
ப₄வப₄ங்க₃ாபஹாரிணீ பரநிர்வாணத₃ாயிநீ ॥''

*[ உடனே பிரகாசிப்பவள்; ஸமஸ்ததுக்கங்களாகிற ஸமுத்ரத்தையும் வற்றச்செய்பவள்; ஸம்ஸாரமாகிற தாழ்மையைப் போக்கடிப்பவள்; மேலான மோக்ஷத்தை அளிப்பவள் (என்பவை பிராட்டியின் ஆயிரம் திருநாமங்களிற் சில )] என்று ஸ்ரீஸஹஸ்ரநாமத்திலும்,*

''பத்₃மயோநிரித₃ம் ப்ராப்ய பட₂ந் ஸ்தோத்ரம் தத: பரம் ।
தி₃வ்யம் சாஷ்டகு₃ணைஶ்வர்யம்தத்ப்ரஸாத₃ாச்ச லப்₃த₄வாந்॥''

[நாபிக்கமலத்திலிருந்து உண்டான நான்முகன் இந்த ஸ்தோத்ரத்தையடைந்து படித்து அதன்பின் திவ்யமான எட்டுவிதச் செல்வத்தையும் அப்பிராட்டியின் அருளாலே அடைந்தான்.]

"ப்₃ரஹ்மாதீ₃நாம் யத₃ாயத்தம் வைப₄வம் யஸ்ய ஸா ஸ்வயம் ।
தஸ்ய கைமுத்யநிர்த்த₄ார்யமீஸ்வரத்வம் ஸ்ரிய: பதே: ॥"

[ப்ரஹ்மாதிகளுடைய வைபவம் எவளாலேயோ, அந்தப் பிராட்டி எவனுக்கு சேஷபூதையோ, அந்த ஸ்ரிய:பதியின் ஈச்வரத்வம் கிம்புநர்ந்யாயஸித்தம்,] என்று ப்ராஹ்மபுராணத்திலும் பிராட்டியின் ஸகலபலப்ரதத்வமாகிற உதாரபாவம் உத்கோஷிக்கப்பட்டது.

ஆக இப்படி இவளும் ஸகலபலப்ரதையாகில், "மோக்ஷப்ரத₃த்வே ஸதி சேதநத்வம்" [மோக்ஷமளிப்பதாயிருந்துகொண்டு அறிவுள்ளதாயிருக்கும் தத்துவம் பரப்ரஹ்மம்] என்னும் பரப்ரஹ்ம லக்ஷணம் இவளுக்கும் வருமாகையாலே நாராயணன் ஒருவனே பரம்பொருள் என்பது எப்படி ஒட்டும் எனில்: பரப்ரஹ்மலக்ஷணத்திற்கு இவளிடம் எவ்வகையாலும் அதிவ்யாப்தி வாராதாகையால், நாராயணன் ஒருவனே பரம்பொருள் என்பது கல்வெட்டேயாகும். இவள் பிறர்க்கு மோக்ஷமளிப்பது எவ்வகையாலே என்று ஆராய்ந்தால்,

"ஆகிஞ்சந்யைகஸரணா: கேசித்ப₄ாக்₃யாதி₄கா: புந:
மத்பத₃ாம்பே₄ாருஹத்₃வந்த்₃வம் ப்ரபத்₃ய ப்ரீதமாநஸா: ॥
லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந ।
மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஸ ப்ராப்யம் ப்ராபகமேவ மாம் ॥
லப்₃த்₄வா க்ருதார்த்த₂ா: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்ய
மாநஸா: ॥"

[அழகிய முகத்தையுடைய சேநாபதியே! ஒரு கைம்முதலும் அற்றிருக்கையையே பற்றுசாகக்கொண்ட சில பாக்யசாலிகளோவெனில், என் திருவடித்தாமரையிணையை அன்புடன் கூடிய மனத்தராய்ச் சரணடைந்து, லக்ஷ்மீதேவியைப் புருஷகாரமாகப்பற்றி, என் பொறுமைக்கு இலக்காகி, என்னையே ப்ராப்யப்ராபகங்களாக அடைந்து கிருதார்த்தர்களாய், வேறொன்றிலும் நெஞ்சு செல்லப் பெறுதவர்களாய் என்னையே அடைவார்கள்.] என்று விஷ்வக்ஸேந ஸம்ஹிதையிலிருந்தும்,

''அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால் லக்ஷ்மீபதி:
ஸ்வயம் ।
லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப₄ா ப்ராப்தியோகி₃நீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிக₃மாந்தேஷு ஶப்₃த்₃யதே ॥''

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன்; என் பிரியையான லக்ஷ்மியானவள புருஷகாரத்தினால் என்னை அடைய உதவிபுரிகிறாள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதாந்தங்களில் சொல்லப்படுகிறது.]

''மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத₄: ।
லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி₃ஷ்டா பரமர்ஷிபி₄: ॥
மமாபி ச மதம் ஹ்யேதந் நாந்யதா₂ லக்ஷணம் ப₄வேத் ॥''

[ஸம்ஸாரத்தில் கீழே விழுகின்ற ஜந்துக்களுக்கு என்னை அடையும் விஷயத்தில் லக்ஷ்மீதேவியானவள் பரமரிஷிகளாலே புருஷகாரத்வத்தில் நியமிக்கப்பட்டிருக்கிறாள். எனக்கும் இதுவே இஷ்டம். வேறான (உபாயத்வமாகிற) ஆகாரம் இல்லை.] என்று மற்றும் பல பாஞ்சராத்ர வாக்யங்களிலிருந்தும் புருஷகார பூதையாயிருந்துகொண்டே இவள் மோக்ஷப்ரதையாகிறாள் என்று தெளிவாகிறது. புருஷகாரத்வமாவது:— ஸ்வதந்த்ரனான ஈச்வரனைத் தன் இனிமையாலே மயக்கி, ஜீவனுடைய தோஷங்களை மறக்கச்செய்து, 'உனக்கு மோக்ஷமளித்தேன்' என்னும் ஸங்கல்பத்தை ஈச்வரன் செய்யும்படியாகப் பண்ணுகை. தானே மோக்ஷப்ரதான ஸங்கல்பம் செய்யவல்லவளாகில், இவள் புருஷகாரக்ருத்யத்தில் கைவைக்க வேண்டிய அவசியமே இல்லையே. 'மோக்ஷமளிக்கிறேன்' என்னும் ஸங்கல்பத்தை ஈச்வரனே செய்கிறானாகையாலே, ஸாக்ஷாத்தான மோக்ஷப்ரத₃த்வம் உள்ளது முகுந்தனுக்கே. ஸ்ரீ தேவியான இவளுக்கோவெனில் பரம்பரயா மோக்ஷப்ரதத்வமாகிற—மோக்ஷப்ரத₃ாபயித்ருத்வமாகிற (மோக்ஷத்தைக் கொடுப்பிக்கையாகிற)— புருஷகாரத்வமே உள்ளது. ஆகையால் பாரதந்திரியப் பெருஞ் செல்வத்தையுடைய இப்பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வமாகிற தாழ்வு ஒருபோதும் வாராது. நாயனாராச்சான்பிள்ளை அருளிய சது:ஶ்லோகீ வ்யாக்யானத்திலும், பெரியவாச்சான்பிள்ளை யருளிய பரந்தரஹஸ்யத்திலும் இவ்விஷயத்தைப்பற்றிய விரிவான விசாரம் காணத்தக்கது.

இவ்விஷயத்தில் வேதாந்ததேசிகர்க்கும் மற்றுமுள்ள ஆசாரியர்களுக்குமிடையே சிறிது அபிப்பிராயபேதமிருப்பினும் ஒரு விஷயம் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. எம்பெருமானுக்கு எப்படிப்பட்ட உபாயத்வத்தை ஒப்புக்கொள்ளுகிறோமோ, அது போன்றதே பிராட்டியின் உபாயத்வமும் என்று தேசிகன் கருதவில்லை என்பது நியாயஸித்தாஞ்ஜனத்திலே, ''ஜ்ஞாநாநந்த₃ாத்₃யத்யந்தஸாம்யாத் ஜகஜ்ஜநகத்வ ஶேஷித்வ ஶரண்யத்வ...ஸாம்யாச்ச'' [ஞானநந்தம் முதலிய விஷயங்களில் மிகவும் ஒற்றுமையுள்ளதாகையாலும், ஜகத்காரணத்வம், சேஷித்வம், உபாயத்வம் முதலிய விஷயங்களில் ஒற்றுமை உள்ளதாகையாலும்] என்று அருளியிருப்பதிலிருந்து தெளிவு. ஆகையால் அவருடைய கருத்துப்படியும் பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வமில்லையென்பது நிஷ்பக்ஷபாதிகளுக்கு நன்கு விளங்கும்.

''பிராட்டிக்கு ஸாக்ஷாந் மோக்ஷோபாயத்வமில்லை; புருஷகாரத்வமேயுள்ளது'' என்று சொல்லுவதினால் அவளுடைய உதாரத்தன்மைக்கு ஒரு குறையுமில்லை. கொடுப்பாரைக்காட்டிலும், கொடுப்பிப்பார்களே மிகவுதாரர்களாய் விளங்குகிறார்களென்பதையும், கொண்டாடப்படுகிறார்களென்பதையும் நாம் லோகத்திலும் காண்கிறோம்.

''மாம் நயேத்₃ யதி₃ காகுத்ஸ்த₂: தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத்''

[என்னைக் காகுத்தன் அழைத்துச் செல்வாராகில் அது அவருக்கே தகுந்தது] என்னும்படியான பாரதந்திரியத்தின் எல்லைநிலந்திலே நிற்கும் பிராட்டி 'நான் மோக்ஷமளிக்கிறேன்' என்னும் ஸ்வாதந்த்ரியகார்யமான ஸங்கல்பத்தைச் செய்வாளென்று எண்ணவுமிடமில்லை. அப்படிப்பட்ட ஸங்கல்பத்தை அவள் செய்தாலும், அவளுடைய ஸ்வரூபத்தைக்காணும்போது அது எம்பெருமானுடைய கருத்தைப் பின் செல்வதாய் முடியுமேயொழிய ஸ்வதந்திரனின் ஸங்கல்பம் போன்றதாகாது. ஆகையால் எவ்வகையாலும் அவளுக்குப் பரப்ரஹ்மத்வம் ஏற்பட இடமில்லை என்பது வஜ்ரலேபாயிதமாகும் (வயிரவுருக்காகும்.) நிற்க, இவ்வளவால், பரம புருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுப்பிப்பதன்மூலமும், ஐச்வர்யத்தைத்தானே கொடுப்பதன் மூலமும் பரமோத₃ாரையாய் விளங்குகிறாள் பிராட்டி என்று கரதலாமலகமாகக் காட்டப்பட்டது. இத் திருநாமத்தின் இப்பொருளும், இம்மந்திரப் பெருமையும்

"மத்த ஏவோத்$_3$க$_3$தாநீஹ விஜ்ஞாநாநி மஹர்ஷிணும் |
ஶக்தயஶ்ச க்ரியாஶ்சைவ யாஸ்தா உச்சாவசா ந்ருணும் ||
விஶ்ருங்க$_2$லேஷ்டத$_3$ாம் சாபி மாமுத$_3$ாராம் விது$_3$ர் பு$_3$த$_2$ா: |
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வமிஷ்டம் ப்ரயச்ச$_2$தி ||"

[மஹரிஷிகளின் பேரறிவுகள் என்னிடமிருந்தே உண்டாயின உயர்ந்தவையும் தாழ்ந்தவையுமான மனிதசக்திகளும், செயல்களும் என்னிடமிருந்தே ஏற்பட்டவை. தடையற்ற இஷ்டங்களைக் கொடுக்கையாலும் என்னை ஞானிகள் 'உதாரா' என்று அறிகின்றனர். ஏழு அக்ஷரங்கொண்ட "ஓம் உத$_3$ாராயை நம:" என்னும் இம்மந்திரம் எல்லா இஷ்டங்களையும் அளிக்கிறது.] என்று லக்ஷ்மீ தந்த்ரத்திலேயும் பிராட்டியாலே உத்கோஷிக்கப்பட்டது.

(தாம்) "தநு–விஸ்தாரே" என்று தாதுவாகையாலே, பஞ்ச கால பராயணர்களான பாகவதர்கள் தினந்தோறும் பொழுதை ஐந்து பிரிவாகப் பிரித்துக்கொண்டு செய்யும் 'பஞ்சக்ருதயங்கள்' எனப்படும்அபிகமனம்,உபாதானம்,இஜ்யை,ஸ்வா$_4$த்யாயம்,யோக$_3$ம் என்னும் ஐந்து காரியங்களை விஸ்தரிக்கச் செய்பவள் என்று பொருளாகிறது, பகவதாராதநமான பஞ்சமஹாயஜ்ஞங்கள் முதலானவற்றை விஸ்தரிக்கச்செய்பவள் என்றும் கொள்ளலாம். "சிந்தனையைத் தவநெறியைத் திருமாலை" [பெரியதிரு 5-6-7] என்றார் திருமங்கையாழ்வாரும். (தாம்) "தாய்ரு–ஸந்தாந பாலநயோ:" என்றும் தாதுவாகையாலே ஜகதாகாரமாகப்பரிணமிப்பவள் என்றும்பொருள் கொள்ளலாம். இப்பிராட்டி மூலப்ரக்ருதிக்கு அபிமானினியாக இருப்பவளென்பது "மூலப்ரக்ருதிரீஶாநீ" [66] என்று ஸ்ரீஸஹஸ்ர நாமத்திலும் மற்றும் பலவிடங்களிலும் சொல்லப்பட்டுள்ளதாகையால் ப்ரக்ருதிகார்யமான ஜகத்தாகப் பரிணமிப்பவள் இவளே என்னத் தட்டில்லை. இவ்வர்த்தத்தையே

"திருவாழ் மார்வன்றன்னைத் திசைமண் நீர் எரி முதலா
உருவாய் நின்றவனை ஒலிசேரும் மாருதத்தை"

[பெரியதிரு 7-6-7]

"கருமாமுகிலுருவா கனலுருவா புனலுருவா
பெருமால்வரையுருவா பிறவுருவா நினதுருவா
திருமாமகள் மருவும்....அருமாகடலமுதே" [பெரியதிரு 7-9-9]

"வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்
தேனாகிப் பாலாம் திருமாலே" [முதல் திருவ-92]

என்று ஆழ்வார்களும் அறிவித்தனர். இவ்விரு பொருள்களும் இம்மந்திரப்பெருமையும்,

"தநோமி பஞ்சக்ருத்யாநி தாயே ச ஜக₃த₃ாத்மநா।
தாம் மாம் தாமிதி தத்வஜ்ஞா: ப்ராஹுர் வேத₃ாந்தபாரக₃ா:॥
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் தநோதி ஸ்வப₄விஸ்த்ருதிம்॥"

[ஐந்துவகைச் செயல்களை விஸ்தரிப்பிக்கிறேன். ஜகத்ரூபமாகப் பரிணமிக்கிறேன். அப்படிப்பட்ட என்னை, மறைமுடிவின் முடிவு கண்ட ஞானிகள் 'தா' என்று உரைக்கின்றனர். "ஓம் தாயை நம:" என்னும் ஐந்து அக்ஷரங்கொண்ட இம்மந்திரம் நன்மையை விஸ்தரிப்பிக்கும்.] என்று தந்திரத்திலே பேசப்பட்டது. 'தாம்' என்னும் பதத்தை ஓர் திருநாமமாகப் பிராட்டி திருவுள்ளம் பற்றியிருக்க, இதைத் தச்சப்தத்தின் இரண்டாவது வேற்றுமையாகவே கொண்டு 'அப்படிப்பட்டவளை' என்று வியாக்கியானமிட்டார் கோமடரங்கநாதர்.

(பத்₃மநேமீம்) ஸூர்யனைக் கண்டு மலரும் தாமரைபோலே, பிராட்டியின் ஸந்நிதியாலே ஸ்ருஷ்டி முதலான மலர்ச்சியைப் பெறும் பத்மங்களான ப்ரக்ருதி புருஷர்களைத் தன் ஒளியாலே மலர்ச்சிபெறச்செய்பவள் என்கை. "பத்₃மாந் ப்ரக்ருதிபுருஷாந் நயதீதி பத்₃மநேமீ:" [ப்ரக்ருதி புருஷர்களாகிற பத்மங்களை மலர்ச்சியடையச் செய்பவள்] என்று வ்யுத்பத்தி.

"யஸ்யா: கடாக்ஷம்ருது₃ வீக்ஷணதீ₃க்ஷணேந
ஸத்₃யஸ் ஸமுல்லஸித பல்லவ முல்லலாஸ।
விஶ்வம் விபர்யயஸமுத்த₂விபர்யயம் ப்ராக்
தாம் தே₃வதே₃வமஹிஷீம் ஶ்ரியமாஶ்ரயாம:॥"
[ஸ்ரீஸ்தவ-10]

[எப்பிராட்டியுடைய கடைக்கண் மென்னோக்கினாலே, ப்ரளயகாலத்தில் அதில்லாமலிருக்கையால் இல்லாததுபோலேயிருந்த உலகம் உடனே தளிர்விடுவதுபோலே மலர்ச்சிபெற்றதோ, தேவதேவனுடைய மஹிஷியான அப்பிராட்டியை ஆச்ரயிக்கிறோம்] என்று கூரத்தாழ்வானும் இவ்வர்த்தத்தை அருளிச்செய்தாரன்றோ. (பத்மநேமிம்)

"பத்₃யமாநம் மிநோதீதி காலம் பத்₃மம் ப்ரசக்ஷதே"

[தான் சென்றுகொண்டே பிறவற்றை அளக்கிறதாகையாலே காலத்தைப் பத்மமென்கிறார்கள்.] என்று முன்பே லக்ஷ்மீதந்திரத்தில் காட்டப்பட்ட வ்யுத்பத்தியாலே பத்மஶப்தம் காலத்தைச் சொல்லும். சக்கரத்தின் (நடுவிலிருக்கும்) நாபிக்கு வெளியிலிருக்கும் நேமி போலே காலத்திற்கு வெளிப்பட்டவள் என்றும் பத்மநேமி ஶப்தத்துக்குப் பொருள்கொள்ளலாம், "**காலம் ஸ பசதே தத்ர ந காலஸ் தத்ர வை ப்ரபு₁:**" [வி-பு] [அப்பரமபதத்தில் அவன் காலத்தை நியமிக்கிறான்; அங்கு காலம் ஸாம்ராஜ்யம் செலுத்துவதில்லை] என்றாற்போலே காலத்துக்குக் கட்டுப்படாதவள் என்றபடி. இவ்விரண்டுபொருள்களும், மந்திரப்பெருமையும்

"ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ நயாமி ஸ்வேந தேஜஸா।
காலாச்சாபி ப₃ஹிர்பூ₄தா பத்₃மநேமீ(மி)ம் ததோ விது₃:॥
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வஸம்பத் ஸம்ருத்₃தி₄த₃:॥"

[ப்ரக்ருதிபுருஷர்களை என் ஒளியாலே மலரச்செய்கிறேன். காலத்தைக்காட்டிலும் வெளிப்பட்டுள்ளேன். அதனாலே பத்மநேமியென்று அறிகிறார்கள். "ஓம் பத்₃மநேம்யை நம:" ஏழு எழுத்துக் கொண்ட இந்த மந்திரம் எல்லாச் செல்வச்சிறப்பையும் தரும்.] என்று லக்ஷ்மீதந்திரத்திலேயும் உத்₃கோஷிக்கப்பட்டது.

(ஶரணமஹம் ப்ரபத்யே) உபாயமாக அடைகிறேன். '**உபாயே க்₃ருஹரக்ஷித்ரோ: ஶப்₃த₃: ஶரணமித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தை₂கவாசக:॥**' [உபாயம், வீடு, ரக்ஷகன் என்னும் மூன்று பொருள்களிலே 'ஶரணம்' என்னும் இச்சொல் பிரயோகிக்கப்படுகிறது. இப்போது அது உபாயம் என்னும் பொருளையே சொல்லுகிறது.] என்று அஹிர்புத்ந்யஸம்ஹிதையில் ஶரண ஶப்தார்த்தம் சொல்லப்பட்டதன்றோ. (ப்ரபத்யே) "பத்₃லுக₃தௌ" என்று தாதுவாகையாலே 'அடைகிறேன்' என்று பொருளாகிறது; "**க₃த்யர்த்தா₂ பு₃த்₃த்₃யர்த்தா₂:**" என்னும் நியாயத்தாலே, மநஸ்ஸிலே உபாயமாக உறுதிகொள்கிறேன் என்றதாகிறது. எதற்காகவென்னில்: (அலக்ஷ்மீர்மே நஶ்யதாம்) பகவானுடைய நிக்ரஹமாகிற என்னுடைய மூதேவி அழியட்டும். (த்வாம் வ்ருணே) அதற்காகப் புருஷகாரபூதையான உன்னை வரிக்கிறேன். (அலக்ஷ்மீர் மே நஶ்யதாம்) "ஸா ஹி ஶ்ரீரம்ருதா ஸதாம்" [தை-ப்ரா 3.7] [ப்ரஹ்மவித்யையே நல்லோர்களுக்குச் செல்வமாகிறது.] என்று சொல்லப்

பட்ட ப்ரஹ்மவித்யாதாரித்ரியமானது அழியட்டும் என்றுமாம். (அலக்ஷ்மீர் மே நஶ்யதாம்) "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" [ஶேஷத்வச் செல்வம் நிரம்பியவன் லக்ஷ்மணன்] என்று சொல்லப் பட்ட அநந்யார்ஹஶேஷத்வச் செல்வமும், "ஸது நாக₃வர: ஶ்ரீமாந்" [அநந்யோபாயத்வச்செல்வம் நிரம்பிய கஜேந்திரன்] என்று சொல்லப்பட்ட அநந்யஶரணத்வச் செல்வமும், "அந்தரிக்ஷக₃த: ஶ்ரீமாந்" [(பெண்டு பிள்ளைகளாகிற போகங்களை விட்டு) அநந்ய போ₄க₃த்வச் செல்வத்தையுடையவனாய் ஆகாயத்திற் கிளம்பிய விபீஷணன்.] என்று சொல்லப்பட்ட அநந்யபோ₄க₃த்வச்செல்வமும் இன்மையாகிற ஏழ்மை ஒழியட்டும் என்றுமாம். ஆக இப்பொருள் களால், பகவானுடைய கோபத்தைப் போக்கடிக்கவும், அவன் விஷயமான அறிவைப்பெறவும், அவனே ஶேஷியும், உபாயமும், உபேயமும் எனனும் நினைவை அடையவும் நான் ஶ்ரீதேவியாகிய உம்மை உபாயமாக வரிக்கிறேன் எனறதாயிற்று. இவையன்றோ புருஷகாரபூதையான இப்பிராட்டியின் செயல்கள்.

இம்மந்திரத்தில் படிக்கப்பட்ட ஒவ்வொரு திருநாமமும் புருஷ காரத்வத்தைப் பூண்கட்டித் தருவதாகும். (சந்த்₃ராம் ஶரணமஹம் ப்ரபத்₃யே) "அபி₄த: பாவகோபமம்" [ரா-அ 99-26] [நாற்புறத் திலும் நெருங்கமுடியாத நெருப்புப்போலேயிருப்பவனே] எனப்பட்ட அவனைப்போலன்றியே, யாவரும் சென்று அடிவணங்கலாம்படி தண்மைமிக்கவளான உன்னை அடைகிறேன். (ப்ரப₄ாஸாம்-ஜ்வ லந்தீம்-ஶரணமஹம் ப்ரபத்₃யே) பஞ்சாக்நிவித்யையிற்சொன்ன ரீதி யிலே என்னைப் பிறப்பிக்கும் தாயாயிருக்கும உன்னை சரணமடை கிறேன். (யஶஸாம் ஶரணமஹம் ப்ரபத்யே) அவனுடைய ரூபத்தை யும், குணங்களையும் லக்ஷ₄கரிக்கும் படியான ரூபத்தையும், கருணை, பொறுமை, மென்மை வண்மை முதலான குணங்களையுமுடையவள் என்னும் மிக்க பெரும்புகழை உடையவளான உனனை சரணமடை கிறேன். (ஶ்ரியம் ஶரணமஹம் ப்ரபத்யே) புருஷகாரத்வத்தைப் பூண்கட்டித்தரும் தனிப்பெயரையுடைய உன்னை சரணமடைகிறேன. (லோகே தேவஜுஷ்டாம் ஶரணமஹம் ப்ரபத்யே) அவனோடு அகல கில்லேன் இறையும் என்னும் நித்யயோகத்தையுடைய உனனை சரணமடைகிறேன். என் இந்திரியங்களையும நியமிககவல்ல உனனை சரணமடைகிறேன். (உதாராம் ஶரணமஹம் ப்ரபத்யே) அவனிலும வண்மைமிக்கவளான உன்னை சரணமடைகிறேன். (பத்மநேமிம் ஶரணமஹம் ப்ரபத்யே) ஸ்ருஷ்டிகாலம் தொடங்கி என்னைக் கடா க்ஷித்து நிற்கும் உன்னை சரணமடைகிறேன். இப்படிப் புருஷகார

பூதையாயிருக்கும் பெரியபிராட்டியார் ஸகலசேதனர்க்கும் சரண மடையத்தகுந்தவளாயிருக்கிருன் என்னும் இவ்வருமறைப்பொருளே,

''சார்வு நமக்கென்றும் சக்கரத்தான், தண்டுழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்-காரார்ந்த
வானமருமின்னிமைக்கும் வண்தாமரை நெடுங்கண்
தேனமரும் பூமேல் திரு'' [மூன்-திருவ 100] என்றும்,

''அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பா
புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே''
[திருவாய் 6-10-10] என்றும்

''திருமால் நமக்கோரரணே'' [பெரியதிரு 11-4-2] என்றும்.

''வரனே மாதவனே மதுசூதா
மற்றோர் நல்துணை நின்னலாலிலேன்காண்''
[பெரியதிரு 7-7-4]

என்றும் ஆழ்வார்களும், '' த₃ாஸ இதி ப்ரபந்ந இதி ச '' [சது-2] என்று ஆளவந்தாரும், '' ப₄க₃வந்நாராயண '' [ஶரணாக₃திக₃த்யம்-1] என்று தொடங்கி எம்பெருமானரும் நிலைநாட்டினர்கள்.

''ஸர்வகாமப்ரத₃ாம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் |
க்ஷிப்ரப்ரஸாதி₃நீம் தே₃வீம் ஶரண்யாமநுசிந்தயேத் ||
அநேநைவ ப்ரபந்நஸ்ய ஶ்ரியம் தே₃வீம் ஸநாதநீம் |
பாபாநுஷங்க₃ஸ் ஸகலஸ் தத்க்ஷணாதே₃வ நஶ்யதி ||''

[ எல்லாக் காமங்களையும் அளிப்பவளும், அழகியவளும், ஸம்ஸாரக் கடலைக் கடக்கச்செய்பவளும், விரைவில் அருள்புரியுமவளும், சரண மடையத்தக்கவளுமான பிராட்டியைச் சிந்திக்கக்கடவன். இம்மந் திரத்தாலே பழையவளான பெரிய பிராட்டியைச் சரணமடைந்த வனுக்கு, பாபஸம்பந்தம் அக்கணத்திலேயே நசிக்கிறது.] என்று ஸ்வாயம்புவத்திலும், முன்பே எடுக்கப்பட்ட மற்றும் பற்பல லக்ஷ்மீ தந்த்ராதி பாஞ்சராத்ரவாக்யங்களிலும் இவ்வர்த்தம் உத்கோஷிக் கப்பட்டது.

आदित्यवर्णे तपसोऽधिजातो
वनस्पतिस्तव वृक्षोऽथ बिल्वः ।
तस्य फलानि तपसा नुदन्तु
मायान्तरायाश्च बाह्या अलक्ष्मीः ॥ ६ ॥

6. ஆதி₃த்யவர்ணே தபஸோऽதி₄ஜாதோ
வநஸ்பதிஸ் தவ வ்ருக்ஷோऽத₂ பி₃ல்வ: ।
தஸ்ய ப₂லாநி தபஸா நுத₃ந்து
மாயாந்தராயாஶ்ச பா₃ஹ்யா அலக்ஷ்மீ: ॥

பதவுரை:–**ஆதித்யவர்ணே!**–*ஸூர்யனிடமிருக்கும் வேத மயமான ஶப்தமாயிருப்பவளே!* **தவ**–*உன்னுடைய,* **தபஸ:**–*ஸங்கல்பத்திலிருந்து,* **அதி₄ஜாத:** — *ஸர்வமங்களங்களின் பொருட்டுப் பிறந்த,* **வநஸ்பதி:**—*சிறந்தமரமான,* (ய:) **பி₃ல்வ: வ்ருக்ஷ:**–*யாதொரு பில்வமரமுண்டோ,* **தஸ்ய ப₂லாநி**–*அதனுடைய பழங்கள்,* **தபஸா**–*ஹோமம் முதலான (என்னுடைய) தவத்தினால்,* **மாயா**–*(என்னுடைய) அஜ்ஞானத்தையும்,* **அந்தராயா: ச**–*விரோதிகளையும்,* **பா₃ஹ்யா அலக்ஷ்மீ: ச**–*(ஸ்ரீஸம்பந்தத்துக்குப்) புறம்பான தாரித்ரியங்களையும்,* **நுத₃ந்து**–*அழிக்கட்டும்.*

*முன் மந்திரத்திலே அலக்ஷ்மீநாசத்திற்குப் பிராட்டியை சரணம் பற்றினன். இம்மந்திரத்தில், 'அப்பிராட்டியும் வேணுமோ? அவளுடைய ஸம்பந்தம்பெற்ற வில்வப்பழமே அமையாதோ ஸகல விரோதி₄ நிவர்த்தனத்திற்கு?' என்கிறன்.*

*(ஆதித்யவர்ணே) "வர்ண-ப்ரேரணே" என்றும், "வர்ண வர்ண க்ரியாயாம்" என்றும் தாதுவாகையாலே, 'ஆதித்யனைத் தூண்டுபவள்' என்றும், 'ஆதித்யனை நிறம்பெறச்செய்பவள்' என்றும் பொருளாகிறது. ஆதித்யமண்டலத்தில் நாராயணனோடு எழுந்தருளியிருக்கிருளாகையாலே, சூரியனையும் நிறம்பெறச் செய்கிருளன்றே இப்பிராட்டி.*

**"ஆதி₃த்யம் வர்ணயாம்யேகா தேஜஸா யஶஸா ஶ்ரியா"**

[நான் ஒருத்தியே ஸூர்யனை என்தேஜஸ்ஸாலும், கீர்த்தியாலும், அழகாலும் நிறம்பெறச்செய்கிறேன்] என்று தந்திரத்திலும் இவ் வர்த்தம் ஆதரிக்கப்பட்டது. (ஆதித்யவர்ணே) சூரியனைப்போன்ற வர்ணத்தையுடையவளே என்றுமாம். "ஆதி₃த்யவர்ணம்" என்று புருஷஸூக்தத்தில் புகழப்படும் அவனுக்கு ஒத்தவளாயிருக்கை. உண்மையில் கருமுகில்போல் திருநிறத்தனை அப்பெருமான் ஆதித்யவர்ணனாவதும் இவளுடைய ஸந்நிதியாலேயன்றோ. (ஆதித்யவர்ணே) ஆதித்யனாகவுமிருப்பவள்; வர்ணமாகவுமிருப் பவள்; ஆதித்யவர்ணையாகவுமிருப்பவள். ஆதித்யமண்டலத்தி லிருப்பதாக வேதங்களில் உத்கோஷிக்கப்படும் ருக்யஜுஸ்ஸாம வேதங்களாகிற அக்ஷரராசியாயிருந்துகொண்டு, முக்காலத்திலு முள்ள பொருள்களை (சூரியனைப்போலே) பிரகாசிப்பித்துக்கொண்டு. அனைவர்க்கும் (அவனைப்போலே) கண்ணாயிருந்துகொண்டு வேத சப்த ஸ்வரூபிணியாயிருப்பவளாகையாலே, வர்ணஶப்தத்தாலும், ஆதித்யஶப்தத்தாலும். 'ஆதித்யவர்ணா' என்னும் ஶப்தத்தாலும் சொல்லத்தக்கவளாயிருப்பவள் என்கை.

"ஆதி₃த்யஸ்த₂ச வர்ணாத்மா பூ₄த்வா தி₃வ்யா த்ரயீமயீ।
ப்ரகாஶயந்தீ ஸர்வார்த்தா₂ந் அதீதாநாக₃தா நபி ||
பித்ருதே₃வமநுஷ்யாணாம் சக்ஷுரஸ்மி ஸநாதநம் ||".

[ஆதித்யனிடமிருக்கும் ருக்யஜுஸ்ஸாம வேதங்களின் வர்ணங் களாயிருந்துகொண்டு, முக்காலத்திலுமுள்ள பொருள்களைப் பிர காசிப்பித்துக்கொண்டு, பித்ருதேவ மநுஷ்யர்களுக்குப் பழைமை யான கண்ணாயிருக்கிறேன்.] என்று பிராட்டியாலும் இப்பொருள் ஆதரிக்கப்பட்டது. (ஆதி₃த்யவர்ணே) ஆதி₃பூ₄தவர்ணே! ஆதி வர்ணமான ஓங்காரத்திற்குப் பொருளாயிருப்பவள் என்றுமாம்.

"ஓங்காரஶ்சாத₂ஶப்₃த₃ஶ்ச த்₃வாவேதௌ ப்₃ரஹ்மண: புரா।
கண்டா₂ம் பி₄த்வா ப்ரநிர்யாதௌ தஸ்மாந்மாங்க₃ளிகாவுபௌ₄||"

[ஓங்காரமும், அத₂ஶப்தமும் ஆதிகாலத்தில் ப்ரஹ்மாவின் கழுத்திலிருந்து வெளிப்பட்டன. ஆகையால் இவையிரண்டும் மங்களகரமானவை.] என்று சாஸ்திரங்களிலே சொல்லப்பட்ட தாகையாலே ஓங்காரம் ஆதிவர்ணமாகிறது. "ஓங்காரோ ப₄க₃வாந் விஷ்ணு:" [தேஜோபிந்தூபநிஷத்] என்றும், "தஸ்ய வாசக: ப்ரணவ:" [பாதஞ்ஜல ஸூத்ரம்] [அப்பரம புருஷனைச் சொல்லுவது

ப்ரணவம்]என்றும், "தஸ்யப்ரக்ருதி லீநஸ்ய ய: பரஸ் ஸ மஹேஶ்வர:" [ஶத-நா-10][தன காரணமான அகாரத்திலடங்கிய ஓங்காரத்திற்குப் பொருளாயிருப்பவன் ஸர்வேஶ்வரன்.] என்றும், "ஓமித்யேகாக்ஷரம் ப்3ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" [கீதை] ['ஓம்' என்னும் ஒற்றையெழுத்தைச் சொல்லிக்கொண்டு அதற்குப் பொருளான என்னை நினைத்துக்கொண்டு எவனொருவன் இறந்து போகிறானோ...]என்றும அவ்வோங்காரத்திற்குப் பொருளாயிருப்பவன் பரமபுருஷன். க4ட ஶப்தம் க4டத்வவிசிஷ்டமான க4டத்திற்கு வாசகமாவது போலே, ஓங்காரமும ஸ்வரூப நிரூபகபூ4தையான இப்பிராட்டியோடு கூடிய அவனுக்கு வாசகமாகிறதாகையாலே இப்பிராட்டியும் ஓங்கார வாச்யை என்னக்குறையில்லை. "ஆதௌ த்ய:-ஸித்3த4:-ஆதி3த்ய:"

**ஆதி3பூ4தஶ்ச வர்ணோ மே தார: ப்ரத2மவாசக:।**
**தத்ர ஶாந்தோதி3தாநந்தா3 ந(ந்)த3ாம்யாத்மாநமாத்மநா ॥**
**தைலதா4ராவத3ச்சி2ந்நா தீ3ர்க்க4க4ண்டாநிநாதி3நீ।**
**ப்ரணவஸ்ய ஶிக2ா ஸூக்ஷ்மா ஸா மே ஶப்3த3மயீ தநு: ॥**
**தத்ர ப்3ரஹ்மணி நிஷ்ணாதோ மாம் த்3ராக3தி4க3மிஷ்யதி।**
**ஆதி3த்யவர்ணஜாதம் மே ஶப்3த3மய்யா உபஸ்தி2தம் ॥**
**ஶாந்தாபஶ்யாதி3ரூபேண வைக2ரீ வர்ணவாதி3நீ।**
**து3ஹாநா ஸகலாநர்த்த2ாந் தே4நு: காமது3க4ாஸ்மி ஸா ॥**
**ஏதாநாதி3த்ய வர்ணேதி மய்யர்த்த2ாந் ருஷயோ விது3:।**
**நவாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகாமப்ரபூரக: ॥"**

[ஆதிவர்ணமான ப்ரணவம் எனக்கு முதற்பெயராகும். அந்த ப்ரணவத்திலே சாந்தோதி3ததசையில் ஆநந்தத்தையுடைய நான் என்னைக்கொண்டே என்னைச் சொல்லிக்கொள்கிறேன். எண்ணெயொழுகைப்போலே இடைவிடாததாய், மணியைப்போலே தீர்க்கமாக சப்திப்பதாய், ப்ரணவத்தின் உச்சியாயிருப்பதான சதுர்த்யர்த்தமாத்திரை எனக்கு சப்தமயமான சரீரமாகும். வேதஸாரமான அதில் ஈடுபட்டவன் என்னை விரைவில் அடைவான். ஆதி3த்யனிடமுள்ள (அல்லது ஆதி3வர்ணமான ஓங்காரத்திலிருந்துண்டான) வேதாக்ஷரங்கள் சப்தஸ்வரூபிணியான என்னிடம் ஶாந்தா பஶ்யா முதலான உருவுடன் வர்ணத்தைச் சொல்லும் ரீதியாக என்னை அடைந்துள்ளன. சப்தஸ்வரூபிணியான நான் கேட்டதெல்லாம் கொடுக்கும்காமதேனுவைப்போலே எல்லாப்பொருள்களையும் கொடுக்கிறேன். ரிஷிகள் ஆதித்யவர்ணையான என்னிடம் இப்பொருள்களை

அறிகிறார்கள். ஒன்பது எழுத்துக்கொண்ட " ஓம் ஆதித்யவர்ணாயை நம: " என்னும் இம்மந்திரம் எல்லாக்காமங்களையும் பூர்த்தி செய்விக்கும்.] என்று இப்பொருளும் மந்திரப்பெருமையும் தந்திரத்திலே உத்கோஷிக்கப்பட்டது.

(தபஸோதி₄ஜாத:) உன்னுடைய ஸங்கல்பத்தாலே பிறந்தது. 'தபஆலோசநே' என்று தாதுவாகையாலும், "யஸ்ய ஜ்ஞாநமயம் தப:" [ஶ்வே] [எந்தப் பரமபுருஷனுடைய தவம் ஸங்கல்பாத்மக ஜ்ஞாநரூபமாயிருக்கிறதோ] என்று ப்ரமாணமுள்ளதாகையாலும், " ஸ தபோதப்யத " [நாராயணோபனிஷத்] [அந்த நாராயணன் ஸங்கல்பரூபமான தவத்தைச் செய்தான்] என்றவிடத்திற்போலே இங்கும் தபஶ்ஶப்தம் ஸங்கல்பத்தைச் சொல்லுகிறது. (அதி₄ஜாத:) ஸர்மங்களங்களையும் அதி₄கரித்து — (முன்னிட்டு) — பிறந்தது. (வநஸ்பதி:) வநத்திற்குத் தலைமை வகிக்கும் வில்வமரம். (தவ வ்ருக்ஷோத₂ பி₃ல்வ:) உன்னுடைய வ்ருக்ஷமாயிருக்கும் வில்வமரம். அத₂ஶப்தம் கீழே காட்டிய ப்ரமாணத்தின்படியே மங்களவாசகம். வில்வமரம் பரமமங்களமானது என்று உணர்த்துகிறபடி. (தவ வ்ருக்ஷோத₂ பில்வ;) ஆதித்யவர்ணையான உன்னுடைய விளையாட்டின் பொருட்டு உன்நாதனாலே ஆதித்யனோடு கூடவே ஸ்ருஷ்டிக்கப்பட்டமரம். " பைல்₃வோ யூபோ ப₄வத்யஸௌ வா ஆதி₃த்யோ யதோஜாயத ததோ பி₃ல்வ உத₃திஷ்டத் " [தை-ஸம் 2-1-81] [பில்வமரத்தினாலான யூபமிருக்கவேண்டும்; இந்த ஆதித்யன் எந்தப் பரமபுருஷனிடமிருந்து உண்டானானோ, அந்தப் பரமபுருஷனிடமிருந்தே பில்வமரம் உண்டாயிற்று.] என்று வேதத்தில் சொல்லப்பட்டதன்றோ. (தஸ்ய ப₂லாநி தபஸா நுத₃ந்து) அதனுடைய பழங்களைக்கொண்டு நான் செய்யும் ஹோமம், அதைக் காண்பது, தொடுவது, சொல்லுவது. நினைப்பது முதலான தவங்களாலே, அப்பழங்கள் என் பாவத்தைப் போக்கடிக்கட்டும்.

"ஶ்ரீகாமோ ஜுஹுயாத₃க்₃னௌ
பத்₃மைர்பி₃ல்வைஸ் தத₂ா ப₂லை:"

[செல்வத்தை விரும்புமவன் தாமரைகளாலும், வில்வப்பழங்களாலும் அக்நியில் ஹோமம் செய்யக்கடவன்.] என்று போதாயனராலும் சொல்லப்பட்டதன்றோ. எதைப் போக்கடிப்பது என்னில்: (மாயா) அஜ்ஞானத்தை. " மாயா வயுநம் ஜ்ஞாநம் " என்று மாயாஶப்தம் ஞானத்தைச் சொல்லுமாகையால் தவறான ஞானமான அஜ்ஞானத்

தையும் சொல்லும். (அந்தராயா: ப₃ாஹ்யா:) லக்ஷ்மீஸம்பந்தத்துக்குப் புறம்பான ப்ரக்ருதிஸம்பந்தம், கர்மம் முதலான விரோதிகளையும் (அலக்ஷ்மீ:) ஜ்யேஷ்டை (சேட்டை) எனப்படும் மூதேவியையும்.

''அலக்ஷ்மீஸ்ச மயா ப்ரோக்தா பத்நீ யா து₃ஸ்ஸஹஸ்ய ச।
நாராயணபத₃ம் த்₄யாத்வா நஸ்யத்யேவ ந ஸம்ஸய:॥''

*[துஸ்ஸஹ பத்னியான மூதேவியாகிற அலக்ஷ்மி, நாராயணனின திருவடிகளை தியானிப்பதால் அழிகிருள் என்பதில் ஐயமில்லை.] என்று லிங்கபுராணத்திலும் சொல்லப்பட்டதன்றே.*

उपैतु मां देवसखः कीर्तिश्च मणिना सह।
प्रादुर्भूतोऽस्मि राष्ट्रेऽस्मिन् कीर्तिमृद्धिं ददातु मे॥७॥

7. உபைது மாம் தே₃வஸக₂: கீர்த்திஸ்ச மணிநா ஸஹ।
ப்ராது₃ர்பூ₄தோऽஸ்மி ராஷ்ட்ரேஸ்மிந் கீர்த்திம்ருத்₃தி₄ர் த₃த₃ாது மே॥

**பதவுரை:**– **கீர்த்தி:**–*லக்ஷ்மீதேவியும்.* **தேவஸக₂:**-*(அக்னி) தேவனுக்கு நண்பனுன வாயுவும்.* **மணிநா ஸஹ**—*ஆதார வஹ்நியோடு கூட.* **மாம்**—*என்னை.* **உபைது**—*அடையட்டும்;* **அஸ்மிந் ராஷ்ட்ரே**—*கர்மபூமியான இந்த தேசத்தில்.* **ப்ராது₃ர் பூ₄த: அஸ்மி**—*நான் தோன்றியிருக்கிறேன்:* **ருத்₃தி₄:**—*(ஸ்வரூபரூபகுண விபூதி) ஸம்ருத்தி பெற்றிருக்கும் லக்ஷ்மீதேவி* **கீர்த்திம்**—*புகழை.* **மே**—*எனக்கு.* **த₃த₃ாது**—*கொடுக்கட்டும்.*

*இம்மந்திரத்தில் பக்தியோகத்தாலே லக்ஷ்மீதேவியை தியானிக்கிருன்.*

*(உபைது மாம் தேவஸக₂: கீர்த்திஸ்ச மணிநா ஸஹ) தேஹத்தினுள் மூலாதார வஹ்நி என்னும் அக்நியொன்று இருப்பதாகவும், அதனுள் யோகபத்மங்கள் எனப்படும் பன்னிரண்டு தாமரைகள் உள்ளதாகவும், அக்நியை எப்போதும் விட்டுப்பிரியாமலிருப்பவனும் அக்நியைப் போஷிப்பவனுமான வாயுதேவனுலே கிஞ்சித்கரிக்கப்பெற்று, தாமரையாளான பிராட்டி, அந்த யோக பத்மங்களிலே ஒவ்வொன்றிலும் தங்கித்தங்கி இளைப்பாறிப் பனி*

ரண்டாவது பத்மமாகிற இருதயகமலத்தை அடைந்து நிலை நிற்பதாகவும், அங்கே யோகிகள் பிராட்டியை தியானித்துப் பேரின்பமடைவதாகவும் யோகசாஸ்திர ஸித்தாந்தமாகும். அந்த ரீதி இங்கு தெரிவிக்கப்படுகிறது. (உபைது மாம் தே₃வஸக₂:) அக்னிதேவனுக்கு நண்பனுன வாயு என்னை அடையட்டும். பிராட்டிக்குக் கிஞ்சித்காரம் செய்யப்பெற்ற பாக்யமுடையவனன்ரு இவன். அதனுலே இவனையும் அடைய விரும்புகிருன். (மணிநா ஸஹ தே₃வஸக:) மூலாதாரவஹ்நியோடு கூட, அவ்வக்னிக்கு நண்பனுன வாயு. 'மணி' யென்னும் சொலுல் அக்னியைச்சொல்லும்; இங்கு யோகப்ரகரணமாகையாலே மூலாதாரவஹ்நியைச் சொல்லு கிறது. (கீர்த்திஶ்ச) லக்ஷ்மீதேவியும் என்னை அடையட்டும். சகாரம் இவளுடைய ப்ராதாந்யத்தைக் காட்டுகிறது. இவளுக்குக் கிங்கரர் களாயிருப்பதாலேயே வாயுவும், அக்னியும் ப்ராப்யராகிருர்கள் என்று பாவம். (கீர்த்தி:) புகழே வடிவெடுத்தவளாயிருப்பவளா கையாலே 'கீர்த்தி' என்றே சொல்லப்படுமவள். 'யஶஸா' என்றவிடத்தில் காட்டப்பட்ட ப்ரமாணங்களை அனுஸந்திப்பது. (கீர்த்தி:) "க்ரு விக்ஷேபே" என்று தாதுவாகையாலே, (கிரணங் களை) எறிபவள் '(வாயுவினுல் பத்மங்களில்) ஸஞ்சரிக்கும்படி செய்யப்படுபவள்' என்னும் இரண்டு பொருள்களும் கீர்த்தி என் னும் திருநாமத்துக்கு உண்டு. யோகபத்மங்களிலே, மந்தமாருதம் வீசப் பெரியபிராட்டியார் ஸஞ்சரிக்கும்போது, "**ஆத்மகாந்த்யா விஶ்வமாப்யாயயந்த்யா**" [ஸ்ரீவைகுண்டகத்யம்] [தன் ஒளியாலே எல்லாவற்றையும் நிறைத்துக்கொணடிருக்கும் பிராட்டி] என்ருப் போலே யோகிகளின் தேஹம் முழுவதிலும் தன் ஒளியை நிறைத் துக்கொண்டு எழுந்தருளியிருக்கிருளாகையாலே கீர்த்தியெனப் படுகிருள் என்று முதற்பொருள்; வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் எட்டாத ஸௌகுமார்யத்தை உடையவளான இப்பிராட்டி ஒரு தாமரையிலிருந்து மற்ருெரு தாமரைக்கு எழுந்தருளுவதைப் பார்த்தால், காற்றினுல் எறியப்படும் பூப்போலே, இந்த மந்த மாருதத்தினுலேதான் இப்பூமகள் பூவிலிருந்து பூவாக ஸஞ்சரிக்கும் படி செய்யப்படுகிருளோ என்னும்படியுள்ளதாகையாலும் கீர்த்தி எனப்படுகிருள் என்று இரண்டாவது பொருள். இவ்விரண்டு பொருள்களும் மந்திரப்பெருமையும்,

**"கிரந்தீ கிரணுந் லோகே கிரதீ சோத்தரோத்தரம் |**
**வாயுநா தே₃வமித்ரேண மணிநாத₄ரவஹ்நிநா ||**

ஶனைர் விஶ்ரம்ய விஶ்ரம்ய பத்ரேஷு ஜலஜந்மநாம் |
த்₃வாத₃ஶாநாம் ததஶ்சோர்த்₄வம் ப₄ஜாமி த்₃வாத₃ஶாந்திமம்||
கீர்த்தயந்தி தத: கீர்த்திம் முநயோ மாம் மநீஷிண: |
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ யோகதை₃வமல்யதா₃யக: ||

[தேஹம் முழுவதும் கிரணங்களைப் பரப்புமவளாய், அக்நி தேவனின் நண்பனுன வாயுவாலும், மணியெனப்படும் மூலாதார வஹ்நியாலும் மேன்மேலுள்ள பன்னிரண்டு தாமரை இதழிலும் மெள்ளமெள்ள ஸஞ்சரிப்பவளாய் அப்படி ஸஞ்சரித்து எல்லா வற்றுக்கும் மேலேயிருக்கும் பனிரண்டாவது தாமரையை அடைகிறேன் நான. மேலான மனத்தையுடையவர்களான முனிவர்கள் இக்காரணத்தாலேயே என்னை 'கீர்த்தி' என்று உரைக்கிறார்கள். ஐந்து எழுத்துக்கொண்ட "ஓம் கீர்த்யை நம:" என்னும் இமமந்திரம் யோகதசையிலே மலங்கள் நீங்கச்செய்யும்] என்று லக்ஷ்மீ தந்த்ரத்திலே பிராட்டியாலும் உத்கோஷிக்கப்பட்டன.

(ப்ராது₃ர்பூ₄தோஸ்மி ராஷ்ட்ரேஸ்மிந்) பக்தியோகம் முதலானவற்றை அநுஷ்டிக்கத்தக்க கர்மபூமியிலே நான் பிறந்திருக்கிறேன. 'தே₃ஶோயம் ஸர்வகாமது₄க்' [இந்த தேசம் எல்லா இஷ்டங்களையும் தரும்] எனகிறபடியான பகவத் ஸமபந்தம் பெற்ற தேசத்திலே பிறந்திருக்கிறேன். (கீர்த்திம் ருத்₃தி₄ர் த₃தா₃து மே) ஸ்வரூபரூப குண விபூதிகளால் ஸம்ருத்திபெற்றிருக்கையாலே 'ருத்தி' எனப்படும் பிராட்டி எனக்கு பகவத் பக்தியால் வரும் பெருமபுகழைத் தருவாளாக. (ருத்₃தி₄:) "ப₄க₃வந்நாராயணுபி₄மதாநுருபஸ்வரூபரூப கு₃ணவிப₄வைஶ்வர்ய ஶீலாத்₃யநவதி₄காதிஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ணகு₃ணும்" [பகவானுன நாராயணனுக்குப் பிரியமானவையும், தகுந்தவையுமான ஸ்வரூபமென்ன, ரூபமென்ன, ரூபகுணமென்ன, விபவமென்ன, ஐச்வர்யம், சீலம முதலான எல்லையற்ற மேன்மையையுடையனவாய், எண்ணிக்கையற்றனவான கல்யாணகுணக் கூட்டங்களென்ன ஆகிய இவற்றை உடையவளான பிராட்டியை] என்று கத்யாரம்பத்திலே பாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே ஸ்வரூபரூபகுணவிபூதி ஸம்ருத்தியை உடையவள் என்கை. "யதா₂ ஸர்வக₃தோ விஷ்ணுஸ் ததை₂வேயம் த்₃விஜோத்தம" [வி-பு 1-8-17] [ப்ராஹ்மணோத்தமரே! எப்படி பகவான் ஸர்வவ்யாபியாயிருக்கிறுனே, அப்படி இப்பிராட்டியும் ஸர்வவ்யாபினியாயிருக்கிறள்.] என்றும், "த்வயைதத்₃ விஷ்ணுநா சாம்ப₃ ஜக₃த்₃வ்யாப்தம் சராசரம்" [வி-பு 1-9-126] [தாயே! உம்மாலும், விஷ்ணுவாலும் ஸ்தாவர

ஜங்கமங்களடங்கிய இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது] என்றும், "யுக்தா ராமஸ்ய பவதீ" [ரா-யு 116-47] [பிராட்டியே! நீர் ராம பிரானுக்குத் தகுந்தவர்] என்றும், "ஸதா₃ தவைவோசிதயா" [ஸ்தோ-ர-38] [எல்லா நிலைகளிலும் உனக்கே தகுந்தவளான பிராட்டியோடு] என்றும் சொல்லுகிறபடியே இவளுடைய ஸ்வ ரூபம் அவனுடையதோடு ஒக்கச்சொல்லலாம்படி ஸம்ருத்தமாயிருக் கும். "அஸிதேக்ஷணு" [ரா-ஸு 16-5] [கறுத்த கண்ணழகில் அவனையும் விஞ்சிநிற்கும் பிராட்டி] என்றும், "மெல்லியல்தோள் தோய்ந்தாய்" [திருநெடு-13] என்றும். "வண்டார் பூமா மலர் மங்கை மணநோக்கமுண்டானே" [பெரியதிரு 8-10-1] என்றும், "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணும்" [ரா-ஸு 66-10] [கறுத்த கண்களையுடைய பிராட்டியைப் பிரிந்து கணநேரமும் வாழ மாட்டேன்] என்றும் இவளுடைய ரூபம் அவனிலும் விஞ்சிய அழகையுடையதாகவும், அவனுக்கும் த₄ாரகபோஷகமானஉண்ணும் சோறுபருகுநீராகவுமிருக்கையாலே ஸுஸம்ருத்மாயிருக்கும். குணங் கள் அவனுடைய குணங்களை லக்ஷ₄கரிக்கும்படியிருக்கையாலே அதிஸம்ருத்தமாயிருக்கும். விபவங்கள். "ஸர்வாந் போ₄க₃ாந் பரித் யஜ்ய" [ரா-ஸு 16-19] [(அவர் விபூதியிலும் விஞ்சியிருக்கும்) லீலோபகரணபோகோகரணங்கள் எல்லாவற்றையும் விட்டு] என் றும், "முற்றிலும் பைங்கிளியும் பந்துமூசலும் பேசுகின்ற சிற்றில் மென்பூவையும் விட்டகன்ற செழுங்கோதை" [பெரியதிரு 3-7-8] என்றும், "பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள்" [திருவாய் 6-7-3] என்றும் சொல்லுகிறபடியே அவன் விபூதியிலும் விஞ்சியதாய், "ஶேஷித்வே பரம: புமாந்" [ஸ்ரீகுண-22] [உன் எஜமானனுயிருக்கும் பதவியிலே நியமிக்கப்பெற்று, பர்மபுருஷனும் உன் விபூதியாகிறுன்.] என்கிறபடியே அவனையும் உட்கொண்டதா யிருக்கையாலே மிகவும் ஸம்ருத்தமாயிருக்கும். "அர்த்த₄யாமி இதி ருத்₃தி₄:" [(விஷ்ணுவை) உகப்பிக்கிறேனுகையால் ருத்தி எனப்படு கிறேன்] என்றும் ருத்₃தி₄ஶப்தத்திற்குப் பொருள்கொள்ளலாம். இக் காரணங்களாலே 'ருத்தி' எனப்படுகிறுள் பிராட்டி. யோகிகளின் உடலினுள் இருக்கும் பனிரண்டு யோகபத்மங்களிலும் ஸஞ்சரிக்கும் போது ஒவ்வொரு பத்மத்திலும் முந்தின பத்மத்திலிருந்ததைக் காட்டிலும் ரூபகுணங்களாலே ஒளிவிஞ்சி நிற்பவளாகையாலே 'ருத்தி' எனப்படுவதாகவும் கொள்ளலாம். 'கீர்த்திமருத்திம்' என்றும், "கீர்திவ்ருத்திம்" என்றும், முதலர்த்தத்தில் "மநுநா ஸஹ' எனறும் 'தேவி ஸஹ' என்றும் பலவிதமாகப் பாடம்

காண்கிறது. அப்பாடங்கள் லக்ஷ்மீ தந்திரத்திலே பிராட்டியருளிச் செய்த பொருளுக்கு விருத்தமாகையால் அநாதரிக்கத்தக்கவை. நிற்க. 'ருத்தி' என்னும் திருநாமத்துக்குள்ள இப்பொருள்களும்,

''ருத்₃த₄ாऽஸ்ம்யஹம் கு₃ணைர் விஷ்ணோர்த்த₄யாமி ச யோகி₃ந:|
பத்ரேஷு யோகபத்₃மாநாமாத₄ாராந்தரசாரிணாம் ||
உத்தரோத்தரம் ருத்₃த்₄யந்தீ ப₄ஜந்தீ விஸ்த்ருதிம் பராம் |
ருத்₃தி₄ம் ருத்₃த₄ாம் தத: ப்ராஹுர் யோகி₃நோ யோக₃தீ₃பிநீம்||

[ஆத்மகுணங்களாலும், தேஹகுணங்களாலும் நான் விஷ்ணுவைக் காட்டிலும் ஸம்ருத்தி பெற்றிருக்கிறேன்: அவரை உகப்பிக்கிறேன். யோகிகளினுடைய மூலாதாரத்தினுள் இருக்கும் யோகபத்மங்களின் இதழ்களில் மேல் மேலே செல்லும்போது மேலான விரிவை அடைந்து ஸம்ருத்தி பெற்றவளாய் ஒளிவிஞ்சி நிற்கிறேன். இப்படி ஸம்ருத்தி பெற்றிருக்கையாலே, யோகத்தை ஒளிபெறச்செய்யும் என்னை ருத்₃தி₄ என்று அழைக்கின்றனர். என்று தந்த்ரத்திலே உத்கோஷிக்கப்பட்டது. (கீர்த்தி: உபைது-கீர்த்திம் ததாது) 'கீர்த்தி' என்னும் பெயர்பெற்றவளாகையாலும், கீர்த்தியே வடிவெடுத்தவளாகையாலும் இவளே கீர்த்தியைத் தரவல்லவள் என்று பாவம். இம்மந்திரத்துக்குத் தனித்துப் பலன் படிக்கவில்லையாகையால், மத்ய மணிந்யாயத்தாலே '' பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ யோக₃வைமல்யதா₃யக: '' [ஐந்து எழுத்துக்கொண்ட ''ஓம் ருத்₃த்₄யை நம:'' என்ற இம்மந்திரம் யோகதசையில் மலங்கள் நீங்கச்செய்யும்] என்று சொன்ற மந்திரத்திற்குப் படித்த பலனே இதற்கும் பலனாக அடுக்கும்.

क्षुत्पिपासां मलां ज्येष्ठामलक्ष्मीं नाशयाम्यहम् ।
अभूतिमसमृद्धिं च सर्वान् निर्णुद मे गृहात् ॥ ८ ॥

8. க்ஷுத்பிபாஸாம் மலாம் ஜ்யேஷ்டா₂மலக்ஷ்மீம் நாஶயாம்யஹம்|
அபூ₄திமஸம்ருத்₃தி₄ம் ச ஸர்வாந் நிர்ணுத₃ மே க்₃ருஹாத் ||

பதவுரை:-க்ஷுத்-பசியையும், பிபாஸாம்-தாஹத்தையும், மலாம்—தோஷங்களுக்குக்காரணமானவளும், ஜ்யேஷ்டா₂ம்—(ஸ்ரீதேவிக்கு) மூத்தவளுமான, அலக்ஷ்மீம்—மூதேவியையும்,

**அஹம்**—நான், **நாஶயாமி**— அழிக்கிறேன்.(ஹேலக்ஷ்மீதேவி!) **அபூ₄திம்**-ஏழ்மையும், **அஸம்ருத்₃தி₄ம்**-ஆத்மகுணமின்மையும் ஆகிய, **ஸர்வாந்**—எல்லாவற்றையும், **மே**—என்னுடைய, **க்₃ருஹாத்**—வீட்டிலிருந்து, **நிர்ணுத₃**—அழிப்பாயாக.

'எனக்குக் கீர்த்தியை ஸ்ரீதேவியானவள் தருவாளாக' என்று சென்ற மந்திரத்தில் இஷ்ட ப்ராப்தியைப் பிரார்த்தித்தான். அநிஷ்ட நிவ்ருத்தியையும் அவனே செய்வானாக என்று பிரார்த்திக்கிருன் இம்மந்திரத்தில்.

(க்ஷுத்)பசியை. இவ்வுலகத்தில் இவனைத் துன்புறுத்துமவைகளுள் பசியன்றே தலையானது. 'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்றன்றே சொல்லப்படுகிறது. க்ஷுத் க₂லுவை மநுஷ்யஸ்ய ப்₄ராத்ருவ்ய:''[தை-ஸம் 6-1-21] [பசியென்பது மனிதனுக்கு விரோதி₄யாகும்] என்று வேதமும் விளம்பிற்றன்றே. ஆகையாலே அழிக்க வேண்டியவைகளில் முதலாவதாகப் பசியை எடுத்துப்பேசுகிருன். (பிபாஸாம்) தாஹத்தை. இது மற்றுமுள்ள இந்திரியங்களின் ஆசைகள் முழுவதற்கும் உபலக்ஷணம். (க்ஷுத் பிபாஸாம் நாஶயாமி) ''விஜிக₄த்ஸ: அபிபாஸ:'' [சாந் 8-7-1] [பசியற்றவன்; தாகமற்றவன்] என்னும் நிலையை அடையவிரும்புகிறேன். இவ்விரண்டையும் எடுத்தது ''அபஹத பாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோக:'' [சாந் 8-7-1] என்று இதற்கு முன் சொல்லப்பட்ட பாபம், கிழத்தனம், மரணம், துன்பம் என்பவற்றுக்கும், ''தோற்றம் வான் பிணி மூப்பு'' [திருவாய் 8-3-2] என்றும் ''பிணி மூப்புத்துன்பம்'' [திருமாலை-3] என்றும் சொல்லப்பட்டவற்றுக்கும் உபலக்ஷணம். இவற்றுக்குக் காரணமான மூதேவியையும் அழியச்செய்கிறேன் எனகிருன் அடுத்தபடியாக:- (மலாம்) தோஷமே வடிவெடுத்தவளை. (ஜ்யேஷ்டாம்) மூதேவியை. திருப்பாற்கடலைக் கடையும்போது தோன்றிய பல வஸ்துக்களில் இவளும் ஒருத்தியென்று புராண வித்துக்கள் பகர்வர். (மலாம் ஜ்யேஷ்டாம்) குணமெல்லாம் வடிவெடுத்தவளான ஸ்ரீதேவிக்கு முன் தோஷமெல்லாம் வடிவெடுத்த இவள் பிறந்தாளாகையாலே, 'ஜ்யேஷ்டை' என்றும் 'மூதேவி' [மூத்ததேவி] என்றும் சொல்லப்படுகிருள் எனபர். ''கெருடவாகனனும் நிற்கச்சேட்டை தன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே'' [திருமாலை-10] என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் அருளினரன்றே. (ஜ்யேஷ்ட₂ாமலக்ஷ்மீம் நாஶயாம்யஹம்)

"அலக்ஷ்மீர்ச மயா ப்ரோக்தா பத்நீ யா துஸ்ஸஹஸ்ய ச ||
நாராயணபதம் த்யாத்வா நஶ்யத்யேவ ந ஸம்ஶய:"

[துஸ்ஸஹனின் பத்தினியாக என்னால் சொல்லப்பட்ட அலக்ஷ்மியானவள் நாராயணனின திருவடியை நினைத்தால் நசிப்பாளென்பதில் ஸந்தேஹமில்லை.] என்று லிங்க புராணத்திற் சொன்னபடியே லக்ஷ்மீதேவிக்கு எதிர்த்தட்டாயிருக்கும் அலக்ஷ்மியை ஸ்ரீமந்நாராயணனின் அருளென்னும தண்டால் அடித்து அழிக்கப்போகிறேன் என்று கருத்து.

"அஹம் நாஶயாமி' [நான் அழிக்கப்போகிறேன்] என்றுயே; உன் முயற்சியால் நீ செய்யப்போகும் காரியமோ இது?" என்று கேட்க, பிராட்டியே! இவையெல்லாவற்றையும் நீயே அழித்தருள வேண்டும்; எலியெலும்பனுன என்னாலாவதொன்று உண்டோ?" என்று பிராட்டியைப் பிரார்த்திக்கிருன பின்னடிகளாலே. (அபூதிம்) தேஹஸம்பந்தியான மாடு, மனை, மக்கள், சுற்றம், வீடு, தோட்டம் பொருள் முதலான செல்வங்களில்லாமையாகிற தாரித்ரியத்தையும, (அஸம்ருத்திம் ச) முன் சொன்னவற்றைப் போலே நிலையற்றவையாயிராமல், நிலையான செல்வமான சமம் தமம் முதலான ஆத்மகுணச் செல்வமில்லாமையையும். உண்மையில் ஆத்மகுணங்களே இச்சேதனனுக்கு நிலைநின்ற செல்வமாகையாலே 'ஸம்ருத்தி' என்னப்படுகின்றன. (ஸர்வாந்) இவைகளையும், கீழே சொல்லப்பட்ட பசி தாகம் முதலான எல்லாவற்றையும். "ஸர்வாந் நாசயாமி' என்று கீழோடு கூட்டிப் பொருள்கொள்வாருமுண்டு. (நிர்ணுத மே க்ருஹாத்) இவையெல்லாவற்றையும் என் வீட்டை விட்டே நீ ஓழிக்கவேண்டும். (க்ஷுத்பிபாஸாம் நாசயாமி) தாயிருக்கும்போது பசி தாஹங்கள் வருத்துமோ? (மலாம் நாசயாமி) மங்களஸ்வரூபிணியிருக்கும்போது மலஸ்வரூபிணி நிற்கமுடியுமோ? (ஜ்யேஷ்டாம் நாஶயாமி) ஸ்ரீதேவியிருக்குமபோது மூதேவி மூச்சு விடமுடியுமோ? (அலக்ஷ்மீம் நாசயாமி) லக்ஷ்மி எழுந்தருளியிருக்குமிடத்தில் அலக்ஷ்மி அழியாதிருக்கமுடியுமோ? (அபூதிமஸம்ருத்திம நிர்ணுத) 'ருத்தி' எனறு சொல்லபபடும் செல்வியிருக்குமிடத்தில் ஏழ்மை வசிக்கமுடியுமோ?

ஆக, இந்த மந்திரத்தாலும், முன் மந்திரத்தாலும், இஷ்டப்ராப்தியையும், அநிஷ்ட நிவ்ருத்தியையும் பிரார்த்திதாயிற்று.

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम्।
ईश्वरीं सर्वभूतानां त्वामिहोपह्वये श्रियम्॥९॥

9. க$_3$ந்த$_4$த்$_3$வாராம் து$_3$ராத$_4$ர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம்।
ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம த்வாமிஹோபஹ்வயே ஶ்ரியம்॥

பதவுரை:—க$_3$ந்த$_4$த்$_3$வாராம்—கந்தங்களுக்குக் காரணமாயிருப்பவளும், து$_3$ராத$_3$ர்ஷாம்—(எவராலும்) ஜயிக்கமுடியாதவளும், நித்யபுஷ்டாம்-எப்போதும் குணபூர்த்தியை உடையவளும், கரீஷிணீம்—யானைகளுக்கு ஈஶ்வரியாய் அவற்றின் மேல் ஏறிச்செல்லுமவளும், ஸர்வபூ$_4$தாநாம் ஈஶ்வரீம்-எல்லா ஜீவராசிகளுக்கும் ஈச்வரியும் ஶ்ரியம் த்வாம்-ஸ்ரீதேவியுமான உம்மை, இஹ-இங்கு, உபஹ்வயே-அழைக்கிறேன்.

"ஸர்வாந் நிர்ணுத$_3$ மே க்$_3$ருஹாத்" என்று பிரார்த்தித்துப் பிராட்டியின் அருளாலே எல்லா அமங்களங்களையும் தன் வீட்டிலிருந்து போக்கடித்துக்கொண்டதனால், ஸர்வமங்களாகாரையான பிராட்டியின் வாஸத்துக்கு யோக்யமாயிருக்கும் தன் வீட்டில் நித்ய வாஸம் செய்யும்படி ஸர்வேச்வரியான பிராட்டியை அழைக்கிருன் இம்மந்திரத்தில்.

(க$_3$ந்த$_4$த்$_3$வாராம்)த்வாரம்-காரணம். 'க$_3$ந்த$_4$ம்' என்னும் பதம் ஶப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் என்னும் நான்கு குணங்களுக்கும் உபலக்ஷணமாகி, பூநிலாய ஐந்து குணங்களையும், அவற்றுக்கு இருப்பிடமான பூமி முதலான ஐம்பெரும் பூதங்களையும் குறிக்கிறது. 'க$_3$ந்த$_4$த்$_3$வாரா' என்னும் திருநாமம் இவ்வைந்து பூதங்களையும், அவற்றின் குணங்களையும் தன்னை அறியும் விஷயத்தில் காரணமாகக் கொண்டவள் என்று பொருள்படுகிறது. "நிற்கின்றதெல்லாம் நெடுமால்" [நான்-திருவ-54] என்கிறபடியே எப்பொருளைக் காண்பதும், அவனையறிவதற்கே காரணமாகிறதாகையாலும். அவனையறிவது, தத$_3$ந்தர்ப$_4$ாவந்யாயத்தாலே அவனுக்கு ஸ்வரூபநிரூபகபூ$_4$தையான பிராட்டியை அறிவதற்குக்காரணமாகையாலும் பிராட்டி 'க$_3$ந்த$_4$த்$_3$வாரா' [கந்தாதிகளை (தன்னை அறியும் விஷயத்தில்) காரணமாகக் கொண்டவள்] என்னும் பெயரைப் பெறுகிருள். (க$_3$ந்த$_4$த்$_3$வாராம்)புண்யகந்தங்களுக்கெல்லாம் காரணபூதை என்றும் பொருள் கொள்ளலாம். "ஸர்வக$_3$ந்த$_4$:" [எல்லா

நறுமணங்களையுமுடையவன்] என்று ஓதப்படும் வஸ்துவைப் பற்றி நிற்பவளாகையாலும், தாமரைப்பூவில் மணத்தை உபாதானமாகக் கொண்டு உருவானவள் இப்பூமகள் என்னும்படியிருக்கையாலும் நற்கந்தங்களுக்கெல்லாம் உத்பத்தி ஸ்தானமாயிருப்பவள் என்கை. இவ்விரண்டு பொருள்களும்,

‘‘க$_3$ந்த$_4$ாத$_3$ய: ப்ருதி$_2$வ்யாத்$_3$யா த்$_3$வாராணி மம வேத$_3$நே |
ஸர்வேஷாம் புண்யக$_3$ந்த$_3$ாநாம் த்$_3$வாரபூ$_4$தாஸ்மி ஶாஶ்வதீ ||
க$_3$ந்த$_4$த்$_3$வாரேதி மாம் ப்ராஹுர் விப்ரா வேத$_3$ாந்தபாரக$_3$ா: ||’’

[கந்தம் முதலானவையும், பூமிமுதலானவையும் என்னை அறியக் காரணமாயுள்ளன. நற்கந்தங்களுக்கெல்லாம் நித்யமான காரணமாயிருக்கிறேன நான். (இக்காரணங்களால்) வேதாந்தத்தைக் கரைகண்ட அந்தணர் .‘கந்தத்வாரா’ என்று என்னைக் கூறுகின்றனர்.] என்று தந்திரத்திலும் கோஷிக்கப்பட்டது. (து$_3$ராத$_4$ர்ஷாம்) அஸுரராக்ஷஸர்களாலே அவமதிக்கமுடியாதவள்.

‘‘கத$_2$ம் த்வம் தஸ்ய வைதே$_3$ஹீம் ரக்ஷிதாம் ஸ்வேந தேஜஸா |
இச்ச$_2$ஸி ப்ரஸப$_4$ம் ஹர்த்தும் ப்ரப$_4$ாமிவ விவஸ்வத: ||
ந ஸா த$_4$ர்ஷயிதும் ஶக்யா மைதி$_2$ல்யோஜஸ்விந: ப்ரியா |
தீ$_3$ப்தஸ்யேவ ஹுதாஶஸ்ய ஶிகா$_2$ ஸீதா ஸுமத்$_4$யமா ||’
[ரா-ஆ-37]

[தன் தேஜஸ்ஸாலே ரக்ஷிக்கப்படும் ராமபத்னியான வைதேஹியை, சூரியனிடமிருந்து ஒளியைத் திருடிவர நினைப்பதுபோலே, எப்படி திருட விரும்புகிறாய்? பலசாலியான ராமனின் மனைவியாய், அழகிய இடையை உடையவளாய், மிதிலா ராஜபுத்திரியான சீதை,கொழுந்து விட்டெரியும் அக்னியைப்போலே தீண்ட முடியாதவள்.] என்று ன்னன்றோ மாரீசனும். (துராதர்ஷாம்) ஒருவராலும் இல்லை செய்ய முடியாத ஜ்ஞாநக்ரியாதிகளை உடையவளை என்றுமாம். உலகில் காணப்படும் ஜ்ஞானக்ரியைகளெல்லாம்,

தே$_3$வதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா ப$_4$க$_3$வாந் ஹரி: |
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்$_3$யதே பரம் ||
[வி·பு 1-8-35]

[மைத்ரேயரே! தேவர், திர்யக் (ஊர்வன), மனுஷ்யர்கள், ஆகிய ஜீவராசிகளுள் ஆணுயிருப்பது பகவான் ஹரியின் அம்சம் பெற்றது.

பெண்ணுயிருப்பது லக்ஷ்மியின் அம்சம் பெற்றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலானதில்லை.] என்றும்,

யோ யோ ஜக$_3$தி பும்ப$_4$ாவ: ஸ விஷ்ணுரிதி நிஶ்சய: ।
யோ யஸ்து நாரீப$_4$ாவ: ஸ்யாத் தத்ர லக்ஷ்மீர் வ்யவஸ்தி$_2$தா ॥
ப்ரக்ருதே: புருஷாச்சாந்யஸ் த்ருதீயோ, நைவ வித்$_3$யதே ।
அத$_2$ கிம் ப$_3$ஹுநோக்தேந நரநாரீமயோ ஹரி: ॥

[ஸநத்குமாரஸம்ஹிதை]

[உலகில் ஆண்மை காணப்படுமிடமெல்லாம் ஹரியிருக்கிறன் என்பது நிச்சயம், பெண்மையுள்ளவிடமெல்லாம பிராட்டியிருக்கிருள். ப்ரக்ருதிக்கு அபிமானினியாகிற பிராட்டியையும், புருஷாபிமானியான பகவானையும் தவிர மூன்ருவதொன்றுமில்லை. பல சொல்லியென்? ஸ்த்ரீபுருஷர்கள் எல்லாமாயிருப்பவன் ஸ்ரீமந்நாராயணனே] என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீமந்நாராயணனுடைய ஜ்ஞாநக்ரியைகளின் அம்சங்களேயாகையால், பிராட்டியின் ஜ்ஞாநக்ரியைகளை இல்லை செய்பவன், இல்லையென்று அறிவதும், இல்லை செய்வதாகிற செயலைச்செய்வதும், திவ்ய தமபதிகளுடைய ஜ்ஞாநக்ரியைகளை ஸாதிப்பதாகவே முடியும். ஆகையால் இல்லைசெய்ய முடியாத அறிவையும் செயலையும் உடையவள் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்விரு பொருள்களும் இம்மந்திரப்பெருமையும்

"து$_3$ராத$_4$ர்ஷாஸ்மி ஸர்வேஷாம் தை$_3$த்யதா$_3$நவரக்ஷஸாம் ।
ஶுத்$_3$த$_4$ா ஸம்வித்க்ரியா சாஹம் நார்ஹா கைரபி ப$_3$ாதி$_4$தும் ॥
ஸர்வேஷாமாத்மபூ$_4$தாயா மம ஸம்வித்க்ரியாத்மந: ।
ஜ்ஞாத்ருத்வமபி கர்த்ருத்வம் யோ நாமாபநிஷேதி ॥
ஜ்ஞாதா கர்த்தா நிஷேத$_4$ஸ்ய ஸ நிர்வக்ஷ்யதி தத் கத$_2$ம் ।
ஶக்தோ த$_4$ர்ஷயிதும் கஶ்சிந் நைவ ஸம்வித்$_3$க$_3$திம் மம ॥
து$_3$ராத$_4$ர்ஷேதி மாம் ப்ராஹு: ஸாங்க்$_2$யஜ்ஞாநவிசக்ஷணா: ।
அஷ்டாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் தமோக$_3$தி விநாஶந: ॥"

[அஸுரராக்ஷஸர்களாலே அவமதிக்கப்படமாட்டாதவள்; பரிசுத்தமான ஜ்ஞாநக்ரியாரூபிணியான நான் ஒருவராலும் இல்லை செய்ய முடியாதவள். ஜ்ஞாநக்ரியாரூபிணியாய் ஸர்வாத்மபூதையாயிருக்கும் என்னுடைய ஜ்ஞாத்ருதவத்தையும்-(அறிவுடையளாயிருக்கும் தன்மையையும்) – கர்த்ருத்வத்தையும் – (செயலுடையவளாயிருக்கும் தன்மையையும்)–எவனொருவன் இல்லை செய்கிருனே அவன் (இல்லை

யென்கிற அறிவை உடையனுகிருனுகையாலும், இல்லைசெய்வதாகிற செயலைச் செய்கிருனுகையாலும், என்னுடைய ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வங்களை ஸ்தாபித்தவனுவானேயொழிய) எப்படி அவற்றை இல்லை செய்தவனுவான்? என் ஜ்ஞாநக்ரியைகளை இல்லை செய்ய எவனுலும் முடியாது. ஆகையால் என்னை தத்வஜ்ஞானமுள்ளவர்கள் 'து₃ராத₄ர்ஷா' என்கின்றனர். "ஓம் து₃ராத₄ர்ஷாயை நம:" என்னும் எட்டு எழுத்துக்கொண்ட இம்மந்திரம் அஜ்ஞாநகதியை நீக்கும்.] என்று தந்த்ரத்திலேயும் கோஷிக்கப்பட்டது.

இப்படி அஸுரராக்ஷஸர்களாலே அணுகப்படமாட்டாமலிருப்பதற்குக் காரணமென்னென்னில்: (நித்யபுஷ்டாம்) "நித்யாய பரமாத்மநே விஷ்ணவே" [வி-பு 1-2-1] எனகிறபடியே நித்யனென்னும பெயரையுடைய விஷ்ணுவினுலே போஷிக்கப்படுமவளாகையாலே அப்படியிருக்கிருள் எனகிறது இத்திருநாமம்.

"ந ஸா த₄ர்ஷயிதும் ஶக்யா மைதி₂ல்யோஜஸ்விந: ப்ரியா"
[ரா-ஆ 37-20]

[மஹாபலசாலியான ராமனின் மனைவி அவமதிக்கப்பட முடியாதவள்] என்றும்,

"ந த்வம் ஸமர்த்த₂ஸ் தாம் ஹர்த்தும் ராமசாபாஶ்ரயாம் வநே"
[ரா-ஆ 37-18]

[ராமனுடைய வில்லை அண்டியிருக்கும் அவளை அபஹரிக்க உன்னுல் முடியாது] என்றும், "பா₃ஹூ ராமஸ்ய ஸம்ஶ்ரிதா-நா ஹாரயதி ஸந்த்ராஸம்" [ரா-அ 60-20] [ராமனுடைய தோளைப்பற்றி நிற்கையாலே காட்டுமிருகங்களைக்கண்டு சீதை பயப்படவில்லை] என்றுமன்ரு சொல்லப்பட்டது. (நித்யபுஷ்டாம்) எப்போதும் நற்குணங்கள நிறைந்திருக்கப் பெற்றவள் என்றுமாம். (நித்யபுஷ்டாம்) உணவருந்துவது முதலான விஷயானுப₄வமில்லாமலே புஷ்டி பெற்றிருக்கும் (ஞானமயமான) திருமேனியை உடையவளை என்றுமாம். "உபவாஸக்ருஶாம்" [ரா-ஸு 15-19] [உபவாஸத்தால் மெலிந்திருக்கும் பிராட்டியை] எனற விடத்திற் சொல்லப்பட்ட உபவாஸமும் பகவதநுபவமாகிற உணவின்மையைச் சொன்னதுபோலும்! இம்மூன்று பொருள்களும் மந்திரப்பெருமையும்,

"நித்யேந விஷ்ணுநா புஷ்டா நித்யம் புஷ்டா ச ஸத்₃கு₃ணை: |
விஷயைர் மே விநா புஷ்டா நித்யம் ஸம்வித்பரா தநு: ||

**ஸைவ புஷ்ணுதி விஷயாந் அஜடா$_3$பி$_4$ர் ஜடா$_3$த்மந:।**
**நித்யபுஷ்டாம் து மாம் ப்ராஹுஸ் ஸித்$_3$த$_4$ாஸ் ஸம்வித்$_3$**
**விசக்ஷணா: ॥**
**அஷ்டாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ நித்யம் புஷ்ணுதி ஸம்வித$_3$ம்"**

[நித்யனை விஷ்ணுவினாலே புஷ்டிபெற்றிருப்பவள்; நற்குணங்களாலே எப்போதும் புஷ்டிபெற்றிருப்பவள்; ஞானத்தை ப்ரதானமாகக்கொண்ட என் சரீரம் விஷயானுபவமில்லாமலே புஷ்டி பெற்றிருக்கிறது. (உண்மையில்) ஜடமாய் – (தானாகப் பிரகாசியாததாய்) – உள்ள விஷயங்களை ஜடமற்றவையான – (தானாகப் பிரகாசிக்கும்)-தன் ஸௌந்தர்யாதிகுணங்களாலே அத்திருமேனியே போஷிக்கிறது. ஸித்திபெற்ற ஞானிகள் என்னை (இக்காரணங்களாலே) 'நித்யபுஷ்டா' என்று அழைக்கின்றனர். "ஓம் நித்ய புஷ்டாயை நம:" என்னும் எட்டெழுத்துக் கொண்ட இம்மந்திரம் ஞானத்தைப் போஷிக்கும்] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் உத்கோஷிக்கப்பட்டது.

(கரீஷிணீம்) 'கரி' என்னும் பதமும், 'இஷு இச்ச$_2$ாயாம்' என்னும் தாதுவும் 'இண்–க$_3$தௌ' என்னும் தாதுவும் சேர்ந்து உண்டான பதம். க்ருத$_4$ாதுவிலிருந்துண்டான 'கரி' சப்தம், கர்த்தாக்களைக் காட்டுகிறது. அதாவது:- மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களிலும் சுத்தியை உடையவர்களாய், வர்ணாஶ்ரம தர்மானுஷ்டானம் முதலிய ப்ரவ்ருத்திக்ரியைகளையும், பகவத்ப்ரவ்ருத்தி விரோதிஸ்வ ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியெனப்படும் நிவ்ருத்திக்ரியையாகிற ப்ரபத்தியையும், பகவத்கைங்கர்யமாகிற ப்ரவ்ருத்தியும், ப்ரபத்தியாகிற நிவ்ருத்தியும் கூடி நிற்கும் உபயக்ரியைகளையும் செய்பவர்கள் 'கரிண:' எனப்படுகிறார்கள். விருப்பத்தைக் காட்டும் 'இஷு-இச்ச$_2$ாயாம்'' என்னும் தாது, மேற்கூறிய கர்த்தாக்களை எப்போதும் மிக விரும்பியிருக்கிறாள் இப்பிராட்டி என்று பொருள்படும். கதியைச் சொல்லும் 'இண் க$_3$தௌ' என்னும் தாது, அவர்களைத் தன் திருவுள்ளத்தாலே எப்போதும் அடைந்திருப்பாள் பிராட்டி என்று பொருள்படுகிறது. ஆக, மூவகை கிரியைகளையும் செய்பவர்களை எப்போதும் அடைந்திருப்பவள் என்று 'கரீஷிணீ' என்னும் இத்திருநாமத்திற்குப் பொருளாகிறது. (கரீஷிணீம்) அன்றிக்கே, 'கரிந்' என்னும் சப்தமும் 'ஈஶ்-ஐஶ்வர்யே' என்னும் தாதுவும், 'இண்-க$_3$தௌ' என்னும் தாதுவும் சேர்ந்து இத்திருநாமம் ஏற்பட்டதாகவும் கொள்ளலாம். 'கரிந்' ஶப்தம் யானைகளைக் குறிக்கிறது.

'ஈஶ-ஐஶ்வர்யே' என்னும் தாது அந்த யானைகளுக்கு ஈச்வரியா யிருக்கிருள் பிராட்டி என்று காட்டுகிறது. 'இண் க₃தௌ' என்னும் தாது அவைகளின் மேல் ஏறிச்செல்கிருள் பிராட்டி என்று காட்டு கிறது. ஆக, யானைகளுக்கு ஈச்வரியாய், அவற்றின் மேல் ஏறிச் செல்லுமவள் 'கரீஷிணீ' என்கை.

"ஆக்₃நேயாதி₃த₃ஶாஸ்த₂ாஸ்தே கு₃ல்கு₃லுஶ்ச குரண்ட₃க:।
த₃மக: ஶலிலஶ்சேதி க்₂யாதா: புஷ்ணந்து மே ஶ்ரியம் ॥"

[ஒவ்வொரு திசையிலுமுள்ள தாமரையிதழ்களிலுமுள்ள குல்குலு, குரண்டகன, தமகன், சலிலன் என்று பிரசித்திபெற்ற யானைகள் என் செல்வத்தைப் பெருக்கட்டும்] என்றும் மங்கண ஸம்ஹிதையிலும்,

"ஐராவதாதி₃பி₄: ஸம்யக் ஸமாஜைராவ்ருதாம் ஶுப₄ாம்"

[ஐராவதம் முதலான யானைகளின் கூட்டங்களாலே சூழப்பட்டவளும் மங்களகரமானவளுமான பிராட்டியை] என்று காச்யபீயத்திலும் இப்பிராட்டி யானைக்கூட்டங்களுக்குத் தலைவியாயிருப்பவள் என்னு மர்த்தம் அறிவிக்கப்பட்டதன்றே.

(கரீஷிணீ) அன்றிக்கே 'கரி' சப்தம் 'ஸ்ருஷ்டி முதலான செயல்களைச் செய்பவள் பிராட்டி' என்றும், 'இஷ்-கதௌ' 'இண் க₃தௌ' என்னும் தாதுக்கள் 'இவள் எல்லாவற்றையும் அடைந் திருப்பவள்' என்றும் 'எல்லாம் இவளை அடைந்திருக்கின்றன' என்றும் பொருள் தருகின்றன. ஸ்ருஷ்டியைச் செய்விப்பவளாகை யாலே செய்பவளாகவே சொல்லப்படுகிருள் என்று கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் தான் அடைந்தும், எல்லாவற்றாலும் அடையப்பட்டுமிருக்கையாலே 'வாஸுதேவன்' என்றும், 'நாரா யணன்' என்றும் சொல்லப்படும் அவனுக்கு ஸ்வரூபநிரூபகபூதை யாய் அவனுள்ள விடமெல்லாம் இவளும் வியாபித்திருக்கையாலே இவளும் எல்லாப்பொருளையும் அடைந்தும், எல்லாப்பொருளாலும் அடையப் பெற்றுமிருக்கிருள் என்னக்குறையில்லை. ஆக, ஸ்ருஷ்டி முதலானவைகளைச் செய்விப்பவளாய், எல்லாப்பொருளையும், அடைந்தும் அடையப்பட்டுமிருக்கையாலே அவைகளைத் தன்னுட் கொண்டிருப்பவள் 'கரீஷிணீ' என்றதாகிறது.

"கரிஞோ நாம கர்த்தாரஸ் த்ரிஶூத்₃த₄ாஸ் த்ரிக்ரியாபரா:।
தாநிச்₂சாமி ஸதா₃ா த்₃ரஷ்டும் மநஸா யாமி தாந் ஸதா₃ா ॥

ஹிமசைலேந்த்$_3$ரஸங்காஶா க$_3$ஜேந்த்$_3$ரா மம வாஹநா:।
தைரீஶ்வரா ஸதா$_3$ யாமி கர்த்ரீ சாந்தர்வதீ ஸதா$_3$॥
கரீஷிணீதி மாம் தேந தத்த்வஜ்ஞாஸ் ஸம்ப்ரசக்ஷதே।
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகாமஸம்ருத்$_3$தி$_4$த$_3$:॥"

[முக்கரணங்களிலும் சுத்தமானவராய், ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி, ப்ர வ்ருத்தி நிவ்ருத்தி என்னும் மூவகைச் செயல்களையும் செய்பவர்கள் 'கரிந்' சப்தத்தால் சொல்லப்படுகின்றனர். அவர்களை எப்போதும் காணவிரும்புகிறேன்; என் மனத்தாலே அவர்களை எப்போதும் அடைகிறேன்; இமயமலை போன்றவையான யானைகள் எனக்கு வாஹனமாயுள்ளன; அவைகளுக்கு ஈச்வரியாய், அவைகளின் மேல் எப்போதும் ஸஞ்சரிக்கிறேன்; ஸ்ருஷ்டி முதலான செயல் களைச் செய்பவளாயும், எல்லாப்பொருள்களையும் உட்கொண்ட வளாகவும் எப்போதுமிருக்கிறேன் நான். ஆகையால் என்னைக் "கரீஷிணீ" என்று தத்வ ஞானிகள் உரைக்கின்றனர். "ஓம் கரீஷிண்யை நம:" என்னும் ஏழு எழுத்துக்கொண்ட இம்மந்திரம் எல்லா விருப்பங்களின் பெருக்கையும் தரும்.] என்று இம்மூன்று பொருள்களும், மந்திரப்பெருமையும் பிராட்டியாலும் பேசப்பட்டது.

'கரீஷிணீ' என்று யானைகளுக்குத் தலைவியாயிருப்பவள் என்னு மர்த்தம் அறிவிக்கப்பட்டது. "யானைகளுக்கு மட்டுமன்று; சிதசி தீச்வர தத்வத்ரயங்களுக்கும் தலைவியாயிருப்பவள் இவளே" என்று கோஷிக்கிறது அடுத்த திருநாமம்: (ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தா நாம்) சேதனம், அசேதனம், ஈச்வரன் என்று மூவகைப்பட்டி ருக்கும் தத்துவங்கள் எல்லாவற்றுக்கும் ஈச்வரியாயிருப்பவளை. "ஸர்வபூத$_1$ாநாம் ஈஶ்வரீ" [எல்லா பூதங்களுக்கும் ஈச்வரி] என்கிற விடத்தில் ஸர்வஶப்தத்துக்கு ஸங்கோசமில்லாமையாலும், இவ ளுடைய தனித்திருநாமமான ஸ்ரீஶப்தத்துக்கு, "ஸ்ரீயதே இதி ஸ்ரீ:" [(அனைவராலும்) ஆஶ்ரயிக்கப்படுகிறுளாகையாலே 'ஸ்ரீ:' எனப் படுகிறுள்] என்னும் கர்மணிவ்யுத்பத்தியிலே 'இன்னாரால் ஆச்ர யிக்கப்படுகிறுள்' என்னும் கர்த்ருஸங்கோசம் இல்லாமையாலும் தத்வத்ரயங்களுக்கும் ஈச்வரியென்றே பொருள் கொள்ளக்கடவது.

"ஸ்ரீவாஸுதேவமஹிஷீ பும்ப்ரத$_4$ாநேஶ்வரேஶ்வரீ"

[ஸ்ரீவாஸுதேவனின் மஹிஷி; சித் அசித் ஈச்வரன் ஆகிய அனை வர்க்கும் ஈச்வரியாயிருப்பவள்] என்றன்றோ லக்ஷ்மீஸஹஸ்ரநாமத் தின் தொடக்கத்திலேயே படிக்கப்பட்டது. "ஆத்மேஶ்வரம்"

[தை-நா 11] [தனக்குத்தானே ஈச்வரனுயிருப்பவன்] என்றும், "நாதனே ஞாலம் விழுங்கும் அநாதனே" [திருவிரு-69] என்றும், "ஈஶதே தே₃வ ஏக:" [ச்வே 1-10] [ப்ரக்ருதி புருஷர்களை ஒரே தேவன் நியமிக்கிறுன்] என்றும், "ஏக: ஶாஸ்தா" [பார-ஆஸ் 26-1] [ஈச்வரன் ஒருவனே] என்றும் சொல்லப்படும் ஸர்வேச்வரனுக்கு இப்பிராட்டியும் ஈச்வரியென்ருல் இது எப்படிப் பொருந்தும்? எனில்: "நின் அன்பின் வழி நின்று சிலேபிடித்து எம்பிரான் ஏக" [பெரியாழ்-திரு 3-10-7] என்றும்,

ஸ்வஸ்தி ஸ்ரீர் தி₃ஶதாத₃ஶேஷஜக₃தாம் ஸர்க்கே₃ாபஸர்க்க₃ ஸ்தி₂தீ:
ஸ்வர்க்க₃ம் துர்க்க₃திமாபவர்க்கி₃கபத₃ம் ஸர்வம் ச குர்வந் ஹரி:।
யஸ்யா வீக்ஷ்ய முக₂ம் தநி₃ங்கி₃தபராதீ₄னோ வித₄த்தேऽகி₂லம்
க்ரீடே₃யம் க₂லு நாந்யதா₂ऽஸ்ய ரஸதா₃ ஸ்யாதை₃கரஸ்யாத் தயா ॥
[ஸ்ரீஸ்தவம்-1]

[எல்லாவுலகையும் படைத்தளித்து அழிப்பதையும், ஸ்வர்க்கநரக மோக்ஷங்களேக் கொடுப்பதையும் செய்யும்போது பகவான் எவளுடைய திருமுகமண்டலத்தைப் பார்த்துக்கொண்டு அதனுடைய இங்கிதத்திற்கு வசப்பட்டவனுய் எல்லாக்காரியங்களேயும் செய்கிறுனே, அந்தப்பிராட்டி (நமக்கு) மங்களத்தை அளிக்கட்டும்; பகவான் அவளுடன் ஒரே அபிப்ராயத்தை உடையவனுயிருக்கிறபடியால், அவளுடைய இங்கிதபராதீனனுகக் காரியங்களேச் செய்யாவிடில் அக்காரியங்கள் ரஸத்தை அளிக்கமாட்டா.] என்றும், "யத்₃ப்₄ரூப₄ங்க₃ா: ப்ரமாணம்" [ஸ்ரீகுண-4] [எவளுடைய புருவநெறிப்புகள் ஸ்ருஷ்டியில் ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணமோ] என்றும், "யத்₃ப்₄ருவிப்₄ரமபே₄த₃த:"[ர-ஸ்த 1—7][எவளுடைய புருவநெறிப்புகளின் பேதத்தாலே உலகம் ஏற்றத்தாழ்வுள்ளதாகிறதோ] என்றும், "ஜக₃ந்நாதே₂ாபி நாராயணே த₄ந்யம் மந்யத ஈக்ஷணேந் தவ யதஸ் ஸ்வாத்மாநமாத்மேஶ்வர:" [ஸ்ரீஸ்தவம்-6] [தனக்குத் தானே ஈச்வரனும், உலகிற்குப் பதியுமான நாராயணனும் உன் கடாக்ஷத்தாலே தன்னே பாக்யசாலியாகக் கருதுகின்ருன்.] என்றும் சொல்லுகிறபடியே அவன் பரமப்ரணயியாகையாலே இவளுடைய புருவநெறிப்புக்கும் பரதந்திரனுயன்ருே இருப்பது. இப்படி ப்ரேமபரதந்திரனுயிருக்கையாலே அவனுக்கும் ஈச்வரியென்னக்குறையில்லே.

இப்படி இவள் ஸர்வேச்வரனுக்கும் ஈச்வரியாகில் இவளன்றோ பரப்ரஹ்மபூதையாகவேண்டும்? எனில்: ஆகமாட்டாள்; "ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி" [ஸ்ரீகுண 31] [ஸ்ரீதேவியான நீ இயற்கையாக விஷ்ணுவுக்கு உடைமைப் பொருளாயிருப்பவள்] என்கிறபடியே இவள் இயற்கையிலேயே அவனுக்கு அடிமைப்பட்டிருக்கையாலே அவனே இவளுக்கு இயற்கையில் ஈச்வரன். அவன் பரமப்ரணயியுமாகையாலே பக்தபரதந்த்ரனாவது போலே ப்ரேமம் காரணமாக இவளுக்கு அடிமைப்பட்டுமிருக்கிறான் இவள் அவனுக்கு ஈச்வரியாகவுமாகிறாள். இத்தால் இவர்களுக்குள்ள இயற்கையான சேஷசேஷிப$_4$ாவம் குலையாது. அவன் இவளுக்கு ஈச்வரனாவது ஸ்வாபாவிகமானது; இவள் அவனுக்கு ஈச்வரியாவது ப்ரேமோபாதி$_4$கமானது. ஆகையாலே இவளுக்குப் பரப்ரஹ்மத்வமாகிற தோஷமில்லை.

இவ்விடத்தில், கோமடரங்கநாத பாஷ்யத்தில் ஒன்பதாவது மந்திரத்தின் கீழ் பக்ஷபாதிகளிடமிருந்த சுவடியொன்றில் 17-பக்கங்கள் கொண்ட ப்ரக்ஷிப்தபங்க்திகளடங்கியதொரு விசாரம் காணப்படுகிறது. ராஜகீய புஸ்தகாலயங்களிலுள்ள கோமடரங்க நாதபாஷ்யகோசங்களில் இவ்விசாரம் அடியோடு இல்லாததால் இது பிற்பட்டவர்களால் கற்பிக்கப்பட்டது என்பது வெளிப்படை. இப்பங்க்திகள் ப்ரக்ஷிப்தங்கள் என்று நிரூபிப்பதற்கு மற்றொரு முக்கியமான சான்றும் உளது. இந்த கோமடரங்கநாத பாஷ்யத்தில், லக்ஷ்மீ தந்திரத்தில் பிராட்டி தானே நிர்வஹித்திருக்கும் நாமநிர்வசனங்கள் ஒன்றாவது காட்டப்படவில்லை. பற்பலவிடங்களில் பிராட்டி நிர்வஹித்திருப்பதற்கு முற்றிலும் மாறுபட்டே பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. அதைக் கீழேயும் பலவிடங்களில் காட்டியிருக்கிறோம். மேலேயும் காட்டப்போகிறோம். இவைகளிலிருந்து இந்த பாஷ்யத்தை எழுதியவர் லக்ஷ்மீதந்திரத்தை ஸேவித்தவரே அன்று! என்று தெளிவாக அறிந்துகொள்ளலாம். அப்படியிருக்க, முற்கூறிய ப்ரக்ஷிப்தபங்க்திகளில் லக்ஷ்மீதந்திரத்தில் பல அத்தியாயங்களிலிருந்து பல ப்ரமாணவசனங்கள் உதாஹரிக்கப்பட்டிருக்கின்றன. இதுவொன்றே இப்பங்க்திகள் ப்ரக்ஷிப்தமானவையென்பதைக் காட்டித்தரும். மேலும், இப்பங்க்திகளில் ஸ்ரீதேசிகனையுள்ளிட்ட பூர்வாசார்யர்கள் அனைவரும் பிராட்டி விஷயமாகக் கொண்டிருந்த கொள்கைகளெல்லாம் கணடிக்கப்படுகின்றன. ஆழ்வார்களாலும் ஆசாரியர்களாலும் ஒரு மிடறாக

ஒப்புக்கொள்ளப்படும் பிராட்டியின் ஸ்வாபாவிகபோஷத்வம் இதில் மறுக்கப்படுகிறது. வேதாந்த தேசிகன் சது:ச்லோகீ இரண்டாவது ச்லோக பாஷ்யத்திலே

"கிஞ்ச யதா₂ முக்தஸ்ய ப₄க₃வதா பரமஸாம்யே ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃ ஸித்₃தே₄ऽபி * ஜக₃த்₃வ்யாபாரவர்ஜமிதி லக்ஷணபூ₄தை ராகாரைர் வைஷம்யம் ஸ்தா₂ப்யதே, தத₂ா இஹாபி ப₄வதி"

[ முக்தாத்மாவுக்குப் பரமபுருஷனோடு மேலான ஒற்றுமை "பரமம் ஸாம்யமுபைதி" முதலான ஶ்ருதியிலும், "மம ஸாத₄ர்ம்யமாக₃தா:" [கீதை 14-2] முதலான ஸ்ம்ருதிகளிலும் ஏற்பட்டிருந்தபோதிலும் "ஜக₃த்வ்யாபாரவர்ஜம்" [ப்ர-ஸூ] என்று பரப்ரஹ்மலக்ஷணபூதமான ஜகத்காரணத்வம் முதலான ஆகாரங்களால் வேறுபாடு நிலைநிறுத்தப்படுவதுபோலவே இங்கும் ஆகவேண்டும்.] என்று மிகத்தெளிவாக பரப்ரஹ்மலக்ஷணமான ஜகத்காரணத்வம் முதலானவை பிராட்டிக்குக் கிடையாது என்று அருளிச்செய்திருக்க, இந்தப் பங்க்திகளிலே பிராட்டியும் பகவானைப்போலவே ஜகத்காரணபூதையாகவும், பரப்ரஹ்ம பூதையாகவுமிருப்பவளே என்று வாதாடப்பட்டிருக்கிறது. ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி விருத்தமாக இந்த ப்ரக்ஷிப்தபங்க்திகளில் மற்றும் பல உண்டு என்பது ப்ராமாணிகர்களால் மறுக்கவொண்ணாதது. ஆக இக்காரணங்கள் எல்லாவற்றையும் பார்க்கும்போது இப்பங்க்திகள் பக்ஷபாதியொருவரால் ப்ரக்ஷிப்தங்களேயென்பதை அனைவரும் இசைந்தே தீரவேண்டும்.

இக்காரணங்களினாலும், நாம் முன்னமே காட்டியிருக்கும் பல காரணங்களாலும் இந்த கோமடரங்கநாதபாஷ்யம் நஞ்சீயராலேயோ, அல்லது நாராயண முனியாலேயோ இயற்றப்பட்டதன்று என்பதும் மிகத்தெளிவாக விளங்கும். லக்ஷ்மீதந்த்ர நிர்வசனங்களைப் படித்துமறியாத இந்த பாஷ்யகர்த்தா பூர்வாசார்யராயிருக்கத் தகுதியேயில்லை. நிற்க; இந்த ப்ரக்ஷிபதபங்க்திகளில் பிராட்டியும் பரப்ரஹ்மபூதையே எனபதற்குச் சில யுக்திகள் சொல்லப்படுகின்றன. அவற்றை எடுத்து அவற்றுக்கு பதில் உரைப்போம் இனி.

"ஸர்வபூ₄தேச்வரீ" என்றில்லாமல், "ஸர்வபூ₄தாநாம் ஈஶ்வரீ" என்றிருக்கையாலே பிராட்டி பகவானுடைய பத்நீதவாகாரத்தாலல்லாமல் இயற்கையாகவே ஸர்வபூ₄தேஶ்வரியாயிருக்கிருள்

என்று ஸித்திக்கிறது என்பது ஒரு வாதம். இந்த வாதத்திற்கு பதிலுரைக்கும் சிரமத்தை நமக்கு வைக்காமல், ஸ்ரீதேசிகனே கீதா பாஷ்ய தாத்பர்யசந்த்ரிகையின் ஆரம்பத்தில்

" அநவதி$_4$காதிஶயத்வவசநாத் ஈஶ்வரவ்யதிரிக்தாஶேஷகோ$_3$சரஸ்யாபி ததை$_3$ஶ்வர்யஸ்ய ஈஶ்வராபி$_4$மதத்வாந் ந த்$_3$வைராஜ்யாதி$_3$தோ$_3$ஷ:। 'அஸ்யேஶாநா ஜக$_3$தோ விஷ்ணுபத்நீ' (யஜு॰ 4-4-12-57) இதி விஷ்ணுபத்நீத்வவேஷேண ஹி ஸர்வஸ்ய ஜக$_3$த: இயமீஷ்டே। 'ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்' இத்யத்ர து யத்$_3$யபி ஸர்வபூ$_4$தாநாமிதி ப்ரதிஸம்ப$_3$ந்தி$_4$ நிர்தே$_3$ஶாத் ஸ்த்ரீப்ரத்யயாநுஸாரேண ஈஶ்வரபத்நீதி விவக்ஷா ந ஶக்யா, தத$_2$ாபி வாக்யாந்தர ப$_3$லாத$_3$ர்த்த$_2$ஸ்ய தத$_2$ாத்வஸித்$_3$தி$_4$:" [இவளுடைய ஐச்வர்யம் எல்லையற்ற மேன்மையை உடையது என்கையால் ஈச்வரனைத் தவிர மற்றுள்ளார் அனைவரையும் விஷயீகரிக்கும் இவளுடைய ஈச்வரத்வம் ஸர்வேச்வரன் திருவுள்ளமுகந்ததாகையால் ஈச்வரர் இருவர் என்னும் தோஷமில்லை. 'விஷ்ணு பத்தினியாய், உலகிற்கு ஈச்வரியாயிருக்கும் பிராட்டி' என்று வேதம் உரைத்தபடியே விஷ்ணு பத்தினியாயிருந்துகொண்டன்றோ இவள் எல்லா உலகையும் நியமிக்கிறாள். 'எல்லா பூதங்களுக்கும் ஈச்வரியை' என்று ஸ்ரீஸூக்தத்தில் சொல்லியவிடத்தில், ஈச்வரத்வத்திற்கு ப்ரதி ஸம்பந்தியாக ஸர்வபூதங்களையும் எடுக்கையால் ஸ்த்ரீப்ரத்யயத்தை அனுஸரித்து ஈச்வரனின் பத்தினி என்று பொருள்சொல்ல முடியாத போதிலும், "விஷ்ணு பத்னீ" என்று முன் எடுத்த வாக்யத்தின் பலத்தால் அர்த்தம் அப்படியே ஆகவேண்டும்] என்று தெளிவாக பதிலுரைத்திருக்கிறார்.

பின்வருமாறு மற்றொரு பூர்வபக்ஷம் செய்யப்படுகிறது:— "ஈஶ்வர: ஸர்வபூ$_4$தாநாம்" [தை-உ 2-46] என்று பகவான் சொல்லப்படுவது போலவே, "ஈஶ்வரீம் ஸர்வபூ$_4$தாநாம்" என்று பிராட்டியும் வேதத்தில் ஓதப்படுகிறாள். ஆகையால் இருவரும் துல்யரான ஈச்வரர்களே. பிராட்டி பகவானுக்கு சேஷபூதையாயிருப்பது அவளுடைய இச்சையாலேயேயொழிய இயற்கையாகவன்று; ஆகையால் பகவானுடைய ஈச்வரத்வம் போன்றதே பிராட்டியினுடைய ஈச்வரத்வமும். ஆகையால் பகவானும் பிராட்டியுமாகிற இருவரும் சேர்ந்தே பரப்ரஹ்மமாகிறார்கள். "உப$_1$யாதி$_4$ஷ்ட$_2$ாநம் ச ஏகம் ஶேஷித்வம்" [ஸ்ரீநாராயணர்கள் இருவரும் சேர்ந்து ஒரு சேஷித்வத்திற்கு ஆச்ரயமாயிருக்கிறார்கள்] என்று ஷடர்த்த ஸங்க்ஷேபத்தில் எம்பெருமானாருடைய சிஷ்யர் சோமாசியாண்டான்

சொன்ன ரீதியிலே உப₄யநிஷ்டமான ஈஶ்வரத்வம் ஒன்றேயாகை யால் ஈஶ்வரத்வித்வமாகிற தோஷமில்லை. இதையே வேதாந்த தேசிகரும் ஸ்ரீஸ்துதியில் " த்வாமேவாஹு: " என்று தொடங்கும் சுலோகத்திலே " யுவாம் தை₃வதம் த₃ம்பதீ ந: " [நீங்களிருவரும் சேர்ந்து எங்களுக்குப் பரதெய்வமாகிறீர்கள்] என்று அருளிச் செய்தார். ஆகையால் ஸ்ரீநாராயணரிருவரும் பரப்ரஹ்மபூதர்களே என்று உரைக்கின்றனர் இப்பூர்வபக்ஷிகள்.

இப்பக்ஷம் ஆசாரியர்கள் எவராலும் ஆதரிக்கப்படாததும், ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணவாக்யங்களுக்கும், ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளுக்கும் அத்யந்த விருத்தமானதுமாகையாலே நல்லோர்களால் அநாதரிக்கத்தக்கது. " ஈஶ்வரஸ் ஸர்வபூ₄தாநாம் " என்று பகவானைச் சொல்லியிருப்பது போலே, " ஈஶ்வரீம் ஸர்வ பூ₄தாநாம் " என்று பிராட்டியையும் சொல்லியிருக்கையால் இருவரும் துல்யரான ஈச்வரர்களே என்னும் வார்த்தை வேதாந்த ஜ்ஞானமுடையார் கோஷ்டியிலே விலை செல்லாது. " ந தத் ஸமஶ் சாப்₄யதி₄கஶ்ச த்₃ருச்யதே " [ச்வே-6] [அப்பரமபுருஷனை ஒத்தாரும மிக்காருமில்லை] என்று பரமபுருஷனைச் சொல்லியிருப்பதுபோலே " ந கிரிந்த்₃ர த்வது₃த்தரோ ந ஜ்யாயோ அஸ்தி வ்ருத்ரஹந் " [ருக்-அஷ்-3] [விருத்திராசுரனைக்கொன்ற இந்திரனே! உன்னிலும் உயர்ந்தோனுமில்லை; பெரியோனுமில்லை] என்று இந்திரனையும் சொல்லியிருக்கையாலே இருவரும துல்யர்களே என்னும் வார்த்தைக்கும் இதற்கும் வாசியில்லை. அங்கு இந்திரன் பரம்பொருளல்லன் என்பது மற்றும் பல வாக்யங்களிலிருந்து ஸித்திக்கிறதாகையால் இருவரையும் துல்யராகக் கொள்ளமுடியாது எனில்: இங்கும், " ஸ்ரீருபப₃ர்ஹணம் தஸ்மிந் ப்₃ரஹ்ம ஆஸ்தே " [கௌஷீதகீ 1-50, 51] [பெரியபிராட்டியார் காலுக்கு அணையாயிருக்கிறார்; அப்படுக்கையில் பரப்ரஹ்மம் எழுந்தருளியிருக்கிறது.] என்றும் "அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ" [விஷ்ணுவுக்குப் பத்னியாயிருப்பதால் உலகிற்கெல்லாம் ஈச்வரியாயிருப்பவள்] என்றும், "ஹ்ரீஶ்ச தேலக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" [ஸ்ரீதேவியும் பூதேவியும் உனக்கு பத்னிகள்] என்றும் வேதங்கள் ஓதுகையாலும்,

"சந்தணிமென்முலை மலராள் தரணி மங்கை
தாமிருவர் அடிவருடும் தன்மையானை" [பெரிய திரு 2-10-2]

"செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொன்
திருவடியினிணை வருட முனிவரேத்த" [பெரிய திரு 7-8-1]

''வடிவிணையில்லா மலர்மகள் மற்றை
நிலமகள் பிடிக்கும் மெல்லடியை'' [திருவாய் 9-2-10]

''நின் ஈரடி ஒன்றிய மனத்தால் ஒருமதிமுகத்து
மங்கையர் இருவரும் மலரன அங்கையில்
முப்பொழுதும் வருட அறிதுயிலமர்ந்தனே'' [திருவெழு]

'' அல்லிமாமலர் மங்கைநாதன் '' [பெருமாள்திரு 2-10] '' பூமகள் நாயகன் '' [பெரியதிரு 3-3-2] '' மலர்மங்கை நாயகனே '' [பெரிய திரு 7-6-9] '' திருவுக்கும் திருவாகிய செல்வா '' [பெரியதிரு 7-7-1] '' மலர் மங்கை நாதர்'' [பெரியதிரு 11-4-6] என்று ஆழ்வார்களும் பெரியபிராட்டியார் இயற்கையாகவே எம்பெருமானுக்கு ஶேஷ பூதை என்றும் அவன் அவளுக்கு ஸ்வாமி என்றும் உத்கோஷிக்கை யாலும் பிராட்டிதானே '' தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₄வேத் '' [ரா-ஸு 39-30] [என்னை ரக்ஷிப்பது அவருக்கே தகுந்தது] என்று தன் சேஷத்வத்தை வெளியிட்டிருக்கையாலும், ''மச்சே₂ஷபூ₄தா'' என்று பகவானும் பிராட்டி தனக்கு அடிமைப்பட்டவளே என்பதை பக்வச்சாஸ்திரத்தில் அறிவித்திருப்பதாலும், ''ஸ்வத: ஸ்ரீஸ்த்வம் விஷ்ணோ: ஸ்வமஸி'' [ஸ்ரீகுண-3] [ஸ்ரீதேவியே! நீ இயற்கையிலேயே பகவானுக்கு உடைமைப்பொருளாயிருக்கிறாய்] என்று ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான பட்டர் ஸந்தேஹத்திற்குச் சிறிதுமிடமில்லாமல பிராட்டியின் சேஷத்வம் ஸ்வாபாவிகமானதென்று கோஷித்திருப்ப தாலும், ஸ்ரீவேதாந்ததேசிகனும், '' ஈஶ்வரவ்யதிரிக்த அஶேஷகோ₃சரஸ்யாபி ததை₃ஶ்வர்யஸ்ய ஈஶ்வராபி₄மதத்வாந் ந த்₃வைராஜ்யாதி₃ தோ₃ஷ:। அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீதி விஷ்ணுபத்நீத்வ வேஷேண ஹி ஸர்வஸ்ய ஜக₃த: இயமீஷ்டே ||'' [ஈச்வரனைத் தவிர்த்து மற்றெல்லாரையும் விஷயமாகக்கொண்ட இவளுடைய ஈச்வரத்வம் ஸர்வேச்வரன் உகந்ததாகையால் இரண்டு ஈச்வரர்கள் முதலான தோஷமில்லை, 'விஷ்ணுபத்தினியாகையால் உலகிற்கு ஈச்வரியாகிறாள்' என்று விஷ்ணுபத்னியாயிருக்கையாலேயன்றோ இவள் எல்லா உலகையும் நியமிக்கிறாள்.] என்று தாத்பர்ய சந்திரிகையிலே இவளுடைய ஈச்வரத்வம் அவனுடைய இச்சாயத்த மென்றும், அதனாலேயே ஈச்வரர் இருவரில்லையென்றும், விஷ்ணு பத்னியாயிருக்கையாலேயே இவள் ஈச்வரியாகிறாள் என்றும் கை யிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தந்திருக்கையாலும், '' ஈஶோ தே₃வ ஏக: '' [சவே 1-10] [ஒருதேவனே ப்ரக்ருதிபுருஷர்களை நியமிக்கிறான்] ''ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்'' [மஹோபநிஷத்

*1-1]* [நாராயணன் ஒருவனே ஆதிகாரணனுயிருந்தான்] "ந தத் ஸமஶ்ச அப்$_4$யதி$_1$கஶ்ச த்$_3$ருஶ்யதே" [ச்வே] [அவனை ஒத்தாரும் மிக்காரும் இல்லை] "ந தஸ்யேஶே கஶ்சந" [தை-நா] [அவனை நியமிப்பார் ஒருவருமில்லை] "தமீஶ்வராணும் பரமம் மஹேஶ்வரம்" [ச்வே] [ஈச்வரர்கள் அனைவர்க்கும் மேலான ஈச்வரனுயிருக்கும் அவனை] "பதிம் விஶ்வஸ்ய ஆத்மேஶ்வரம்" [தை-நா-11] [உலகிற்கெல்லாம் பதியாகவும் தனக்குத் தானே ஈச்வரனுயுமிருப்பவன்] "ஏகஸ் ஸ்வதந்த்ரோ ஜக$_3$தோ ப$_1$பூ$_4$வ" [உலகிற்கு ஒரே ஸ்வதந்த்ர ஸ்வாமியாக நாராயணன் விளங்கினுன்] "ஏக: ஶாஸ்தா ந த்$_3$விதீயோஸ்தி ஶாஸ்தா" [பார-ஆச்வ 27-1] [நாராயணன் ஒருவனே ஈச்வரன்; ஈச்வரர் வேறில்லை.] "ந த்வத்ஸமோஸ்தி அப்$_4$யதி$_4$க: குதோந்ய:" [கீதை] [உன்னை ஒத்தார் இல்லை; மிக்கார் ஒருவர் உளரோ?] "நாஸ்தி நாராயண ஸமோ ந பூ$_4$தோ ந ப$_4$விஷ்யதி" [நாராயணனை ஒத்தவன் முக்காலத்திலுமில்லை] என்று ச்ருதி ஸ்ம்ருதிகள் ஒருமிடருக ஸர்வேச்வரன் ஒருவனே என்று உத்கோஷிக்கையாலும். பிராட்டியானவள் பிரானைப்போலே நிரதிஶய ப்$_3$ருஹத்வப்$_3$ரும்ஹணத்வமாகிற ஸர்வைஶ்வர்யத்தை உடையவளல்லள் என்று அறிவாளிகளுக்கு எளிதில் விளங்கும். "யுவாம் தை$_3$வதம் த$_3$ம்பதீ ந:" [நீங்களிருவரும் எங்களுக்கு தெய்வம்] என்ற தேசிகவாக்யம், பிராட்டிக்கு ஶேஷித்வமும் இல்லை, பகவதி$_3$ச்ச$_2$ாயத்தமான ஏகோந ஈச்வரத்வமுமில்லை என்பாரைக் குறித்து அருளிச்செய்யப்பட்டதாகையால் அத்தோடும் விரோதமில்லை. பிராட்டிக்கு பகவதி$_3$ச்ச$_2$ாயத்தமானதும் தத்பத்நீத்வப்ரயுக்தமானதுமான ஈச்வரத்வமுண்டு என்பதில் ஸ்ரீவைஷ்ணவாகள் எவர்க்கும் விவாதமில்லையே. தாத்பர்யசந்திரிகையில் அங்கருத்தைக் தெளிவாகக் காட்டியிருக்கும்போது ஸ்ரீஸ்துதி ச்லோகத்துக்கு வேறு எப்படிப் பொருள்கொள்வது? "உப$_1$யாதி$_4$ஷ்ட$_2$ாநம ச ஏகம் ஶேஷித்வம்" என்றுப்போலே இருவரிடமுமுள்ள ஈச்வரத்வம் ஒன்றேயாகையால் ஈச்வரத்வித்வமில்லை என்பதும் அபஹாஸ்யமானது. ஒரே ஶேஷித்வம் இருவரை ஆச்ரயமாகக்கொண்டது என்பதில் ஒரு தோஷமுமில்லை. சேஷித்வமாவது:—கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தியாகை. பகவானுக்குச் செய்யப்படும் கைங்கர்யம் பிராட்டிக்கு முகோல்லாஸகரமாகையாலும், பிராட்டிக்குச் செய்யப்படும் கைங்கர்யம் பகவானுடைய திருவுள்ளத்தை உகப்பிக்குமாகையாலும் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வமான ஶேஷித்வம் ஒன்ருய் இருவரிடமும் உள்ளது என்னலாம். ஒரே ஈச்வரத்வம் இருவரிடமும் உள்ளது என்று சொல்லுவதற்கு உபபத்தி ஒன்று

மில்லே. பாதகம் மிகவும் உள்ளது. அப்படிச் சொல்லப்புகில் ஓரே ஈச்வரத்வம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதிகளிடத்திலேயிருக்கிறது என்றெல்லாம் சொல்லும் பக்ஷங்கள் ப்ராமாணிகமாகி, "ஆத்மைக்யம் தே₃வதைக்யம் த்ரிகஸமதி₄க₃தா துல்பதைக்யம் த்ரயாணும் அந்யத்ரைஶ்வர்யம்' [ஆத்மாக்கள் எல்லாம் ஒன்றென்கை; தேவதைகள் ஒன்றென்கை; மும்மூர்த்திகள் ஸமரென்றும் ஒன்றென்றும் சொல்லுகை; மூவரிலும் வேறுபட்டவன் ஈச்வரன் என்கை] என்று ரஹஸ்யத்ரயஸாரத்திலே தேசிகரால் கழியுண்ட பக்ஷங்களையும் ஒப்புக்கொள்ளவேண்டிவரும். தாத்பர்யசந்த்ரிகையில் தேசிகனும் பிராட்டியின் ஈச்வரத்வம் பகவதபிமதமாகையால் ஈச்வரத்₃வித்வமில்லையென்று பரிஹரித்தாரேயொழிய, இருவரிடமுள்ள ஈச்வரத்வம் ஒன்றென்று சொல்லிப் பரிஹரிக்கவில்லை. ஆகையால் "ஈச்வரீம் ஸர்வபூ₄தாநாம்" என்னும் இத்திருநாமத்தாலே பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வமாகிற தோஷம் வராது என்று நிலை நாட்டப்பட்டதாயிற்று.

"ஸர்வபூதாநாமீஶ்வரீ" என்று படிக்கப்படும் பிராட்டியை ஈச்வரகோடியில் சேர்க்கலாமேயொழிய ஜீவகோடியில் சேர்க்கலாமோ என்னும் வாதமொன்றும் எழுவதுண்டு. உப₄யவிபூ₄திஶேஷித்வம், விபு₄த்வம் முதலான பெருமைகள் இப்பிராட்டிக்கு இருப்பதால் இப்பிராட்டி ஈச்வரகோடியைச் சேர்ந்தவளே என்று சில ஆசார்யர்கள் கருதினர்கள். பத்நீத்வப்ரயுக்தமான ஈச்வரத்வமுண்டாலும், ஶேஷத்வமே இவளுக்கு இயற்கையான ஆகாரமாகையாலும் "ஶேஷத்வே ஸதி சேதநத்வம்" முதலான ஜீவலக்ஷணங்கள் இவளுக்கும் பொருந்து மாகையாலும், "தத் தஸ்ய ஸத்ருஸம் ப₄வேத்" என்னும் இவளுக்கு ஜீவத்வமே பெருமைதருவதாகையாலும் இவளை ஜீவகோடியிலேயே சேர்க்கவேண்டும் என்று சில ஆசார்யர்கள் கருதினர்கள். இருவகையான ஆசார்யர்களும் இவளுக்குள்ள ஏகோந ஈச்வரத்வத்தையும் –[பகவான் ஒருவனைத் தவிர மற்றுள்ளார்க்கு ஈச்வரியாயிருக்கையையும்]– ப₄க₃வச்₂சேஷத்வத்தையும் இல்லைசெய்யவில்லை. இவள் ப்ரப்ரஹ்மபூதையென்று கருதவுமில்லை. ஆசார்யர்களுக்குப்பிறகு தோன்றிய சிலரே பிராட்டி பரப்ரஹ்மபூதையென்றும், இவளுக்கு ஸ்வாப₄ாவிகமான சேஷத்வமில்லையென்றும் மனம்போனவாறு எழுதிவைத்து, கோமடரங்கநாத பாஷ்யத்தில் அவைகளைச்சேர்த்து, அதை நஞ்சீயர் தலையிலே சுமத்தினர்கள். நாம் கீழே காட்டிய நிரூபணங்களைக் கண்டவர்கள் இதைக்கண்டு மயங்கார்கள் என்பது திண்ணம்.

"ஈஸ்வரீ" என்னும் திருநாமத்தின் பொருள்களைச் சிந்திப்போம் இனி: (ஈச்வரீம்) ஸர்வ பூதங்களுக்கும் ஸ்வாமினியாயிருப்பவள். அவன் ஸர்வபூதங்களுக்கும் ஸ்வாமியாயிருப்பதுபோலே இவளும் ஸ்வாமினியாயிருப்பவள் என்கை. "திருமாலே நானும் உனக்குப் பழவடியேன்" [திருப்பல்-11] "உலகாண்ட திருமால்" [பெரியாழ்-திரு 4-9-1] என்றன்றோ பெரியாழ்வார் அருளிச்செய்தார். (ஈச்வரீம்) ஈசனோடு கூடியிருந்து வரங்களையளிப்பவள் என்றுமாம். அவன் ப₂லப்ரத₃னாம்போது தன் பாரதந்திரிய ஸ்வரூபத்துக்குச் சேரப் புருஷகார க்ருத்யம் செய்யும் ஸஹத₄ர்மசாரிணி என்கை. (ஈச்வரீம்) 'ஈச்-ஐச்வர்யே' என்று தாதுவாகையாலே 'ஈச்' என்னும் எழுத்து ஈச்வரியாயிருப்பவளென்கிறது. 'வஸ நிவாஸே' என்று தாதுவாகையாலே 'வ' காரம் அனைவருக்கும் வாஸஸ்தானமாயிருக்கிறாள் என்கிறது. (ஈச்வரீம்) 'ஈச்-ஐச்வர்யே' என்று தாதுவாகையாலே 'எல்லாச் செல்வங்களையும் அளிப்பவள்' என்றும், "வ்ருது வர்த்தநே" என்று தாதுவாகையாலே 'எப்போதுமிருப்பவள்' என்றும், "ரிங்-க்ஷயே" என்று தாதுவாகையாலே 'பாபங்களை அழிப்பவள்' என்றும் பொருள்படுகிறது.

**"பூ₄தாநாமீஶ்வரா சாஸ்மி ப்ரியேணேஶேந ஸர்வதா₃ ।**
**வரதா₃ பு₄வநேஶாநா வஶிதா ச ஸதா₃கி₂லே: ||**
**வ்ருத்₃தி₄தா₃ வர்த்தமாநா ச க்ஷபணீ ச ஸதா₃ஹ்மஸாம் ।**
**ஈஶ்வரீத்யேவ மே நாம தேந வேதே₃ந ரூபிதம் ||**
**ஷட₃க்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வைஶ்வர்ய ஸம்ருத்₃தி₄த₃:||**

[1, பூதங்களுக்கு ஈச்வரியாயிருக்கிறேன்; 2. ஈசனோடுகூட எப்போதும் வரங்களைத் தருகிறேன்; 3. உலகிற்கு ஈசானையாகவும், எல்லோராலும் வஸிக்கப்படுபவளாகவுமிருக்கிறேன்; 4. ஐச்வர்ய விருத்தியைத் தருகிறேன்; எப்போதுமிருக்கிறேன்; பாபங்களை அழிக்கின்றேன். இக்காரணங்களால் 'ஈச்வரீ' என்னும் நாமம் வேதத்தாலே எனக்கு இடப்பட்டது. "ஓம் ஈஶ்வர்யை நம:" என்னும் ஆறு எழுத்துக்கொண்ட இம்மந்திரம் எல்லாச் செல்வங்களின் ஸம்ருத்தியையும் அளிக்கும்.] என்று இந்நான்கு பொருள்களும் மந்திரப்பெருமையும் பிராட்டியாலேயே பேசப்பட்டது.

(ஶ்ரியம்) ஸ்ரீதேவியை. இத்திருநாமத்தின் பொருள்கள் முன்னமே விளக்கப்பட்டன. (தாம்) மேற்சொன்ன பெருமைகளை

உடையவளாக ஸுப்ரஸித்தையான உன்னை. (இஹ) "அபூ₄திம ஸம்ருத்₃தி₄ம் ச ஸர்வாந் நிர்ணுத₃ மே க்₃ருஹாத்" [எல்லாவிதமான ஏழ்மையையும் என் வீட்டிலிருந்து விரட்டுவாயாக] என்று பிரார்த்திக்கப்பட்ட உன் அருளாலே பரிசுத்திபெற்று நீ வசிக்கத்தகுந்ததாயிருக்கும் இந்த என் குடிசையில். (உபஹ்வயே) நித்யவாஸம் செய்யவேணுமென்று அழைக்கிறேன்.

मनसः काममाकूतिं वाचः सत्यमशीमहि।
पशूनां रूपमन्नस्य मयि श्रीः श्रयतां यशः॥१०॥

10. மநஸ: காமமாகூதிம் வாசஸ் ஸத்யமஶீமஹி।
பஶூநாம் ரூபமந்நஸ்ய மயி ஶ்ரீ: ஶ்ரயதாம் யஶ:॥

பதவுரை: — **மநஸ: காமம்**—மனஸ்ஸிற்கு விரும்பத்தக்கவளும், **வாச: ஆகூதிம்**—வார்த்தைகளுக்குக் கருத்தாயிருப்பவளும், **ஸத்யம்**—சிதசித்துக்கள் அனைத்துமாயிருப்பவளுமான பிராட்டியை, **அஶீமஹி**—அடையக்கடவோம், **பஶூநாம் ரூபம்**—ஜீவர்களுடைய ஜ்ஞானஸ்வரூபமாயிருப்பவளும், **அந்நஸ்ய யஶ:**—போக்யங்களின் புகழாயிருப்பவளுமான, **ஶ்ரீ:**-ஸ்ரீதேவி, **மயி**-என்னிடத்தில், **ஶ்ரயதாம்**-ஆச்ரயிக்கட்டும்.

ஸ்ரீதேவியானவள் என் வீட்டிலே நித்யவாஸம் செய்யவேண்டுமென்ருன் சென்ற மந்திரத்தில. என்னிடத்திலே நித்யவாஸம் செய்யட்டும் என்று பிரார்த்திக்கிருன் இம்மந்திரத்தில்.

(மநஸ: காமம்) அவரவருடைய நெஞ்சால் விரும்பப்படும் அந்தந்தப் பலன்களாயிருப்பவள். இவ்வுலகிலுள்ள இன்பங்களையும், சுவர்க்கம் முதலான அவ்வுலகிலுள்ள இன்பங்களையும், எல்லாவற்றுக்கும் மேலான பேரின்பத்தையும் அவையவைகளை விரும்புவார்க்கு அளிப்பவள் என்கை. "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ இஷ்டம் மநிஷாண" [பு-ஸூ] என்று இவளுடைய சேர்த்தியிலன்றோ எல்லா இஷ்டங்களையும் பெறுவது. தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவள் என்றுமாம்.

"ஶ்ரேயோ ந ஹ்ரவிந்த₃லோசநமந:காந்தாப்ரஸாத₃த்₃ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்₄வஸு ந்ருணும
ஸம்பா₄வ்யதே கர்ஹிசித"

[தாமரைக்கண்ணனின் மனத்துக்கு இனியவளான தேவியின் அருளில்லாமல் ஐச்வர்யகைவல்ய பகவத்ப்ராப்திகளில் இன்பம் ஜீவர்களுக்குக் கிடையாது] என்று இவ்விருபொருள்களையும சது:ச்லோகியிலே ஆளவந்தார் அருளினரன்றே. (மநஸ: காமம்) பகவானின திருவுள்ளத்தால் விருமபப்படுபவள்.

"அஸ்யா தே₃வ்யா மநஸ் தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டி₂தம்" [ரா-ஸு]

[இந்த பிராட்டியின் மனம் அவரிடமும், அவருடைய மனம் இவளிடமும் நிலைநிற்கிறது] என்றுரன்றே திருவடியும். (மநஸ: காமம்) மநஸ்ஸாலே விரும்பத்தக்க பொருள்களில் மிகச்சிறந்தவளாயிருப்பவள் என்றுமாம். இப்பொருட்பெருமையனைத்தையும் நினைத்தன்றே "காமது₄க்" "காமயோநி:" "காமவத்ஸா" "காமவர்ஷிணீ" "காமவிஜ்ரும்பி₄ணீ" "காமஸூ:" "காமரூபிணீ" "காமிநீ" "காமேச்வரீ" "காம்யா" என்று லக்ஷ்மீஸஹஸ்ரநாமமும் பல திருநாமங்களைப் பொழிந்தது.

"சித்தம் நன்கொருங்கித் திருமால்மேல் சென்ற சிந்தை பெறுவர்" [பெரியாழ்-திரு 4-5-10]

"சிந்தனையைத் திருமாலே" [பெரியதிரு 5-6-7]

"சிந்தைதன்னுள் நீங்காதிருந்த திருவே" [பெரியதிரு 4-9-2]

என்றன்றே ஆழ்வார்களும் அருளிச்செய்தது, பிராட்டியும்

"பௌ₄மாந்தரிக்ஷதி₃வ்யாக்₂யா யே சாப்யப்ராக்ருதா: பரே।
ஸதா₃நந்த₃மயாஸ் த்வேதே ஸர்வே காமா மயி ஸ்ரிதா:॥
மநோரதா₂நாம் ஸர்வேஷாம் பராஹம் விப்₄ரமஸ்த₂லீ।
விஷ்ணோஸ்ச மநஸ: காமஸ் ஸாஹம் ஸர்வாதிஸாயிநீ॥
மநஸ: காம இத்யேவ தேந மாம் துஷ்டுவுஸ் ஸுரா:।
நவாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகாமஸம்ருத்₃தி₄த₃:॥"

[சேதனர்கு எப்போதும் இன்பமளிக்கும் இவ்வுலக இன்பம், அந்தரிக்ஷலோகத்தின் இன்பம, சுவர்க்க இன்பம், பரமபதத்தில் அப்ராக்ருதமான மோக்ஷவின்பம் ஆகிய எல்லாக் காமங்களும் என்னிடத்தில் இருக்கின்றன. எல்லா மநோரதங்களுக்கும் நான் மேலான விளையாடுமிடமாயிருக்கிறேன். மிகச்சிறந்தவளான நான் பரமபுருஷனுடைய திருவுள்ளத்தாலும் விரும்பப்படுகிறேன். ஆகையால் என்னை தேவர்கள் 'மனத்தின விருப்பமாயிருப்பவள்' என்று

துதித்தனர். ஒன்பது எழுத்துக்கொண்ட "ஓம் மநஸ: காமாய நம:" என்னும் இம்மந்திரம் எல்லாக் காமங்களின் பெருமையையும் தரும்] என்று இப்பொருள்களையும் மந்திரப்பெருமையையும் அருளிச் செய்தாள்.

(வாச: ஆகூதிம்) லௌகிகமாகவும், வைதிகமாகவுமுள்ள வாக்குக்களுக்கும் புறச்சமயிகளின் வாக்குக்களுக்கும் கருத்தாயிருப்பவளே. ஸர்வசப்தவாச்யை என்றபடி. அவன் ஸர்வஶப்தவாச்யனுயிருக்கும்போது அவனுக்கு ஸ்வரூபநிரூபகபூ₄தையாயிருக்கும் இவளும் ஸர்வசப்த வாச்யையேயன்றே. லௌகிக வைதிகஶப்தங்கள் ஒருபுறமிருக்கட்டும்; புறச்சமயிகள் தங்கள் தங்கள் தெய்வங்களைக் குறித்துச் சொல்லும் 'தேவன்' 'ருத்ரன்' 'சிவன்' முதலான பதங்களும் இவளோடு கூடிய இவனையன்றே குறிக்கும். "எம்பெருமானைச் சொன்ன விடத்திலே பிராட்டியையும் சொல்லிற்றும்" எனறன்றே எம்பெருமானுர் அருளிச்செய்தது. இதனுலேயேயன்றே.

"நும்மின் கவிகொண்டு நும்நும் இட்டாதெய்வமேத்திறல்
செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே"
[திருவாய் 3-9-6]

"நீரேறு செஞ்சடை நீலகண்டனும் நான்முகனும் முறையால்
சீரேறு வாசகம் செய்யநின்ற திருமால்" [பெரியாழ்திரு 4-1-5]

"செய்யவளுறை தருதிருமார்பன்
பன்னுநான்மறைப்பல் பொருளாகிய பரன்" [பெரியதிரு3-1-2]

"பந்தார்மெல்விரல் நல்வளைத்தோளி
பாவைபூமகள் தன்னெடுமுடனே
வந்தாய் என்மனத்தே மன்னிநின்றுய்
மால்வண்ணு மழைபோலொளிவண்ணு
சந்தோகா பௌழியா தைத்திரியா
சாமவேதியனே நெடுமாலே" [பெரியதிரு 7-7-2]

என்று ஆழ்வார்களும் அருளிச்செய்தது. "ஒண்தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" [முதல்திருவ-67] என்று ஞானத்துக்கு விஷயம் ஸ்ரீமந்நாராயணனும்போது ஞானத்துக்கு உருக்கொடுக்கும் வாக்குக்கு விஷயம் அவனே என்னுமிடத்தைச் சொல்லவேணுமோ? "ஆகூதி:" என்னும் திருநாமம் ஸ்ரீஸஹஸ்ர நாமத்திலுமெடுக்கப்பட்டது.

''லௌகிக்யோப்யத₂ வைதி₃க்யஸ் தத₂ா ப₃ாஹ்யாக₃மோத்₃
ப₄வா: |
நிர்கே₄ாஷா கே₄ாஷவத்யஶ்ச யா வாச: பரிகீர்த்திதா: ||
மாமபி₄ப்ரேத்ய ஸர்வாஸாம் தாஸாமுச்சாரணக்ரியா |
மாமபி₄ப்ரயதே ஸர்வோ ஜநஸ் ஸர்வாத்மநா ஸ்தி₂தாம் ||
தேந தேந ப்ரகாரேண வாசாமுச்சாரணக்ரமே |
ஆகூதிர் வசஸாம் தேந வேத₃ஜ்ஞைரஸ்மி ப₄ாவிதா ||
அஷ்டாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வஶப்₃த₃ார்த்த₂ஸித்₃
தி₄த₃:|| ''

[லௌகிகமாயும், வைதிகமாயும், புறச்சமய நூல்களிலுள்ளவையாயுமுள்ள முழக்கமற்றவையும் முழங்குகின்றவையுமான வார்த்தைகள் அனைத்தும் உச்சரிக்கப்படுவது என்னைக் குறித்தேயாகும். அந்தந்த வார்த்தைகளைச் சொல்லும்போது எல்லா ஜனங்களும் எல்லாப் பொருளாயுமிருக்கும் என்னையே குறிக்கின்றனர். அதனாலே மறையுணர்ந்த மெய்ஞானிகளால் 'வாக்குகளுக்குக் கருத்து' என்று தியானிக்கப்படுகிறேன். எட்டு எழுத்துக்கொண்ட "ஓம் வாச: ஆகூத்யை நம:" எனனும் இம்மந்திரம எல்லாச்சொற்பொருள்களையும் அடைவிக்கும்] என்று பிராட்டியும் இப்பொருளையும் மந்திரப்பெருமையையும் தந்திரத்திலே பேசினள்.

இப்படி இவள் எல்லா சப்தங்களுக்கும் அர்த்தமாயிருப்பதும் இவள் எல்லாமாயிருப்பதாலேயே எனகிறது அடுத்த திருநாமம்: (ஸத்யம்) 'ஸத்'தாகவும், 'த்யத்'தாகவுமிருப்பவள். அதாவது:— எப்போதும் 'இருக்கிறது' எனறே சொல்லப்படுவதாய், விநாசமற்றதான ஜீவாத்மாவாகவும், எப்போதும் அழிவதாகையால் 'இல்லை' என்றே வ்யவஹரிக்கப்படும் அசேதனமாகவும் இருப்பவள் என்கை. ''ஏகதத்வமிவோதி₃தௌ'' [ஒரே தத்வம்போலே சொல்லப் படுபவர்கள் பகவானும் பிராட்டியும்] என்று சொல்லுகிறபடியே அவனுடைய ஸர்வாத்மப₄ாவத்தை, அந்தரங்கையாய், அவன் பெருமைக்கும் அடியாயிருப்பவளான இவள்மேலே ஏறிடுகிறபடி. "அஹம் ஸர்வம்" [வி-பு] [நானே எல்லாம] என்று ப்ரஹ்லாதனும் ''அஹமேக: ப்ரத₂மமாஸம் வர்த்தாமி ச ப₄விஷ்யாமி ச'' [அதர்வ சிரஸ்] [நான் ஒருவனே முதலில் இருந்தேன்; இருக்கிறேன்; இருப்பேன்] என்று சிவனும், ''அஹம் மநுரப₄வம் ஸூர்யஶ்ச'' [ப்ருஹ 3-4-10] [நானே மனுவானேன்; சூர்யனுமானேன்] என்று

வாமதேவ ரிஷியும், "கடல் ஞாலமாவேனும் யானேயென்னும்" [திருவாய் 5-6-1] என்று நம்மாழ்வாரும் சொல்லும்போது, இறையுமகலகில்லாத நித்யானபாயினியாய், அவனுடைய பெருமைக்கும் அடியானவளாய், அவனுக்கும் ஸ்வரூபநிரூபகபூதையாயிருக்கும் இவளே எல்லாம் என்னக்குறையில்லையன்றே. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம" [தைத்-ஆ-1] என்றும் "ஸச்ச த்யச்சாப$_4$வத்" [தை-ஆ 6-5] [சேதனுசேதநங்களாகிருன் அவன்] என்றும் அவனன்றே ஓதப்படுகிருன். இப்படி ஸர்வாத்மபூதராக இருவரைக் கொண்டால் ஈச்வரத்$_3$வித்வம் முதலான பல தோஷங்களும் வருமன்றே. ஆகையால் இப்படியே பொருள்கொள்ளக்கடவது. பகவான் ஸர்வாத்மகனும்போது பிராட்டியும் விஶேஷணதயா ப$_4$ாஸிக்கிருள்-(விளங்குகிருள்)-என்னுமர்த்தத்தை,

"வானுகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்
தேனுகிப் பாலாம் திருமாலே" [முதல்திருவ-92]

"திருவாழ்மார்வன்றன்னைத் திசைமண்ணீர் எரிமுதலா
உருவாய் நின்றவனை ஒலிசேரும் மாருதத்தை
அருவாய் நின்றவனை" [பெரியதிரு 7-6-7]

என்று ஆழ்வார்களும் காட்டித்தந்தனரன்றே. இவ்வரும்பொருளையும், இம்மந்திரப்பெருமையையும்,

"ஸச்ச த்யச்ச ஜக$_3$த் த்$_3$வேத$_4$ா யத் ப்ரமாணேந த்$_3$ருஶ்யதே ।
தத் ஸர்வமஹமஸ்மீதி ஸத்யம் மாம் ருஷயோऽப்$_3$ருவந் ॥
ஷடக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வஸத்யப$_2$லப்ரத$_3$: ॥"

[எப்போதும் அழியாததாகையாலே 'ஸத்' எனப்படும் ஜீவதத்துவமும் எப்போதும் அவஸ்த்த$_2$ாத்யாக$_3$ம் செய்கையாலே 'த்யத்' எனப்படும் அசித்தத்துவமும் ஆக இரண்டுவிதமாயிருக்கிறது உலகம். நான் இது எல்லாமும் ஆகிறேனுகையால் என்னை ருஷிகள் 'ஸத்யம்' என்று அழைத்தனர். ஆறு எழுத்துக்கொண்ட "ஓம் ஸத்யாய நம:" என்னும் இம்மந்திரம் எல்லாவிதமான ஸத்யபலன்களையும் அளிக்கும்] என்று பிராட்டியும் பேசியருளினுள்: (அஶ்ரீமஹி) கீழ்ச்சொல்லப்பட்ட பெருமையை உடைய பிராட்டியை அடையக்கடவோம்.

(பசூநாம் ரூபம்) "பஶ்யந்தீதி பஶவ:" [காண்கிருர்களாகையாலே 'பசுக்கள்' எனப்படுகின்றனர் சேதனர்கள்] என்னும் வ்யுத்பத்தி

யாலே அறிவை ஸ்வரூபமாகக்கொண்ட மூவகைப்பட்ட சேதனரும் பசுக்களாகின்றனர். அவர்களின் ஸ்வரூபமான அறிவாயிருப்பவள் பிராட்டி என்று பொருள்படுகிறது இத்திருநாமம.

"பஶ்யந்தி பஶவோ ஜீவா: வித₄ாபி₄ஸ் திஸ்ருபி₄ஸ்தி₂தா: ।
தேஷாம் ரூபம் து யச்சூக்ர சைதந்யம் ஹேயவர்ஜிதம் ॥
தத்₃ரூபமஹமேவாஸ்மி சித்₃க₄நாநந்த₃ரூபிணீ ।
மச்சூ₂க்திலேஶாஸ் தே ஸர்வே ஜீவா: சிச்சூ₂க்திஸம்ஜ்ஞிதா: ॥
பசூநாம் ரூபமித்யேவம் ஸாங்க்₂யா மாம் ஸம்ப்ரசக்ஷதே ।
நவாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸம்யக் ஜ்ஞாநபூ₂லப்ரத₃: ॥

[நித்யர், முக்தர், பத்தர் என்னும் மூன்று வகைப்பட்ட ஜீவர்களும் காண்கையே ஸ்வரூபமாக உடையவர்களாகையாலே பசுக்கள் எனப்படுகின்றனர். தோஷமற்ற அவர்களுடைய ஸ்வரூபமான யாதொரு அறிவுண்டோ, அந்த அறிவாகவே ஆகிறேன் ஜ்ஞாநாநந்தமயியான நான். 'சித் சக்தி' [அறிவுசக்தி] என்னும் பெயரையுடைய அந்த எல்லாச்சேதனரும் என் சக்தியின் ஒரு துளியாயிருப்பவர்கள். ஆகையால் ஞானிகள் என்னை 'பசுக்களின் (ஸ்வ) ரூபம்' என்கின்றனர். ஒன்பது எழுத்துக்கொண்ட "ஓம் பசூநாம் ரூபாய நம:" என்னும் இம்மந்திரம் அழகிய ஞானமாகிற பலத்தை அளிக்கும்] என்று இப்பொருளும், மந்திரப்பெருமையும் தந்திரத்திலே கூறப்பட்டன.

(அந்நஸ்ய யஶ:) "அத்₃யத இதி அந்நம்" [அநுபவிக்கப்படுவது அந்நமாகிறது] என்னும் வ்யுத்பத்தியின்படி அநுபவிக்கப்படும் போக்யப்பொருள்களெல்லாம் அந்நமாகிறது. அது இரு வகைப்படும்:- ஸத்வம், ரஜஸ், தமஸ் எனனும் முக்குணங்களுக்கு வசப்பட்ட பத்த ஜீவர்கள் அநுபவிக்குமதான ப்ராக்ருதமான போக்யங்கள் ஒருவகை. இம்முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட நித்யமுக்தர்களுக்குப் பரமபதத்திலே போக்யமாயிருக்கும் ஜ்ஞாந ப₃ல ஐச்வர்ய வீர்யசக்தி தேஜஸ் என்னும் ஷாட்குண்ய மயமான பகவத்ஸ்வரூபம் மற்றொரு வகை. இவைகளுடைய இனிமையாகிற புகழாயிருப்பவள் பிராட்டி என்று இத்திருநாமத்துக்குப்பொருள். அதாவது:-இவைகளின் இனிமைக்குக் காரணமாயிருப்பவள் என்கை. "வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்த் தேனாகிப் பாலாம் திருமாலே" [முதல் திருவ-92] என்று பௌ₄திகமான இனிமைக்கும், "கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ"

[திருவாய் 10-10-6] என்று பகவத் விஷயத்தின் இனிமைக்கும் காரணமாயிருப்பவள் இப்பிராட்டியே என்று ஆழ்வார்களும் அறிவித்தனரன்றே.

"த்ரைகு$_3$ண்யம் ஷட்$_3$கு$_3$ண்ணோர்த்த$_2$ம் ச த்$_3$வித$_4$ாந்நம் பரிகீர்த்திதம்|
த்ரைகு$_3$ண்யமநுபத்$_3$த$_4$ாநாம் இதரேஷாமதே$_2$தரத் ||
த்$_3$விவித$_4$ஸ்யாபி சாந்நஸ்ய யத்$_3$யஶோரூப்முத்தமம் |
தத$_3$ஹம் ஸர்வபூ$_4$தாத்மா தத்வஜ்ஞை: பரிகீர்த்திதா ||
ப்ராக்ருதாப்ராக்ருதா போ$_4$கா$_3$ மச்ச$_2$க்திப்ரவிஜ்ரும்பி$_4$தா: |
அந்நஸ்ய யஶ இத்யேவ மாம் விது$_3$ஸ் தத்வசிந்தகா: ||
நவாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ போ$_4$கா$_3$ஸர்வஸ்வதா$_3$யக: ||"

['முக்குணமயம்' என்றும, 'ஷட்குணமயம்' என்னும் போக்யப் பொருள்கள் இருவிதம். பத்தர்களுக்கு 'முக்குணமயம்' போக்ய மாகிறது. நித்யமுக்தர்க்கு 'ஷட்குணமயம்' போக்யமாகிறது. இருவகை போக்யங்களுக்குமுள்ள இனிமையாகிற சிறந்த புகழ், ஸர்வபூதங்களாயுமிருக்கும் நானே என்று ஞானிகளால் சொல்லப் படுகிறேன். ப்ராக்ருதமானவையும், அப்ராகருதமானவையுமான போகங்கள் என் சக்தியிலிருந்து தோன்றுமவை. ஆகையால் ஞானிகள் என்னை 'அந்நத்தின் புகழ்' என்று அறிகிறுர்கள். ஒன்பது எழுத்துக்கொண்ட "ஓம் அந்நஸ்ய யஶஸே நம:" என்னும் இம் மந்திரம் போகமனைத்தையும கொடுக்கும்] என்று இப்பொருளும் மந்திரப்பெருமையும் தந்திரத்திலேயும் கோஷிக்கப்பட்டது.

(பசூநாம் ரூபம்-அந்நஸ்ய யஶ:) "பசூநாம் ரூபம்" என்று போக்த்ருஸ்வரூபமாயிருப்பவள் பிராட்டி என்று நிரூபிக்கப்பட்டது. போக்த்ருஶக்திப்ரபை$_4$களாக 'ஜ்வலந்தீ' என்னும் திருநாமத்தின் விவரணத்தில் நிரூபிக்கப்பட்ட ஸ்வர்க்கம், பர்ஜந்யன், பூமி, புருஷன், ஸ்த்ரீ என்னும் பஞ்சாக்நிகளும், லௌகிகாக்நியும், ஆக ஆறு அக்னிகளும் "பசூநாம் ரூபம்" என்னும் பதத்தால் குறிக்கப்பட்டு அவைகளாகவுமிருக்கிறுள் பிராட்டி என்றும் 'பசூ நாம் ரூபம்' என்னும் திருநாமத்துக்கு ஒரு பொருள். அதேபோல் போக்யஶக்திப்ரபைகளாக "ப்ரப$_4$ாஸா" என்னும் திருநாமத்தின் விவரணத்தில் நிரூபிக்கப்பட்ட ச்ரத்தா, ஸோமன, ஜலம், அந்நம, வீரியம், ஹவிஸ் என்னும் ஆறும் "அந்நஸ்ய யஶ:" என்னும் பதத்தால் குறிக்கப்பட்டு, அவைகளாகவுமிருக்கிறுள் பிராட்டி என்றும் 'அந்நஸ்ய யஶ:' என்னும் திருநாமத்துக்கு ஒரு பொருள்.

"ஆக்₃நேயீ யா ஹி மச்சூ₂க்தி: ஸா ஹி ஜாதா தத₂ா தத₂ா"

[அக்நிகளிலுள்ள என்னுடைய போக்த்ருசக்தி அங்கங்கு (போக்தாக்களிடம்) விளங்கிநின்றது.] என்றும்,

"ஸோமஶக்திர் மதீ₃யா யா ஸா ஹி ஜாதா தத₂ா தத₂ா"

[ஸோமன் முதலான ஹவிஸ்ஸுகளிடமுள்ள என்னுடைய போக்ய ஶக்தி அங்கங்கு (போக்யங்களிடம்) விளங்கிநிற்கிறது.] என்றும் இவ்விரு திருநாமங்களுக்குமுள்ள இவ்விரு பொருள்களும் லக்ஷ்மீ தந்த்ரத்திலும் காட்டப்பட்டன.

(ஶ்ரீ: மயி ஶ்ரயதாம்) ஶ்ரீதேவியானவள் என்னையடையட்டும். என்னை ஆச்ரயித்து நிற்பதனமூலம், 'ஶ்ரீ' யானவள் தன் பெயரை நிலைநிறுத்திக்கொள்ளட்டும். "ஶ்ரீ" ஶப்தத்துக்கு "அடியார்களுக்குப் பரதந்திரையாய் அவர்களை ஆச்ரயித்துநிற்பவள்" என்று அபூர்வமானதொரு வ்யுத்பத்தியைக் காட்டுகிறபடி. "**நண்ணித் தொழுமவர் சிந்தை பிரியாத நாராயணா**" [பெரியாழ்-திரு 2-3-2] என்றவிடத்திலே பெரியாழ்வாரும நாராயணசப்தத்துக்கு இப்படிப் பொருள் கொண்டாரன்றோ.

நிற்க; இம்மந்திரத்தில் "மநஸ: காமம்" என்றும், "வாச: ஆகூதிம்" என்றும், "ஸத்யம" என்றும், "பசூநாம் ரூபம்" என்றும், "அந்நஸ்ய யஶ:" என்றும் ஐந்து திருநாமங்கள் தனக்கு இடப்பட்டதாகப் பிராட்டியே லக்ஷ்மீதந்திரத்தில திருவுள்ளம் பற்றியிருக்கிறாள். அப்படியிருக்கும்போது, கோமடரங்க நாதபாஷ்யத்தில் பினவருமாறு உரையிடப்பட்டிருக்கிறது:—"மநஸ: காமம்–மனத்தால் விரும்பப்படும் பொருளகள், ஆகூதிம்–அபிப்ராயத்திலிருக்கும் பொருள்கள், வாச:-வாக்கினால் பிரார்த்திக்கப் படுமவை ஆகிய எல்லா விருப்பங்களையும், பசூநாம் ரூபம்-ஜீவதந ஸமிருத்தியையும். அந்நஸ்ய ரூபம்–அந்நஸம்ருத்திக்குக் காரணமான அனைத்தையும், ஸத்யம்–மாறுததான லக்ஷ்மியின் அருளையும், அஶீமஹி—அடையக்கடவோம். ஶ்ரீ:—ஶ்ரீதேவி, மயி—என்னிடத்தில் (மேலே கூறிய ஸம்ருத்திகளையும்) யஶ: ச-கீர்த்தியையும், ஶ்ரயதாம்-அடைவிக்கட்டும்" என்று.—நிஷ்பக்ஷபாதிகளான மஹான்கள், பிராட்டி திருவுள்ளம் பற்றியிருக்கும் பொருளுக்கும் இந்த பாஷ்யத்திலுள்ள பொருளுக்கும் ஏதாவது ஸம்பந்தமிருக்கிறதா என்று பார்க்கவேண்டும். பிராட்டி அருளிச்செய்த பொருள்கள் அர்த்

தாந்தரமாகக்கூடக் காட்டப்படவில்லை என்பதை நோக்கவேண்டும். நடுநிலைமையிலிருந்து ஆராய்ந்து பார்த்தார்களானல் இந்த பாஷ்யம் ஸகலசாஸ்த்ர பாரங்கதர்களான பூர்வாசார்யர்கள் எவராலும் இயற்றப்பட்டதன்று என்னும் ஒரே முடிவுக்கே வரமுடியும். அந்தபாஷ்யத்தை அச்சிட்டவர்கள் உண்மையை இதைக்கண்ட பின்பாவது ஒப்புக்கொண்டார்களானல் அவர்களுடைய ப்ராமாணிகத்வத்தை உலகமெல்லாம் கொண்டாடும். கோமடரங்கநாத பாஷ்யத்திற்கும் பிராட்டி திருவுள்ளம்பற்றிய பொருள்களுக்குமுள்ள வேறுபாடுகளைப் பலவிடங்களிலும் நாம் காட்டியிருப்பது இவ்வுண்மையை உலகுக்கு உணர்த்துவதற்கே என்று உணர்க.

कर्दमेन प्रजाभूता मयि संभव कर्दम।
श्रियं वासय मे कुले मातरं पद्ममालिनीम् ॥ ११ ॥

**11.** கர்த்த₃மேந ப்ரஜாபூ₄தா மயி ஸம்ப₄வ கர்த்த₃ம।
ஶ்ரியம் வாஸய மே குலே மாதரம் பத்₃மமாலிநீம் ||

**பதவுரை:**—**கர்த்த₃ம**—*கர்த்தமப்ரஜாபதியே!* **கர்த்த₃மேந**-*கர்த்தமரான உம்மால்.* **ப்ரஜாபூ₄தா**—*பெண்ணுக ஏற்றுக்கொள்ளப்பட்டாள் (ஸ்ரீதேவி);* **மாதரம்**—*எல்லாவுலகிற்கும் தாயும்,* **பத்₃மமாலிநீம்**-*தாமரை மாலைகளை உடையவளுமான,* **ஶ்ரியம்**-*ஸ்ரீதேவியை.* **மயி**--*என்னிடத்தில்.* **ஸம்ப₄வ**—*பிறக்கச்செய்; (உன் பெண்ணுகிய ஸ்ரீதேவியை)* **மே**—*என்னுடைய.* **குலே**-*குலத்தில்.* **வாஸய**—*வசிக்கச்செய்.*

ஸ்ரீதேவியானவள் என்னிடம் வசிக்கட்டும் என்று பிரார்த்தித்தான் சென்ற மந்திரத்தில். பாற்கடலில் பிராட்டி பிறந்தபோது அவளைப்பெண்ணுக ஸ்வீகரித்துக்கொண்ட கர்த்தம ப்ரஜாபதியைப் புருஷகாரமாகப்பற்றி, 'என்னளவோடல்லாமல் என் குலத்திலுள்ளார் அனைவரிடமும் பிராட்டி வசிக்கும்படி செய்யவேண்டும் என்று பிரார்த்திக்கிறுன் இம்மந்திரத்தில்.

(*கர்த்தமேந ப்ரஜாபூதா*) *கர்த்தமரின் பெண்ணுயிருப்பவள்* ஸ்ரீதேவி.

"க்ஷீரோத₃ார்ணவஸம்பூ₄தாம் ஶ்ரியம் ஜக்₃ராஹ கர்த்த₃ம:।
ப்ரஜாத்வேந தத₃ா லக்ஷ்மீம் தத₃ா ப்ரப்₄ருதி கர்த்த₃மீ॥"

[பாற்கடலில் பிறந்த பெரியபிராட்டியாரைக்கர்த்தம ப்ரஜாபதி யானவர் தன் பெண்ணாக ஏற்றுக்கொண்டார்; அதுமுதல் பிராட்டி 'கர்த்தமீ' என்னும் பெயரைப்பெற்ருள்.] என்று கோமடரங்க நாத பாஷ்யத்தில் எடுக்கப்பட்ட ப்ரமாண வசனத்தின்படி, பிராட்டியானவள் கர்த்தம ப்ரஜாபதியின் ஸ்வீக்ருதபுத்ரியாகிருள் என்று அறியப்படுகிறது. (மயி ஸம்ப₄வ கர்த்த₃ம மாதரம்) கர்த்தம ப்ரஜாபதியே! அகிலஜகந்மாதாவான அவளை, அவளுடைய குழந்தையான எனனிடத்தில் பிறக்கச்செய். உனக்குப் பெண்ணா னாற்போலே எனக்கும் பெண்ணாக்கு என்கை. "பிதா புத்ரேண பித்ருமாந்" [ஸர்வலோகபிதாவானவன் தன் பிள்ளையொருவனைப் பிதாவாகக்கொண்டு பிறக்கிருன்] என்றாற்போலே. (ஶ்ரியம் வாஸய மே குலே) பெண்ணாகையாலே உமக்கு நியாம்யையான ஸ்ரீதேவியை என்னளவோடல்லாமல் என குலத்திலுள்ளார் அனைவரிடமும் வசிக்கச்செய்வீராக.

எப்பேர்ப்பட்டவளை? எனில்: (மாதரம்) * அகில ஜகந்மாதாவா யிருப்பவளை. சேதனர்க்குத்தாயைப்போலே ப்ரியத்தையும் ஹிதத் தையும் செய்பவளை. "ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாத₄வ:" [எல்லாவுலகிற்கும தாயும் தந்தையுமாயிருப்பவன் லக்ஷ்மீ நாராயணனே] என்று பாரதத்திலும், "மாதாவினைப் பிதுவைத் திருமாலை" [திருவிரு-95] என்று நம்மாழ்வாராலும் உத்கோஷிக்கப் பட்டதன்றே. இத்திருநாமத்தின அக்ஷரப் பொருள்களையும் சிந்திப் போம். 'மா-மாநே' 'மாங்-மாநே' என்று தாதுக்களாகையாலே 'அளப்பவள்; அளக்கப்படுபவள்' என்று மகாரம பொருள்படுகிறது. "பிணக்கற அறுவகைச் சமயமும்" [திருவாய் 1-5-5] என்று சொல்லப் படும் ஆறுவகையான புறச்சமயங்களுடைய தாழ்வுகளை அளந்து வைத்திருப்பவள் என்கை. அவற்ருல் அறியப்படமாட்டாதவள் என்றும் கருத்து.

"அறுவகைச்சமயமும் அறிவருநிலையினை
ஐம்பாலோதியை ஆகத்திருத்தினை" [திருவெழுகூற்றிருக்கை]

என்ருர் திருமஙகை மன்னனும். எல்லா ப்ரமாணங்களாலும் அறி யப்படுபவள் என்றும் மகாரம் பொருள் தருகிறது.

"ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும
சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை

போதுவாழ் புனந்துழாய் முடியினாய் பூவின்மேல்
மாதுவாழ் மார்பினாய்'' [திருவாய் 3-1-6] என்றார் ஆழ்வாரும்.

எல்லாப்பொருள்களும் பிராட்டியினுள்ளே அளவுபடுகிறது என்றும் மகாரத்திற்குப் பொருளாகிறது. 'மந-ஜ்ஞாநே' என்று தாது வாகையாலே எல்லா ப்ரமாணங்களாலும் ஏற்படும் அறிவாயு மிருப்பவள் பிராட்டி என்று மகாரார்த்தமாகிறது. ''ஒண்தாமரை யாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு'' [முதல்திருவ-67] என்றார் பொய்கையாழ்வார். இப்பொருள்களைத்தும்

'மிமே ஷட$_3$த்$_4$வநோ வ்யக்$_3$ரா மீயே மாநைஸ் தத$_2$ாऽகி$_2$லை:।
மிதிஶ்ச ஸர்வமாநாநாம் மாதி சாந்தர் மமாகி$_2$லம் ॥''

[அறுசமயங்களை முன்னின்று அளக்கிறேன்; எல்லா ப்ரமாணங் களாலும் அளக்கப்படுகிறேன்; எல்லா ப்ரமாணங்களின் அறிவாயு மிருக்கிறேன்; எல்லாப் பொருள்களும எனக்குள் அளவுபடுகிறது.] என்று பிராட்டியாலும் பேசப்பட்டது. ''த்ரு-ப்லவந தரணயோ:'' [மிதப்பது-தாண்டுவது என்னும் இரு பொருள்கொண்டது 'த்ரு' என்னும் தாது] என்று தாதுவாகையாலே 'மாத்ரு' ஶப்தத்தின் இரண்டாவது எழுத்து 'எல்லா தோஷங்களையும் தாண்டிநிற்பவள்' 'ஸம்ஸாரஸாகரத்திலிருந்து சேதனரைக் தாண்டுவிப்பவள்' 'தன் திருவுள்ளமாகிற தெப்பத்தைக்கொண்டு ஸர்வபூதங்களிலும் மிதப் பவள்' 'மேகமாயிருந்துகொண்டு உலகையெல்லாம் நீரிலே மிதக்கச் செய்பவள்' என்னும் பல பொருள்களைத் தருகிறது. இப்பொருள் களும், ப்ரியஹிதங்களைச் சிந்தித்துச் செய்யும் தாயாயிருப்பவள் என்னும் மாத்ருஶப்தார்த்தமும், மந்திரப்பெருமையும்,

''தாரயாமி ஜகத் ஸர்வமபாரம் ப$_4$வஸாக$_3$ரம் ॥
உத்தீர்ணா ஸர்வதோ$_3$ஷாப்$_3$தே$_4$: ப்லவே பூ$_4$தேஷு சேதஸா ॥
ப்லாவயாமி ஜக$_3$த்$_3$ விஶ்வம் பயஸா மேக$_4$தாம் க$_3$தா।
ப்ரியம் ஹிதம் ச ஸர்வேஷாம சிந்தயந்தீ கரோமி ச ॥
தேந மாம் ஸர்வபூ$_4$தாநாம் மாதரம் யோகி$_3$நோ விது$_3$:।
பஞ்சாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வபே$_4$தக$_3$ஸம்ருத்$_3$தி$_4$த$_3$:॥''

[எல்லா உலகினரையும் கரைகாணவொண்ணாத ஸம்ஸாரஸாக ரத்தைத் தாண்டுவிக்கிறேன். தோஷக்கடலைத் தாண்டியிருக்கிறேன்; திருவுள்ளத்தாலே பூதங்களில் மிதக்கிறேன்; மேகமாகி எல்லா

வுலகையும் நீராலே மிதக்கச்செய்கிறேன்; அனைவர்க்கும் பிரிய ஹிதங்களைச் சிந்திக்கிறேன், செய்கிறேன்; ஆகையால் என்னை எல்லா பூதங்களுக்கும் தாயென்று யோகிகள் அறிகினறனர். ஐந்து எழுத்துக்கொண்ட "ஓம் மாத்ரே நம:" என்னும் இம்மந்திரம் எல்லா போகப்பெருக்கையும அளிக்கும்.] என்று பிராட்டியாலும் லக்ஷ்மீதந்திரத்திலே உத்கோஷிக்கப்பட்டது.

(பத்மமாலிநீம்) தாமரைமாலையை உடையவளை. தாமரையை ஆஸநமாகக்கொண்டும், கையில் தாமரையை உடையவளாகவும், சிர:பத்மத்தின் கீழ் இருப்பவளாகவும், தாமரைமாலையை உடைய வளாகவுமிருக்கையாலன்றோ 'தாமரையாள்' என்றும், 'மலர்மகள்' என்றும், 'கமலப்பாவை' என்றும், 'மலராள்' என்றும் கீர்த்திக் கப்படுகிருள் இப்பிராட்டி. (பத்மமாலிநீம்) ஸுஷும்நாநாடி யென்று தலையில் ப்ரஹ்மரந்திரத்திலிருந்து மூத்திரப்பையின் மேல் பாகம்வரையில் ஒரு நாடியொன்று ஓடுகிறது. மோக்ஷமடைபவர் கள் இந்த நாடியின் வழியாகவே ப்ரஹ்மரந்த்ரத்தை பேதித்துக் கொண்டு பரமபதமடைகிருர்கள் என்று வேதாந்தங்களில் ஓதப் படுகிறது. இந்த நாடியில் ஆதாரபத்மங்கள் எனப்படும் முப்பத்தி ரண்டு பத்மங்கள் அமைந்திருககின்றன. இந்த நாடியாகவே சொல் லப்படுமவளும் இந்த நாடியிலே ஸஞ்சரிக்குமவளுமான பிராட்டி இந்தப் பத்மங்களாகிற மாலையால் அலங்கரிக்கப்பட்டவளாகக் காட்சியளிக்கிருள். ஆகையாலே 'பத்ம மாலிநீ' எனப்படுகிருள் என்றும் லக்ஷ்மீதந்த்ரத்திலே ஒரு பொருள் உரைக்கப்பட்டது.

"ஸுஷும்நா நாம யா நாடீ$_3$ நாடீ$_3$சக்ரஸ்ய நாயிகா |
முக்தியாநம் மஹாயாநம் யோகி$_3$யாநமிதி ஶ்ருதா ||
ஶக்திர் யா வைஷ்ணவீ ஸூக்ஷ்மா மந்மயீ பரிகீர்த்திதா |
ஸங்கல்பவிஷயஸ் ஸர்வோ யாமாலமப்$_3$யாவதிஷ்ட$_2$தே ||
ஊர்த்$_4$வம் சாத$_4$ஶ்ச யா பி$_4$த்வா ப்ரதிஜீவம் வபுர்க$_3$திம் |
வ்யாப்தா பரமமாகாஶம் ஸா ஸுஷும்நேதி கீ$_3$யதே ||
முக்தயேऽகி$_2$லஜீவாநாம் ஸமஸாராகி$_2$லகே$_2$தி$_3$நாம் |
ஸாஹம் ஸுஷும்நாரூபேண வர்த்தே தே$_3$ஹேஷு தே$_3$ஹிநாம் ||
ஆவஸ்திஶீர்ஷாத$_3$ாமூர்த்$_4$நஸ் தஸ்யாம் ஶக்தெள புரந்த$_3$ர|
ஆத$_4$ாராக்$_2$யாநி பத்$_3$மாநி த்$_3$வாத்ரிம்ஶத் ஸம்ஸ்தி$_2$தாநி வை||
பத்$_3$மாநாம மாலயா வ்யாப்தா ததோऽஹம் பத்$_3$மமாலிநீ ||"

[நாடீஸமூஹம் முழுவதற்கும் தலையானதாயிருப்பதும் 'மோக்ஷ வழி' என்றும் 'பெரியவழி' என்றும், 'யோகிகளின்வழி' என்றும் சொல்லப்படுவதும், விஷ்ணுவினுடைய சக்தியாகவும், நாணுகவும் கீர்த்திக்கப்படுவதும், ஸங்கல்பங்களுக்குப் பிறப்பிடமாயிருப்பதும். ஒவ்வொரு ஜீவனுடைய சரீரத்தின் மேல்பாகத்தையும் கீழ்பாகத்தையும் பிளந்துகொண்டு ப்ரஹ்மரந்த்ரத்தில் சென்று வியாபித்திருப்பதுமான நாடி 'ஸுஷும்நாநாடி' என்று சொல்லப்படுகிறது. ஸம்ஸாரத்திலே எல்லாத்துன்பங்களையும் அனுபவிக்கும் ஜீவர்கள் அனைவரும் மோக்ஷமடைவதற்காக, ஜீவர்களுடைய தேஹத்திலே நானே ஸுஷும்நாநாடியுருவத்திலேயிருக்கிறேன். இந்திரனே! மூத்திரக்காயின் தலையிலிருந்து, தலையில் ப்ரஹ்மரந்த்ரம் வரையில் விஷ்ணுசக்தியாயிருக்கும் இந்த நாடியில் ஆதாரபத்மம் எனப்படும் முப்பத்திரண்டு தாமரைகள் அமைந்திருக்கின்றன. அந்தத் தாமரை மாலையாலே நான் வியாபிக்கப்பட்டு விளங்குகிறேன். ஆகையால் 'பத்மமாலினி' ஆகிறேன்.] என்னும் லக்ஷ்மீதந்த்ர வசனங்கள் காண்க.

(பத்மமாலிநீம்) "பத்₃மே ஸ்தி₂தாம்" என்னும் திருநாமத்தின் விவரணத்தில் "பத்₃யமாநம் மிநோதீதி காலம் பத்₃மம் ப்ரசக்ஷதே" [தான் சென்றுகொண்டே பிறவற்றை அளக்கிறதாகையாலே காலத்தைப்பத்மமென்கிறுர்கள்] என்று பத்மமாகச் சொல்லப்பட்ட காலத்தையும், "பத்மவர்ணும்" என்னும் திருநாமத்தின் விவரணத்தில் ஸூர்யனைக்கண்டு மலரும் தாமரைபோலே பிராட்டியைக்கண்டு மலருமவையாகச் சொல்லப்பட்ட ப்ரக்ருதிபுருஷர்களையும் தாமரை மாலைபோலே தரித்து நிற்பவளாகையாலே 'பத்மமாலிநீ' எனப்படுவதாகவும் கொள்ளலாம். இப்பொருளும் மந்திரப்பெருமையும்

"ப்ரக்ருதிம் புருஷம் சைவ காலஞ்சாபி ஸநாதநம் |
தா₄ரயாமி ஸ்வரூபேண ததோऽஹம் பத்₃மமாலிநீ ||
அஷ்டாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வகர்மப₂லப்ரத₃: ||"

[ப்ரக்ருதியையும், புருஷனையும், பழைமையான காலத்தையும நான் ஸ்வரூபத்தாலேயே தரித்துநிற்கிறேன்; அதனாலேயே பத்மமாலினியாகிறேன். எட்டு எழுத்துக்கொண்ட 'ஓம் பத்₃மமாலிந்யை நம:' என்னும் இம்மந்திரம் எல்லாக்கருமங்களின் பலத்தையும் வழங்கும்] என்று லக்ஷ்மீதந்திரத்திலேயும் சொல்லப்பட்டது.

இப்படிப்பட்ட லக்ஷ்மீதேவியை என் குலத்திலே வஸிக்கச் செய்வாயாக என்று அந்வயம்.

आपः सृजन्तु स्निग्धानि चिक्लीत वस मे गृहे।
नि च देवीं मातरं श्रियं वासय मे कुले॥१२॥

**12.** ஆப: ஸ்ருஜந்து ஸ்நிக்$_3$த$_4$ாநி சிக்லீத வஸ மே க்$_3$ருஹே।
நி ச தே$_3$வீம் மாதரம் ஶ்ரியம வாஸய மே குலே॥

**பதவுரை:**—**ஆப:**–ஜலங்கள், **ஸ்நிக்$_3$த$_4$ாநி**–*(பிராட்டிக்கு) இனியவைகளை*, **ஸ்ருஜந்து**—*ஸ்ருஷ்டிக்கட்டும்*; **சிக்லீத**—*பிராட்டியின் கோயில் காப்பானே!*, **மே**—*என்னுடைய*. **க்$_3$ருஹே**–*வீட்டில்*, **வஸ**—*வசிப்பாயாக*; **மாதரம்**—*தாயான*, **ஶ்ரியம்தேவீம்**—*ஸ்ரீதேவியை*. **மம குலே**—*என் குலத்தில்*, **நிவாஸய ச**–*நித்யவாஸம் செய்விப்பாயாக*.

கர்த்தமப்ரஜாபதியைப் புருஷகாரமாகப் பற்றி ஸ்ரீதேவியை என்குலத்தில் வஸிக்கச்செய்யவேண்டுமென்றான் முன் மந்திரத்தில். அவரைவிட அந்தரங்கனாய், பிராட்டியின் கோயில் காக்கும் முதலியான சிக்லீதரைப் புருஷகாரமாகப் பற்றி, 'என்வீட்டில் நீரும் வசிக்கவேண்டும். பிராட்டியையும் என்குலத்தில் நித்யவாஸம செய்விக்கவேண்டும்' என்று பிரார்த்திக்கிறான இம்மந்திரத்தில்.

(ஆப: ஸ்ருஜந்து ஸ்நிக்$_3$த$_4$ாநி) "ஆபோ ந ரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:। தா யத$_3$ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: ॥" [நரனென்கிற பரமபுருஷனிடமிருந்து உண்டானதாகை யாலே ஜலம் நாரமெனப்படுகிறது. அதை இருப்பிடமாகக் கொண்ட வனகையாலே பரமபுருஷன் நாராயணன் எனப்படுகிறான்.] என்று மநுஸ்ம்ருதியில் சொன்னபடியே ஸ்ரீமந்நாராயணனுக்கு இருப்பிடமாயிருக்கும் ஜலம் பிராட்டிக்கு இனிய பொருள்களை என்னிடம் ஸ்ருஷ்டிக்கட்டும். "ஸ்நேஹிந்ய ஆப:" [ஸ்நேஹமென்னும் குணத்தை யுடையது ஜலம்] என்று சொல்லப்படும் ஜலம் ஸ்நேஹவிஷயீபூ$_4$த மான பொருள்களைப் படைக்கட்டும்.

(சிக்லீத) பகவானுடைய அந்த:புரத்துக்கு த்வாரபாலகரான சிக்லீதரே!

"பத்₃மோ க₃தே₃ா நிதி₄: ஶங்க₂ஶ் சதுர்த₃ந்தீ க₃ஜஸ் தத₂ா|
கல்யாணஸர்ப்ப பஞ்சாஸ்யா: சிக்லீதோ க்₃ருஹரக்ஷகா: ||"

*[பத்மர், கதர், சங்கநிதி, நாலுதந்தமுடைய கஜம், கல்யாண ஸர்ப்பம், பஞ்சாநநர் (ஸிம்ஹம்), சிக்லீதர் ஆகியோர் (பிராட்டியின்) கோயில் காப்பவர்கள்]* என்னும் புராணவசனத்தை கோமடரங்க நாதர் காட்டினர். *(சிக்லீத வஸ மே க்ருஹே)* ஸூர்யோதயத்துக்கு முன் அருணோதயமாவதுபோலே பிராட்டி என் கிருஹத்தில் வஸிப்பதற்கு முன் க்ருஹத்வாரரக்ஷகரான நீரும் பிராட்டியின் திருக் கோயிலான என்வீட்டை ரக்ஷிப்பதற்காக எழுந்தருளவேண்டும்.

வேறு என் செய்யவேண்டும்? எனில்: *(தேவீம்...நிவாஸய)* பெரியபிராட்டியாரை என் குலத்திலே ஸாந்நித்யம் செய்விக்க வேண்டும். *(தேவிம்)* தேவனுடைய பத்தினியாயிருப்பவளை. இத் திருநாமத்தின் பொருள்கள் முன்பே விளக்கப்பட்டன.

*(மாதரம்)* உலகிற்குத் தாயாயிருப்பவளை, *(ஶ்ரியம்)* 'ஸ்ரீ:' என்னும் தனிப்பெயரைப் பெற்றவளை. இவ்விரு திருநாமங்களின் பொருளும் நிர்வசனமும் முன்னமே காட்டப்பட்டது. *(மே குலே)* என்னளவோடல்லாமல் கீழ்மேல் ஏழ்படிகாலுமுள்ள என்குலம் முழுவதிலும். *( நிவாஸய ச )* நீர் வசிப்பதோடன்றியில் பெரிய பிராட்டியாரையும் வசிக்கச்செய்யவேண்டும். இத்தால் பிராட்டியின் பக்தபாரதந்த்ரியம் வெளிப்படுகிறது.

**आर्द्रां पुष्करिणीं यष्टिं पिङ्गलां पद्ममालिनीम्।**
**चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममाऽऽवह ॥ १३ ॥**

**13. ஆர்த்₃ராம் புஷ்கரிணீம் யஷ்டிம் பிங்க₃ளாம் பத்₃மமாலினீம்|**
**சந்த்₃ராம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதே₃ா மமாऽऽவஹ||**

**பதவுரை:**—**ஜாதவேத₃:**—*பரமபுருஷனே!* **ஆர்த்₃ராம்**—*ஈர நெஞ்சினளும்,* **புஷ்கரிணீம்**—*(அடியாரைப்) போஷிப்பவளும்,* **யஷ்டிம்**—*(அனைவர்க்கும்) ஊன்றுகோலாயிருப்பவளும்,* **பிங்க₃ளாம்**— *மஞ்சள் நிறமானவளும்,* **பத்₃மமாலினீம்**— *தாமரை மாலையை தரித்து நிற்பவளும்,* **சந்த்₃ராம்**—*ஆநந்த ஸ்வ ரூபிணியும்,* **ஹிரண்மயீம்**—*பொன்மயமானவளுமான* **லக்ஷ்மீம்**—*பெரிய பிராட்டியாரை,* **மம**—**எனக்கு**. **ஆவஹ**—*அளிப்பீராக.*

பிதாவான கர்த்தமரையும், தாளபுத்ரரான சிக்லீதரையும் பிரார்த்தித்தான் முன் மந்திரங்களில். எவர் இசைந்தாலும், உடைய வனை ஸர்வேச்வரன் இசைந்தாலொழியப் பிராட்டியின் கருணை கடாக்ஷம் ஸித்திக்காதன்றே. ஆகையாலே தொடக்கத்திற்போலே கடைசியிலும் மூன்று மந்திரங்களால் பிராட்டியைத் தன்னிடம் நித்ய வாஸம் செய்விக்கவேண்டுமென்று பரமபுருஷனைப்பிரார்த்திக்கிறான்.

(ஆர்த்₃ராம்) ஈரநெஞ்சையுடையவளாயிருப்பவளை. இத்திரு நாமத்தின் அரும்பொருள்களும் பெருமையும முன்பே விளக்கப் பட்டது.

(புஷ்கரிணீம்) பிறருக்கு ரூபத்தையும், கீர்த்தியையும், செல்வத் தையும் அளித்துப் போஷிப்பவள். ஸர்வேச்வரனுக்கும், "அதீவ ராம: ஶுஶுபே₄" [ரா-பா 77-30] [சீதாபிராட்டியாலே ராமபிரான் மிகவிளங்கினான்] "திகழ்கின்ற திருமார்வில் திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார்" [திருவாய் 10-6-9] என்று அழகையும், "மன்னு பெரும்புகழ் மாதவன்" [நாச்-திரு 5-1] "மருத்தார் தொல் புகழ் மாதவனை" [பெரியதிரு 10-10-1] "அலர்மேல் மங்கையுறை மார்பா நிகரில் புகழாய்' [திருவாய் 6-10-10] என்று புகழையும், "ஶ்ரத்₃த₄யா தே₃வோ தே₃வத்வமஶ்நுதே" [பிராட்டியாலே பகவான் ஈச்வரனாகிறான்] என்று ஐச்வர்யத்தையும் அளித்துப் போஷிப்பவள் இப்பிராட்டியே ஆம்போது, மற்றுள்ளாரைப் போஷிப்பவள் இவளே என்பதை விவரிக்கவும் வேண்டுமோ ? (புஷ்கரிணீம்) புஷ்கரஶப்தம் தாமரையைச் சொல்லும். பத்மமாகச் சொல்லப்பட்ட காலத்தை நியமிப்பவளாகையாலே 'புஷ்கரிணீ' எனப்படுவதாக வும் கொள்ளலாம். (புஷ்கரிணீம்) தாமரைகளை உடையவள் என்றும் பொருள்கொள்ளலாம். முதலிரண்டு பொருள்களும், இம் மந்திரப் பெருமையும,

"போஷம் கரோமி ஸர்வேஷாம் ரூபேண யஶஸா ஶ்ரியா ।
புஷ்கரஞ்ச நயாம்யேகா காலாக்₂யம் பத்₃மரூபகம் ॥
தேந புஷ்கரிணீத்யேவ ருஷயோ மாம் ப்ரசக்ஷதே ।
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வபோஷப₂லப்ரத₃:॥"

[அழகாலும், கீர்த்தியாலும், செல்வத்தாலும் அனைவரையும் போஷிக் கிறேன். பத்மமாகச் சொல்லப்படும காலமாகிற தாமரையை நான் ஒருத்தியே நியமிக்கிறேன். ஆகையால் 'புஷ்கரிணீ' என்று

மஹர்ஷிகள் என்னைச்சொல்லுகின்றனர். ஏழு எழுத்துக்கொண்ட "ஓம் புஷ்கரிண்யை நம:" என்னும் இம்மந்திரம் எல்லாப் புஷ்டிகளையும் பலனாக அளிக்கும்] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலே கோஷிக்கப்பட்டது.

எப்படிப் போஷிப்பவள்? எனில்: (யஷ்டிம்) "யா-ப்ராபணே" என்னும் தாதுவிலிருந்து தோன்றியதாகக் கொண்டால் எல்லாக் காமங்களையும் அடைவிப்பதன்மூலம் அனைவரையும் போஷிப்பவள் என்கை. இவள் ஸர்வகாமங்களையும் அடைவிக்கிறாள் என்னும் அர்த்தத்தை

"மண்ணுலகமாளேனே வானவர்க்கும் வானவனாய்
விண்ணுலகம் தன்னகத்து மேவேனே–நணணித்
திருமாலைச் செங்கண் நெடியானை எங்கள்
பெருமானைக் கைதொழுதபின்" [இர-திருவ-90]

என்று பூதத்தார் பேசியருளினார்.

(யஷ்டிம்) "யா-ப்ராபணே" என்னும் தாதுவுக்கு கத்யர்த்தமும் உண்டாகையாலே "ஸர்வேச்வரனை எப்போதும் அடைந்திருப்பவள்" என்றும் பொருள்கொள்ளலாம். (யஷ்டிம்) "இஷு-இச்சாயாம்" என்னும் தாதுவிலிருந்து தோனறியதாகக் கொண்டு, "எல்லா தேவர்களுக்கும் இஷ்டையாயிருப்பவள்" என்றும் பொருள் கொள்ளலாம்.

"ததோऽவலோகிதா தே₃வா ஹரிவக்ஷ:ஸ்த₂லஸ்த₂யா ।
லக்ஷ்ம்யா மைத்ரேய ஸஹஸா பராம் நிர்வ்ருதிமாக₃தா: ॥"
[வி-பு 1-9-106]

[மைத்ரேயரே! அதற்குப்பின் பரமபுருஷனின திருமார்பில் எழுந்தருளியிருக்கும் பெரிய பிராட்டியாராலே கடாக்ஷிக்கப்பட்ட தேவர்கள் மேலான இன்பத்தை அடைந்தனர்] என்றல்லவோ சொல்லப்பட்டது. (யஷ்டிம்) யஷ்டிஶப்தம் ஊன்றுகோலைக் குறிக்குமாகையாலே ஊன்றுகோல்போலே எல்லோருக்கும் பற்றுக்கொம்பாயிருப்பவள் என்றுமாம். "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றிலேன் யான்" [திருவாய் 10-10-3] "கோல் தேடியோடும் கொழுந்ததே போன்றதே மால்தேடியோடும் மனம்" [இர-திருவ 27] என்கிறபடியே அனைவர்க்கும் பற்றுக்கொம்பாயிருக்கும்அவனுக்கும்,

"மலராள் தனத்துள்ளான்" [மூன்-திருவ-3] "சங்கு தங்கு முன்கை நங்கை கொங்கை தங்கலுற்றவன்" [திருச்சந்த-57] என்கிறபடியே பற்றுக்கொம்பாயிருப்பவளன்றோ இப்பிராட்டி.

"யாமாலம்ப்₃ய ஸுகே₂நேமாம் துஸ்தரம் த்ரிகு₃ணோத₃தி₄ம் |
நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்தத்₄யாநபராயணா: ||"

[தர்சநஸமானமான தியானத்தில் ஈடுபட்ட பெரியோர்கள் கடக்கவரிதான இம்முக்குணக்கடலை எவளைப் பற்றிநின்று மிகவிரைவில் அதிஸுலபமாகக் கடக்கிறார்களோ] என்று இப்பிராட்டியானவள் அகிலாத்மாக்களுக்கும் ஆலம்பனமாயிருக்கிறாள் என்னுமர்த்தம் ஸாத்வத ஸம்ஹிதையிலும் சொல்லப்பட்டதன்றோ.

(யஷ்டிம்) கோல்போலே மெல்லியவளாயிருப்பவள் என்றுமாம். "கொம்புபோல் சீதை" [திருவாய் 4-2-8] என்றார் நம்மாழ்வாரும். "தெய்வவண்டு துதைந்த எம்பெண்மை அம் பூ" [திருவாய் 9-9-4] என்கிறபடியே ஸர்வேச்வரனுடைய போகத்தாலே துவண்டு மெலிந்திருக்கும் பூக்கொம்புபோன்ற திருமேனியை உடையவள் என்கை.

"மர்மஸ்ப்ருஶோ ரஸஶிரா வ்யதிவித்₄ய வ்ருத்தை:
காந்தோபபே₄ாக₃லலிதைர் லுலிதாங்க₃யஷ்டி: |
புஷ்பாவலீவ ரஸிகப்₄ரமரோபபு₄க்தா
த்வம் தே₃வி நித்யமபி₄நந்த₃யஸே முகுந்த₃ம் ||" [ஸ்ரீகுண-45]

[பிராட்டி! மர்மஸ்பர்சிகளான ரஸநாடிகளை அபி₄க₄ாதம் செய்து கொண்டு ஏற்படும், பரமபுருஷனுடைய ஸம்போக விளையாட்டுக்களாலே துவண்டு மெலிந்திருக்கும் கொம்புபோன்ற திருமேனியை உடையவராய், சுவையறியும் வண்டாலே அநுபவிக்கப்பட்ட பூக்கொம்புபோலே தேவரீர் முகுந்தனை என்றும் ஆநந்திப்பிக்கிறீர்.] என்று பட்டர் இப்பொருளை விவரித்தார். (யஷ்டிம்) யாகக்ரியையாயிருப்பவள் என்றும், யாகத்தால் ஆராதிக்கத்தக்கவள் என்றும் கோமட ரங்கநாதர் பொருள்கொண்டார். முதல் மூன்று பொருள்களும் மந்திரப்பெருமையும்

"இஷ்டாஸ்மி ஸர்வதே₃வாநாம் ஸங்க₃தா ஹரிணா ஸதா₃ |
தா₃த்ரீ ச ஸர்வகாமாநாம் அகி₂லஸ்யாவலம்ப₃நம் ||
மாமாலம்ப்₃யாவதிஷ்ட₂ந்தே ப்ரத₄ாநபுருஷாத₃ய: |

யஷ்டிரித்யேவம் ருஷயோ மாம் ததஸ் ஸம்ப்ரசக்ஷதே|
ஷடக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வயோகபலப்ரத: ||

[எல்லா தேவதைகளுக்கும் இனியவளாயிருக்கிறேன்; பகவானோடு எப்போதும் கூடியிருக்கிறேன்; எல்லாக் காமங்களையும் கொடுக்கிறேன்; எல்லோருக்கும் பற்றுக்கொம்பாயிருக்கிறேன். ப்ரக்ருதி, புருஷன் முதலான தத்வங்கள் என்னைப் பற்றிநிற்கின்றன. ஆகையால் என்னை 'யஷ்டி' என்று அழைக்கின்றனர் முனிவர்கள். ஆறு எழுத்துக்கொண்ட "ஓம் யஷ்டயே நம:" என்னும் இம்மந்திரம் கர்மஜ்ஞாநபக்திகளாகிற எல்லா யோகங்களின் (உபாயங்களின்) பலத்தையும் அளிக்கும்] என்று லக்ஷ்மீதந்த்ரத்திலும் உத்கோஷிக்கப்பட்டது.

(பிங்களாம்) உருக்கின தங்கம்போன்று, மஞ்சள் நிறமான திருமேனியை உடையவளை. (பிங்கலாம்) 'ஏகபிங்க:' என்னும் சப்தம் குபேரனைக் குறிப்பது. 'நாமைகதேஸ க்ரஹணே நாம க்ரஹணம்' என்னும் ந்யாயத்தாலே, பிங்கஸப்தமும் குபேரனைக் குறிப்பதாகிறது. 'லா-தாநே' என்று தாதுவாகையாலே, பிங்கனுகிற குபேரனுக்குச் செல்வத்தை அளித்தவள் என்னும் பொருளைத் தருகிறது 'பிங்கலா' என்னும் திருநாமம். ஐச்வர்யத்துக்கு அதிதேவதையன்றோ இப்பிராட்டி. "அர்த்தமேகபிங்க: ப்ரஸாத்ய விஷ்ணும் ஸம்ப்ராப்த:" [விஷ்ணுதர் 43-47] [குபேரன் பெரும்பொருளைப் பரமபுருஷனை ஆராதித்துப் பெற்றான்] என்றதும் பத்னியான இவளிடமிருந்து பெற்றதை பர்த்தாவான அவனிடத்திலே ஏற்றிச் சொன்னதாகக் கொள்ளவேண்டும். "மயைவ விஹிதாந் ஹி தாந்" [கீதை] என்று புறம்புள்ள தேவதைகள் கொடுத்தாலும் அந்தர்யாமியான இவன் கொடுத்ததேயாம்போது, அந்தரங்கையான இவள் கொடுப்பது இவன் கொடுப்பதே என்பதை உபபாதிக்கவேணுமோ? ஸ்ரீஸாத்வதாதிகளிலும் மோக்ஷத்தைப் பரமபுருஷன்தானே கொடுக்கிறான் என்றும், ஐச்வர்யத்தைப் பிராட்டிமூலம் கொடுப்பிக்கிறான் என்றும் பிரித்துச்சொல்லப்பட்டதன்றோ. லோகத்திலும், தந்தை ஹிதப்ரதனாயிருப்பதையும், தாய் ப்ரியப்ரதையாயிருப்பதையும் காணாநின்றோம். ஹிதமான மோக்ஷத்தைப் பிதாவான அவன் கொடுப்பது, ப்ரியமான ஐச்வர்யத்தைத் தாயான இவள் கொடுப்பது என்னும் நியமத்தை திவ்யதம்பதிகளும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் போலும். "உதாம்ருதத்வஸ்யேஸாந:" என்றும், "இஷ்டம் மநிஷாண" என்றும் புருஷஸூக்தத்தின் முதலிலும் முடிவிலும் மோக்ஷப்ரதன்

அவனே என்று உத்கோஷித்ததும். "யஸ்யாம் ஹிரண்யம் விந்தே₃யம் க₃ாமஶ்வம் புருஷாநஹம்" என்றும், "யஸ்யாம் ஹிரண்யம் ப்ரபூ₄தம் காவோ த₃ாஸ்யோஶ்வாந் விந்தே₃யம் புருஷாநஹம்" என்றும் இந்த ஸ்ரீஸூக்தத்தின் முதலிலும் முடிவிலும் ஐச்வர்யப்ரதை இவளே என்று உத்கோஷித்ததும் இக்கருத்தையே காட்டுகின்றன. முகுந்தன் [முக்திபூமியை அளிப்போன்] என்று பெயர்பெற்ற அந்த ஜநார்த்தனனே மோக்ஷமளிப்பவனென்றும், ஐஶ்வர்யபர்யாயமான 'ஸ்ரீ:' 'லக்ஷ்மி:' என்னும் திருநாமங்களைப் பெற்ற இவளே செல்வத்தையளிப்பவளென்றும் லோகத்திலும் பிரஸித்தியுள்ளதன்றோ. நிற்க; 'பிங்க₃லா' என்னும் திருநாமத்தின் இரண்டு பொருள்களும் மந்த்ரவைபவமும்,

"பிங்க₃ளாஸ்மி ஸ்வயா ப₄ாஸா ப்ரதப்தகநகாப₄யா।
பிங்க₃ாய சாப்யத₃ாம் பூர்வம் யக்ஷேஶாய மஹாஸ்ரியம்॥
யக்ஷேஶோ மாம் புரா ஶக்ர பிங்க₃லேத்யேவமூசிவாந்।
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ யோகதேஜஸ்ஸம்ருத்₃தி₄த₃:॥

[உருக்கின தங்கம்போன்றதான என் ஒளியாலே நான் பிங்களையாகிறேன்; யக்ஷர் தலைவனை 'பிங்கன்' எனப்படும் குபேரனுக்கு நான் ஆதியில் பெருஞ்செல்வத்தை அளித்தேன். இந்திரனே! (இக்காரணத்தாலேயே) ஆதியில் என்னைக் குபேரன் 'பிங்கலா' என்று கூப்பிட்டான். ஏழு எழுத்துக்கொண்ட "ஓம் பிங்க₃லாயை நம:" என்னும் மந்திரம் யோகத்தை அநுஷ்டிப்பதற்கு வேண்டிய தேஜஸ் ஸம்ருத்தியைத் தரும்] என்று பிராட்டியாலேயே தந்திரத்தில் சொல்லப்பட்டன.

(பத்மமாலிநீம்) தாமரை மாலையை உடையவளை. "பூவார் திருமாமகள்" [பெரியதிரு 4-7-9] (சந்த்ராம்) 'சதி₃-ஆஹ்லாத₃நே' என்று தாதுவாகையாலே, ஆநந்தமயியாயிருப்பவளை எனகை. (ஹிரண்மயீம்) பொன்மயமாயிருப்பவளை. ஹிரண்மயனை உன்னுடைய பத்தினியை. (லக்ஷ்மீம்) திருவுக்கும் திருவாகிற உனக்கு "விஷ்ணோ: ஸ்ரீ: [வி-பு] என்கிறபடியே செல்வமாயிருப்பவளை. இந்நான்கு திருநாமங்களின் பொருட்பெருமைகள் முனனமே விரிவாகக் காட்டப்பட்டன. (ஜாதவேத:) வேதமுன் ஓதிய வேதியனே! (மம ஆவஹ) எனக்கு அளிப்பாயாக. அப்பிராட்டியின் கருணைகடாக்ஷம் என்மேல் ப்ரவஹிப்பதற்கு இசைவாயாக என்று கருத்து.

आर्द्रां पुष्करिणीं तुष्टिं सुवर्णां हेममालिनीम्।
सूर्यां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो ममाऽऽवह॥ १४॥

14. ஆர்த்₃ராம் புஷ்கரிணீம் துஷ்டிம் ஸுவர்ணும் ஹேமமாலிநீம் ।
ஸூர்யாம் ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ₃ மமாऽऽவஹ ॥

பதவுரை— **ஜாதவேத₃:**-*எம்பிரானே*, **ஆர்த்₃ராம்**-*நனைந்திருப்பவளும்*, **புஷ்கரிணீம்**-*தாமரையை உடையவளும்*, **துஷ்டிம்**-*உகப்பிக்குமவளும்*, **ஸுவர்ணும்**-*அழகிய சப்தமான வேதமாயிருப்பவளும்*, **ஹேமமாலிநீம்**-*ஹைமபர்வதத்தை மாலையாய் தரிப்பவளும்*, **ஸூர்யாம்**-*ஸூர்ய ரூபிணியாயிருப்பவளும்*, **ஹிரண்மயீம்**-*பொன்மயமான திருமேனியை உடையவளுமான*, **லக்ஷ்மீம்**—*ஸ்ரீதேவியை*, **மம**—*எனக்கு*, **ஆவஹ**—*அளிப்பீராக*.

அன்புப்பெருக்காலே மறுபடியும் பிராட்டியைப் பலபடியாக வர்ணித்துக்கொண்டு பரமபுருஷனிடம் பிரார்த்திக்கிருன் இம் மந்திரத்தில்.

(ஆர்த்₃ராம்) அமுதப்பெருக்காலே நனைந்ததிருமேனியை உடையவளை. (புஷ்கரிணீம்) தாமரையைக் கையிலும், காலின் கீழும், தலையின் மேலும், மாலையாகவும் கொண்டிருப்பதோடன்றியில், செங்கனிவாய், செங்கமலம், செந்தாமரையடிகளையும் உடையவளை. புண்டரீகாவயவனுன அவனுடைய தாமரைபோன்ற அவயவங்களைத் தனக்காக உடையவளை என்றுமாம். இவ்விரு திருநாமங்களின் மற்ற பொருள்கள் முன்பே விளக்கப்பட்டன.

(துஷ்டிம்) தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்களாலே ஸர்வேச்வரனை ஸந்தோஷிக்கச் செய்பவளாகவும்,அவனுடைய ஸ்வரூபாதிகளாலே தான் ஸந்தோஷிப்பவளாகவுமிருப்பவளை. "தர்ப்பயந்தீம்" என்ற திருநாமத்தின் விவரணத்தில் எடுக்கப்பட்ட ப்ரமாணங்களை அநுஸந்திப்பது.

"அஸ்யா தே₃வ்யா மநஸ் தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டி₂தம்।
தேநேயம் ஸ ச த₄ர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி॥"

[இந்த தேவியின் மனம் அவரிடமும், அவருடைய மனம் இவளிடமும் நிலைநிற்கிறது; அதனாலேயே இந்த தேவியும், த₄ர்மஸ்வரூபியான அவரும் சிறிது காலமாவது உயிர்தரித்திருக்கிறார்கள்] என்று திருவடி அருளிச்செய்தபடியே ஒருவருக்கொருவர் த₄ாரகராயிருப்பவரன்றோ இவ்விருவரும்.

(துஷ்டிம்) தங்கள் தங்கள் வர்ணாச்ரம தருமங்களால் சேதனராலே ஆராதிக்கப்பட்டு உகக்குமவளை என்றுமாம். "தவநெறியைத் திருமாலை" [பெரியதிரு 4-6-7] என்றார் திருமங்கையாழ்வார்.

"வர்ணாச்ரமாசாரவதா புருஷேண பர: புமாந்।
விஷ்ணுராராத்₄யதே பந்த₂ா நாந்யஸ் தத்தோஷகாரக:॥"

[வர்ணாச்ரமாசாரமுடைய புருஷனாலே பரமபுருஷனை விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான். அவனை உகப்பிக்கும் வழி வேறில்லை.] என்று அவனுக்கு ஸமாராதனமானால், அவனைவிட்டுப் பிரியாத இவளுக்கும் ஸமாராதனமாகச் சொல்லவேணுமோ? இப்பொருள்களும் மந்திரத்தின் பெருமையும்

"தோஷயாமி கு₃ணைர் விஷ்ணும் துஷ்யாமி ச ஹரேர் கு₃ணை:।
மயி துஷ்டிஸ் ஸமஸ்தாநாம் ஈடி₃தாயாம் ஸ்வகர்மபி₄:॥
துஷ்டிர் நிருபிதா தேந ஸாஹம் யோகஉ₃ாப்₃தி₄பாரகை₃:।
ஷட₃க்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ மநஸ்ஸந்தோஷத₃ாயக:॥"

[(என்) குணங்களாலே விஷ்ணுவை உகப்பிக்கிறேன். ஹரியின் குணங்களாலே உகக்கிறேன். தங்கள் கர்மங்களாலே ஆராதிக்கப்படும் என்னிடத்திலே உகப்பு ஏற்படுகிறது. ஆகையால் யோகக்கடலைக் கரைகண்டவர்களாலே நான் 'துஷ்டி' என்று நிரூபிக்கப்படுகிறேன். ஆறு எழுத்துக்கொண்ட "ஓம் துஷ்டயே நம:" என்னும் இம்மந்திரம் மநஸ்ஸந்துஷ்டியைத்தரும்.] என்று லக்ஷ்மீ தந்திரத்திலே விவரிக்கப்பட்டது. "ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்டிம்" என்று பாடம்கொண்டு கோமடம் ரங்கநாதர் பொருளுரைத்தார். சென்றமந்திரத்தில் "ஆர்த்ராம் புஷ்கரிணீம் புஷ்டிம்" என்றும், இம்மந்திரத்தில் "ஆர்த்ராம் புஷ்கரிணீம் யஷ்டிம்" என்றும், "ஆர்த்ராம் ய:கரிணீம்" என்றும் பலவிதமாகப் பாடங்கொள்கின்றனர். அப்பாடங்களெல்லாம் லக்ஷ்மீதந்த்ரத்தில் பிராட்டியாலே ஆதரிக்கப்பட்டவையன்றாகையால் அநாதரிக்கத்தக்கவை.

(ஸுவர்ணாம்) " ஸுஷ்டு₂ வர்ணயதீதி ஸுவர்ணா " [(மற்றுள்ளாரை) நன்கு நிறப்பெறச்செய்கிருளாகையாலே ஸுவர்ணையாகிருள்] என்று ஒருபொருள். " ஹிரண்யவர்ணா " என்று தொடங்கிச் சொல்லப்படும் அழகிய சப்தங்களே (தனக்கு வாசகமாக) உடையவள் என்று மற்றொரு பொருள. அழகிய சப்தமான வேதமாகி அழகனை வர்ணிப்பவள் என்று மூன்ருவது பொருள். " அர்த்தோ₂ விஷ்ணுரியம் வாணீ " [பகவான் பொருளாகவும், பிராட்டி சொல்லாகவுமிருப்பவள்] என்ருரன்றே பராசரபகவான்.

"ஸுவர்ணயாமி ஸம்ஸித்₃த₄ாநபரம் பரமேவ வா |
அநித₃ம்ப்ரத₂மா வர்ணா: ஶோப₄நா மம வாசகா: ||
நித்யா ஸரஸ்வதீ பூ₄த்வா ஶோப₄நம் வர்ணயாம்யஹம் |
ஸுவர்ணேதி ததோ விப்ரைஸ் தத்வஜ்ஞை: பரிகீர்த்திதா ||
ஸப்தாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரஸ் ஸர்வஸம்பத்ஸம்ருத்₃தி₄த₃:||"

[யோகஸித்தியடைந்தவர்களேயும், மற்றவரையும், பரமபுருஷனேயும் நன்கு நிறம்பெறச்செய்கிறேன். அநாதிகளாய் அழகியனவான சப்தங்கள் எனக்குத் திருநாமங்கள். நித்யத்வமான அழகையுடைய வர்ணமாகிற வேதமாகி, அழகனே வர்ணிக்கிறேன் நான். ஆகையால் தத்துவ ஞானிகளான அந்தணர்களால் 'ஸுவர்ணா' என்று சொல்லப்படுகிறேன். ஏழு எழுத்துக்கொண்ட "ஓம் ஸுவர்ணாயை நம:" என்னும் இம்மந்திரம் எல்லாச் செல்வப்பெருக்கையும் தரும்.] என்று இம்மூன்று பொருள்களும் மந்திரப்பெருமையும் தந்திரத்திலேயும் உத்கோஷிக்கப்பட்டது. "ஸுவர்ணமயியாயிருப்பவளே" என்று பொருள்கொள்வாருமுண்டு.

(ஹேமமாலிநீம்) பொன்மாலேயை தரித்தவளே. பூமியாயிருந்து கொண்டு, பொன்மயமான ஹைமநம் என்னும் திவ்ய பர்வதத்தை மாலேயாக தரித்துநிற்பவளே என்றும் லக்ஷ்மீதந்திரத்திலே பொருள் கொள்ளப்பட்டது. இப்பொருளும் மந்திரப்பெருமையும்

"ஹைமநம் பர்வதம் தி₃வ்யம் சந்த்₃ரார்க்கக்₃ரஹபூரிதம் |
த₄ாரயாமி த₄ரா பூ₄த்வா வேத₄ஸ: ஸ்தி₂தி ஸித்₃த₄யே ||
துஷ்டாவ மாம் புரா தேந விரிஞ்சோ ஹேமமாலிநீம் |
அஷ்டாக்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ மாநவாநாம் த்₄ருதிப்ரத₃:||"

[சந்திரன், சூரியன், கிரஹங்கள் ஆகியவை நிறைந்த ஹைமநமென்னும் திவ்ய பர்வதத்தை, பிரமனே நிலேநிறுத்துவதற்காக, பூமியாகி

தரிக்கிறேன். ஆகையால் பிரமன் என்னை ஆதிகாலத்தில் 'ஹேம மாலிநீ' என்று துதித்தான். எட்டெழுத்துக்கொண்ட ''ஓம் ஹேம மாலிந்யை நம:'' என்னும் இம்மந்திரம மனிதர்களுக்குத் தரிப்பை அளிக்கும்.] என்று லக்ஷ்மீதந்திரத்திலே காட்டப்பட்டது.

(ஸூர்யாம்) ''ஷூங்-ப்ராணிப்ரஸவே'' என்று தாதுவாகையாலே 'ஸூ' என்னும் எழுத்து ஸகல ப்ராணிகளையும் ஸ்ருஷ்டிப்பவள் என்று பொருள் தருகிறது. ரேப$_2$ம், அந்தப்பிராணிகளை (போக மோக்ஷங்களை அளித்து) ரமிக்கச்செய்பவள் என்று பொருள் படுகிறது. 'ய' என்னுமெழுத்து அவற்றைக் காலத்தைக் கருவி யாகக்கொண்டு நியமிப்பவள் என்று பொருள் தருகிறது. இந்தக் காரியங்களை எம்பெருமானைக்கொண்டு செய்விப்பவளாகையாலே செய்பவளாகச் சொல்லப்படுவதாகக் கொள்வது. (ஸூர்யாம்) நித்யஸூரிகளுக்குக் கைங்கர்யத்தை அளிப்பவளாகையாலே (யா- ப்ராபணே) ஹிதமாயிருப்பவள் என்றும் பொருள் கொள்ளலாம.

''தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றமரராட்செய்வார்''
[திருவாய் 8-1-1]

என்றார் நம்மாழ்வாரும். (ஸூர்யாம்) ஸூர்யமண்டலத்தின் நடுவில் ஸூர்யரூபிணியாய் எழுந்தருளியிருப்பவளை என்றுமாம்.

''செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தியீதென்னும்''
[திருவாய் 4-4-2]

என்றார் நம்மாழ்வாரும். இம்மூன்று பொருள்களும் மந்திரப் பெருமையும்,

''ஹிதாய ஸர்வஜீவாநாம் ப்ரஸூயே தத்த்வபத்$_3$த$_4$திம் |
ரமயாமி புநஸ்தத்ர பு$_4$க்த்யா முக்த்யா யதா$_2$ர்ஹத: ||
நியச்ச$_2$ாமி தத$_2$ா காலேஸ் ஸஜீவாம் தத்வபத்$_3$த$_4$திம் |
ஸூரிப்$_4$யஶ்ச ஹிதா நித்யம் ஸூர்யரூபார்க்கமண்ட$_3$லே ||
ஸூர்யேதி ஸூரிபி$_4$: ப்ரோக்தா ததோஹம் தத்த்வசிந்தகை: |
ஷட$_3$க்ஷரோ ஹ்யயம் மந்த்ரோ பே$_4$ாக$_3$மோக்ஷப$_2$லப்ரத$_3$: ||''

[1.எல்லா ஜீவர்களின் நன்மையின் பொருட்டும் இருபத்துநாலு தத்து வங்களையும் நான் உண்டாக்குகிறேன். அவரவர்களுக்குத் தக்க வாறு போகத்தையும் மோக்ஷத்தையும் அளித்து ரமிப்பிக்கிறேன். காலத்தாலே ஜீவனோடு கூடிய தத்வஸமூஹத்தை நியமிக்கிறேன்.

2. ஸூரிகளுக்கு எப்போதும் ஹிதையாயிருக்கிறேன். 3. ஸூர்ய மண்டலத்தில் ஸூர்யரூபிணியாயிருக்கிறேன். இக்காரணங்களாலே தத்வஞானிகளான பெரியோர்களாலே நான் 'ஸூர்யா' என்று சொல்லப்பட்டேன். ஆறு அக்ஷரங்கொண்ட "ஓம் ஸூர்யாயை நம:" என்னும் இம்மந்திரம் போகமோக்ஷபலன்களை அளிக்கும்.] என்று லக்ஷ்மீ தந்திரத்திலே அகிலஜகந்மாதாவான பிராட்டியாலேயே உத்கோஷிக்கப்பட்டது. இத்திருநாமத்துடன் ஸ்ரீஸூக்தத்தில் * ஐம்பத்துமூன்று திருநாமங்கள் லக்ஷ்மீதேவிக்குச் சூட்டப்பட்டதாகிறது. இனி வரும் திருநாமங்கள் ஏற்கவே வந்தவையே. இவ்வைம்பத்துமூன்று திருநாமங்களின் பெருமைகள்,

'இதி நாம்நாம் த்ரிபஞ்சாஶத் ஸூக்தஸ்தா₂நாம் ப்ரகீர்த்திதா ।
க்ருதார்த்த₂யந்தி மாம் ப்ராப்ய தீ₄ராந் ஸ்வை: ஸ்வைரபீ₄ப்ஸிதை: ॥

யத்₃யப்யேஷா மயா ப்ரோக்தா வ்யவஸ்த₂ா ப₂லகே₃ாசரா ।
ந தாவதே₃வ மாஹாத்ம்யமேஷாம் சிந்த்யம் விபஶ்சிதா ॥
ஆமோக்ஷாந் நிர்விசாரேண ஸர்வா ஸர்வப₂லப்ரத₃ா ।
நாமாவலீ யதோ ஹ்யஸ்யா: ஸ்ரீரஹம் தே₃வதா பரா ॥"

[இப்படியாக இந்த ஸூக்தத்தில் கீர்த்திக்கப்பட்ட ஐம்பத்துமூன்று திருநாமங்களும் என்னை அடைந்த ஞானிகளைத் தங்கள் தங்கள் இஷ்டங்களைக்கொடுத்து க்ருதக்ருத்யராக்கும். ஒவ்வொரு திருநாமத்துக்கு ஒவ்வொரு பலனை என்னால் சொல்லப்பட்டபோதிலும், அறிவாளியாயிருப்பவன் இவைகளுக்கு இவ்வளவே பெருமை என்று நினைக்கக்கூடாது. நாமாவளி முழுவதும் மோக்ஷம்வரையில் ஒரு கவலையுமில்லாமல் எல்லாப்பலனையும் அளிக்கவல்லது. மேலானவளான ஸ்ரீயாகிய நானன்றோ இவற்றுக்கு தேவதை] என்று பிராட்டியாலேயே லக்ஷ்மீதந்திரத்தில் உத்கோஷிக்கப்பட்டது. (ஹிரண்மயீம் லக்ஷ்மீம் ஜாதவேதோ மமாவஹ) பிரானே! பொன்மயமான லக்ஷ்மீதேவியை எனக்களிப்பீராக. 'ஹிரண்மயீம்' 'லக்ஷ்மீம்' என்னும் திருநாமங்களின் பெருமைகள் முன்பே விளக்கப்பட்டன.

---

* இவ்வைம்பத்து மூன்று திருநாமங்களையும் உள்ளடக்கிய ஐம்பத்து மூன்று மந்திரங்களும், இந்த வியாக்கியானத்தின் கடைசியில் "ஸ்ரீஸூக்தாந்தர்க்க₃த லக்ஷ்மீநாமாவளி:" என்னும் தலைப்பில் அச்சிடப்படும்.

तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम्।
यस्यां हिरण्यं प्रभूतं गावो दास्योऽश्वान्
विन्देयं पुरुषानहम्॥ १५॥

15. தாம் ம ஆவஹ ஜாதவேதோ₃ லக்ஷ்மீமநபகா₃மிநீம் | யஸ்யாம் ஹிரண்யம் ப்ரபூ₄தம் கா₃வோ தா₃ஸ்யோऽஶ்வாந் விந்தே₃யம் புருஷாநஹம் ||

பதவுரை:— ஜாதவேத₃:-*எம்பெருமானே!* யஸ்யாம்—*யாதொரு பிராட்டியிடம்.* ப்ரபூ₄தம் ஹிரண்யம்—*அதிகமான பொன்னையும்.* கா₃வ:—*பசுக்களையும்.* தா₃ஸ்ய: —*வேலைக்காரிகளையும்.* அஶ்வாந்—*குதிரைகளையும்.* புருஷாந்—*புருஷர்களையும்.* அஹம் விந்தே₃யம்—*நான் அடையக்கடவேனே.* தாம-*அப்படிப்பட்டவளான,* அநபகா₃மிநீம்-*விட்டுப்பிரியாத.* லக்ஷ்மீம் —*பிராட்டியை,* மே-*எனக்கு,* ஆவஹ—*அளிப்பீராக.*

இக்கடைசிமந்திரத்தில் மறுபடியும் பிராட்டியைத் தரவேணுமென்று பரமபுருஷனைப் பிரார்த்தித்து, அப்பிராட்டியிடம் தான் பெறவிருக்கும் பலன்களையும் பேசிமுடிக்கிறான்.

(தாம் ம ஆவஹ ஜாதவேத₃:) எம்பிரானே! அப்பிராட்டியை எனக்கு அருளவேணும்; எப்பேர்ப்பட்டவளை? எனில்: (லக்ஷ்மீம் அநபகாமிநீம்) உனக்குச் செல்வமாகவும், உன்னை விட்டுப்பிரியாமலுமிருப்பவளான அத்தேவியை எனக்குச் செல்வமாகவும் என்னை விட்டுப் பிரியாதிருக்கும்படியும் அருளவேண்டும. இவ்விரு திருநாமங்களின் பொருள் முன்பே விளக்கப்பட்டது.

எதற்காகவெனில் : (யஸ்யாம் ஹிரண்யம்...புருஷாநஹம்) அதிகமான பொன்னையும், பசுக்களையும், குதிரைகளையும், தாஸிகளையும், புருஷர்களையும் அப்பிராட்டியிடம் அடைவதற்காக என்கை. பகவத் பாகவதாராதனத்துக்கு உறுப்பாகையாலே இவற்றை விரும்பக்குறையில்லை. **"திருமாமகள் தன்னருளாலுலகில் தேர் மன்னராய் ஒலிமாகடல்சூழ் செழுநீர் உலகாண்டு திகழ்வர்களே"** [பெரியதிரு 2-9-10] என்றூரன்றோ மங்கைமன்னனும். (புருஷாந்) இவ்வுலகில் புத்ரபௌத்ராதிபுருஷர்களையும், உத்புருஷனாகிய முக்தனையும், உத்தரபுருஷராகிய நித்யரையும், உத்தமபுருஷனாகிய

அவனையும் அடையக்கடவேன். இவ்வுலகில் வைஷ்ணவ ஸந்தா நத்தையும், அவ்வுலகில் * அடியார்கள் குழாங்களையும், அவனையும் பெறுவது பிராட்டியிடமே என்னும் பரமார்த்தந்தைப் பிரகடனம் செய்கிருன்.

த்₃வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷரஸ் ஸர்வாணி பூ₄தாநி கூடஸ்தோ₂ऽக்ஷர உச்யதே ॥
உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுதா₃ஹ்ருத: ।
யோ லோகத்ரயமாவிஶ்ய பி₃ப₄ர்த்யவ்யய ஈஶ்வர: ॥
யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராத₃பி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த: புருஷோத்தம: ॥
[கீதை 15-16, 17, 18]

[க்ஷரன் என்றும், அக்ஷரன் என்றும் லோகத்தில் புருஷர்கள் இரு விதமானவர்கள்; எல்லா பூதங்களும் க்ஷரனுகும்; கூடஸ்தனை முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிருன். எவனொருவன் மூவுலகங்களிலும் நுழைந்து (அவற்றை) தரிப்பவனுகவும், குறைவற்றவனுகவும், நியமிப்பவனுகவும், பரமாத்மாவென்று சொல்லப்படுபவனுகவும் விளங்குகிருனே அந்தப் புருஷோத்தமன் (முன் சொல்லப்பட்ட புருஷர்களைக்காட்டிலும்) வேறுபட்டவன். நான் க்ஷராக்ஷரர்களான பத்த முக்தபுருஷர்களைக்காட்டிலும் மேலானவனுயிருப்பதால், ச்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்தி பெற்றிருக்கிறேன்.] என்று கீதையில் கண்ணனும் புருஷர்களை மூன்று வகையாகப் பிரித்து அருளிச்செய்தானன்றே.

இந்த ஸ்ரீஸூக்தத்தின் பெருமையையும், இதை அறிந்தவனுடைய அத்₄யவஸாயப்ரகாரத்தையும் லக்ஷ்மீதந்திரத்திலே பிராட்டி பின்வருமாறு காட்டியிருக்கிருள்:—

"நக்ஷத்ராணி யதா₂ வ்யோம்நி யதா₂ ரத்நாநி வாரிதௌ₄ ।
வஸுதா₄யாம் யதா₂ போ₄கா₃ யதா₂ காமாஸ் ஸுரத்₃ருமே ॥
மஹிமானோ யதா₂ கோ₃ஷு தேஜாம்ஸி ப்₃ராஹ்மணே யதா₂ ।
யதா₂நந்தா கு₃ணா தி₃வ்யா தே₃வதே₃வே ஜநார்த்த₃நே ॥
மஹிமானோ ஹ்யஸீமாநஸ் ததா₂ஸ்மிந் ஸூக்தகே மம ।
யாவாந் ஹி ப₄க₃வாந் கால: கலாகாஷ்டா₂தி₃லக்ஷண: ॥
தாவதா நைவ ஶக்நோமி வக்தும் ஸூக்தகு₃ணாநஹம் ।

ஸைஷா வேத$_3$வித$_3$ாம் நிஷ்ட$_2$ா ஸைஷா தந்த்ரவித$_3$ாம் க$_3$தி: |
மாம் ப்ரபத்$_3$யேத ஸததம் ஸூக்தேநாநேந மாநவ: |
ஸூக்தார்த்த$_2$மநுஸம்ஸ்ம்ருத்ய சிரம் ஸூக்தமதீ$_4$த்ய ச ||
லப்$_3$தே$_4$ சித்தப்ரஸாதே$_3$ து மாம் ப்ரபத்$_3$யேத வை க$_3$திம் |
ப்ரபத்$_3$யமாநோ மாம் நித்யம் தே$_3$வம் வா புருஷோத்தமம் ||
இத்யேவமநுஸந்த$_3$த்$_4$யாத் ஶ்ரத்$_3$த$_4$த$_4$ாநோ ஜிதேந்த்$_3$ரிய: |
ப்ராதிகூல்யம் பரித்யக்தம் ஆநுகூல்யம் ச ஸம்ஶ்ரிதம் ||
மயா ஸர்வேஷு பூ$_4$தேஷு யத$_2$ாஶக்தி யத$_2$ாமதி |
அபாயேப்$_4$யோ நிவ்ருத்தோஸ்மி பாதகேப்$_4$யோப$_4$வோத$_3$தௌ$_4$ ||
தத$_2$ாப்யத்ர ப்ரவ்ருத்திர் யா த்வத்ஸ்ம்ருதேஸ் ஸாபி நஶ்யது |
அலஸஸ்யால்பஶக்தேஶ்ச யத$_2$ாவச்சாபி ஜாநத: ||
உபாயா: சோதி$_3$தா: ஶாஸ்த்ரைர் ந மே ஸ்யுஸ்தாரகாஸ் த்ரய: ||
த்ரேத$_4$ாப்யத்ர ப்ரவ்ருத்திர் யா த்வத$_3$ாஜ்ஞாபாலநம் து தத் |
அதோऽஹமநுபாயத்வாத் க்ருபணோऽகிஞ்சநோऽக$_3$தி: ||
ச$_2$ாயாமாஶ்ரித்ய வர்த்தேऽஹம் த்வதீ$_3$யாம் தாபஹாரிணீம் |
நிருபாதி$_4$ஸ்ஸ்வதந்த்ரா ச ஸ்வாமிநீ ந: க்ருபாநிதி$_4$: ||
த்வமேவ ஸர்வஶாஸ்த்ரேஷு ஶரணத்வேந கீ$_3$யஸே |
ஆத்மாத்மீயம் ச யத்கிஞ்சித் து$_3$ஸ்த்யஜம் து$_3$ர்ப்ப$_4$ரம் மதம் ||
தத் ஸர்வம் தவ விந்யஸ்தம் ஶுப$_4$யோ:பாத$_3$பத்$_3$மயோ: |
உபேயாயாஸ் தவ ப்ராப்த்யை த்வாமுபாயம் தத$_2$ா வ்ருணே ||
உபாயோ ப$_4$வ மே தே$_3$வி ஶரணம் பு$_4$வ மேऽம்பு$_3$ஜே |
ப்லுஷ்ய மே து$_3$ரிதம் ஸர்வம் புஷ்ய மே த்வத்$_3$க$_3$தாம் தி$_4$யம் ||
இத்யேவமநுஸந்த$_4$ாய மாம் ப்ரபத்$_3$யேத வை க$_3$திம் |
ஆதி$_3$தே$_3$வம் ஜக$_3$ந்நாத$_2$மீஶம் வா புருஷோத்தமம் ||
பரம் ஸ்வஸ்த்யயநம் ஶக்ர ஸர்வாऽலக்ஷ்மீநிபு$_3$ர்ஹணம் |
ஶ்ராவயேத் கர்மகாலேஷு மத்ஸூக்தஸ்ய விதி$_4$ம் நர: ||
ஸமர்த்த$_2$யதி கர்மாணி ஶ்ரோதாரம் போஷயத்யுத |
நிர்ணுத$_3$த்யகி$_2$லாம் மாயாம் அலக்ஷ்மீம் ச மலைஸ் ஸஹ ||
ஏதத$_3$ப்$_4$யஸ்யமாநம் ஹி கர்மணா மநஸா கி$_3$ரா |
த்ராயதே மஹத: பாபாத் ஶ்ரியம் சாவஹதி த்$_4$ருவம் ||"

*[வானத்தில் விளங்கும் தாரகைகள் போலும், கடலில் விளங்கும் ரத்தினங்கள் போலும், பூமியில் பெருகும் போகங்கள் போலும்,*

கற்பக மரத்திலிருந்து பொழியும் காமங்கள் போலும், பசுக்களிடம் வெள்ளமிடும் மஹிமைகள் போலவும். அந்தணனிடம் அலையெறியும் தேஜஸ்ஸுக்களைப் போலவும், தேவதேவனை ஜநார்த்தனனிடம் காட்சியளிக்கும் அநந்தகல்யாண குணங்களைப்போலவும், அளவற்ற மஹிமைகள் இந்த என்னுடைய ஸ்ரீஸூக்தத்தில் விளங்குகின்றன. கலை, காஷ்டை முதலியவற்றின் ஸமூஹமாயிருக்கும் காலதத்வம் உள்ளதனையும் சொன்னாலும், இந்த ஸூக்தத்தின் குணங்களை நான் சொல்லவல்லேனல்லேன். இந்த ஸூக்தமே வேதமோதிய வேதியர் நிலைநிற்குமிடமும், தந்திரம் தெரிந்த ஞானிகள் சேர்ந்து நிற்குமிடமுமாகும். இந்த ஸூக்தத்தாலே என்னை முமுக்ஷு சேதனன் சரணமடையக்கடவன். நெடுங்காலம் இந்த ஸூக்தத்தை அத்யயனம்செய்து, ஸூக்தத்தின் பொருளைச் சிந்தைசெய்து மனம் தெளியப்பெற்றவளவில் என்னையே ப்ராப்யப்ராபகமாக அடையக்கடவன். தினந்தோறும் என்னையும் தேவனை புருஷோத்தமனையும் சரணமடைந்து, சிரத்தையையுடையவனாய், இந்திரியங்களை வென்றவனாய்ப் பின்வருமாறு சிந்திக்கக்கடவன்:—

"இயன்ற வரையிலும், அறிந்தவரையிலும் எல்லா ஜீவராசிகளிடத்தும் ப்ரதிகூலனாயிருக்கும் நிலை என்னால் கைவிடப்பட்டது; அநுகூலனாயிருக்கும் நிலை ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஸம்ஸார ஸாகரத்தில் பாவங்களாகிற அபாயங்களை அநுஷ்டிப்பதிலிருந்து நான் மீண்டுவிட்டேன். ஆயினும் தேவரீர் விஷயமான பக்தி யோகத்திற்கு நான் முயற்சிசெய்வதாகிற யாதொன்று உண்டோ அதுவும் அழியட்டும். சோம்பேறியும், குறைவான சக்தியை உடையவனும், (பகவத்ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தி ஸ்வரூபஹானியாம்படியான ஆத்மாவின் அத்யந்தபரதந்த்ர ஸ்வரூபத்தை) உள்ளபடி அறிந்தவனுமான எனக்கு, சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட கர்மஜ்ஞாந பக்திகளாகிற மூன்று மோக்ஷோபாயங்களும் இல்லை. என்னிடம் காணப்படும் கர்மஜ்ஞாநபக்திகள் தேவரீருடைய ஆஜ்ஞாகைங்கர்ய ரூபமாயிருக்கின்றன. இக்காரணத்தால், நான் உபாயமற்றவனாகையாலே ஏதிலேனாகவும், கைம்முதலற்றவனாகவும், கதியற்றவனாகவும், தாபங்களைத் தவிர்க்கும் தேவரீரின் நிழலைப் பற்றி வாழ்கிறேன். இயற்கையிலேயே எங்களுக்குப் பரதந்திரையாகாதவளாகவும், ஸ்வாமினியாகவும் கருணைக்கடலாகவுமிருக்கும் தேவரீரே எல்லா சாஸ்திரங்களிலும் உபாயமாக ஓதப்படுகிறீர். ஆத்மாவும், ஆத்மாவைச் சேர்ந்த

வையுமாய், விடமுடியாமலும், தாங்கமுடியாமலுமிருக்கும் பொருள் களெல்லாம் தேவரீருடைய மங்களகரமான திருவடித்தாமரைகளிலே ஸமர்ப்பிக்கப்பட்டது. உபேயபூதையான உம்மை அடைய உம்மை உபாயமாக வரிக்கிறேன். பிராட்டி! எனக்கு உபாயமாவீராக. தாமரையாளே! எனக்கு கதியாவீராக. என் பாபங்கள் அனைத்தை யும் தஹிப்பீராக. உம் விஷயமான அறிவை வளர்ப்பீராக''

இம்மாதிரியாகச் சிந்தித்து என்னையும ஆதிதேவனும், ஜகத் ஸ்வாமியும் ஸர்வநியந்தாவுமான புருஷோத்தமனையும் சரண மடையக் கடவன். இந்திரனே! இப்படிச்செய்தால் மேலான மங்களமாகும்; எல்லாவிதமான ஏழ்மையையும் போக்கும். என் ஸூக்த விதியைக் கர்மகாலங்களில் முமுக்ஷுவானவன் கேட்க வேண்டும். (அப்படிச் செய்தால்) கர்மங்களை ஸபலமாக்குகிறான். கேட்பவனையும் போஷிக்கிறான். அஜ்ஞாநமனைத்தையும் ஏழ்மை யையும் தோஷங்களோடு கூட அழிக்கிறான. மநோவாக்காயங் களால் இந்த ஸ்ரீஸூக்தம் அப்யஸிக்கப்பட்டதாகில் பெரும் பாவத் திலிருந்து ஜீவனைக்காப்பாற்றுகிறது. நிலையான செல்வங்களையும் அளிக்கிறது.]

இப்படிப்பட்ட பெருமையையுடைய இந்த ஸ்ரீஸூக்தத்தின் ஸாரார்த்தத்தை ஸங்க்ரஹிக்கிறோம். பகவானுக்கு இயற்கையிலேயே சேஷபூதையாய், அகில ஜீவர்களுக்கும் ஸ்வாமினியாய், ஜீவனை ஸர்வேச்வரனிடம் சேர்ப்பிக்கும் புருஷகார பூதையாயிருப்பவள். பிராட்டி. வ்யக்தியை ஆச்ரயித்து நிற்கும் ஜாதிபோலே அவனுக்கு ஸ்வரூபநிரூபக பூதையாய் அவனுள்ளவிடமெல்லாம் வியாபித்து நிற்கும் பெருமையையுடையவள் இப்பிராட்டி. அவனுடைய ஜகத் காரணத்வத்திலும், மோக்ஷபலப்ரதத்வத்திலும் ப்ரேரகத்வரூபமான அப்ரதாநமான அந்வயம் இப்பிராட்டிக்கு உண்டு. ஜகத்ஸ்ருஷ்ட் யாதிகளையும், மோக்ஷப்ரதானத்தையும் செய்பவன் அவன்; செய் விப்பவள் இவள். இக்காரணங்களாலேயே இப்பிராட்டிக்குப் பரப்ரஹ்மத்வம் ஒருபோதும் வாராது. "ஈச்வரீம் ஸர்வபூதாநாம்" [எல்லா பூதங்களுக்கும் ஈச்வரியை] என்று சொல்லத்தக்க பெருமையை உடைய இவளுக்கும், "விஷ்ணு பத்நீ" என்றும் "லக்ஷ்மீச பத்ந்யௌ" என்றும் "ஜாதவேதோ ம ஆவஹ" என றும் "ஸ்ரீருபபர்ஹணம்" என்றும் "திருவுக்கும் திரு" என்றும், ஈச்வரனுயிருக்கும அவனே பரப்ரஹ்மமாவான். திருநின்றபக்கமே திறவிது. திருவில்லாத்தேவர் தேவராகார்கள். கருணையே வடி

வெடுத்த அகில ஜகந்மாதாவான இவளோடு சேர்ந்திருக்கும் அப்பரமபுருஷனே ஸர்வரக்ஷகனுவான். இதுவே ஸ்ரீஸூக்தத்தின் ஸாரார்த்தமாகும்.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதா₃ஸேந ஸ்ரீநிவாஸார்யஸூநுநா ।
ஸூத₃ர்ஶநப₄ருதா க்லுப்தா ஸ்ரீஸூக்தவ்யாக்ருதி: ஶுபா₄ ॥

[ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரும், ஸுதர்சநபத்ராதிபருமான ஸ்ரீக்ருஷ்ண ஸ்வாமிதாஸராலே, மங்களகரமான இந்த ஸ்ரீஸூக்தவ்யாக்யானம் இயற்றப்பட்டது.]

ஸ்ரீஸூக்தவ்யாக்யானம் முற்றிற்று.

## ॥ श्रीसूक्तान्तर्गत लक्ष्मीनामावलिः ॥

## [ ஸ்ரீஸூக்தாந்தர்க₃த லக்ஷ்மீநாமாவளி ]

| | | |
|---|---|---|
| १. | ओं हिरण्यवर्णायै नमः | ஓம் ஹிரண்யவர்ணாயை நம: |
| | ,, हरिण्यै नमः | ,, ஹரிண்யை நம: |
| | ,, सुवर्णस्रजे नमः | ,, ஸுவர்ணஸ்ரஜே நம: |
| | ,, रजतस्रजे नमः | ,, ரஜதஸ்ரஜே நம: |
| | ,, चन्द्रायै नमः | ,, சந்த்₃ராயை நம: |
| | ,, हिरण्मय्यै नमः | ,, ஹிரண்மய்யை நம: |
| | ,, लक्ष्म्यै नमः | ,, லக்ஷ்ம்யை நம: |
| | ,, अनपगामिन्यै नमः | ,, அநபகா₃மிந்யை நம: |
| | ,, अश्वपूर्वायै नमः | ,, அஶ்வபூர்வாயை நம: |
| १०. | ,, रथमध्यायै नमः | ,, ரத₂மத்₄யாயை நம: |
| | ,, हस्तिनादप्रबोधिन्यै नमः | ,, ஹஸ்திநாத₃ப்ரபோ₃தி₄ந்யை நம: |
| | ,, श्रियै नमः | ,, ஶ்ரியை நம: |
| | ,, मायै नमः | ,, மாயை நம: |
| | ,, देव्यै नमः | ,, தே₃வ்யை நம: |
| | ,, कायै नमः | ,, காயை நம: |
| | ,, सोस्मितायै नमः | ,, ஸோஸ்மிதாயை நம: |
| | ,, हिरण्यप्राकारायै नमः | ,, ஹிரண்யப்ராகாராயை நம: |
| | ,, आर्द्रायै नमः | ,, ஆர்த்₃ராயை நம: |
| | ,, ज्वलन्त्यै नमः | ,, ஜ்வலந்த்யை நம: |
| २०. | ,, तृप्तायै नमः | ,, த்ருப்தாயை நம: |
| | ,, तर्पयन्त्यै नमः | ,, தர்ப்பயந்த்யை நம: |

| | | |
|---|---|---|
| | ,, पद्मे स्थितायै नमः | ,, பத்₃மே ஸ்தி₂தாயை நம: |
| | ,, पद्मवर्णायै नमः | ,, பத்₃மவர்ணாயை நம: |
| | ,, चन्द्रायै नमः | ,, சந்த்₃ராயை நம: |
| | ,, प्रभासायै नमः | ,, ப்ரப₄ாஸாயை நம: |
| | ,, यशसायै नमः | ,. யஶஸாயை நம: |
| | ,, ज्वलन्त्यै नमः | ,, ஜ்வலந்த்யை நம: |
| | ,, देवजुष्टायै नमः | ,, தே₃வஜுஷ்டாயை நம: |
| | ,, उदारायै नमः | ,, உதா₃ராயை நம: |
| ३०. | ,, तायै नमः | ,, தாயை நம: |
| | ,, पद्मनेम्यै नमः | ,, பத்₃மநேம்யை நம: |
| | ,, आदित्यवर्णायै नमः | ,, ஆதி₃த்யவர்ணாயை நம: |
| | ,, कीर्त्यै नमः | ,, கீர்த்யை நம: |
| | ,, ऋद्ध्यै नमः | ,, ருத்₃த்₄யை நம: |
| | ,, गन्धद्वारायै नमः | ,, க₃ந்த₄த்₃வாராயை நம: |
| | ,, दुराधर्षायै नमः | ,, து₃ராத₄ர்ஷாயை நம: |
| | ,, नित्यपुष्टायै नमः | ,, நித்யபுஷ்டாயை நம: |
| | ,, करीषिण्यै नमः | ,, கரீஷிண்யை நம: |
| | ,, ईश्वर्यै नमः | ,, ஈஶ்வர்யை நம: |
| ४०. | ,, मनसः कामाय नमः | ,, மநஸ: காமாய நம: |
| | ,, वाचः आकूत्यै नमः | ,, வாச: ஆகூத்யை நம: |
| | ,, सत्याय नमः | ,, ஸத்யாய நம: |
| | ,, पशूनां रूपाय नमः | ,, பஶூநாம் ரூபாய நம: |
| | ,, अन्नस्य यशसे नमः | ,, அந்நஸ்ய யஶஸே நம: |
| | ,, मात्रे नमः | ,, மாத்ரே நம: |
| | ,, पद्ममालिन्यै नमः | ,, பத்₃மமாலிந்யை நம: |
| | ,, पुष्करिण्यै नमः | ,, புஷ்கரிண்யை நம: |
| | ,, यष्ट्यै नमः | ,, யஷ்டயே நம: |
| | ,, पिङ्गलायै नमः | ,, பிங்க₃ளாயை நம: |
| ५०. | ,, तुष्ट्यै नमः | ,, துஷ்டயே நம: |
| | ,, सुवर्णायै नमः | ,, ஸுவர்ணாயை நம: |
| | ,, हेममालिन्यै नमः | ,, ஹேமமாலிந்யை நம: |
| ५३. | ,, सूर्यायै नमः | ,, ஸூர்யாயை நம: |

# ஸ்ரீஸூக்தத்தின் கடைசியில் பலரால் அனுஸந்திக்கப்படும் மந்திரங்கள்

**பத்₃மப்ரியே பத்₃மினி பத்₃மஹஸ்தே பத்₃மாலயே பத்₃மத₃ளாயதாக்ஷி !**
**விஶ்வப்ரியே விஷ்ணுமனோநுகூலே தவத்பாத₃பத்₃மம் மயி ஸந்நித₄த்ஸ்வ!!**

[தாமரையில் உகப்புள்ளவளும், பெண்களுள் உயர்ந்தவளும், தாமரையைக் கையில் ஏந்தியிருப்பவளும், தாமரையின் மேல் வீற்றிருப்பவளும், தாமரை இதழையொத்த திருக்கண்களையுடையவளும், எல்லாரிடமும அன்புள்ளவளும், விஷ்ணுவின் திருவுள்ளத்திற்கு ஒத்திருப்பவளுமான மஹா லக்ஷ்மியே! தாமரை மலர்போன்ற உமது திருப்பாதத்தை எனது முடிமேல் சூட்டுவீராக.]

**ஶ்ரியை ஜாத: ஶ்ரிய ஆநிர்யாய ஶ்ரியம் வயோ ஜநித்ருப்₄யோ த₃த₄ாது !**
**ஶ்ரியம் வஸாநா அம்ருதத்வமாயந் ப₄ஜந்தி ஸத்₃ய: ஸவித₄ா விதத்₃யூன்!!**

[பகவத் கைங்கர்யமாகிய செல்வத்தை அனுபவிப்பதன் பொருட்டு அவரிடமிருந்து நான் தோன்றியுள்ளேன். என்னை மறைக்கும் அசேதந அம்சம் நீங்கப்பெற்று நான் சுய உருவத்துடன் ஆவிர்ப்பவிக்க ஹேதுவான உபாயங்களை அனுஷ்டிப்பதன் பொருட்டு ஸ்திரமான செல்வமும், ஆயுஸ்ஸும் ஸ்ரீதேவியே எனக்கு ஏற்படுமாறு செய்யக்கடவள். லக்ஷ்மியின் சிந்தனையுடனேயே வாழ்பவர்கள் ஜனனமரணாதிகளற்று அமரத் தன்மையை அடைவார்கள். அவர்களே பரமபதநாதனது அருகில் சென்றதும் உடனேயே விசேஷமாக அந்த ப்ரஹ்மத்தின் கடாக்ஷத்தால் பாபம், மூப்பு, மரணம், சோகம், பசி, தாகம ஆகிய இவைகளற்ற தன்மையையும், விரும்பியதைப்பெறும ஆற்றலையும் நினைத்தபடி நடப்பதில் யாராலும் தடுக்கமுடியாத தன்மையையும் அடைவார்கள்.]

**ஶ்ரிய ஏவைநம் தச்ச்₂ரியமாத₃த₄ாதி !**

[அந்த ப்ரஹ்மம் இந்த லக்ஷ்மியை உபாஸிப்பவனுக்கு மேன்மேலும் கைங்கர்யமெனும் செல்வத்தை அளிக்கிறது]

**ஸந்ததம் ருசா வஷட்க்ருத்யம் ஸந்த₄த்தம் ஸந்தீ₄யதே ப்ரஜயா பஶுபி₄: ய ஏவம் வேத₃!!**

[இந்த ருக்வேத கிலமந்த்ரங்களால் எப்பொழுதும் வசப்படுத்தத்தக்கவரான இந்தப்பிரிவில்லா தம்பதிகளை இங்குகூறியவண்ணம் உபாஸிப்பவன் புத்ர பௌத்ராதிகளுடனும் பசு, குதிரை, செல்வம் முதலானவற்றுடனும் பிரிவின்றி வாழ்வான்.]

**ஓம் மஹாதே₃வ்யை ச வித்₃மஹே விஷ்ணுபத்ந்யை ச தீ₄மஹி !**
**தந்நோ லக்ஷ்மீ: ப்ரசோத₃யாத் !!**

[பெரிய பிராட்டியாரின் அனுக்ரஹத்தைப்பெற உபாஸனைகள் புரிவோம். அடியார்களுக்கு நான்குவிதமான புருஷார்த்தங்களையளித்தலெனும் யாகத்தில் தீக்ஷிதனான நாராயணனுடன் அவற்றைச் செய்யும் அவர் தர்ம பத்தினியை இடையருது தியானிப்போமாக. தமது தியானத்தில் எங்களை அவர் ஊக்குவிப்பாராக.]

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ★ பூஸூக்த வ்யாக்யானம் ★

श्रीरङ्गनायिकाराजहंसीछायामिव स्थिताम्।
प्रपद्याथ क्षमां देवीं तत्सूक्तं व्याकरोम्यहम्॥

[அடுத்தபடியாக, ஸ்ரீரங்கநாயகியாகிற அன்னப்பேடையின் நிழல் போன்ற பூதேவியை வணங்கி, அப்பிராட்டியுடையதான பூஸூக்தத்தை அடியேன் வியாக்கியானம் செய்கின்றேன்.]

"லக்ஷ்மீம் விஹாரரஸிகாமிவ ராஜஹம்ஸீம்
சா₂யாமிவாப்₄யுத₃யிநீமவநீஞ்ச தஸ்யா:" [ர-ஸ்த 1-63]

[(ஸ்ரீரங்கநாதனுகிற குளத்தில்) விளையாடுவதில் விருப்பமுள்ள ராஜஹம்ஸப்பேடை போன்றுள்ள பெரியபிராட்டியாரையும், அவளுடைய வளர்கின்ற நிழல்போன்ற பூமிதேவியையும் (அடையக் கடவேன்)] என்றும்,

"போ₄க்₃யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்க₃ராகைர₃ஸ் ஸமம்
நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ₄ நீதா: பரீவாஹதாம்।
தே₃வி த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே₃வ்யஸ் ஸஹஸ்ரம் ததா₂
யாபி₄ஸ் த்வம் ஸ்தநப₃ாஹத்₃ருஷ்டிபி₃ரிவ ஸ்வாபி₄: ப்ரியம் ப்₄லாக₄ஸே ||"

[தேவியே! உனக்குக் கீழ்ப்பட்டவர்களாய் (உன் நாதனுக்கு) தேவிகளாயிருக்கும் பூதேவி, நீளாதேவி முதலான ஆயிரக்கணக்கானவர்கள், உங்களிருவர்க்கும் புஷ்பம், அங்கராகம் ஆகியவைபோல் விட்டுப்பிரியாத உபகரணமாயும் போக்யமாயுமிருப்பவர்களாய், உங்களுடைய ப்ரணயரஸம் கரைபெருகும்போது அதை வெளிவிடும் மடைபோலிருக்கிறார்கள். நீயும் உன்னுடைய கொங்கை,

திருக்கைககள், திருக்கண்கள் ஆகியவற்ருல் உன்நாதனை உகப்பிப்பதுபோல் அவர்களைக் கொண்டும் உகப்பிக்கிறீர்.] என்றும் பட்டர் அருளிச்செய்தபடியே பூதேவியானவள் பெரியபிராட்டியாருக்கு நிழல் போலவும், ஸ்தநபாஹுத்ருஷ்டிகளாகிற அவயவங்கள் போலவும், புஷ்பசந்தநாதிகளாகிற போகோபகரணங்கள் போலவுமிருப்பவள். "ஸாக்ஷாத்க்ஷமாம் கருணயா கமலாமிவாந்யாம்' [ஸாக்ஷாத் பூமிதேவியாகவும், கருணையினுலே மற்ருெரு ஸ்ரீதேவி போலவுமிருப்பவள்.] எனறு ஸ்ரீவேதாந்ததேசிகர் கோதாஸ்துதியில் அருளிச்செய்தபடியே, பெரியபிராட்டியாரின் மற்ருெரு அவதாரமோ என்னலாம்படியிருப்பவள். நாம் தங்கிவாழும் நிலமாயிருக்கையாலே நாமறிந்த தாயாயிருப்பவள். எல்லா ஜாதியினராலும், மதத்தினராலும் 'தாய்' என்று கொண்டாடப்படுபவள். இவள் தாயானுல், இவளுடைய நாதன் எவனே அவனே உலகுக்குத் தந்தை என்பது வெளிப்படையன்ருே. பூமிநாதன் நாராயணனே என்பது ஸர்வலோகப்ரஸித்தம். அது வேதத்திலும் ஸுப்ரஸித்தமாயிருப்பதைக் காட்டுவதன் மூலம் நாராயணனே பரப்ரஹ்மம் என்று நிர்ணயிப்பதற்காகவும், அவன் தன் தேவியாகிற பூமியின் மூலம் நமக்கெல்லாம் உணவும் உயிருமளித்து ரக்ஷிக்கிருன் என்பதை நிலைநாட்டுவதற்காகவும், ஸ்ரீ விஷ்ணுசித்தவிஜயத்தில், பகவானே ஸர்வரக்ஷகன் என்பதை நிலைநிறுத்தும் ப்ரகரணத்திலே ஸ்ரீஸூக்தத்திற்கு அடுத்தபடியாக பூஸூக்தத்தையும் வியாக்கியானம் செய்கிருேம். இந்த ஸூக்தத்தின் முதல் ஆறு மந்திரங்களும் யஜுஸ்ஸம்ஹிதை முதற்காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் உள்ளன. பின்னுள்ள மந்திரங்களிற்பல கிலமந்திரங்கள்.

நிற்க; இப்பிராட்டியின் பெருமைகள் சிலவற்றைப்பேசுவோம் இனி. எல்லாவுயிர்கட்கும் இருக்க இடமளித்து உண்ண உணவளித்து, அவர்கள் செய்யும் அபசாரங்களையெல்லாம் பொறுத்து, அவர்களுக்கு மேலும் மேலும் உபகாரங்களைச் செய்யும் பெருமையை நாம் ஓவ்வொருவரும் தினந்தோறும், கணந்தோறும் ப்ரத்யக்ஷமாகக் கண்டு வருகிருேம். பொறுமைக்குணத்தில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவள் இப்பிராட்டி. "க்ஷமை" [பொறுமை] என்றே பெயர்பெற்றிருக்கிருளன்ருே இவள். ஸமஸ்தகல்யாணகுணத்மகனை அவனுடைய பொறுமைக்குணத்துக்கும் "க்ஷமயா ப்ருதிவீஸம:" [பொறுமையில் பூமியைப்போன்றவன் ராமபிரான்] என்று இவளை உபமானமாகச் சொல்லவேண்டியிருக்கிறது. காருண்யரூபையான பெரியபிராட்டியும்,

"பாபாநாம் வா ஶுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம|
கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந் நாபராத்யதி||"

[வானரனே! பாவிகளாயினும், புண்ணியசாலிகளாயினும், கொல்லத் தகுந்தவராயினும் நல்லோனால் (அவர்கள் விஷயத்தில்) கருணை காட்டப்படவேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே] என்கிறபடியே குற்றத்தைக் கண்டு அத்தைப்பொறுக்கவேணும் என்று மன்றாடுமவள். இப்பிராட்டியோவெனில் 'குற்றம் காண்பானென்? பொறுப்பானென?' என்று குற்றங்களை அடியோடு காணக்கண்ணிட்டிருப்பவள். பெரிய பிராட்டியார் ஸர்வேச்வரனுக்குச் செல்வமாயிருப்பவர்; இப்பிராட்டியார் அச்செல்வம் விளையும் நிலமாயிருப்பவர். 'குற்றம் செய்யாதவனில்லையே' என்பார் அப்பிராட்டியார்; 'குற்றம் செய்பவன் இல்லையே' என்பார் இப் பிராட்டியார். நாராயணன் ஒருவனுக்கே சேஷபூதையாயிருக்கையாலே மிதுநசேஷபூதரான நம்மைப்போன்ற சேதனரில் விஜாதீயையாயிருப்பவர் அப்பிராட்டி. இருவர்க்கும் சேஷபூதையாயிருப்பவர்களில் தலைவியாயிருக்கும் இப்பிராட்டியே நம்மோடு மிகவும் ஸஜாதீயையாயிருப்பவர். தாய்க்கிருக்கவேண்டிய வாத்ஸல்யகுணம் ஸ்ரீதேவியைக் காட்டிலும் பூதேவியிடமே விஞ்சியிருக்கிறதென்பது வெளிப்படை. ஸர்வேச்வரனைக்காட்டிலும் குணங்களில் விஞ்சியிருப்பவர் பெரியபிராட்டியார். அப்பிராட்டியைக்காட்டிலும் குணங்களில் விஞ்சியிருப்பவர் இப்பிராட்டியார்.

"பெருமையுடையவள் பூமகள்; பொறுமையுடையவள் பூதேவி. குணமுடையவள் ஸ்ரீதேவி; மணமுடையவள மண்மடந்தை. கோஷிப்பிப்பவள் ஸ்ரீதேவி; போஷிப்பவள் பூமிதேவி. அழகுடையாள் இலக்குமி; புகழுடையாள் பூதேவி. ஆதரமுடையவள் அலர்மேல்மங்கை; ஆதாரமானவள் அவனியாள்." என்றும்,

" பூமிப்பிராட்டிக்கு நாம் செய்யும் குற்றங்களுக்கோர் கணக்கில்லை. அவள் நமக்குச்செய்யும் நன்மைகளுக்கோ எல்லையில்லை. நாம் உண்டாவதற்கு உதவுகிறாள். நாம் நடக்கும்போதும் கிடக்கும்போதும் நம்மைத் தாங்குகிறாள். உயிருடனிருப்பதற்கு வேண்டியவைகளைக் கொடுத்துக் காப்பாற்றுகிறாள். நாம் அதற்கு பதில் அவளை வெட்டுகிறோம்; கூரிய ஆயுதங்களினால் குத்திக் கீறிக் கிழிக்கிறோம்; மலஜலாதிகளை விட்டு அசுத்தம் செய்கிறோம். பூமியின் புத்திரர்களான நாம் ஒருவர்க்கொருவர் த்வேஷிப்பதன் மூலமும், தூஷிப்பதன மூலமும் முக்கரணங்களாலும் முடிவில்லாத

துன்பங்கள் செய்வதன் மூலமும் நம் தாயாகிய பூமியைத் துன் புறுத்துகிறோம். பொறுமையாகிய பாலை நமக்கு ஊட்டின தாயின் வழி நாம் நடக்கவேண்டாமா? பொறையின் மக்கள் குறை கூறலாமா? பொறுமையில் மிக்கவளாகையாலும், பூமியில் பிறந்து வளர்ந்த நமக்கு இஹபரபுருஷார்த்தங்களை அடையச்செய்பவள் இவளேயாகையாலும் முதலில் 'ஹ்ரீ' என்று பூமிதேவி சொல்லப் பட்டாள். தேசபக்தியென்பது தாயிடம் அன்பே. ஆனால் அந்த மாதவியோ மாதவனுடையவள். அவளிடம் பக்தியென்று பெயர் பூண்டு அவனியாள் நாதனின் ஆஜ்ஞைகளை மீறுகிறார்கள் சிலர், பூமிதேவி அவர்களைப்பொறுக்காமல் பாரமாகவே கருதுவாள். புருஷோத்தமனிடமிருந்து பூமியைப்பிரிப்பவர்கள் தகப்பனை விட்டுத் தாயைப் பிரிப்பவர்களாகக் கருதப்படுவார்கள். 'பிராட்டியை பகவானை விட்டுப்பிரித்த ராவணன் தலையறுப்புண்டான்; பிரிக்கப் பார்த்த சூர்ப்பணகை மூக்கறுப்புண்டாள்' என்று நம் ஆசார் யர்கள் அருளிச்செய்திருப்பது இங்கு அநுஸந்திக்கத்தக்கது" என்றும் அஸ்மத்தாதபாதர்கள் புருஷஸூக்த வ்யாக்கியானத்திலே அருளிச்செய்தது இங்கு அநுஸந்தே₄யம். இனி, பூஸூக்த மந்திரங்களின் பொருளைக்காண்போம்.

## भूसूक्तम् - பூஸூக்தம்

१. भूमिर्भूम्ना द्यौर्वरिणाऽन्तरिक्षं महित्वा।
उपस्थे ते देव्यदितेऽग्निमन्नादमन्नाद्यायादधे॥

1. பூ₄மிர் பூ₄ம்நா த்₃யௌர் வரிணாऽந்தரிக்ஷம் மஹித்வா।
உபஸ்தே₂ தே தே₃வ்யதி₃தேऽக்₃நிமந்நாத₃மந்நாத்₃யாயத₃தே₄॥

பதவுரை:— தே₃வி—பூமிதேவியே! பூ₄ம்நா—பரப்பினால், பூ₄மி:—பூமியாகவும், வரிணா—மேன்மையினால், த்₃யௌ:—தேவலோகமாகவும், மஹித்வா—பெருமையினால், அந்தரிக்ஷம்—அந்தரிக்ஷலோகமாகவும் ஆகிறாய் நீ; அதி₃தே—பூர்ணையா யிருப்பவளே, தே-உனக்கு, உபஸ்தே₂-ஸமீபத்தில், அந்நாத₃ம்-பரமாத்மாவை அநுபவிக்கத்தக்க, அக்₃நிம்—ஜீவாத்மாவை, அந்நாத்₃யாய— பரமாத்மாவை அநுபவிக்கச்செய்வதன் பொருட்டு, ஆத₃தே₄—ஸமர்ப்பிக்கிறேன்.

பூமியின் பெருமைகளை முன்னிட்டுக்கொண்டு ஆத்மவஸ்துவை அவளிடம் ஸமர்ப்பிக்கிறுன் முதல் மந்திரத்தில்.

( பூ$_4$மிர் பூ$_4$ம்நா ) பரப்பாலும், பொறுமை முதலான குணங்களாலும் பெரியவளாயிருக்கையால் 'பூமி' என்று சொல்லப்படுபவள். பரப்புடையதாய் நாம் காணும் பூமியை சரீரமாகக் கொண்டவள் என்றபடி. இப்பூமிமாத்திரமோ இவளுக்கு சரீரம்? என்னில்: ( த்$_3$யௌர் வரிணு ) மேன்மையினுல் தேவலோகமாகவுமிருப்பவள். மேன்மைபெற்ற தேவலோகமும் இவளுக்கு சரீரம் என்றபடி.

........................ஆயிரக்கண்வானவர்கோன்
பொன்னகரம்புக்கமரர்போற்றிசெப்ப—பொங்கொளிசேர்
கொன்னவிலும்கோளரிமாத்தான் சுமந்தகோலம்சேர்
மன்னியசிங்கா சனத்தின்மேல்—வாணெடுங்கண்
கன்னியராலிட்ட கவரிப்பொதியவிழ்ந்து ஆங்
கின்னிளம்பூந்தென்ற லியங்க—மருங்கிருந்த
மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார்வெண்முறுவல்
முன்னம்முகிழ்த்த முகிழ்நிலாவந்தரும்ப
அன்னவர்தம்மானேக்க முண்டாங்கணிமலர்சேர்
பொன்னியல்கற்பகத்தின்காடுடுத்தமாடெல்லாம்
மன்னியமந்தாரம் பூத்தமதுத்திவலை
இன்னிசைவண்டமரும் சோலைவாய்மாலைசேர்
மன்னியமாமயில்போல் கூந்தல்—மழைத்தடங்கண்
மின்னிடையாரோடும் விளையாடி வேண்டிடத்து
மன்னுமணித்தலத்து மாணிக்கமஞ்சரியின்
மின்னிஞெளிசேர் பளிங்குவிளிம்படுத்த
மன்னும்பவளக்கால் செம்பொன்செய்மண்டபத்துள்
அன்னநடைய வரம்பையர்தம்கைவளர்த்த
இன்னிசையாழ்பாடல்கேட்டின்புற்று—இருவிசும்பில்
மன்னுமழைதவழும் வாணிலா நீண்மதிதோய்
மின்னிஞெளிசேர் விசும்பூரும்மாளிகைமேல்
மன்னுமணிவிளக்கை மாட்டி—மழைக்கண்ணுர்

பன்னுவிசித்திரமாப் பாப்படுத்தபள்ளிமேல்
துன்னியசாலேகம்சூழ்கதவமதாள் திறப்ப
அன்னமுழக்க நெறிந்துக்கவாணீலச்
சின்னநறுந்தாது சூடி—ஓர்மந்தாரம்
துன்னுநறுமலரால் தோள்கொட்டிக் கற்பகத்தின்
மன்னுமலர்வாய் மணிவண்டுபின்தொடர
இன்னிளம்பூந்தென்றல் புகுந்து ஈங்கிளமுலைமேல்
நன்னறும்சந்தனச் சேறுள்புலர்த்தத்—தாங்கரும்சீர்
மின்னிடைமேல் கைவைத்திருந்தேந்திள முலைமேல்
பொன்னரும்பாரம் புலம்ப—அகங்குழைந்தாங்
கின்னவுருவி னிமையாத்தடங்கண்ணார்
அன்னவர்தம்மானோக்க முண்டாங்கணிமுறுவல்
இன்னமுதம்மாந்தி யிருப்பர்''

என்று திருமங்கையாழ்வார் பெரியதிருமடலிலே அருளிச்செய்த மேன்மைகளை உடைய தேவலோகத்துக்கும் அபிமானினியாயிருப்பவள் இவளே என்கை. (அந்தரிக்ஷம் மஹித்வா) ஸூர்யசந்த்ராதிகள் ஸஞ்சரிக்கத்தகுந்த இடமுடைத்தாயிருக்கையாகிற மஹிமையையுடைய அந்தரிக்ஷலோகமாகவுமிருக்கிறீர் நீரே என்கை. பூமியென்றது கீழுள்ள லோகங்களுக்கும், 'த்₃யௌ:' என்றது மேலுள்ள லோகங்களுக்கும் உபலக்ஷணம். கீழ் மேல் நடுவாகிற மூவுலகங்களாகவுமிருப்பவர் தேவரீரே என்கை; அவற்றை சரீரமாகக்கொண்டவர் தேவரீரே என்றபடி.

இப்படி அனைத்துலகங்களையும சரீரமாகக் கொண்டவளாகில் இத்தேவியின் ஸ்வரூபம் ஸர்வேச்வரனுடையதைப்போலே விபுவாயிருக்கவேண்டாவோ? எனில்: இல்லை. இவள் ஜீவகோடியைச் சேர்ந்தவளே என்பது ஸர்வஸம்மதமாகையாலே மற்ற ஜீவர்களைப் போலே அணுவாகவேயிருக்கிருள் இப்பிராட்டியும். ஆயினும், எல்லா உலகங்களையும் தன் ஞானபலங்களாலே வியாபித்து தரித்து நிற்கையாலே அவற்றை சரீரமாகக்கொண்டவர் என்னத் தடையில்லை.

''ததா₂ பூ₄மிஶ்ச நீளா ச ஶேஷபூ₄தே மதே மம।
ஸ்வரூபதஸ்து ந தயோர் கு₃ணதோ வ்யாப்திரிஷ்யதே ॥''

[அப்படியே பூமிநீளாதேவிகளும் (பகவானுக்கு) சேஷபூதைகளென்பது என முடிவு (ஆனால்) அவர்களுக்கு ஸ்வரூபவ்யாப்தியில்லை. குணவ்யாப்தியே உள்ளது] என்ற ப்ரமாண வசனம் காண்க

(தே உபஸ்தே$_2$) உன்னருகில், தாயாகிற உன்னருகில், மலமூத்ராதிகளை விடுதல், வெட்டுதல் குதித்தல் முதலிய பிழைகள் எத்தனை செய்தாலும் அவற்றைப்பொறுத்திருந்து, எங்களுக்குப் பாலையும், தயிரையும், நெய்யையும் உணவையும் ஊட்டி உயிரளிக்கின்ற உத்தமத்தாயான உன்னருகில். பிழைகளைக்கண்டு சீறிச் சிவந்துநிற்கும் எம்பெருமானிடம் 'குற்றமே இல்லையே'' என்று வாதாடி வெற்றிபெறும் உன்னருகில். (தே,வி)தேவனின் பத்தினியே! புருஷகாரம் செய்யத்தகுந்த ஸம்பந்தத்தை உடையவளே! எங்களோடும், அவனோடும் ஸம்பந்தமுடையவளாகையாலே நீயே புருஷகாரம் புரியத்தக்கவள் என்றபடி (அதி$_3$தே) ''தே$_3$ா அவக$_3$ண்ட$_3$நே'' என்று தாதுவாகையாலே, 'அகண்டமாயிருப்பவளே!' என்று பொருள்படுகிறது. இப்படி எல்லா உலகையும் சரீரமாகக் கொண்டிருக்கையாலே பூர்ணையாயிருப்பவளே! என்கை. பொறுமை முதலான குணங்களாலே நிறைந்திருப்பவளே! என்றுமாம்.

(அந்நாத$_3$மக$_3$நிம) ''அஹமந்நாத$_3$:'' [தை-ப்ருகு 10-5] [(ஞான பரமாத்மாவின் ப்ரீதியாகிற) அன்னத்தை உண்பவன்] என்று முக்தனின் ஸாமகானத்தில் சொல்லப்பட்டதாகையாலே 'அந்நமென்று பகவதநுபவத்துக்குப்பெயர் அவ்வந்நத்தை உண்பதற்குத் தகுதியுள்ளவனாகையாலே ப$_3$த$_3$த$_4$ஜீவனும் 'அந்நாத$_3$ன்' என்னத்தகுந்தவனாகிறான் ''அக$_3$ரம நீயத இத$_3$யக$_3$நி'' [மேலே அழைத்துச் செல்லப்படுகிறான்] என்கிற வ்யுத்பத்தியாலே ஜீவன் அக்நியென்றும் சொல்லப்படுகிறான் பகவதநுபவமாகிற அந்நத்தைஉண்பிக்கத்தகுந்ததும், பரமபுருஷனாலே மேலே அழைத்துச் செல்லத்தக்கதுமான இந்த ஆத்மவஸ்துவை (அந்நாத$_3$யாய) பகவதநுபவமாகிற உணவை ஊட்டும் பொருட்டு இந்நாள் வரை பராக்ருதமான உணவையூட்டி வளர்த்த தாயாகிய நீயே இனி அப்ராக்ருதமான உணவையும் உன் குழந்தைக்கு ஊட்ட வேணும் என்று கருத்து (அந்நாதயாய தே உபஸ்தே$_1$ ஆத$_3$தே$_4$) உணவூட்டுவதற்காக உத்தமத்தாயான உன்னிடம் இவ்வாத்மாவை ஸமர்ப்பிக்கிறேன் 'உபஸ்த$_2$ம' என்று இடைக்கு உபலக்ஷணம். இடையில் வைத்துக்கொண்டு தாய் குழந்தைக்கு உணவூட்டுவது வழக்கமன்றோ ''அஹமத்$_2$யைவ மயா ஸமர்ப்பித:'' [ஸ்தோ-ர]

[என் ஆத்மவஸ்து இன்றே என்னால் ஸமர்ப்பிக்கப்பட்டது] "எனதாவி தந்தொழிந்தேன்" [திருவாய்] என்றாற்போலே.

२. आयङ्गौः प्रश्निरक्रमीदसनन्मातरं पुनः।
पितरञ्च प्रयन्सुवः॥

2. ஆயங்கௌ₃: ப்ரஸ்₂நிரக்ரமீத₃ஸநந் மாதரம் புந:।
பிதரஞ்ச ப்ரயந் ஸுவ: ||

பதவுரை:— கௌ₃:-பூமிதேவியே! அயம்-இந்த. ப்ரஸ்₂நி:- வெண்மையான நிறத்தையுடைய ஸூர்யன். ப்ரயந்—வேகமாகச் செல்லாநின்றுகொண்டு. மாதரம்-தாயாகிய உன்னை. அக்ரமீத்-பிரதக்ஷிணம் செய்தான். புநஸ்₂ச-மேலும். ஸுவ:- அழகிய கமனத்தையுடையவனாய். பிதரம்—தந்தையாகிய பரமபுருஷனை, அஸநத்-(தனக்கு அந்தர்யாமியாக) அடைந்தான்.

முதல் மந்திரத்தில், பரமபுருஷனை அடைவதன்பொருட்டு பூமிதேவியை சரணமடைந்தான். இவ்விரண்டாம் மந்திரத்தில், உன்னை தினந்தோறும் ப்ரதக்ஷிணம் செய்வதன்மூலம் ஸூர்யன் நாராயணனுக்கு இருப்பிடமாயிருக்கும் பெருமையைப்பெற்றான் என்கிறான்.

(கௌ₃:) பூமிதேவியே! (ஸுவ: ப்ரயந் அயம் ப்ரஸ்₂நி:) ஆகாயத்தில் வேகமாகச் செல்லாநிற்கும் இந்த ஸூர்யன். 'ஸுவ:' என்றது ஆகாசத்துக்கு உபலக்ஷணம். அன்றிக்கே, பதவுரையில் காட்டியதுபோல் அடுத்த வாக்கியத்தோடு கூட்டியும் பொருள் கொள்ளலாம். (மாதரம் அக்ரமீத்) தாயாகிற உன்னை ஆக்ரமித்தான். அதாவது,—தினந்தோறும் ப்ரதக்ஷிணம் செய்தான். இத்தால் பெற்ற பலனைச் சொல்லுகிறது மேலே,—(புந: பிதரஞ்ச அஸநத்) உன்னோடன்றியில், உன் நாதனும் எங்களுக்குத் தந்தையுமான ஸ்ரீமந்நாராயணனையும் தனக்கு அந்தர்யாமியாக அடைந்தான். அவனுக்கு இருப்பிடமாயிருக்கும் பெருமையைப்பெற்றான்.

த்₄யேயஸ்ஸதா₃ ஸவித்ருமண்ட₃லமத்₄யவர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:।
கேயூரவாந் மகரகுண்ட₃லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்₄ருதஸ₂ங்க₂சக்ர: ||

[ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவனும், கமலாஸனத்தில் வீற்றிருப்பவனும், தோள்வளை, மகரகுண்டலம், கிரீடம், ஹாரம், இவைகளை உடையவனும், ஸுவர்ணமயமான சரீரத்தை உடையவனும், சங்கசக்ரங்களை தரித்தவனுமான நாராயணன் எப்போதும தியானிக்கத்தக்கவன்.] என்று உபாஸகர்களுக்கு தியானவிஷயமான அவனுக்கு இருப்பிடமானன்.

३. त्रिंशद्धाम विराजति वाक्पतङ्गाय शिश्रिये।
प्रत्यस्य वह द्युभिः॥

3. த்ரிம்ஶத்$_3$ தா$_4$ம விராஜதி வாக் பதங்க$_3$ாய ஶிஶ்ரியே।
ப்ரத்யஸ்ய வஹ த்$_3$யுபி$_4$:॥

பதவுரை:—த்ரிம்ஶத் தா$_4$ம — *முப்பது ஸ்தானங்களில் (முப்பது முஹூர்த்தங்களில்).* விராஜதி—*மிக விளங்குகிறுன் (சூரியன்).* வாக்—*வேதவாக்கானது,* பதங்க$_3$ாய ஶிஶ்ரியே—*சூரியனை ஆச்ரயிக்கிறது.* த்$_3$யுபி$_4$:—*(உம்முடைய) தேஜஸ்ஸுக்களால்.* அஸ்ய—*இந்த என்னுடைய.* ப்ரதி—*ப்ரதிகூல நடத்தையை,* வஹ—*போக்கும்.*

பூமிப்பிராட்டியை வலம் செய்வதினுல் சூரியன் அடைந்த நன்மைகளை மேலும் பேசிக்கொண்டு, தனனுடைய ப்ராதிகூல்யத்தைப் போக்கியருள வேண்டுமென்று பிரார்த்திக்கிறுன் இம்மந்திரத்தில்.

(த்ரிம்சத் தா$_4$ம விராஜதி) சூரியன் தினந்தோறும் முப்பது முஹூர்த்தமும் பிரகாசிக்கிறுன். 'தா$_4$ம' சப்தம் ஸர்வாதா$_4$ரமான காலத்தைச்சொல்லி, இங்கு காலத்தின் அவயவமான முஹூர்த்தத்தைச் சொல்லுகிறது. 'ப்ருஶ்நி:' என்னும் ஸூர்யவாசக பதத்தை முன் மந்திரத்திலிருந்து கூட்டிக்கொள்வது. இவன் பேரொளியோடு தினந்தோறும் பிரகாசிப்பது உன்னருளாலேயே என்றபடி.

(வாக் பதங்க$_3$ாய ஶிஶ்ரியே) வேதவாக்கானது சூரியனை ஆச்ரயித்திருக்கிறது. காலையில் ருக்வேதத்தினுலும், மத்யாஹ்நத்தில்

யஜுர்வேதத்திலும் மாலையில் ஸாமவேதத்திலும் துதிக்கப்படுகிறான் என்று வேதத்தில் வேறொரு இடத்திலும் சொல்லியிருக்கிறது. ஆகாசத்தில் பக்ஷிபோல் ஸஞ்சரிப்பவனாகையாலே, 'பதங்க₃:' [பக்ஷி] என்று சூரியன் சொல்லப்படுகிறான்.

(ப்ரத்யஸ்ய வஹ த்₃யுபி₄:) "கௌ₃:" என்பதை முன் மந்திரத்திலிருந்து கூட்டுவது. பூமிப்பிராட்டியே! உன்னுடைய ஸௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்களைக்கொண்டு மிகத்தாழ்ந்த நிலையிலிருக்கும் என்னுடைய ப்ராதிகூல்யத்தைப்போக்கடிப்பீராக. கல்யாண குணங்கள் 'தேஜஸ்ஸுக்கள்' அல்லது 'கிரணங்கள்' என்று சொல்லப்படுகின்றன. 'அஸ்ய' என்று மிகத்தாழ்ந்த நிலையிலிருக்கும் தன்னை நிர்த்தேசிக்கிறான். அன்றியே, 'பிதரம்' என்று பூர்வ ச்லோகத்தில் ப்ரஸ்துதனான ஸர்வேச்வரனை 'அஸ்ய' என்று எடுப்பதாகக் கொண்டு, அவனுக்கு என்விஷயமாகவுள்ள ப்ராதிகூல்யத்தை உம்முடைய காந்தி ஸௌந்த₃ர்யஸௌகுமார்யாதி₃ குணங்களைக்கொண்டு போக்கடிப்பீராக என்றும் பொருள்கொள்ளலாம். "ஶ்ருணாதி நிகி₂லாந் தோ₃ஷாந்" [சேதனரிடமுள்ள தோஷங்களையும், ஈச்வரனிடமுள்ள ஸ்வாதந்த்ரியாதி தோஷங்களையும் அழிக்கிறாள்.] என்பதன்றோ பிராட்டியின் தொழில்.

இப்படியன்றிக்கே இம்மந்திரம் முழுவதையும் பகவத்பரமாகவும் பொருள் கொள்வர். (த்ரிம்சத் தா₄ம விராஜதி) ஸர்வேச்வரன் தினந்தோறும் முப்பது முஹூர்த்தமும் ரக்ஷணத்தில் நிலைநிற்பவனாய் விளங்குகிறான். (வாக் பதங்கா₃ய ஶிஶ்ரியே) வேதவாக்கானது "த்₃வாஸுபர்ணா" என்னும் மந்திரத்திலே பக்ஷியாக நிருபிக்கப்பட்ட ஸர்வேச்வரனை ஆச்ரயித்து நிற்கிறது. அன்றிக்கே, அருமறையானது அனனமாய் அன்றங்கு அருமறை பயந்தவனை ஆச்ரயித்து நிறகிறது. (த்₃யுபி₄: அஸ்ய ப்ரதிவஹ) ஸர்வலோக பிதாவே! உன் தேஜஸ்ஸாலும குணங்களாலும் என் பிராதிகூல்யத்தைப் போக்கடிப்பீராக.

௪. अस्य प्राणादपानत्यन्तश्चरति रोचना।
व्यख्यन्महिषः सुवः॥

4. அஸ்ய ப்ராணாத₃பாநத்யந்தஶ் சரதி ரோசநா ।
வ்யக்₂யந் மஹிஷஸ் ஸுவ: ॥

பதவுரை:— அஸ்ய-இந்தப் பரமபுருஷனுடைய, ரோசநா-தேஜஸ்ஸானது, ப்ராணாத்—ப்ராணனம் என்கிற செயலைச் செய்தபின், அபாநதீ—அபானனம் என்னும் செயலையும் செய்துகொண்டு, அந்த: சரதி—உள்ளே ஸஞ்சரிக்கிறது; மஹிஷ:—பெரிய சரீரத்திலிருப்பதாய், ஸுவ:—அழகியது மாய், வ்யக்₂யத்—பிரகாசிக்கிறது.

பரமபுருஷனைத் துதிக்கின்றான் இம்மந்திரத்தால்.

(அஸ்ய ரோசநா அந்த: சரதி) இந்தப்பரமபுருஷனின் தேஜஸ்ஸே பிராணிகளினுள் ஸஞ்சரிக்கிறது. எதற்காக ஸஞ்சரிக்கிறது? எனில்: (ப்ராணாத₃பாநதீ) 'ப்ராணனம்' [நரம்பின் வழியாய் வாயுவை மேல்முகமாக வரும்படி செய்கை] 'அபாநநம்' [நரம்பின வழியாய் வாயுவைக் கீழ் முகமாகச் செலுத்துகை] என்னும் செயல்களைச் செய்வதற்காக தேஹத்தினுள் பரமனின் தேஜஸ்ஸு ஸஞ்சரிக்கிறது. அன்றிக்கே மோக்ஷபர்யந்தமான உயர்ந்த இன்பங்களையும், தாழ்ந்ததான இவ்வுலக இன்பங்களையும் அடைவிப்பதற்காக ஸஞ்சரிக்கிறது என்றுமாம் "கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் யதே₃ஷ ஆகாஶ ஆநந்தோ₃ ந ஸ்யாத்" [ஆனந்த ஸ்வரூபியான இப்பரமாத்மா இல்லாவிடில் எவன் இவ்வுலக இன பங்களையும் அவ்வுலக இன்பங்களையும் அடைவான்?] என்ற உபநிஷத் வாககியத்தை நினைப்பது. அந்தத் தேஜஸ்ஸானது எப்படிப் பிரகாசிக்கிறது? என்னில்: (வ்யக₂யந் மஹிஷஸ் ஸுவ:) மஹத்தான சரீரத்திலிருப்பதாய், அழகியதாய் பிரகாசிக்கிறது. மாமேனி மாயனுடைய மாசூணாச்சுடருடம்பை ஆச்ரயித்திருக்கையாலே விசேஷமாகப் பிரகாசிக்கின்றது என்கை.

५. यत्त्वा क्रुद्धः परोवप मन्युना यदवर्त्या।
सुकल्पमग्ने तत्तव पुनस्त्वोद्दीपयामसि॥

5. யத் த்வா க்ருத்₃த₄: பரோவப மந்யுநா யத₃வர்த்யா।
ஸுகல்பமக்₃நே தத்தவ புநஸ்த்வோத்₃தீ₃பயாமஸி॥

பதவுரை— அக்₃நே!—பரமபுருஷனே! அவர்த்யா—சக்தியில்லாமையினால், க்ருத்₃த₄:—கோபித்துக்கொண்ட நான், மந்யுநா—கோபத்தினால், த்வா—உம்மை, பரோவப யத்—

விட்டுவிட்டேன் என்று யாதொன்றுண்டோ. **தத்**—அது. **தவ**—உம்முடைய (அநுக்ரஹத்தினுல்). **புந:**—மறுபடியும். **ஸுகல்பம்**—நன்ருகச் செய்ததாக ஆகட்டும். **த்வா**—உம்மை. **உத்$_3$தீ$_3$பயாமஸி**—ஜ்வலிக்கும்படி செய்கிருேம்.

தான் செய்த தீங்குக்குப் பரமபுருஷனிடம் க்ஷமைகொள்ளுகிருன் இம்மந்திரத்தில்.

(யத் த்வா க்ருத்$_3$த$_4$: பரோவப மந்யுநா யத$_3$வர்த்யா) பாபப$_2$லமான அநுபவங்களை விலக்க சக்தியில்லாமையாலே, அவற்றைக் கொடுக்கும் உன்மேல் கோபங்கொண்டு உன்னை நான் கைவிட்டேன் என்பது யாதொன்று உண்டோ. (அவர்த்யா க்ருத்$_3$த$_4$:) சக்தியில்லாமை கோபத்திற்குக் காரணம் என்பது ப்ரஸித்தமன்ருே. "அமக்தாஸ் தத்பத$_3$ம் க$_3$ந்தும் ததோ நிந்த$_3$ாம் ப்ரகுர்வதே" [நேர்முறையில் நடக்க சக்தியில்லாதவர்கள் நிந்தையைப் பொழிகிருர்கள்] என்று சொல்லப்பட்டதன்ருே. (ஸுகல்பம் தத் தவ புந:) அந்த துஷ்க்ருத்யம் உன்னுடைய அநுக்ரஹத்தாலே மறுபடியும் நல்ல முடிவுள்ளதாக ஆகட்டும். (புந:) மறுபடியும். ஏற்கனவே இவன் பகவத்யானபரனுயிருந்து. பாபபலாநுபவத்தாலே கோபங்கொண்டு பகவானைக் கைவிட்டவனன்ருே; ஆகையால், மறுபடியும் என்னை உன் பக்தனுக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிருன். (அக்$_3$நே) அக்ரநயநத்தையே—(மேல் நோக்கி ஜீவனைக் கொண்டு செல்லுகையையே)— ஸ்வபாவமாகக் கொண்டவனே! இப்படிப்பட்ட நீ என்னைக் கைவிடலாகாது என்று பாவம். நான் உன்னைக் கைவிட்டாலும் நீ என்னைக் கைவிடலாகாது என்று கருத்து.

(அக்$_3$நே புநஸ்த்வா உத்$_3$தீ$_3$பயாமஸி) அக்னியே! மறுபடியும் உன்னை ஒளிவிடச் செய்கிறேன்; உன்னை தியானிப்பதன் மூலம் உன்னை மறுபடியும் ஒளிபெற்றவனுகச் செய்கிறேன். சேதனன் அவனைக் கைவிட்ட பின்பு அவன் ஒளியிழந்துகாணும் கிடந்தது! மறுபடியும் இவனைப்பெற்ற பின் ஒளிவிஞ்சியவனுவான் என்கை. "பரஞ்ஜ்யோதிருபஸம்பத்$_3$ய" என்று வடமொழி வேதமும், "என் கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே" என்று தென்மொழி வேதமும் சேதனனைப் பெற்றவுடன் பரமசேதனன் ஒளிவிஞ்சியவனுகிருன் என்று உத்கோஷித்தனவன்ருே.

६. यत्ते मन्युपरोप्तस्य पृथिवीमनु दध्वसे।
आदित्या विश्वे तद्देवा वसवश्च समाभरन्॥

6. யத்தே மந்யுபரோப்தஸ்ய ப்ருதி₂வீமநு த₃த்₄வஸே।
ஆதி₃த்யா விஸ்வே தத்₃தே₃வா வஸவஸ்ச ஸமாப₄ரந்॥

பதவுரை:— மந்யுபரோப்தஸ்ய—கோபத்தினால் விடப்பட்ட. தே—உம்முடைய. யத்—எந்தத் தேஜஸ்ஸானது. ப்ருதி₂வீமநு—பூமியை அநுஸரித்து. த₃த்₄வஸே—லயமடைந்ததோ. தத்—அந்தத் தேஜஸ்ஸை. ஆதி₃த்யா:—ஆதித்யர்களும். விஸ்வேதே₃வா:—விச்வேதேவர்களும். வஸவஸ்ச—வஸுக்களும், ஸமாப₄ரந்—தாங்கினார்கள்.

பூமிதேவியினால் புருஷகாரக்ருத்யம் செய்யப்பட்டு, தன் விஷயமாகப் பரமபுருஷன் ஏறிட்டுக்கொண்ட கோபம் தணிந்தபடியைப் பேசுகிறான் இம்மந்திரத்தில்.

(யத்தே மந்யுபரோப்தஸ்ய) கோபத்தினால் என்னால் கைவிடப்பட்ட உன்னுடைய தேஜஸ் யாதொன்றுண்டோ அது. நான் கைவிட்டதால் உனக்கு ஏற்பட்ட கோபமாகிற தேஜஸ்ஸு. (ப்ருதி₂வீமநு த₃த்₄வஸே) யாதொரு தேஜஸ்ஸானது பூமியை அனுஸரித்து லயமடைந்ததோ; பூமிதேவியானவள் புருஷகாரக்ருத்யம் செய்கையால், அவளுடைய நினைவைப் பின்சென்று லயமடைந்ததோ என்று கருத்து. பூமிதேவியினால் சமனம் செய்யப்பட்ட அந்தத் தேஜஸ்ஸின் தீவிரத்தன்மை அடுத்தபடியாகச் சொல்லப்படுகிறது,—(தத் ஆதி₃த்யா விஸ்வேதே₃வா வஸவஸ்ச ஸமாப₄ரந்) அந்தத் தேஜஸ்ஸையே பனிரண்டு ஆதித்தியர்கள், விச்வேதேவர்கள், அஷ்டவஸுக்கள் ஆகியோர் தரித்தனர். இவர்களிடம் காணப்படும் தீவிரமான தேஜஸ்ஸு பரமபுருஷனுடையதே என்று கருத்து. "தஸ்ய பா₄ஸா ஸர்வமித₃ம் விபா₄தி" [அந்தப் பரமபுருஷனின் ஒளியால் சூரியன் முதலான அனைவரும் ஒளிவிடுகின்றனர்] என்ற வேதவாக்யத்திற்போலே. ஆதித்யர்கள் முதலானாரிடத்தில் காணப்படும் கடுமையான தேஜஸ்ஸு இப்பரமபுருஷனுடையதே; அத்தகைய தேஜஸ்ஸுக்கு இலக்காகாமல் என்னை பூதேவி காப்பாற்றினாள் என்று அவளுடைய உபகாரப்பெருமை சொல்லுகிறான். அன்றிக்கே, "நீர் கோபித்த காலத்தில் உமக்குத் தகுந்த

ஸமாதானங்களைச் சொல்லி அக்கோபத்தைத் தீர்த்துவிட்டாள் பூதேவி. அப்படிப்பட்ட உம்முடைய ஸ்வரூபத்தை ஆதித்யன் முதலான மஹானுபாவர்கள் தியானம் செய்கிறார்கள். அவர்களுடன் நானும் த்யானம் செய்யக்கடவேன்" என்று கருத்துரைப்பாரும் உண்டு.

७. मेदिनीदेवी वसुन्धरा स्याद्वसुधा देवी वासवी।
ब्रह्मवर्चसः पितॄणां श्रोत्रं चक्षुर्मनः॥

7. மேதி₃நீ தே₃வீ வஸுந்த₄ரா ஸ்யாத்₃ வஸுத₄ா தே₃வீ வாஸவீ ।
ப்₃ரஹ்மவர்ச்சஸ:: பித்ரூணாம் ஶ்ரோத்ரம் சக்ஷுர்மந: ||

பதவுரை:— **வஸுந்த₄ரா** — *ரத்தினம் முதலிய தனங்களை தரிக்கிறவளாய்,* **வஸுத₄ா**— *அந்த தனங்களைப் போஷிக்கிறவளாய்,* **வாஸவீ** —*த₄ான்யரூபமான தனத்தையும் உடையவளாய்,* **தே₃வீ**-*பிரகாசித்துக்கொண்டிருக்கிறவளான,* **மேதி₃நீ தே₃வீ** —*பூமிதேவியானவள்,* **ஸ்யாத்**-*(என்னிடத்தில் அநுக்ரஹமுடையவளாக) ஆகட்டும்;* **பித்ரூணாம்**-*(என்னை)ரக்ஷித்தவர்களுக்கும் (எனக்கும்)* **ஶ்ரோத்ரம் சக்ஷு: மந:**-*கண், காது, மனம் முதலிய இந்திரியங்களையும்,* **ப்₃ரஹ்ம வர்ச்சஸ:**— *ப்ரஹ்ம தேஜஸ்ஸையும் (கொடுக்கட்டும்).*

இது முதல் பதின்மூன்றுவது மந்திரம் வரையில் அத₂ர்வண வேதத்தைச் சேர்ந்ததென்று சொல்லுகிறார்கள். இப்போது வழங்கிவரும் அதர்வணவேதத்திலும் காண்கிறதில்லை. ஆயினும், பூஸூக்தத்தில் இந்த மந்திரங்கள் எல்லா தேசத்திலும் எல்லாராலும் அனுஸந்திக்கப்படுகின்றன. இம்மந்திரங்களில் பெரும்பாலும் பூமிதேவியின் திருநாமமே படிக்கப்படுகின்றன; ஸ்ரீஸூக்தத்திற்போலே. இம்மந்திரங்களினால் புருஷகாரபூதையான பூமிமாதாவின் பெருமை பேசப்படுகிறது.

(மேதி₃நீதே₃வீ) "மது₄கைடப₄த₃ாநவேந்த்₃ரமேத₃: ப்லவ விஸ்ரா விஷமைவ மேதி₃நீயம்" [அநர்க்கராகவம் 1-14] [மது கைடபர்களாகிற அஸுரச்ரேஷ்டர்களின் 'மேத₃ஸ்' என்னும்மாம்ஸ வெள்ளத்தினால் துர்க்கந்தங்கொண்டவளாயும், (கந்த விஷயத்தில்)

விஷமையாகவுமிருக்கிருள் இந்த பூமி] என்று முராரிகவி சொன்ன படியே, துஷ்டர்களிடமிருந்து தன் மக்களைக் காப்பாற்றுவதற்காக கந்த₄வதியான தன் உடம்பை துர்க்₃ந்த₄ ப்ரசுரமாகச் செய்து கொள்ளவும் தயங்காதவள் என்று இவளுடைய புத்ர வாத்ஸல்யம் பிரகடீகரிக்கப்படுகிறது இத்திருநாமத்தால். (மேதி₃நீதே₃வீ) மாம்ஸ வெள்ளத்தால் பூசப்பட்டபோதிலும், தான அப்ராக்ருதையாகையால், அத்தோடு ஒட்டற்றுப் பிரகாசிப்பவள். தேவீ-பிரகாசிப்பவள்.

(வஸுந்த₄ரா) தங்கம், வெள்ளி, வைரம், வைடூர்யம், கோமே தகம், ரத்தினம், புஷ்பராகம் முதலிய தனங்களை தரிப்பவள். செல் வத்துக்கு அதிதேவதையாயிருப்பவள் ஸ்ரீதேவி. அச்செல்வத்துக்கு விளை நிலமாயிருப்பவள் பூதேவி. (வஸுத₄ா) செல்வங்களுக்கு விளை நிலமாயிருப்பதோடன்றியில் அதை மேனமேலும் பெருகச் செய்பவள். (வாஸவீ) த₄நரூபமான செல்வத்துக்கு மட்டுமன்றிக்கே, நெல், கோதுமை, சோளம், கேழ்வரகு முதலிய பலவிதமான த₄ாந்யரூபமான செல்வத்திற்கும் விளை நிலமாயிருப்பவள். (தே₃வீ) 'தி₃வு—க்ரீட₃ா' இச்செல்வங்களைப் பிறர்க்களித்து, அவர்கள் அதை ஸம்பாதிப்பதிலும், ரக்ஷிப்பதிலும் படும்பாட்டைக்கண்டு சிரித்து விளையாடுபவள். ஸர்வேஶ்வரனுடையவளான தன்னுடைய விபூ₄தி யில் ஒரு மூலையை ஆளும் அரசர்கள், அண்டாதிபதியாகவே தங்களை அபிமானித்து, சில நாட்கள் சென்றவாறே மண்ணோடு மண்ணுகி மறைந்து போவதைக்கண்டு சிரித்து விளையாடுபவள். (தே₃வீ) 'தி₃வுவிஜிகீ₃ஷா' பூமியை ஜயித்துவிட்டதாக அபிமானிக்கும் து₃ரீஶ்வரர்களைத்தானே வெற்றிகொண்டு அவர்களை ஆட்டிவைப் பவள். பூமியை ஜயித்து விட்டதாக நினைக்கிருர்கள் அவர்கள்; உண்மையில் மண்ணாசைக்கு அடிமைப்பட்ட அவர்களை பூமி தேவியே வெற்றிகொண்டு ஆட்டிவைக்கிருள். (தே₃வீ) 'தி₃வு-த்₃யுதி' 'தி₃வு-காந்தி' ஒளியாலும் வடிவழகாலும் விஞ்சியிருப்பவள். "வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள்" என்று ஆழ் வாரும், "ஏவம்பூ₄தபூ₄மி" [வடிவழகு முதலானவற்றில் பெரிய பிராட்டியைப் போலிருக்கும் பூமிப்பிராட்டி] என்று எம்பெரு மானரும் அருளினர். 'தி₃வு' என்னும் தாதுவுக்குள்ள மற்ற பொருள்களும் பெரியபிராட்டியார்க்குப்போலே இப்பிராட்டிக்கும் பொருந்தி நிற்கும்படியைக் கண்டு கொள்வது. (தே₃வீ) தேவனை பரமபுருஷனுக்குப்பத்தினி என்னும் பொருளும் பொருத்தமுடையது. (ஸ்யாத்) இப்படிப்பட்ட பூதேவி எங்களிடத்தில் அனுக்ரஹத்தை உடையவளாக ஆகட்டும்.

(ப்ரஹ்மவர்ச்சஸ: பித்ரூணாம் ஶ்ரோத்ரம் சக்ஷுர் மந: ஸ்யாத்) என்னுடைய தந்தையர்க்கும் எனக்கும் செவி, கண், மனம் முதலிய இந்திரியங்களும், ப்ரஹ்மதேஜஸ்ஸும் ( பூமியின் அருளாலே ) உண்டாகட்டும். (பித்ரூணாம்)

" ஜநிதா சோபநேதா ச யஶ்ச வித்₃யாம் ப்ரயச்ச₂தி ।
அந்நதா₃தா ப₄யத்ராதா பஞ்சைதே பிதர: ஸ்ம்ருதா: ॥ "

[ பிறப்பித்தவன், உபநயனம் செய்வித்தவன், கல்வியறிவூட்டினவன். உணவளித்தவன், பயத்திலிருந்து காத்தவன் ஆகிய ஐவரும் தந்தையராகின்றனர்.] என்று சொல்லப்பட்ட ஐவகைத் தந்தையர்க்கும் தனக்கும் இது உபலக்ஷணம். எங்களுக்கு நல்ல இந்திரியங்களையும் ப்ரஹ்மதேஜஸ்ஸையும் பூமிதேவியானவள் அளிப்பாளாக என்று கருத்து. பூமித்தாய் அளிக்கும் உணவாலேயே இந்திரியங்கள் போஷிக்கப்படுகையாலும், தேஜஸ் உண்டாகையாலும். பிராட்டியின் அருளாலேயே இவை ஸித்திக்குமென்பது சாஸ்திரஸித்தமாகையாலும் இவற்றை பூமிப்பிராட்டியிடம் பிரார்த்திக்கிறான்.

८. देवी हिरण्यगर्भिणी देवी प्रसूवरी ।
सदने सत्यायने सीद ॥

8. தே₃வீ ஹிரண்யக₃ர்ப்பி₄ணீ தே₃வீ ப்ரஸூவரீ ।
ஸத₃நே ஸத்யாயநே ஸீத₃ ॥

பதவுரை:— ஸத்யாயநே—*ப்ரஹ்மத்திற்கு இருப்பிடமாயுள்ளவளே!*, ஸத₃நே–*(எல்லாப்பிராணிகளுக்கும்)வாஸஸ்தானமாயிருக்கிறவளே!*, ஹிரண்யக₃ர்ப்பி₄ணீ—*பொன்னைத் தன் கர்ப்பத்தில் உடையவளாய்*, தே₃வீ – *விளையாடுகிறவளாய்*, ப்ரஸூ—*உயர்ந்த பொருள்களைப்பெற்றெடுப்பவளாய்*, வரீ— *'வரம்' என்கிற நிதியையுடையவளாய்*, தே₃வீ-*தேவனுக்குப் பத்தினியான தேவரீர்*, ஸீத₃–*(என்னை) அநுக்ரஹிப்பீராக.*

என்னிடத்தில் அருள்புரியவேணும் என்று பூமிப்பிராட்டியைப் பிரார்த்திக்கிறான்.

(தேவ்வி)தன் புத்திரர்களான சேதனர்களைக்கொண்டு விளையாடுபவள்; பரமபதத்தில் பரமபுருஷனோடு விளையாடுபவள் என்றுமாம். (ஹிரண்யகர்ப்பிணீ) பொன்னைத் தன் கர்ப்பத்தில் கொண்டவள். 'பொன்' என்பது உயர்ந்த பொருள்களுக்கெல்லாம் உபலக்ஷணம். (ப்ரஸூ:) உயர்ந்தபொருள்களை கர்ப்பத்தில் கொண்டிருப்பதோடன்றியில், உயர்ந்த பொருள்களைப்பெற்றெடுப்பவள். (வரீ) 'வரம்' என்னும் நிதியை உடையவள்; வரங்களையளிப்பவள் என்றுமாம். (தேவ்வீ) இப்பெருமைகளுக்கெல்லாம் அடியாக தேவனுக்குப் பத்தினியாயிருப்பவள்; இப்பெருமைகளாலே பிரகாசிப்பவள் என்றுமாம். (ஸதநே) எல்லாருக்கும் தங்குமிடமாயிருப்பவளே! (ஸத்யாயநே) "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" எனப்படும் அநந்தனுக்கு இருப்பிடமாகவும், அவனை இருப்பிடமாகக் கொண்டவளாகவுமுள்ளவளே!

"கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்ப்புக்கு
இடந்திடும் தன்னுள் கரக்கும் உமிழும்
தடம்பெரும் தோளாரத்தழுவும் பாரென்னும்
மடந்தையை மால் செய்கின்ற மாலார்காண்பாரே"

என்று இப்பிராட்டி பரமபுருஷனுக்கு இருப்பிடமாகவும், அவனை இருப்பிடமாகக் கொண்டவளாகவுமிருக்கும்படிகளை நம்மாழ்வார் விவரித்தார். (ஸீத) இப்படிப்பட்ட பூமிப்பிராட்டியே! எனக்கு அருள்புரிவாயாக.

९. समुद्रवती सावित्री अनो देवी मह्यङ्गी ।
महो धरणी महो व्यतिष्ठाः ॥
१०. शृङ्गे शृङ्गे यज्ञे यज्ञे विभीषणी ।
इन्द्रपत्नी व्यापिनी सुरसरिरिह ॥

9. ஸமுத்ரவதீ ஸாவித்ரீ அநோதேவீ மஹ்யங்கீ।
மஹோ தரணீ மஹோ வ்யதிஷ்டா: ॥
10. ஶ்ருங்கே ஶ்ருங்கே யஜ்ஞே யஜ்ஞே விபீஷணீ।
இந்த்ரபத்நீ வ்யாபிநீ ஸூரஸரிரிஹ ॥

பதவுரை:— **ஸமுத்₃ரவதீ**—கடலைச் (சேலையாக) உடையவளாகவும், **ஸாவித்ரீ**—சூரியனைத் (திலகமாக) உடையவளாகவும், **அந:தே₃வீ**—அகாரவாச்யனான பரமபுருஷனுக்கு தேவியாகவும், **அங்கீ₃**-(காரார்வரைக் கொங்கை, செங்கலுழிப் பேராற்றுப் பேராரமார்வு, பெருமாமழைக் கூந்தல் முதலிய) அழகிய அங்கங்களை உடையவளாகவும், **மஹீ**—பெருமையை உடையவளாகவும், **மஹ:**— கொண்டாடப்படுபவளாயும், **த₄ரணீ**—எல்லா ஜீவராசிகளையும் தரித்துக்கொண்டிருப்பவளாயும், **மஹ:**— தேஜோரூபிணியாயிருப்பவளாயும், **விபீ₄ஷணீ**— (அநாஸ்ரிதர்க்கு) பயத்தையளிப்பவளாயும், **இந்த்₃ரபத்நீ**—மேலான செல்வத்தையுடைய ஸர்வேஸ்வரனுடைய பத்தினியாகவும், **ஸுரஸரி:**—தேவர்களால் ஆச்ரயிக்கப்பட்டிருப்பவளாகவும், **இஹ வ்யாபிநீ**—இவ்வுலகில் பரந்திருப்பவளாகவுமுள்ள தேவரீர், **ஸ்ருங்கே₃ ஸ்ருங்கே₃**—(உயர்ந்த ஸ்தானங்களான) மலைச்சிகரங்களிலும், **யஜ்ஞே யஜ்ஞே**— (சிறந்த காரியங்களான) யஜ்ஞங்களிலும், **வ்யதிஷ்ட₂ா:**—விளங்குகின்றீர்.

இவ்விரண்டு மந்திரங்களாலும் பிராட்டியைத் துதிக்கிறான். இரண்டு மந்திரங்களும் ஒரே அந்வயமுள்ளவை. முதல்மந்திரத்தை,

**''காரார் வரைக்கொங்கை கண்ணார் கடலுடுக்கை**
**சீரார் சுடர் சுட்டி செங்கலுழிப் பேராற்றுப்**
**பேரார மார்வில் பெருமாமழைக் கூந்தல்**
**நீராரவேலி நிலமங்கை''**

என்று திருமங்கைமன்னன் வியாக்கியானம் செய்தருளினார். உத்தம ஸ்திரீகளுக்குள்ள ஸகல லக்ஷணங்களும் பொருந்தியவள் பிராட்டி என்று நிரூபித்துத் துதிப்பவை இவ்விரண்டு மந்திரங்களும்.

(ஸமுத்₃ரவதீ)கடலைச்சேலையாக உடையவள். 'ஸமுத்₃ராம்ப₃ரா' என்றன்றோ இவளுக்குப்பெயர். 'கண்ணார் கடலுடுக்கை'' என்றார் மங்கைமன்னன். திருமேனியின் மென்மைக்குத் தக்கவாறு குளிர்ந்தும், மிருதுவாகவும், காண்பார் கண்களையெல்லாம் நிறையச் செய்யும் அழகையுடையதாகவுமிருப்பதன்றோ கடலாகிற மேக

வர்ணப்புடவை. (ஸாவித்ரீ) 'ஸவிதா' என்று ஸூர்யனுடையாலே, சூரியனைத் திலகமாக உடையவள் என்கை. "சீரார் சுடர் சுட்டி" என்றார் பரகாலனும். அழகிய சுடரையுடைய ஆதித்யனைத் திலகமாகக் கொண்டவள். "சக்ஷோஸ் ஸூர்யோ அஜாயத" என்கிற படியே, ஸர்வேந்த்ரியப்ரதாநமாகையாலே இந்த்ரிய திலகமான அவன் கண்ணிலிருந்து தோன்றியது இவளுக்குத் திலகமாயமைந்தபடி. "ஸவிதா" என்று ஸகலலோகஸ்ரஷ்டாவான பரமபுருஷனைச் சொல்லுவதாகக்கொண்டு, அவனுடைய பத்னியாகையாலே ஸாவித்ரியாகிறாள் இவள் என்று கொள்வாரும் உண்டு.

வண்ணச்சேலையும், திலகமும் இவளுடைய ஸௌபாக்யத்தைக் குறிக்கின்றனவன்றே. இப்பிராட்டிக்கு இந்த ஸௌபாக்யத்தை அளிக்கும நாதன யாரென்னில்,—(அநோ தேவீ) "அவரக்ஷணே" என்று தாதுவாகையாலே ஸர்வரக்ஷகனை அந்த ஸாவேஶ்வரனே இவளுக்கு நாதன் என்கை. இத்தால், பூமிநாதன் ஸர்வரக்ஷகனாகிற நாராயணனே என்று வேதம பறைசாற்றுகிறபடி. இவளுடைய தனிப்பெயர் யாதெனில்,—(மஹீ) மஹத்துவத்தை—(பெருமையை)—உடையவளாகையாலே 'மஹீ' எனபது இவளுடைய தனிப்பெயர் என்கை. "க்ஷமயா ப்ருதிவீஸம:" [பொறையில் பூமியையொத்தவன] என்று சொல்லும் குணப்பெருமையும், உருவப்பெருமையும், விபூதிப் பெருமையும உடையவளாகையாலே 'பெரியவள்' எனனும பொருளுள்ள நாமத்தையுடையவள். நம் கண்ணெதிரே ப்ரஹ்மாண்டமாக உருவெடுத்திருப்பவளாகையாலே 'மஹீ' எனனும பெயரைப் பெற்றிருப்பவள். (மஹீ) ஆவரணஜலமே எல்லையாம்படி பெருத்திருப்பவள். "நீராரவேலி நிலமங்கை" என்றார் மங்கையர்கோன.

இவளுடைய சில பெருமைகள் சொல்லுகிறது மேலே,—(அங்கீ) புகழப்படும் அங்கங்களை உடையவள். "ராகவோர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா" [ராகவன் வைதேகிக்குத் தகுந்தவர்; கறுத்த கண்களையுடைய பிராட்டியும அவருக்குத் தகுந்தவள்.] என்னுமாப்போலே ஸர்வாங்கஸுந்தரனாய், "ஸ்வக்ஷஸ் ஸ்வங்க:" [விஷ்-ஸஹஸ்ர] [அழகிய கண்களையுடையவன; அழகிய அங்கங்களையுடையவன்] எனப்படும் அவனுக்குத் தகுந்தவளாய், ஸர்வாங்கஸுந்தரியாயிருக்கிறபடி. இப்பதத்தையே "காரார் வரைக்கொங்கை...செங்கலுழிப்பேராற்றுப் பேராரமார்வில் பெருமா மழைக்கூந்தல் நீராரவேலி நிலமங்கை" என்று மங்கைமன்னன

மடலிலே விவரித்தருளினர். (அங்கீ₃) காரார் வரைக் கொங்கை யாகிற அங்கமுடையவள். உயர்த்தி, காடி₂ந்யம், நுனியில் கருத் திருக்கை, காந்தன் தங்குமிடமாயிருக்கை ஆகிய லக்ஷணங்களைப் பூர்ணமாகவுடையவையாகையாலே கொண்டாடத்தக்க கொங்கை களை உடையவள் என்கை. "பூ₄மநிந்த₃ாப்ரஶம்ஸாஸு" என்கிற படியே ப்ரஶம்ஸார்த்தத்திலே ப்ரத்யயம். (அங்கீ₃) செங்கலுழிப் பேராற்றுப் பேராரமார்வாகிற அங்கமுடையவள். மலைகளிலிருந்து புறப்பட்டு மணியையும், பொன்னையும், சந்தநாதிகளையும் அடித்துக் கொண்டு கலங்கியதாய், பள்ளத்தை நோக்கிப்பாயும் ஆறுகளாகிற சந்தனம்பூசிய பொன்மணி மாலைமார்பை உடையவள். (அங்கீ₃) "ஹிரண்யகேஶ:" என்கிறபடியே வேதத்தாலும் புகழப்படும் மயிர் முடியையுடைய கேசவனுகிற அவனும் ஈடுபடும்படியான பெருமா மழைக் கூந்தலாகிற அவயவத்தை உடையவள். வானவில்லும், மினனலுமாகிற கதம்பமாலையைச் சூடிய பெருத்துக் கறுத்த மேகமே இவளுக்குக் கூந்தலாயிருககிறபடி. இப்படியிலே மற்றுள்ள அங்கங் களையும் ஊஹித்துக் கொள்வது. (மஹ:) மஹனீயையாயிருப்பவள். அனைவராலும் அனனையென்று கொண்டாடப்படுபவளாயிருப்பவள். கொண்டாடுகைக்குக் காரணமொன்று சொல்லுகிறது மேலே,— (த₄ரணீ) அனைவரையும் தாங்குமவளாயிருப்பவள். (மஹ:) நாம் கண்ணுல் காணும் ப்ராக்ருதரூபம் மட்டுமன்றியே, தேஜோரூபமான அப்ராக்ருதமான திவ்யமங்களவிக்ரஹத்தையும் உடையவள்.

(விபீ₄ஷணீ) தன்னை அடையாதார்க்கு மிகவும் பயங்கரியா யிருப்பவள். புயற்காற்று, பேய்மழை முதலான உற்பாதங்களைத் தோற்றுவித்து அவர்களை தண்டிப்பவள். கீழும் மேலும் சொல்லுகிற பெருமைகளுக்குக் காரணமென்னென்னில்: (இந்த்₃ரபத்நீ) "இதி₃ பரமைஶ்வர்யே" என்று தாதுவாகையாலே, பெருஞ்செல்வமுடைய வனுகையாலே இந்திரனென்னத்தகுந்த பரமபுருஷனின் பத்தினி யாயிருப்பவள. (வ்யாபிநீ) ஸர்வ வ்யாபகனை அவனுக்கும் ஒருபடி ஒப்புச்சொல்லலாம்படி ரூபகுணவிபூ₄திகளாலே பரந்திருப் பவள். ஜீவகோடியைச் சேர்ந்த இவளுடைய ஸ்வரூபம் அணுவே என்பது ஸர்வஸம்மதமாகையாலே இங்கு ஸ்வரூப வ்யாப்தியைச் சொல்லவில்லை.

"தத₂ா பூ₄மிஶ்ச நீளா ச ஶேஷபூ₄தே மதே மம।
ஸ்வரூபதஸ்து ந தயோர் கு₃ணதோ வ்யாப்திரிஷ்யதே ॥"

[ஸ்ரீதேவியைப்போலவே பூமிநீளாதேவிகளும் (பகவானுக்கு) சேஷபூதர்கள் என்பது என்முடிவு. (ஆனால்) அவர்களுக்கு ஸ்வரூப வ்யாப்தியில்லை. குணவ்யாப்தியே உள்ளது] என்ற ப்ரமாண வசநம் காண்க. இவளுடைய ரூபகுணவிபூதிகள் பரந்து கிடப்பது யாரும் காணாத நித்யவிபூதியிலோ? என்னில்: (இஹவ்யாபிநீ) இந்த லீலாவிபூதியில் தன்னுடைய ரூபகுணவிபூதிகள் பரந்திருக்கப்பெற்றவள் என்கை. (ஸுரஸரி:) தேவர்களாலே அடையப் படுமவள். தேவர்கள் அஸுர நிரஸநார்த்தமாக பூமிதேவியை முன்னிட்டுக்கொண்டு எம்பெருமானைப் பற்றுவது புராணங்களில் பிரஸித்தமன்றோ.

இப்படிப்பட்ட தேவரீர், (ஶ்ருங்கே₃ ஶ்ருங்கே₃ யஜ்ஞே யஜ்ஞே வ்யதிஷ்ட₂ா:) மலைச்சிகரங்கள்தோறும் யஜ்ஞங்கள் தோறும் விசேஷமாக விளங்குகிறீர். (ஶ்ருங்கே₃ ஶ்ருங்கே₃ வ்யதிஷ்ட₂ா:) உயர்ந்த ஸ்தானங்களாகிற மலைச்சிகரங்களிலே விசேஷமாக விளங்குகின்றீர். மலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்கமான அவன வாழுமிடமாகையாலே அவ்விடங்களிலே விசேஷமாக விளங்குகின்றீர். (யஜ்ஞே யஜ்ஞே வ்யதிஷ்ட₂ா:) 'இந்த்₃ரபத்நீ' எனப் பட்டவளாகையாலே "பத்யுர் நோ யஜ்ஞஸம்யோகே₃" என்கிற கணக்கிலே, ஸ்ருஷ்டிஸம்ஹாராதி₃ஸகலயஜ்ஞங்களிலும அவனோடு கூடியிருந்து விளங்குகின்றீர். யஜ்ஞபுருஷனை அவனோடுகூடி ஸகல யஜ்ஞங்களிலும் ஆராதிக்கப்படுபவளாய் விளங்குகின்றீர் என்றுமாம். (ஶ்ருங்கே₃ ஶ்ருங்கே₃ யஜ்ஞே யஜ்ஞே வ்யதிஷ்ட₂ா:) யஜ்ஞவராஹ பத்தினியன்றோ இவள். அவ்வராஹம் வாழும் மலைச்சிகரங்களிலும் யஜ்ஞபூமிகளிலும் இவளும் விளங்குகிறபடி. (ஶ்ருங்கே₃ ஶ்ருங்கே₃ வ்யதிஷ்ட₂ா:) உன் காந்தன் தங்கிமகிழும் கொங்கைகளான திருவேங்கடமலைச்சிகரத்திலும், திருமாலிருஞ்சோலைமலைச் சிகரத்திலும் நீர் ஒளிபெற்று விளங்குகின்றீர். (யஜ்ஞே யஜ்ஞே வ்யதிஷ்ட₂ா:) ஜனகராஜனுடைய யஜ்ஞபூமியில் சீதையென்னும் திருவுக்கு விளைநிலமாயிருந்துகொண்டும், ஸ்ரீவிஷ்ணு சித்தரின் திருநந்தவனகைங்கர்ய யஜ்ஞபூமியிலே கோதையாய் அவதரித்தும் விளங்கினீர் தேவரீர். இப்படிப்பட்ட தேவரீர் எங்களைக் காத்தருளவேணும் என்று கருத்து.

௧௧. वायुमती जलशयिनी श्रियन्धाराजा सत्यन्धोपरि मेदिनी। सोपरि धत्तङ्गाय॥

11. வாயுமதீ ஜலஶயிநீ ஶ்ரியந்த₄ராஜா ஸத்யங்தே₄பரி மேதி₃நீ|
ஸோபரி த₄த்தங்க₃ாய ||

பதவுரை:-வாயுமதீ-*வாயுவை (மூச்சுக்காற்ருக) உடைய வளாய்*, ஜலஶயிநீ—*ஜலத்தைப் படுக்கையாக உடைய வளாய்*, ஶ்ரியந்த₄ரா—*செல்வத்தை தரித்து நிற்பவளாய்*, அஜா—*பிறப்பற்றவளாய்*, அந்தே₄பரி ஸதீ-*அறிவிலிகளான பிள்ளைகளுக்காகவே உள்ளவளாய்*, ஸா—*அப்படிப்பட்ட பெருமையையுடைய*. மேதி₃நீ-*பூமிதேவியானவள்*, அங்க₃ாய-*பரமபுருஷனை அடைவிப்பதன்பொருட்டு*, உபரி—*தன்மேல்*, த₄த்த—*எல்லாவுயிர்களையும் தரிக்கிருள்*.

*பிராட்டியை, மேலும் துதியாநின்றுகொண்டு, அவளுடைய மோக்ஷப்ராபயித்ருத்வத்தைப் பேசுகிருன் இம்மந்திரத்தில்.*

*(வாயுமதீ) வாயுவாகிற மூச்சுக்காற்றை உடையவள். சென்ற இருமந்திரங்களில் ஓர் உத்தமநாயகியாக வர்ணிக்கப்பட்டாளன்ருே பிராட்டி. அதுவே இம்மந்திரத்திலும் தொடர்ந்து நடக்கின்றது. க₃ந்த₄வஹமான காற்றை மூச்சுக்காற்ருக உடையவள். (ஜலஶயிநீ) ஆவரணஜலத்தைப் படுக்கையாக உடையவள்; ''நீராரவேலி நிலமங்கை'' என்ருரன்ருே கலிகன்றி. திருமேனியின் மென்மைக் குத்தகுந்த குளிர்த்தி முதலானவற்றை உடைய படுக்கையையுடைய வள். நாயகனுடைய படுக்கையே நாயகிக்கும் படுக்கையாயிருப்ப தன்ருே பொருத்தமுடையது. ஜலசாயியான அவனுடைய படுக் கையே இவளுக்கும் படுக்கையாயிருக்கிறபடி.*

''ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: |
தா யத₃ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: ||'' *[மநு]*

*[ஜலம் நாரமெனப்படுகிறது. அழியாதவனுகையாலே 'நரன்' எனப் படும் பரமனிடமிருந்து பிறந்ததன்ருே ஜலம்: (ஆகையால் அது நாரமெனப்படுகிறது) நாரமாகிற அந்த ஜலம் இவனுக்கு ஆதியில் இருப்பிடமாயிருக்கையாலே, இவன் நாராயணன் எனப்படுகிருன்.]*

'' ஸ்ருஷ்ட்வா நாரம் தோயமந்த: ஸ்தி₂தோஹம்
தேந ஸ்யாந்மே நாம நாராயணேதி'' *[வராஹபுராணம்]*

[நாரமாகிற ஜலத்தை ஸ்ருஷ்டித்து, நான் அதனுள் இருந்தேனுகையாலே எனக்கு நாராயணனென்று பெயர்.] ''நடுக்கடலுள் துயின்ற நாராயணனே'' [திருவாய்மொழி] என்கிறபடியே ஆவரணஜலம் அவனுக்குப் படுக்கையன்றோ. அதுவே உத்தம நாயகியான இவளுக்கும் படுக்கையாகிறது. (ஶ்ரீயம்த₄ரா) ஸம்பத்ரூபமான ஸ்ரீதேவியைத் தன் கர்ப்பத்திலே தரித்துநிற்பவள். திருவுக்கும் விளைநிலமாயிருப்பவள் என்கை; அன்றிக்கே, ஸ்ரீராமாவதாரத்தில் திருவான ஸிதாதேவியைத் தன் கர்ப்பத்திலே தரித்து நின்றவள் எனறுமாம். 'அத்₃ப்₄ய: ப்ருதி₂வீ'' [ஜலத்திலிருந்து பூமி உண்டாகிறது] என்றாற்போன்ற வேதவாக்கியங்கள் பூமிக்குப் பிறப்புண்டென்று சொல்லுகின்றனவே. இவளும் நம்மைப்போல் பிறப்பவள் தானோ? எனில்,-(அஜா) பிறப்பற்றவள். அவ்வேத வாக்கியங்கள் இவளுடைய சரீரத்துக்குப் பிறப்பைச் சொல்லிற்றேயொழிய இவளுக்குப் பிறப்பில்லை என்கை.

(அந்தே₄பரி ஸதீ) அறிவில்லாத தன் பிள்ளைகளுக்காகவே ஸத்தை பெற்றிருப்பவள். அறிவாகிற ஞானக்கண்ணே உண்மையில் 'கண்' எனத்தகுந்ததாகையால், அதில்லாதவர்கள் 'அந்த₄ர்' [கண்ணில்லாதவர்] எனப்படுகின்றனர். தாய்க்கு எப்போதும் அறிவிலும், அங்கத்திலும் குறைவுள்ள பிள்ளைகள் மேலேயே மற்ற பிள்ளைகளிடத்திற்காட்டிலும வாத்ஸல்யம் மிக்கிருக்கும். அப்படியே இப்பூமித்தாயும அறிவுகுறைந்த தன் பிள்ளைகளுக்காகவே உயிர் தரித்துநிற்கிருள். இவளுக்குத் தன் அறிவற்ற பிள்ளைகளிடம் அன்பு மிக்கிருக்கும்படியை எங்கே கண்டோம? எனில்: (ஸாமேதி₃நீ) 'கண்ணிழந்தேன்' எனக்கூறிய பிரமனுக்காகப்பரமபுருஷன் மது₄கைடப₄ர்களைக் கொன்றபோது தன் உடலை அசுத்தப்படுத்திக் கொண்டும் பிரமனுக்குக் கண்கொடுப்பித்த செயலிலே கண்டோம் என்கை. மேதி₃னீ—மதுகைடபர்களின் மேத₃ஸ் என்னும் மாம்ஸ வெள்ளத்தாலே பூசப்பெற்றவள் என்று பொருள். ப்ரஹ்மாதிகள் விஷயத்திலேயோ இவளுடைய வாத்ஸல்யம் வெள்ளமிடுவது? என்னில்: (அங்கு₃ஷ்ட உபரி த₄த்த) அகாரவாச்யனை ஸர்வேச்வரனை அடைவிப்பதற்காக எல்லாப்பிராணிகளையும், (அவர்கள் செய்யும் அபராதங்களையெல்லாம் கணிசியாமல்) தன் மேலேயே தாங்குகிருள் இத்தாய் என்கை. ஸர்வப்ராணிகள் விஷயத்திலும் பெருக்கெடுத்தோடுவது இவளுடைய வாத்ஸல்யம் என்றபடி.

१२. विष्णुपत्नीं महीं देवीं माधवीं माधवप्रियाम्।
लक्ष्मीप्रियसखीं देवीं नमाम्यच्युतवल्लभाम्॥

12. விஷ்ணுபத்நீம் மஹீம் தே₃வீம் மாத₄வீம் மாத₄வப்ரியாம் |
லக்ஷ்மீப்ரியஸகீ₂ம் தே₃வீம் நமாம்யச்யுதவல்லப₄ாம் ||

பதவுரை:—மாத₄வீம்-*மாதவனுக்கு மனைவியாகையாலே 'மாதவி' என்று அழைக்கப்படுபவளாயும்*, மாத₄வ ப்ரியாம்-*லக்ஷ்மீநாதனுக்கு இனியவளாயிருப்பவளாயும்*, லக்ஷ்மீ ப்ரிய ஸகீ₂ம்—*ஸ்ரீதேவிக்கு இனிய தோழியாயிருப்பவளாயும்*, தே₃வீம்—*ரூபகுணங்களாலே பிரகாசிப்பவளாயும்*, அச்யுத வல்லப₄ாம்—*அச்சுதனைப் பிரியநாயகனுகக் கொண்டவளாக வும்*, விஷ்ணுபத்நீம்—*விஷ்ணுவுக்குப் பத்தினியாகவுமுள்ள*, மஹீம்தே₃வீம்-*பூமிதேவியை*. நமாமி—வணங்குகிறேன்.

*ஸ்ரீமந்நாராயணனுக்கும் பூமிப்பிராட்டிக்குமுள்ள பலவிதமான ஸம்பந்தங்களைச் சொல்லிக்கொண்டு அவன் திருவடிகளிலே விழுகின்றுன் இம்மந்திரத்தில். அர்த்த₂ஸ்வாரஸ்யத்தாலே "விஷ்ணுபத்நீம் மஹீம் தே₃வீம்" என்பதை வாக்கியத்தின் கடைசியில் "நமாமி" என்பதோடு அந்வயித்துக் கொள்ளவேண்டும்.*

(மாத₄வீம்) மாத₄வனுக்கு மனைவியாகையாலே 'மாத₄வீ' என்று அழைக்கப்படுபவளை, மாதவன்—லக்ஷ்மீநாதன். லக்ஷ்மீநாதனுக்கு மனைவி என்கையாலே ஸர்வேஶ்வரனுக்கு ஸ்ரீதேவியே பட்டமஹிஷியென்பதும் இவள் த்₃விதீயமஹிஷியே என்பதும் தோற்றுகிறது லோகத்தில் மனைவியாயிருந்தபோதிலும் எல்லா மனைவியரும் புருஷனுக்கு இனியராயிருப்பதில்லையே. இங்கும் அப்படியோ? எனில்,—(மாத₄வப்ரியாம்) மாதவனுக்கு இனியையாயிருப்பவளை. லக்ஷ்மீநாதனுக்கு இனியளாயிருப்பவள் என்கையாலே, எம்பெருமான் பெரியபிராட்டியாரோடு பரிமாறும்போது அப்பிராட்டியின் ஸ்தநப₃ாஹூ த்₃ருஷ்டிகள் போலேயும், மாலை சந்தனம் முதலியவை போலேயுமிருந்து இருவருக்கும் இனிமையை விளைப்பவள் இப்பிராட்டி என்று உணர்த்தப்படுகிறது. இவ்விஷயத்தில் ஸாபத்ந்யம் (சக்களத்தி போராட்டம்) இல்லை என்றபடி.

"திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால்
திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்—திருமகள்மேல்
பாலோதம் சிந்தப் படநாகணைக் கிடந்த
மாலோத வண்ணர் மனம்" [முதல் திருவ-42]

என்று பொய்கையாழ்வார் கேட்ட கேள்விக்கு பதிலே,

"பே$_4$ாக்$_3$யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்க$_3$ராகை$_3$ஸ் ஸமம்
நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதெ$_4$ள நீதா: பரீவாஹதாம் |
தே$_3$வி த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே$_3$வ்யஸ் ஸஹஸ்ரம் தத$_2$ா
யாபி$_4$ஸ் த்வம் ஸ்தநபா$_3$ஹுத்$_3$ருஷ்டிபி$_4$ரிவ ஸவாபி$_4$: ப்ரியம்
ஶ்லாக$_4$ஸே ||' [ஸ்ரீகுண-26]

[தேவியே! உமக்குக் கீழ்ப்பட்டவர்களாய் (உம் நாதனுக்கு) தேவிகளாயிருக்கும் பூதேவி, நீளாதேவி முதலான ஆயிரக்கணக்கானவர்கள், உங்களிருவர்க்கும் புஷ்பம், அங்கராகம் ஆகியவைபோல் விட்டுப்பிரியாத உபகரணமாயும போக்யமாயுமிருப்பவர்களாய், உங்களுடைய ப்ரணயரஸம் கரைபெருகும்போது அதை வெளிவிடும் மடைபோலிருக்கிறூர்கள். நீரும் உம்முடைய கொங்கை, திருக்கைகள், திருக்கண்கள் ஆகியவற்ருல் உம் நாதனை உகப்பிப்பது போல் அவர்களைக் கொண்டும் உகப்பிக்கிறீர்.] என்று பட்டர் அருளிச்செய்தாரன்றே. இப்படி மாதவனுக்கு இனியையாயிருப்பதற்குக் காரணமென்னெனில்: (லக்ஷ்மீப்ரியஸகீ$_3$ம்) ஸ்ரீதேவிக்கு இனிய தோழியாயிருப்பவளை. பெரியபிராட்டியாருடைய பிரீதிக்குப் பிரதமபாத்திரமாயிருப்பவள் என்றபடி. அவளுக்குப்பிரியையாகையாலே அவளுடைய பிரியனுன அவனுக்கும் பிரியையாகவே இருந்தாகவேண்டுமன்றே. தனக்குப்பிரியமான பொருள்களிற் காட்டிலும், தன் நாயகிக்குப்பிரியமான பொருள்களிடத்தில் பிரீதி விஞ்சிநிற்பதன்றே உத்தமநாயகனின் லக்ஷணம்.

(மாத$_4$வப்ரியாம் லக்ஷ்மீப்ரியஸகீ$_3$ம்) இந்தபூமிப்பிராட்டியானவள் திருவின் செல்வனுக்கும், திருவுக்கும் இனியவளாகில், ஸ்ரீபூமிகளுக்கிடையே ஸாபத்நயம்--(சக்களத்தி போராட்டம்)—கிடையாதாகில்,

"அழைக்குங் கருங்கடல் வெணடிரைக்கே கொண்டுபோயலாவாய்
மழைக்கண் மடந்தை அரவணையேற மண்மாதர்விண்வாய்

அழைத்துப் புலம்பி முலைமலைமேல் நின்றுமாறுகளாய்
மழைக்கண்ணநீர் திருமால் கொடியானென்று வார்கின்றதே''

என்னும் திருவிருத்தப்பாசுரத்தில் "பெரியபிராட்டியார் பரம புருஷனைப் பாற்கடலில் பாம்பணைக்கு அழைத்துச்சென்று அவனோடு கூடியிருப்பதைக்கண்டு ஆகாயமாகிற வாயாலே அழைத்துப்புலம்பி 'திருமால் கொடியவன்' என்று சொல்லி முலைகளாகிற மலைகளில் நின்றும் ஆறுகளாகிற கண்ணீரைப்பொழிகின்றாள் பூமிப்பிராட்டி'' என்று நம்மாழ்வார் அருளிச்செய்ததற்குக் காரணமென்ன? எனில்:

இதற்கு ஆளவந்தார்க்கு முன்புள்ள ஆசாரியர்கள், "பெரிய பிராட்டியும் பரமபுருஷனும் சேர்ந்திருக்குப்போது, மாலை சந்தனம் முதலியவைபோலே நானும் உபகரணகோடியிலே வர வேண்டியிருக்க, என்னை அழைத்துச் செல்லாமல் போவதே என்று வருந்தி அழுகிறாள்'' என்று பரிஹரித்தார்கள். இந்த நிர்வாஹத் திலும் தான் கூடியில்லையே எனனும் மனவருத்தம் தோற்றுகிற தாகையாலே, ஆளவந்தார் வேறுவிதமாக நிர்வஹித்தார்,—"வடி வினையில்லா மலர்மகளை இந்நீர் நடுக்க நடுங்கும்படி கடலிலே கொண்டுபோவதோ, படுக்கையாகிற நான இங்கு கிடக்கும்போது?' என்று அழுகிறாள்'' என்று. இவ்விரண்டு நிர்வாஹத்திலும், பூமிப் பிராட்டியை விட்டுப்பிரிந்து பெருமாளும் பிராட்டியும் சென்றார்கள் என்று சொல்லியிருப்பது அவர்களுடைய குணத்துக்குச் சேரா தாகையாலே பட்டர் இப்பாசுரத்தைப் பின்வருமாறு நிர்வஹித் தருளினார். அதாவது:— "இப்பாசுரம் காலமயக்கு என்னும் துறையைச் சேர்ந்தது. நாயகனாகிற எம்பெருமான் மழைகாலத்தில் வருகிறேன் என்று நாள் குறித்துச் சென்றவன் அக்காலம் தொடங்கி யும் வரவில்லை. மழை தாரைதாரையாகப் பொழிவதைக்கண்ட நாயகியானவள், 'என் அன்பன் இன்னமும் வரவில்லையே' என்று வருந்துகிறாள். அவளைத் தேற்றுவதற்காகத் தோழி, 'மழைகாலம் வரவில்லைகாண்! நீ காண்பது மழையல்ல காண்! பெருமாளும் பிராட்டியும் தன்னை விட்டுச்செல்கின்றார்களே என்று பூமிப்பிராட்டி விடும் கண்ணீர் காண் இப்படி ஆறுகளாய்ப் பெருக்கெடுத்து வருகிறது' என்று காலத்தை மயக்குகிறாள். மயக்கும் பாசுரமாகை யாலே இதில் சொல்லியிருக்கும் அர்த்தங்கள் உண்மையாயிருக்க வேண்டுமென்னும் நிர்ப்பந்தமில்லை ; 'பெரியபிராட்டியார்க்கும், பூமிப்பிராட்டிக்கும் ஸாபத்ந்யமில்லாதிருக்க, உள்ளதுபோல் சொன்னால், இது கூடுமோ?' என்று நாயகியானவள் ஆராய்ந்து

நிசசயிபபதறகுள நாயகன வநது விடுவான எனனும நமபிககை யாலே தோழி இபபாசுரம அருளிசசெயகிறுளாகையாலே குறை யிலலை' எனறு நிரவஹிததருளினா பட்டா ஆகையால ஸ்ரீபூமி களுககுள ஸாபதநயலேசமுமிலலை

பெரியபிராட்டியாருக்கு இனியவள எனனும ஆகாரததால மட்டுமோ பெருமானுககு இனியவளாயிருபபது? எனனில (தே,வீம) ஆதம குணஙகளாலும, தேஹகுணஙகளாலும பிரகாசிபபவளாகை யாலும அவனுககு இனியவள எனகை

''ப்ரியா து ஸீதா ராமஸய த₃ாரா பிதருகருதா இதி।
கு₃ணாத் ரூபகு₃ணைசசாபி ப்ரீதிா பூ₄யோப₄யவாதத₄த ॥
[ரா-பா 77-27]

[சீதாபிராட்டியானவள தநதையால மணம செயவிககபபட்டவள எனனும காரணததால ராமபிரானுககு இனியவளாயிருநதாள; ஆதமகுணஙகளாலும, ரூபகுணஙகளாலும பிரீதி மேலும வளாநதது] எனறுறபோலே

இவள அவனுககு இனியாளாயிருககுமளவேயோ? அவன இவளுககு இனியனலலனோ? எனனில (அசயுதவலலப₄ாம) அசயுதனை அனபனாக உடையவளை. "நிலமாமகட்கு இனியான" [பெரியதிருமொழி 9-10-7] எனறா திருமஙகைமனனன. 'மாத₄வ ப்ரியாம' எனறு அவன மனம இவளிடம ஈடுபட்டிருககுமபடியை யும, 'அசயுதவலலப₄ாம' எனறு இவள மனம அவனிடம ஈடுபட்டி ருககுமபடியையும சொலலுகிறது 'அஸயா தே₃வயா மநஸ தஸமிந தஸ்ய சாஸயாம பரதிஷ்டி₂தம' [ரா-ஸு 15] [இநத தேவியின மனம அவரிடமும, அவருடைய மனம இவளிடமும ஈடுபட்டிருக கிறது] எனறும, ''காநதஸதே புருஷோததம,' [சது 1] 'அரவிநத₃ லோசநமந காநதா' [சது 3] எனறும அருளிசசெயதாறபோலே.

இபபடி ஒருவாககொருவா வலலபராயிருககுமளவேயோ? எனில (விஷ்ணுபதநீம) பதிபதநீப₄ாவமும உணடெனகிறது (விஷ்ணுபதநீம) விஷ்ணுவுககுப பததினியாயிருபபவளை ''பதயுா நோ யஜ்ஞஸமயோகே₃'' எனறு வையாகரண ஸூதரமாகையாலே, ஜகதஸருஷ்டிஸதிதி ஸமஹாரஙகள, மோக்ஷபரதானம முதலிய யஜ்ஞஙகளிலே அவனோடு கூடியிருபபவள எனறு கருதது. ஸருஷ்டி முதலானவறறிலே, தனனுடைய பரகாரமான பூமியை விஷயமாககு

வதன் மூலமும், மோக்ஷப்ரதானத்தில் புருஷகாரக்ருத்யம் செய்வதன் மூலமும் அந்வயிக்கிருளன்றே இப்பிராட்டி. 'மாத₄வீம்' என்று 'மாதவனுடையவள்' என்றது. 'மாத₄வப்ரியாம்' என்று 'அவனுக்கு இனியவள்' என்றது. 'லக்ஷ்மீப்ரியஸகீ₂ம்' என்று 'அவளுக்கு இனியவள்' என்றது. 'தேவீம்' என்று ரூபகுணங்களையுடையவள் என்றது. 'அச்யுதவல்லப₄ாம்' என்று 'அவன் இவளுக்கு இனியன்' என்றது. 'விஷ்ணுபத்நீம்' என்று பத்நீத்வ ஸம்பந்தமுடையவள் என்றது.

இப்படிப்பட்டவள்தான் யாரெனில்: (மஹீம்தே₃வீம்) பூமிப்பிராட்டியே இவள் என்கை. இவ்வளவு பெருமையை உடையவளாகையாலே 'மஹீ' என்னும் அந்வர்த்த₂ நாமத்தை உடையவள் என்கை. (நமாமி) இப்படிப்பட்ட பூமிதேவியை வணங்குகிறேன். பூமிப்பிராட்டிக்கு எம்பெருமானேடுள்ள பலவிதமான உறவுகளைச் சொல்லிக்கொண்டு அவள் திருவடிகளிலே விழுகிருன்.

இயம் ஸா யத்க்ருதே ராமஶ் சதுர்ப்பி₄: பரிதப்யதே।
காருண்யேநாந்ருஶம்ஸ்யேந ஶோகேந மத₃நேந ச ||
ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாத₃ாஶ்ரிதேத்யாந்ருஶம்ஸ்யத:।
பத்நீ நஷ்டேதி ஶோகேந ப்ரியேதி மத₃நேந ச|| [ரா-ஸு.15]

[எவளுக்காக ஸ்ரீராமபிரான் கருணை, இரக்கம், சோகம், காமம் என்னும் நான்கினுலும் வருந்துகிருரோ அந்த ஸீதை இவளே. (ஸ்ரீராமபிரான்) 'ஒரு பெண்பிள்ளை அபஹரிக்கப்பட்டாளே' என்னும் கருணையினுலும், 'நம்மைச் சேர்ந்தவள் (அபஹரிக்கப்பட்டாளே)' என்னும் இரக்கத்தினுலும், 'நம்முடைய மனைவி நஷ்டமாயினளே' என்னும் சோகத்திலும், 'நமக்கு இனியவள் (அபஹரிக்கப்பட்டனளே)' என்னும் காமத்தினுலும் (வருந்துகிருர்)] எனகிற இடத்தில் சீதா பிராட்டியாருக்கு எம்பெருமானேடுள்ள ஸம்பந்தங்களைச்சொன்னது போலே பூமிப்பிராட்டிக்குள்ள உறவுகளை இங்கு சொல்லுகிறது.

१३. ओं धनुर्धराय(यै) विद्महे सर्वसिद्ध्यै च धीमहि।
तन्नो धरा प्रचोदयात्॥

13. ஓம் த₄நுர்த்த₄ரா(ை)ய வித்₃மஹே ஸர்வஸித்₃த்₄யை ச [தீ₄மஹி]
தந்நோ த₄ரா ப்ரசோத₃யாத் ||

பதவுரை:— த$_4$நுர்த்த$_4$ரா(ை)ய—வில்லே ஏந்திய தேவனை (தேவியை), வித்$_3$மஹே—உபாஸிக்கிறேம்; ஸர்வஸித்$_3$த்$_4$யை ச தீ$_4$மஹி—(அவனை அடைவதற்காக,) எல்லா ஸித்தியையும் அளிப்பவளாகையால் 'ஸர்வஸித்தி' எனப்படும் பூதேவியையும் தியானிக்கிறேம்; தத—அந்தப்பரப்ரஹ்ம தியானத்தை ந:—எங்களுக்கு, த$_3$ரா—பூதேவியானவள், ப்ரசோத$_3$யாத்—தூண்டட்டும்.

பூமி காயத்திரி என்னும் மந்திரம் இது. மற்ற காயத்திரிகளைப் போல், பரமாத்ம தியானத்தை விருத்திசெய்வதன் பொருட்டு இந்த காயத்திரியின் தேவதையான பூமிதேவியைப் பிரார்த்திப்பதாக அமைந்துள்ளது இம்மந்திரம்.

(த$_4$நுர்த்த$_4$ராய வித்$_3$மஹே) சார்ங்கமென்னும் வில்லாண்ட தேவனை உபாஸிக்கிறேம. 'த$_4$நுர்த்த$_4$ராயை' என்று பாடமான போது பிராட்டிக்கு வில்லேந்திநிற்கும் உருவமுண்டென்று கொள்வது. அன்றிக்கே, தநூ ராசிக்கு அபிமானினியாயிருப்பவள் என்றுமாம். 'ஸர்வஸித்$_3$த்$_4$யை ச' என்று சகாரத்தாலே பூமிப் பிராட்டியை ஸமுச்சயிக்கிறதாகையாலே, 'த$_4$நுர்த்த$_4$ராய' என்னும் பாடம் சிறக்கும்.

(ஸர்வஸித்$_3$த்$_4$யை ச தீ$_4$மஹி) அந்தப் பரமாத்மோபாஸநத்தின் பொருட்டு, 'ஸர்வஸித்$_3$தி$_4$' எனப்படும் பூமிபபிராட்டியை தியானிக்கிறேம். இவ்வுலகப்பலனகளை பூமித்தாய் நமக்கு அளிப்பது ப்ரத்யக்ஷஸித்தமாகையாலும், அவ்வுலக இன்பமாகிற மோக்ஷமும் இவளுடைய புருஷகாரத்தாலேயே ஸித்திக்கிறதென்பது சாஸ்திர ஸித்தமாகையாலும் 'ஸர்வஸித்தி' எனப்படுகிறுர் பூமிப்பிராட்டியார்.

(தத்) "த$_4$நுர்த்த$_4$ராய வித்$_3$மஹே' என்றவிடத்தில் சொல்லப்பட்ட பரமாத்மதியானத்தை. "த$_4$நுர்த்த$_4$ராயை" என்று பாடமான போது, தன் விஷயமான தியானத்தை என்ருகிறது. (ந:) வேறு கதியற்ற எங்களுக்கு. (த$_4$ரா) எங்களை தரித்துநிற்கும் பூமித்தாயானவள். (ப்ரசோத$_4$யாத்) தூண்டக்கடவள். "த$_4$நுர்த்த$_4$ராய வித்$_3$மஹே ஸர்வஸித்$_3$த்$_4$யை ச தீ$_4$மஹி" என்றதால் பூமிப்பிராட்டியோடு கூடிய பரமபுருஷன் ப்ராப்யன் என்னுமர்த்தமும், "தந்நோ த$_4$ரா ப்ரசோத$_3$யாத்" என்றதால் இப்ராப்யத்தை அடையப் புருஷகார பூ$_4$தையாயிருப்பவள் பூமிப்பிராட்டி என்னுமர்த்தமும் அறிவிக்கப்பட்டதாகிறது.

१४. शृण्वन्ति श्रोणाममृतस्य गोपां
पुण्यामस्यामुपशृणोमि वाचम्।
महीं देवीं विष्णुपत्नीमजूर्यां
प्रतीचीमेनां हविषा यजामः॥

14. ஶ்ருண்வந்தி ஶ்ரோணாமம்ருதஸ்ய கோ₃பாம்
புண்யாமஸ்யாமுபஶ்ருணோமி வாசம்।
மஹீம் தே₃வீம் விஷ்ணுபத்நீமஜூர்யாம்
ப்ரதீசீமேநாம் ஹவிஷா யஜாம:॥

பதவுரை:— **ஶ்ரோணாம்**—*திருவோண நக்ஷத்திரத்திற்கு அபிமானினியாய்,* **அம்ருதஸ்ய கோ₃பாம்**—*மோக்ஷத்திற்கு ரக்ஷகையாயிருக்கிற பூமியை,* **ஶ்ருண்வந்தி**—*(ஞானிகள்) கேட்கிறார்கள்,* **அஸ்யாம்**—*இவள் விஷயத்தில்,* **புண்யாம் வாசம்**—*பரிசுத்தமான வார்த்தையை,* **உபஶ்ருணோமி**—*கேட்கிறேன்;* **விஷ்ணு பத்நீம்**—*விஷ்ணுவுக்குப் பத்தினியாய்,* **அஜூர்யாம்**—*(பகவானைப்பிரிவதனாலேற்படும்) விரஹதாபமற்றவளாய்,* **ப்ரதீசீம்**—*என் விஷயத்தில் அபி₄முகை₂யாயிருக்கிறவளான,* **ஏநாம் மஹீம் தே₃வீம்**—*இந்த பூமிதேவியை,* **ஹவிஷா**—*(நம் ஆவியாகிய) ஹவிஸ்ஸினால்,* **யஜாம:**—*ஆராதிக்கிறோம்.*

பூமிப்பிராட்டியின் புகழ்பாடி அவளிடம் தன் ஆத்மஹவிஸ்ஸை ஸமர்ப்பிக்கிறான் இம்மந்திரத்தில்,

(ஶ்ருண்வந்தி ஶ்ரோணாம்) ச்ரவண நக்ஷத்திரத்திற்கு அதி₄தே₃வதையான பூமிதேவியின் புகழை ஞானிகள் கேட்கிறார்கள். (ஶ்ரோணாம்) திருவோணத்தானகிற பரமபுருஷன் ச்ரவண நக்ஷத்திரத்தை அபிமானித்திருப்பதுபோலே, அவனுடைய பத்தினியான இவளும் ச்ரவண நக்ஷத்திரத்தை அபிமானித்திருக்கையாலே 'ஶ்ரோணா' எனப்படுகிறாள். (அம்ருதஸ்ய கோ₃பாம்) மோக்ஷத்திற்கு ரக்ஷகையாயிருப்பவள். நித்யவிபூதியில் கைங்கர்யவர்த்த₄கையாயிருக்கையாலும், லீலாவிபூதியில் சேதனரைத்திருத்தி மோக்ஷயோக்₃யராகச் செய்வதன் மூலமும், பரமபுருஷனிடம் புருஷகாரக்ருத்யம் செய்வதன் மூலமும் முக்தவர்க்க₃ விருத்திகரையாயிருக்கையாலும் மோக்ஷத்திற்கு ரக்ஷகையாயிருக்கிறபடி.

(அஸ்யாம புண்யாம வாசமுபஶ்ருணோமி) இவள் விஷயத்திலே நான் பரிசுத்தமான வேதவாக்குகளைக் கேட்கிறேன். ஞானிகள் கேட்கும் இவள் புகழை நானும் கேட்கிறேன் என்றபடி. "இறைத்து நல்ல மேன்மக்கள் ஏத்த யானும் ஏத்தினேன்" [திருவாய் 4-3-9] என்றாப்போலே

(மஹீம தே₃வீம) குணத்தினால் மிகப்பெரியவளாகவும், அத்தாலேயே ப்ரகாசிப்பவளாகவுமுள்ள பூமிப்பிராட்டியை இப்பெருமைக்கு அடி சொல்லுகிறது அடுத்தபடியாக –(விஷ்ணுபத்நீம) விஷ்ணுவுக்குப் பத்தினியாயிருப்பவளை "அஸ்யேஶானா ஜக₃த" [இவ்வுலகிற்கு ஈச்வரி] என்று நீளாதேவிக்குப் பெருமை சொல்லி, அதற்குக் காரணத்தை "விஷ்ணுபத்நீ" என்று அறிவித்ததுபோலே இங்கும். பத்தினியாகில் பதியைப் பிரிந்து நின்று விரஹதாபத்தால் வருந்துவதுண்டோ? எனில் (அஜஹ்ராயாம) பிரிவுக்கு இடமில்லாமையாலே விரஹதாபஜ்வரத்தால் வருந்ாதவள் என்கை (ப்ரதீசீம) எம் விஷயத்தில் அபி₄முகை₂யாயிருப்பவளை (ஏநாம) எம் அருகிலேயே எழுந்தருளியிருப்பவளை (ஹவிஷா யஜாம.) எங்கள் ஆத்மரூபமான ஹவிஸ்ஸாலே ஆராதிக்கிறோம். "யஜ தே₄வபூஜாயாம" என்று தாது "மஹீம தே₃வீம" என்று குணப் பெருமை சொல்லிற்று, "விஷ்ணுபத்நீம" என்று புருஷகாரம் ப₂லிப்பதற்கு வேண்டிய ஸம்பந்தம் சொல்லிற்று "அஜஹ்ராயாம" என்று இந்த ஸம்பந்தம் நித்யமானது என்றது "ப்ரதீசீம" என்று தன் விஷயத்தில் ஆபி₁முக₂யம் சொல்லிற்று "ஏநாம" என்று ஸௌலப₄யம் சொல்லிற்று ஆக இவற்றால் புருஷகார பூ₄தைக்கு வேண்டிய குணங்கள் பொருந்தியிருக்கப்பெற்றவள் பூமிப்பிராட்டி என்று அநுஸந்தித்துக்கொண்டு, அவளிடம் ஆத்ம ஸமர்ப்பணம் செய்தாளாயிற்று.

१५. त्रेधा विष्णुरुरुगायो विचक्रमे
महीं दिवं पृथिवीमन्तरिक्षम्।
तच्छ्रोणैति श्रव इच्छमाना
पुण्यं श्लोकं यजमानाय कृण्वती॥

15. த்ரேதா₄ விஷ்ணுருருகா₃யோ விசக்ரமே
மஹீம தி₃வம ப்ருதி₂வீமந்தரிக்ஷம் ।
தச்ச₂ரோணைதி ஶ்ரவ இச்ச₂மாநா
புண்யம ஶ்லோகம யஜமாநாய க்ருண்வதீ ॥

**பதவுரை:—** **உருக₃ாய:** — பெரிய கீர்த்தியையுடைய. **விஷ்ணு:**—பகவான் விஷ்ணுவானவர், **மஹீம்**—பெரியதான, **ப்ருதி₂வீம்**-பூமியையும். **தி₃வம்**—தேவலோகத்தையும். **அந்தரிக்ஷம்**—அந்தரிக்ஷலோகத்தையும், **த்ரேதா₄**—மூன்று அடிவைப்புகளாலே, **விசக்ரமே**—அளந்தருளினர். **ஶ்ரோணா**—ச்ரவண நக்ஷத்திரத்திற்கு அபிமானினியான பூமிதேவியானவள், **ஶ்ரவ:** **இச்ச₂மாநா**—கீர்த்தியை விரும்பியவளாய். **யஜமாநாய**—(தன்னை) ஆராதிப்பவனுக்கு. **புண்யம் ஶ்லோகம்**—பரிசுத்தமான கீர்த்தியை, **க்ருண்வதீ**-உண்டு பண்ணுகிறவளாய், **தத்**—அந்த விஷ்ணுவை. **ஏதி**—அடைகிருள்.

பரமபுருஷனுக்கு பூமிப்பிராட்டியின்மேலுள்ள பிரீதியைத் திரிவிக்கிரமாவதாரவிருத்தாந்த கத₂நத்தின் மூலம் வெளிப்படுத்திக்கொண்டு, ஆத்மாக்கள் அனைவர்க்கும் தஞ்சமான அவளுடைய புருஷகாரப₄ாவத்தை அநுஸந்தித்துக்கொண்டு ஸூக்தத்தை முடிக்கிருன் இம்மந்திரத்தோடு.

(த்ரேதா₄ விஷ்ணுருருக₃ாயோ விசக்ரமே) மிகவும் புகழப்படுமவரான பகவான் விஷ்ணு மூன்று அடிவைப்புக்களாலே அளந்தார். (விஷ்ணு: விசக்ரமே) விஷ்ணுவானவர் அளந்தார். ஸர்வவ்யாபியானவனுக்கு இதையளப்பது ஒரு பொருளல்ல என்று கருத்து. (உருக₃ாயோ விசக்ரமே) மிகவும் புகழப்படுமவராய் அளந்தார். உடையவன் உடைமையை விடமாட்டாமல் அளந்துகொண்டதையும், அதிலும் தனனை இரப்பாளனுக்கிக்கொண்டு அளந்தருளியதையும் கண்டு உலகிலுள்ளார் அனைவரும் இவனைப் புகழ்ந்தனரன்றே. ஜாம்பவான் முதலானுர் பறைகொட்டிப்பாடும்படியிருந்ததன்றே இவனுடைய புகழ்.

**ஸங்கை₄ஸ் ஸுராணும் தி₃வி பூ₄தலஸ்தை₂ஸ்**
**தத₂ா மநுஷ்யைர் க₃க₃நே ச கே₂சரை:।**
**ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா₃**
**மமாஸ்து மாங்க₃ல்யவிவ்ருத்₃த₄யே ஹரி:॥**

[ஸ்வர்க்கத்தில் தேவஸமூஹங்களாலும், அப்படியே பூமிப்ரதேசத்திலிருக்கும் மனுஷ்யர்களாலும் ஆகாயத்தில் ஆகாசஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்ட எந்த பகவான் திருவடிகளை வைத்தருளினுரே, (திரிவிக்ரமாவதாரம் செய்த) அந்த ஹரி எனக்கு எப்போதும மங்களங்களின் விருத்தியின்பொருட்டு ஆகட்டும்.] என்று விஷ்ணு

தாமததிலும சொலலபபட்டதனறோ அளநதது தான யாரை யெனனில: (மஹீம) குணஙகளால மிகபபெரியவளாகையாலே 'மஹீ' எனபபடும தன மஹிஷியையனறோ காலாலே தடவிக கொடுததது எனகை (பருதி₂வீம) "பத்₃ப₄யாம பூ₄மி" [புருஷ ஸூகதம] [காலிலிருநது பூமி உணடாயிறறு] எனகிறபடியே காலிலிருநது தோனறி "நிலமகள பிடிககும மெலலடி" [திருவாய 9-2-10] எனகிறபடியே அடிவருடும தனமையாளான தரணி மஙகையை அடியாலே அ ள ப் ப தே பொருததமானதனறோ. "அடிசசியோம தலைமிசை நீயணியாய ஆழியஙகணணா உன கோலபபாதம" [திருவாய் 10-3-6] எனறனறோ அனபுடையார ஆசைபபட்டிருபபது நாயகனனவன நாயகியினுடைய அவயவங களை ஒவ்வொனறையும தடவிககொடுபபதுபோலே பூமிபபிராட்டி யின அவயவஙகளையெலலாம தடவிககொடுததான திரிவிககிரமன எனகிறது அடுததபடியாக—(தி₃வம அநதரிக்ஷம விசகரமே) பூமிதேவியின அவயவவிசேஷஙகளான தேவலோகததையும, அநதரிக்ஷலோகத்தையுமஅளநதான. "த₃யௌாவரிணு அநதரிக்ஷம மஹிதவா" எனறு தேவலோகமும, அநதரிக்ஷமும பூமிதேவியின அவயவஙகளெனறு சொலலபபட்டதனறோ (விசகரமே) தேவா களுக்காக அளநதான எனறு பெயராய, உணமையில தன நாயகியை அனபோடு திருவடியாலே தடவிககொடுததான

"கிடநதிருந்து நினறளநது கேழலாயக கீழபபுக்கு
இடநதிடும் தனனுள கரககும உமிழும
தடமபெரும தோளாரத தழுவும் பாரெனனும
மடநதையை மால செயகினற மாலார காணபாரே'

எனறு நமமாழவாரும, [திருவாய 2-8-7]

"அரவாகிச சுமததியால அயிலெயிறறின ஏநதுதியால
ஒருவாயின விழுஙகுதியால் ஓரடியால ஒளிததியால
திருவான நிலமகளே' [ஆரணிய-விராதனவதை]

எனறு கமபநாட்டாழவாரும இவனுடைய அவதாரசேஷ்டிதஙக ளெலலாம பூமிதேவியினிடமுளள பிரேமததை வெளியிடுவனவே எனறு அறுதியிட்டனரனறோ.

(தரேத₄ா விசகரமே) மூனறு அடிவைபபுகளாலே அளநதான.

"ஓண மிதியில புனலுருவி ஒருகால் நிறப
ஒருகாலும் காமருசீ ரவுணனுளளத்து

எண்மதியும் கடந்(து) அண்டமீது போகி
இருவிசும்பினூடுபோய் எழுந்து மேலைத்
தண் மதியும் கதிரவனும் தவிரவோடித்
தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை'' [திருநெடு-5]

என்கிறபடியே ஓரடியாலே கீழுலகங்களையும், ஓரடியால் மேலுலகங்களையும் அளந்தான் என்று சொல்லியிருக்க, இங்கும் '' த்ரீணி பத₃ாவிசக்ரமே'' [யஜு॰அஷ்ட 2-4-51] முதலான பலவிடங்களிலும், ''மூன்றடி நிமிர்த்து'' [பெரியாழ்திரு 4-7-10] என்பது முதலான பாசுரங்களிலும் மூன்று அடிகளாலே அளந்து கொண்டான் என்றது பொருந்தும்படியென்? என்னில்: இந்த ஸந்தேஹத்தையே நஞ்சீயர் பட்டரைக் கேட்க,—

''பரோ மாத்ரயா தநுவா வ்ருத₄ாந।
ந தே மஹித்வமந்வஸ்நுவந்தி।
உபே₄ தே வித்₃ம ரஜஸீப்ருதி₂வ்யா:।
விஷ்ணோ தே₃வ த்வம் பரமஸ்ய வித்ஸே ||''

[யஜு॰ அஷ்ட 2-8-16]

[விஷ்ணுவே! மேலானவனை நீ மிகப்பெரிய உருவுடன் வளர்ந்தருளினாய். (அப்போது) உன் பெருமையை அளவிட்டு அனுபவித்தார் ஆருமில்லை. பூமியிலும், ஆகாயத்திலும் நீ வைத்த இரண்டடிகளை யாமறிவோம்; இதற்கு மேற்பட்ட மூன்றாவது அடி வைப்பை நீயே அறிவாய்போலும்!] என்று வேதபுருஷனே 'இரண்டடியால் அளந்தது எல்லாரும் அறிவோம். நீ மூன்று அடியால் அளந்தது உனக்கே தெரியுமித்தனை' என்று காணாமல் விட்டான். அவன் அளந்தமையுண்டு; அவனுக்கே தெரியுமித்தனை— என்று பட்டர் அருளிச்செய்தார் என்பர். ''உ₃த₃ாரா:'' என்னும் தன் திருவுள்ளத்தாலே பக்தனை மஹாபலியின் தலைமேல் வைத்த அடியையே மூன்றாவது அடிவைப்பாகக் கருதியிருக்கிறான்போலும், பக்தன் தலையை கீழுலகங்களோடும், மேலுலகங்களோடும் ஒக்க எண்ணக்கூடியவனன்றோ.

(தச்ச்₂ரோணேதி ஶ்ரவ இச்ச₂மாநா யஜமாநாய) தன்னை ஆராதிப்பவனுக்குக் கீர்த்தியை விரும்பியவளாய், அப்பரமாத்மாவை ஶ்ரவண நக்ஷத்திரத்தின் அதி₄தே₃வதையான பூமிதேவி அடைகிறாள். ''யஜமாநாய'' என்பதைக்கீழும் மேலும் கூட்டிக்கொள்ளலாம். பிள்ளையிடம் பேரன்புள்ளவளாகையாலே அவன் விரும்பாமலிருக்

கும்போதே, தன் காரியமாகவே நினைத்துத்தானே மேல்விழுந்து எம்பெருமானிடம் புருஷகாரக்ருத்யம் செய்கிருள் என்றபடி. அன்றிக்கே, "ஶ்ரவ:இச்சமாநா" என்றதற்கு நன்மையைப் பிரார்த்திக்கப்படுகிறவளாய் என்று பொருள் கொள்வாருமுண்டு. (புண்யம ஶ்லோகம் யஜமாநாய க்ருண்வதீ ஏதி) பரிசுத்தமான கீர்த்தியைத் தன்னை ஆராதிப்பவனுக்கு உண்டுபண்ணுபவளாய்ப் பரமபுருஷனை அடைகிருள். இவளுடைய கமனம் பலபர்யாந்தமாகிறதென்கை. "ஶ்ரூயத இதி ஶ்ரவ:" [அனைவராலும் கேட்கப்படுகிறதாகையாலே (கீர்த்தி) 'ஶ்ரவ:' எனப்படுகிறது] என்று ஶ்ரவஶ்ஶப்தமும், "ஶ்லோக்யத இதி ஶ்லோக:" [அனைவராலும் புகழப்படுகிறதாகையாலே (கீர்த்தி) 'ஶ்லோகம்' எனப்படுகிறது] என்று ச்லோக சப்தமும் கீர்த்திவாசகமாகின்றன. இந்த மந்திரத்தால் பூமிப் பிராட்டியின் புருஷகாரபாவம் பிரகடீகரிக்கப்பட்டதாயிற்று.

உலகினர் அனைவராலும் தாய் என்று புகழப்படும் பூமிக்கு அபிமானினியான பிராட்டியைப் பண்டைமறை புகழ்ந்த பெற்றியைக் கண்டோம் இப்பூஸூக்தத்தில். இப்பூமித்தாயின் நாயகன் எவனோ அவனே பரம்பொருள் என்பது சொல்லாமலே விளங்கும். "ஜாதவேத:" என்று மறைத்துப்பேசிய ஸ்ரீஸூக்தத்தைப்போலவே, இந்த பூஸூக்தத்தின் முற்பகுதி மந்திரங்கள் 'பிதா' என்றும், 'அக்னி' என்றும் மறைத்துப்பேசியபோதிலும், பிற்பகுதி மந்திரங்கள் "விஷ்ணுபத்நீம்" "மாதவப்ரியாம்" "அச்யுதவல்லபாம" "விஷ்ணுருருகாயோ விசக்ரமே" என்று மிகவெளிப்படையாகவும் பேசியுள்ளன. ஸ்ரீமந்நாராயணனே பூமிநாயகன் என்பது கையிலங்குகனியாக இவற்றிலிருந்து விளங்குகிறது. இவ்வேத ப்ரஸித்தியினுலேயே லோகத்திலும் பூதேவிநாயகன் புருஷோத்தமனே என்னும் ப்ரஸித்தியுள்ளது. இவற்ருல் லோகமாதாவான பூமியின் நாயகனை நாராயணனே பரமபொருள் என்பது வெளிப்படையாக விளங்குகிறது.

इत्थं श्रीश्रीनिवाससूरेः सूनुः कृष्ण इति ख्यातः।
अकरोद्रम्यां व्याख्यां भूसूक्तस्याच्युतप्रसादेन॥

இத்தம் ஸ்ரீஸ்ரீநிவாஸஸூரே: ஸூநு: க்ருஷ்ண இதி க்யாத:।
அகரோத் ரம்யாம் வ்யாக்யாம் பூஸூக்தஸ்யாச்யுதப்ரஸாதேந॥

['கிருஷ்ணன' என்று பெயர் பெற்றவரான ஸ்ரீநிவாஸஸூரியின் திருக்குமாரர், அச்சுதனின் அருளாலே, பூஸூக்தத்திற்கு இவ் வண்ணமாக அழகியதொரு வியாக்கியானத்தை இயற்றினர்.]

ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயத்தில் பூஸூக்த வ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# நீளாஸூக்த வ்யாக்யானம்

यत्प्रोत्तुङ्गस्तनगिरितटीसुप्तमाहुर्महान्तः
कृष्णं रम्यं कमलनयनं देवकीबालसिंहम् ।
तस्याः सूक्तं प्रथितविभवं मङ्गलं व्याकरिष्यन्
नीलां देवीं शरणमनघां तां प्रपद्ये सुरूपां ॥

யத்ப்ரோத்துங்க3ஸ்தநகி3ரிதடீஸுப்தமாஹுர் மஹாந்த:
க்ஷ்ணம் ரம்யம் கமலநயநம் தே3வகீபா3லஸிம்ஹம் ।
தஸ்யாஸ்ஸூக்தம் ப்ரதி2தவிப4வம் மங்க3ளம் வ்யாகரிஷ்யந்
நீளாம் தே3வீம் ஶரணமநக4ாம் தாம் ப்ரபத்3யே ஸுரூபாம் ॥

[ அழகியவனும், கமலக்கண்ணனும், 'கிருஷ்ணன்' என்னும் பெயரையுடையவனுமான தேவகி பெற்றெடுத்த இளஞ்சிங்கத்தை எவளுடைய உயர்ந்த திருமுலைத்தடங்களாகிற மலைத்தாழ்வரையில் உறங்குவதாகப் பெரியோர்கள் பணிக்கின்றனரோ, பிரசித்தமான பெருமையை உடையதும், மங்களமானதுமான அப்பிராட்டியின் (நீளா) ஸூக்தத்தை வியாக்கியானம் செய்யப்புகுகிற அடியேன், குற்றமற்றவளாய், மிகவழகியவளான அந்த நீளாதேவியைச் சரணமடைகிறேன்.]

"கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர்மார்பா" [திருப்பாவை-19] என்று ஆண்டாளும் "வியமுடை விடையினமுடைதர மடமகள் குயமிடை தடவரை அகலமதுடையவர்" [பெரியதிரு 8-7-1] என்றும், "எருதிற இகல் செய்து துணைமலி முலையவள் மணமிகுகலவியுள்" [பெரியதிரு 8-7-2] என்றும் திருமங்கைமன்னனும், "நீளாதுங்கஸ்தந கிரீதடீ ஸுப்தம்" [திருப்பாவைத் தனியன்] என்று பட்டரும் அருளிச் செய்தபடியே கண்ணனாய் ஸர்வேஸ்வரன் அவதரித்தபோது

அவனுக்கு ப்ரத₄ான நாயகியாய் பே₄ாக₃பத்தினியாயிருந்தவள் நப்பின்னைப் பிராட்டியென்னும் நீளாதேவியேயாவள்.

''ஸ்யாலோऽத₂ நந்த₃கோ₃பஸ்ய மிதி₂லேஷு க₃வாம் பதி:।
ப்ரவ்ருத்₃த₄கோ₃த₄னோ து₃க்ஷ: கும்ப₄கோ நாம நாமத:॥
த₃ாதா து₃க்₃த₄ஸ்ய ஸர்வேஷாம் தக்ரஸ்ய ச க்₄ருதஸ்ய ச।
ஜநஸ்ய ப்ரியவாக் நித்யம் யஶோதா₃யா ஜக₄ந்யஜ:॥
த₄ர்மத₃ா தஸ்ய ப₄ார்யாऽऽஸீத் த₄ர்மதை₃வதநாமத:।
ஸாऽஸூதாऽபத்யயுக₃ளம் ஶோப₄நம் கோ₃பபூ₄ஷணம்॥
தயோஸ்தத்ர புமாந் ஜஜ்ஞே ஶ்ரீத₃ாமா நாம விஶ்ருத:।
ஸர்வைஶ்சாஸீத் கு₃ணைர்யுக்த: ஸர்வப்ராணிமநோரம:॥
நீளாநாமா ச கந்யா ஸா ரூபௌதா₃ர்யகு₃ணாந்விதா॥''

[மிதிலாதேசத்தில் நந்தகோபனுக்கு மைத்துனனும், எண்ணிறந்த பசுக்களைச் செல்வமாக உடையவனும், மஹாஸாமார்த்₃யவானுமான ஆயர்க்கரசனொருவன வாழ்ந்து வந்தான். எல்லாருக்கும பால், மோர், நெய் முதலியவைகளை வழங்குபவனாகவும், ஜனங்களிடம் எப்போதும் பிரியமாகப் பேசுபவனாகவும் விளங்கினான் அவன். அவன் யசோதையின் தம்பி. தர்மதேவதையின் பெயரையுடைய த₄ர்மதை₃ என்பவள் அவனுக்குப் பத்னியாயிருந்தாள். ஆயர்களுக்கு ஆபரணமாகவும், ஒளியாகவும் விளங்கிய இரு குழந்தைகளை அவள் பெற்றாள். அவர்களுள் ஆண் குழந்தை ஸ்ரீதாமா என்று பெயர்பெற்றவனாகவும், எல்லா குணங்களுடன் கூடியவனாகவும், எல்லா ஜந்துக்களுடைய மனங்களையும் உகப்பிப்பவனாகவும் விளங்கினான். அழகு, வண்மை முதலிய குணங்களுடன் கூடியவளாய் விளங்கினாள் நீளையென்ற பெண் குழந்தை.] என்கிற படியே நீளையென்னும வடமொழி நாமத்தையுடையவளாய்ப் பிறந்த இப்பிராட்டியை நப்பின்னை என்று ஆழ்வார்கள் அனுஸந்தித்தனர். ஸ்ரீவைகுண்டத்திலும் ஸ்ரீபூமிகளோடு கூட 'நீளாதேவி' என்னும் பெயரோடு இப்பிராட்டி எழுந்தருளியிருக்கிறாள் என்பது ''ஏவம்பூ₄த பூ₄மிநீளா நாயக'' [சரணாகதி கத்யம்] முதலான ப்ரமாணங்களால் ஸித்தம். ''ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ'' என்கிற புருஷஸூக்த மந்திரத்தில் முதல் ஸமுச்சயம் ஒன்றே உக்தத்தை ஸமுச்சயிப்பதற்குப் போதுமாயிருக்க, இரண்டாவது ஸமுச்சயமிட்டதினால் நீளாதேவியும் உணர்த்தப்படுகிறாள் என்று மஹான்கள் அருளிச்செய்வர். ''குழற்கோவலர் மடப்பாவையும்

மண்மகளும் திருவும் நிழற்போல்வனர்'' [திருவிரு-3] என்று நம்மாழ்வாரும் பரமபதத்தில் பரமபுருஷன் இம்மூன்று பிராட்டி மாருடன் எழுந்தருளியிருக்கிறுன் என்று அருளிச்செய்தார். இப் பிராட்டியின் பெருமைகள் கிருஷ்ணுவதாரத்திலேயே பொலிகிறபடி யாலே, இப்பிராட்டியை ஆழ்வார்கள் "கோவலர் மடப்பாவை'' [திருவிருத்தம்-3] "ஆய்மகளும்'' [முதல்திருவ 42] "ஆய்மகளன் பனே'' [திருவாய் 7-2-9] என்றும் "குலவாயர் கொழுந்துக்கும்'' [திருவாய் 5-6-11] என்றும் மற்றும் பற்பலவிடங்களிலும் ஆயர் குலக்கொழுந்தாகவே அனுஸந்திந்துப்போந்தனர். "நீளா குலேந ஸத்₃ருஶீ'' என்ருர் ஆழ்வானும்.

"ஆச்ரிதர் குற்றத்தைப் பொறுக்கும் பிராட்டி; 'குற்றம் காண்பானென்? பொறுப்பானென்?' என்றிருக்கும் ஸ்ரீபூமிப் பிராட்டி; நப்பின்னைப்பிராட்டி க்ஷமைதான் ஒரு வடிவாயிருக்கும். பெரியபிராட்டியார் இவனுக்கு ஸம்பத்தாயிருக்கும். அது விளையும தரை (பூமி); அதனை அனுபவிக்கும் போக்தாவாயிருக்கும் நப் பின்னை'' என்று திருவிருத்தம் மூன்ரும் பாசுரவியாக்கியானத்தில் பெரியவாச்சானபிள்ளை ஸ்ரீபூமிநீளாதேவிகள் மூவரும் குணத்தில் உத்தரோத்தரம் உத்க்ருஷ்டராயிருக்கும்படியை அருளிச்செய்தார். எம்பெருமானிடம் 'ந கஶ்சிந்நாபராத்₄யதி' [குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே]என்ருற்போன்ற ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்து குற்றங்களைப் பொறுப்பிப்பவர் பெரியபிராட்டி. 'குற்றத்தைக் கண்டு அதற்குப்பின் அதைப்பொறுப்பதில் என்ன விசேஷமிருக் கிறது? ஆகையால் குற்றம் காண்பதிலும் காணுமை நன்று' என்று காணுக்கண்ணிட்டிருக்கும் பூமிப்பிராட்டி பெரியபிராட்டி யாரிலும் குணத்தில் விஞ்சிநிற்பவள். இந்நீளாதேவியோவெனில் இடக்கை வலக்கையறியாதவர்களாய், கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்பாராய், அறிவொன்றுமில்லாதாரான ஆய்க் குலத்தாரோடு புரையறக்கலந்து பரிமாறுமவளாகையாலே குற்றம் என்று ஒரு பொருளிருப்பதையே உணராதவளாய் பொறுமையே வடிவெடுத்ததோ என்னலாம்படியிருப்பவளாகையாலே முதலிரண்டு பிராட்டிமாரிலும் குணநலத்தில் விஞ்சிநிற்பவள். மேலும், பெரிய பிராட்டியார் "விஷ்ணோ: ஸ்ரீ:'' என்கிறபடியே ஸர்வேஶ்வரனுக்குச் செல்வமாயிருப்பாள்: அச்செல்வத்திற்கு விளைநிலமாயிருப்பவள் நிலமங்கை. அச்செல்வத்தையும், விளைநிலத்தையும், செல்வத்தை யுடையானையும் அனுபவிக்குமவளாயிருப்பவள். நீளாதேவி, இத்

தாலும் ஏற்றம் இவளுக்கே. ஸ்வரூபத்தைப்பார்த்தால் பரமபுருஷனுக்கு ஶேஷபூ₄தையாயிருப்பார் பெரியபிராட்டியார்; இருவர்க்கும் ஶேஷபூ₄தைபூமித்தாய்; இம்மூவர்க்கும் சேஷபூதை ஆயர்குலக்கொடி. குணத்தைப்பார்த்தால் எம்பெருமானைக் காட்டிலும் பெரியபிராட்டியார் உயர்ந்துநிற்பர்; பெரியபிராட்டியாரிலும் பூமிப்பிராட்டியார் விஞ்சிநிற்பர்; பூமிப்பிராட்டியிலும் நீளாதேவியார் சிறந்து நிற்பர்.

உலகிலுள்ளார் அனைவரும் பாடுபடுவது பொன்னுக்கும், மண்ணுக்கும், இன்பத்திற்குமாகும். பொன்னை, மண்ணை, பெண்ணையெனபர்; அதில் பொன்னுக்கு அதிதேவதையாயிருப்பவள் பொன்மாது ஆகிற இலக்குமி. மண்ணுக்கு அபிமானினியாயிருப்பவள் மண்மடந்தையாகிற பூதேவி. ஆநந்தத்திற்கு அதிதேவதையாயிருப்பவள் ஆய்மகளான நீளாதேவி. ஆரோக்கியத்திற்கும் அது காரணமாக வரும் ஆனந்தத்திற்கும் ஏதுவான தயிர் பால் நெய் முதலானவற்றை அளிப்பவள் ஆய்மகளான இப்பிராட்டியே. சேதனர்க்குமட்டுமன்றியே, பரமசேதனனுக்கும் தன் பே₄ாக₃த்தாலே பேரானந்தமளிக்கும் பெருந்தேவி இவளே.

"நிஶாமயது மாம் நீளா யத்₃பே₄ாகபடலைர் த்₄ருவம் ।
ப₄ாவிதம் ஶ்ரீநிவாஸஸ்ய ப₄க்ததே₃ாஷேஷ்வத₃ர்ஶநம் ॥"
[த₃யாஶதகம்-8]

[எந்த நீளாதேவியினுடைய போகங்களாகிற கண் நோயினாலே, ஶ்ரீநிவாஸனுக்கு அடியார்களின் அபராதங்கள் விஷயத்தில் பார்வையில்லாமை உண்டுபண்ணப்பட்டதோ, அந்த நீளாதேவியானவள் அடியேனைக் கடாக்ஷிக்கக்கடவள்.] என்று ஶ்ரீவேதாந்ததேசிகரும் அருளினர்.

"பெருநில மங்கைமன்னர் மலர்மங்கை நாதர்
புலமங்கை கேள்வர் புகழ்சேர்" [பெரியதிரு 11-4-6]

என்றவிடத்தில் நீளாதேவியைப் "புலமங்கை" என்று குறிப்பிட்டார் திருமங்கைமன்னன். "புலன்" என்று இந்திரியங்களைக் குறிக்குமாகையாலே, "ஈச்வரனுடைய ஸர்வேந்த்ரியங்களையும் அபஹரிக்கவல்ல நீளைப்பிராட்டிக்கு வல்லபர்; 'யஸ்ய ஸா' என்னும்படி 'இவளையுடையவர்' என்னும் பெரிய புகழையுடையவர்" என்று பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான்

மிட்டருளினர். இப்படிப்பட்ட பெருமைகளை உடைய இப்பிராட்டியை இவளுடைய பெயர்கொண்ட ஸூக்தத்திலே வேதம் புகழ்ந்த பரிசை விளக்கிக்காட்டுவோமினி.

## नीलासूक्तम् - நீளாஸூக்தம்

१. नीलां देवीं शरणमहं प्रपद्ये गृणाहि।
घृतवती सवितराधिपत्यैः पयस्वती रन्तिराशा नो अस्तु।
ध्रुवा दिशां विष्णुपत्न्यघोरास्येशाना सहसो या मनोता॥

1. நீளாம் தே$_3$வீம் ஶரணமஹம் ப்ரபத்$_3$யே க்$_3$ருணுஹி।
க்$_4$ருதவதீ ஸவிதராதி$_4$பத்யை: பயஸ்வதீ ரந்திராஶா
நோ அஸ்து।
த்$_4$ருவா தி$_3$ஶாம் விஷ்ணுபத்ந்யகோ$_4$ராஸ்யேஶாநா
ஸஹஸோ யா மநோதா॥

பதவுரை:—அஹம்–நான், நீளாம் தே$_3$வீம்–நீளாதேவியை, ஶரணம் ப்ரபத்$_3$யே—சரணமடைகிறேன்; க்$_3$ருணுஹி–(நீளாதேவியே!) புருஷகார சப்தத்தைச்செய்வீர்; ஸவித:—ஜகத்காரணமான பகவானே! யா–எவளொருத்தி தி$_3$ஶாம் த்$_4$ருவா–புருஷகாரம் செய்வாரில் நிலையானவளாய், விஷ்ணு பத்நீ—விஷ்ணுவுக்குப் பத்தினியாய், அகோ$_4$ரா—குளிர்ந்த தன்மையுடையவளாய், அஸ்ய—இவ்வுலகிற்கு, ஈஶாநா—ஈச்வரியாய், ஸஹஸ:—பலத்துக்கு, ஈஶாநா–ஈஶ்வரியாய், மநோதா–நெஞ்சால் பூஜிக்கப்பட்டவளாயிருக்கிறளோ, ஆஶா—(சேதநரக்ஷணார்த்தமாக) வியாபித்திருக்கும் இந்தநீளாதேவி, க்$_4$ருதவதீ—நெய்யை உண்டுபண்ணுமவளாகவும், ஆதி$_4$பத்யை:-ப்ரபு$_4$த்வத்தோடு (சேர்ப்பவளாகவும்), பயஸ்வதீ பாலை உண்டு பண்ணுகிறவளாகவும், ந:—எங்கள் விஷயத்தில், அஸ்து—ஆகட்டும்.

இம்மந்திரத்தில் நீளாதேவியை சரணமடைந்து, அவள் அருளாலே எம்பெருமானைக்கண்டு அப்பெருமானிடம் இப்பிராட்டியே எங்களுக்கு எக்காலத்திலும் ரக்ஷகையாயிருக்கக்கடவள் என்கிறன்.

(நீளாம் தேவீம் ஶரணமஹம் ப்ரபத்3யே) நீளாதேவியை அடியேன் சரணமடைகிறேன். வேதமந்த்ரபாடத்தில் இவ்வாக்கியம் இல்லாவிடினும் நீளாஸூக்தபாடத்தில் இது உண்டு. எதற்காக என்னை சரணடைகிறாய் என்று பிராட்டி திருவுள்ளமாக (க்ருணுஹி) பிராட்டியே! தேவரீர் எம்பெருமானிடத்தில் எங்களை அங்கீகரிக்கத் தக்க வார்த்தைகளை அருளிச்செய்யும். "க்ரு ஶப்3தே3" என்று தாது. (க்3ருணுஹி) மனமே! நீளாதேவியைத் துதிப்பாயாக என்றுமாம். (நீளாம்...க்3ருணுஹி) புருஷகாரபூதையான உம்மை சரணடைகிறோம். தேவரீர் புருஷகாரக்ருத்யம் செய்வீராக என்று கருத்து.

கருணை க்ஷமாதி குணங்களின் எல்லை நிலமாகையாலே பிராட்டியானவள் உடனே புருஷகாரக்ருத்யம் செய்ய, இவளுடைய போக மயக்குக்களுக்கு ஆளாகி நிற்பவனாகையாலே அவனும் உடனே ப்ரஸன்னனாக, இப்பிராட்டி செய்த இம்மஹோபகாரத்தில் ஈடுபட்டவனாய், அப்பெருமானிடம் இவள் பெருமையைப் பேசாநின்று கொண்டு, இவளே அடியோமுக்கு எக்காலத்திலும் ரக்ஷகையாகக் கடவள் என்று பிரார்த்திக்கிறான் அடுத்தபடியாக.

(ஸவித:) ஸகலஜகத்காரணனான எம்பிரானே! உடையவனாகையாலே உடைமையை விடமாட்டாமல் சடக்கென வந்து நின்றாயன்றோ என்று கருத்து. (ஸவித:) "ஷூங் ப்ராணிப்ரஸவே" என்று தாதுவாகையாலே, ஸகலஜகத்காரணனே! என்று பொருள் படுகிறது. (ஸவித:) ஸூர்யாந்தர்யாமியே! என்றுமாம். (ஆஶா) "அஶூ வ்யாப்தௌ" என்று தாதுவாகையால் எங்கும் வியாபித்திருப்பவள் என்று பொருளாகிறது. "ததோ விஷ்வங் வ்யக்ராமத்" [பு-ஸூ] [அதற்குப்பின் பரமபுருஷன் அவதாரங்களெடுப்பதன் மூலம் எங்கும் வியாபித்தான்] என்கிறபடியே அவன் ராமகிருஷ்ணாத்யவதாரங்களைச் செய்து வியாபித்திருக்கும்போது,

"தே3வத்வே தே3வதே3ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ" [வி-பு] [அவன் தேவனாயவதரிக்கும்போது இவள் தேவதேஹமெடுக்கிறாள், அவன் மனிதனாம்போது இவளும் மனிதவுருக்கொள்ளுகிறாள்] என்றாப்போலே இவளும் குலம், பருவம், அழகு முதலானவற்றில் அவனுக்குத் தகுந்த நீளாதிருபங்களை எடுத்து உலகில் வியாபித்து நிற்கிறாளாகையாலே, இவளை "ஆசா" என்கிறது. (ந: க்4ருதவதீ அஸ்து) எங்களுக்கு விசேஷமாக நெய்யை உண்டுபண்ணுமவளாக ஆகட்டும். (ஆதி4பத்யை:) "ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப

மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள் ஆற்றப்படைத் தான்'' [திருப்பாவை] என்கிறபடியான தலைமைப்புகழோடு எங்களைச் சேர்க்கட்டும். "ஹ்ரீஸ்ரீகீர்த்யுபமாஸா ச" என்கிற விடத்திலே நீளாதேவியைப் புகழுக்கு அதிதேவதையாகக் குறித் தாரன்றோ ஸ்ரீவால்மீகிபகவான். (பயஸ்வதீ அஸ்து) பாலையுண்டு பண்ணுகிறவளாகவும் ஆகட்டும். ஆயர்குலக்கொழுந்தாய் அவ தரித்தவளாகையாலும், க்ருஷ்ணவதாரத்திலேயே இவளுக்கு ப்ரா த₄ான்யமாகையாலும், ஆநந்தத்துக்கு அதி₄தே₃வதையாகையாலும், ஆநந்த₃ஸாத₄னமான பால், நெய், பசுத்தலைமை ஆகியவற்றைப் பிரார்த்திக்கிறான். அடுத்தபடியாக ஸாத்₄யமான ஆநந்த₃த்தையும் பிரார்த்திக்கிறான். (ந: ரந்தி: அஸ்து) நமக்கு ஆனந்தத்தை அளிப்பவளாகவும் ஆகட்டும். இத்தால் இப்பிராட்டி ஆநந்தத்துக் கும், அதன் ஸாதனத்துக்கும் அதி₄தே₃வதை என்று காட்டப்படு கிறது. (ந: அஸ்து) திருவாய்ப்பாடியிலுள்ளார்க்குத் தன் அவ தாரத்தாலே பால் தயிர் நெய் பசு முதலானவற்றையும், பேரின் பத்தையும் பெருகச்செய்ததுபோலே எங்களுக்கும் அவற்றைப் பெருகச்செய்பவளாக ஆகட்டும். (ரந்தி: ந: அஸ்து) பிள்ளை களான நமக்குத் தாயான தேவி ஆநந்தத்தையளிப்பாளாக.

அடுத்தபடியாக, இவளுடையபுருஷகாரப₄ாவத்துக்கு வேண்டிய சேதநேஶ்வரஸம்பந்தத்தைச் சொல்லிக்கொண்டு புருஷகார ப₄ாவத்தை நிலைநிறுத்துகிறான்;— (யா) ஸுப்ரஸித்தையான எவ ளொரு பிராட்டியானவள். (த்₄ருவா தி₃ஶா:ம்) புருஷகாரபூ₄தைகளுள் உறுதியானவளோ. ''தி₃ஶந்தீதி தி₃ஶ:''[வழிகாட்டுகின்றவர்களாகை யால் 'திக்குகள்' எனப்படுகின்றனர்] என்கிறபடியே பகவானை அடையவழிகாட்டும புருஷகாரபூ₄தர்களைச் சொல்லுகிறது. புருஷகார பூ₄தர்களான பிராட்டிமாரில் சேதனரை ரக்ஷிப்பதில் உறுதியானவள் இப்பிராட்டியே என்கை. அடியாரிடம் குற்றமிருப்பதை ஒப்புக் கொண்டு, "குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே" என்று வாதாடுமவள் பெரியபிராட்டியார். குற்றத்தை ஒப்புக்கொண்டு வாதாடுவதில் பயனில்லாமல் போகலாம் என்று குற்றத்தையே காணாமலிருப்பவள் பூமிப்பிராட்டி. தான் காணாமலிருந்தாலும், ஸர்வஜ்ஞனான அவன் கண்டு காட்டிவிட்டால் பயனில்லாமல் போகு மாகையாலே குற்றத்தையே நற்றமாகக் (நன்மையாகக்) கொள்ளு மவளாயிருப்பவள் இப்பிராட்டி. இதை எங்கேகண்டோம்? என்னில்: இடக்கை வலக்கை அறியாதவர்களாய், கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்பாராய், அறிவொன்றுமில்லாதாராய், பசுக்

களுக்கு ஸஹஜபந்துக்களாய், கண்ணன் தீம்புகண்டு உகக்குமவரான இடைக்குலத்திலே ஒருத்தியாய்ப் பிறந்தபடியாலே இவளுக்கு இந்த ஸ்வபாவம இயற்கையிலுள்ளது என்று அறியலாம். இக்காரணத்தால் இப்பிராட்டியே புருஷகாரபூதர்களுள் உறுதியானவள் எனகிறன்.

புருஷகாரபூதையாகில் சேதநேச்வரர் இருவரோடும் ஸம்பந்தம் வேண்டுமே; அது இப்பிராட்டிக்குண்டோ? எனில்: உண்டென்கிறது மேலே,—(விஷ்ணுபத்நீ) விஷ்ணுவுக்குப் பத்தினியாயிருப்பவள். அவனுக்கு ஸஹதர்மசாரிணியாயிருப்பவள். போகமயக்குகளாலே அவனை மயக்கி இவன் காரியம் செய்விக்கக் கூடியவள். (விஷ்ணுபத்நீ—ஆஶா) அவன் சேதன ரக்ஷணத்திற்காக உலகில் கடையான குலங்களிலும் அவதரித்து வியாபித்தால், தானும் அவனைப்போல் அவதரித்து வியாபிப்பவள்; அவனே சேதனர்க்காக அப்பாடு படுபவனுகில் இவளால் ஆகவேண்டியதென்? என்ன, அவனைக்காட்டிலும இவளுக்குள்ள வேறுபாட்டைச் சொல்லுகிறன் மேலே,—(அகேராரா) ஸ்வதந்திரனை அவனைப்போலே 'அபிதः பாவகோபமம்' என்று நெருப்பைப்போல் நெருங்கவொண்ணுமை விராமல் மிகவும் குளிர்ந்த தன்மையளாயிருப்பவள். அதனுல் வெந்நீருக்கு குளிர் நீர் போலற இவளை முன்னிட்டே அவனை அணுகவேண்டும் என்கை. ஈச்வரனேடு ஸம்பந்தமிருந்தாலும். இவனேடும் உறவு வேண்டுமே; அதுண்டோ இப்பிராட்டிக்கு? எனனில்: (அஸ்யேஶாநா) இவ்வுலகத்தை உடையவளாயிருப்பவள். உலகத்துக்குத் தாயாயினும, பலமளிக்க சக்தியுள்ளவளாயிருப்பளோ? எனனில்: (ஸஹஸ: ஈஶாநா) தயிர், பால், நெய் முதலான இன்பமளிக்கும பலத்துக்கும ஈச்வரியாயிருப்பவள். 'ஈஶாநா' என்பதை முனனும் பின்னும் கூட்டிக்கொள்வது. "த்ருவா திஶாம்" என்று மோக்ஷத்தை அவனைக்கொண்டு கொடுப்பிக்கும் எனறது. "ஸஹஸ: ஈஶாநா" என்று இவ்வுலகப்பலனகளைத்தான் நேரே கொடுக்கவல்லவளாயிருப்பவள் எனகிறது. இவள் பலமளிப்பதற்காக, இச்சேதனன் அரியசெயல்களைச் செய்யவேண்டுமோ? என்னில்: (யா மநோதா) நெஞ்சால் நினைத்தமாத்திரத்தில் பலமளிப்பவள் இவள் என்கிறது.

ஆக இம்மந்திரத்தில் பிராட்டியின் ஐஹிகாமுஷ்மிகபலப்ரதத்வப்பெருமையைப் பரமபுருஷன் திருமுன்பே சொல்லிக்கொண்டு அவனைச்சரணம் புகுந்தானுயிற்று.

२. बृहस्पतिर्मातरिश्वोत वायुस्सन्दुवाना वाता अभिनो गृणन्तु ।
विष्टम्भो दिवो धरुणः पृथिव्या अस्येशाना जगतो विष्णुपत्नी ॥

2. ப்$_3$ருஹஸ்பதிர் மாதரிஶ்வோத வாயுஸ்
ஸந்து$_3$வாநா வாதா அபி$_4$நோ க்$_3$ருணந்து ।
விஷ்ட$_2$ம்பே$_4$ா தி$_3$வோ த$_4$ருண: ப்ருதி$_2$வ்யா:
அஸ்யேஶாநா ஜக$_3$தோ விஷ்ணு பத்நீ ॥

பதவுரை:—ப்ருஹஸ்பதி:—தேவகுருவான பிருஹஸ்பதியும். மாதரிஶ்வா—(ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும்) வாயுவும். உத—மேலும், வாயு:— (நமது சரீரத்தில் ஸஞ்சரிக்கும்) ப்ராணவாயுவும், ஸந்து$_3$வாநா:—(நம் சரீரத்தில்) பலவிதமான செய்கைகளை நடத்துகிற, வாதா:—அபாநம், வ்யாநம், உதாநம், ஸமாநம் என்ற வாயுக்களும். தி$_3$வ: விஷ்டம்ப$_4$:—தேவலோகத்தைத் தூண்போலே தாங்குமவளாயும், ப்ருதி$_2$வ்யா:–பூமிக்கு, த$_4$ருண:–ஆதாரமாயும், விஷ்ணு பத்நீ–விஷ்ணுவுக்குப் பத்தினியாகவும், (அதனுலேயே) அஸ்ய ஜக$_3$த:–இவ்வுலகத்திற்கு, ஈஶா நா—ஈச்வரியாகவுமுள்ள நீளா தேவியும், ந:–நம்மை, அபி$_4$க்$_3$ருணந்து–அநுக்ரஹிக்கட்டும்.

தேவகுருவாயிருக்கையாலே சுவர்க்கத்திற்குத் தூண்போலிருக்கும் பிருஹஸ்பதியும், ஜீவராசிகளுக்கு உயிரளிக்கையாலே இவ்வுலகத்திற்கு ஆதாரமாயிருக்கும் மூன்று விதமான வாயுக்களும் இப்பிராட்டியின் அம்சத்தைப் பெற்றவராகையாலே சுவர்க்கபூமிகளுக்கு ஆதாரமாயிருப்பவளும், விஷ்ணு பத்தினியாயிருக்கையாலே இவ்வுலகத்திற்கு ஈச்வரியாயிருப்பவளுமான பிராட்டி தன் அம்சபூதர்களான ப்ருஹஸ்பதிவாயுக்களுடன் கூடி நின்று என்னை அநுக்ரஹிக்கட்டும் என்று பிரார்த்திக்கிறுன் இம்மந்திரத்தில்.

(ப்ருஹஸ்பதி:) தன் உபதேசங்களின் மூலம் தேவலோகத்துக்குத் தூண்போலே த$_4$ாரகனுயிருக்கும் பிருஹஸ்பதி. இவ்வுலகத்திற்கு தாரகமான வாயுவைச் சொல்லுகிறது மேல்,–(மாதரிஶ்வா) வெளியிலுள்ள விஷயவாயுவைச் சொல்லுகிறது. இதில்லாவிடில் உயிர்வாழமுடியாதன்ருே. (உதவாயு:) இதிலும் ப்ரதானமானதாய், உயிர்வாழ்வதற்கு இன்றியமையாததாய், இந்திரியங்களைக்காட்டிலும் உயர்ந்ததாய் சரீரத்தினுள்ளிருக்கும் ப்ராணவாயு. (ஸந்து$_3$

வாநா வாதா:) நம் சரீரத்தினுள் பலவிதமான செயல்களுக்குக் காரணமான அபாநம், வ்யாநம், உதா₃நம், ஸமாநம் என்ற வாயுக்கள். ஆக, இவ்வளவால் சுவர்க்கத்திற்கும், பூமிக்கும் தாரகமான வஸ்துக்களைச்சொல்லிற்று. தன் அம்சபூ₄தங்களான இவற்றாலே முறையே சுவர்க்கபூமிகளுக்கு த₄ாரகையான தேவியைச் சொல்லுகிறது அடுத்தபடியாக,— (விஷ்டம்பே₄ா தி₃வ:) தன் அம்சபூதனை ப்ருஹஸ்பதியாலே தேவலோகத்திற்கு தாரகையாயிருப்பவள். (த₄ருணா: ப்ருதி₂வ்யா:) தன் அம்சபூதமான வாயுவினால் பூமிக்கு தாரகையாயிருப்பவள். இவ்வளவேயோ? (அஸ்யேஶாநா ஜக₃த:) சுவர்க்கபூமிகள் முதலான இவ்வுலகத்திற்கு ஈச்வரியாயுமிருப்பவள். இப்பெருமை இவளுக்கு வந்ததற்கு அடியெனனென்னில்: (விஷ்ணு பத்நீ) விஷ்ணுவுக்குப் பத்தினியாயிருப்பவள். இத்தால் இப் பிராட்டிக்குள்ள ஜகதீ₃ஶ்வரத்வம பகவானுக்குப் பத்தினியாயிருப்பதாலே வந்ததென்றும், ஜீவதவமே இவளுக்கு இயற்கையாயுள்ள தன்மையென்றும் தெளிவாகிறது.

"ஈஶாநா" என்று சொல்லியிருக்கையாலே, "தாச்சீ₂ல்யே சாநஶ்" [அஷ்டாத்யாயீ 3-2-129] என்னும் வியாகரணஸூத்ரத்தின்படி, இவளுக்கு அந்தர்யாமியான பெரியபிராட்டியார் இயற்கையிலேயே ஈச்வரியாயிருப்பவள் என்று இம்மந்திரமுரைப்பதாகச் சிலர் சொல்லுகிறார்கள். இப்படி நினைத்துவிடக்கூடாதென்பதற்காகவே சுடர்மிகு சுருதியானது "அஸ்யேஶாநா ஜக₃த:" என்றவுடன் "விஷ்ணுபத்நீ" என்று முடித்தது. ஸ்ரீவேதாந்த தேசிகன் கீதா பாஷ்ய தாத்பர்யசந்திரிகையின் தொடக்கத்தில், "அநவதி₄காதிஶயத்வவசநாத் ஈஶ்வரவ்யதிரிக்தாஶேஷகோ₃சரஸ்யாபி ததை₃ஶ்வர்யஸ்ய ஈஶ்வராபி₄மதத்வாந்ந த்₃வைராஜ்யாதி₃தோ₃ஷ: । 'அஸ்யேஶாநா ஜக₃தோ விஷ்ணுபத்நீ' இதி விஷ்ணுபத்நீத்வவேஷேண ஹி ஸர்வஸ்ய ஜக₃த: இயமீஷ்டே" [இவளுடைய ஐச்வர்யம் எல்லையற்றமேன்மையை உடையது என்கையால் ஈச்வரனைத் தவிர மற்றுள்ளார் அனைவரையும் விஷயீகரிக்கும் இவளுடைய ஈச்வரத்வம் ஸர்வேச்வரன் திருவுள்ளமுகந்ததாகையால் ஈச்வரர் இருவர் என்னும் தோஷமில்லை. 'விஷ்ணுபத்தினியாய், உலகிற்கு ஈச்வரியாயிருக்கும் பிராட்டி' என்று வேதம் உரைத்தபடியே விஷ்ணுபத்தினியாயிருப்பதாலன்றோ இவள் எல்லா உலகையும் நியமிக்கிறாள்] என்று இந்த ஶ்ருதியின் கருத்தைக்காட்டியிருப்பது காணத்தக்கது. ஆகையால், இந்த ஶ்ருதி வாக்கியத்தைக் கொண்டு பிராட்டிக்கு ஸ்வதஸ்ஸித்₃த₄ ஈஶ்வரத்வம சொல்லுவார் வேதாந்த தே₃சிக ஸ்ரீஸூக்திவிருத்₃த₄வாதி₃களே

யாவர். பிராட்டிக்கு நிருபாதி₄கமான ஈஶ்வரத்வத்தை இசைந்தால் வரும் தோஷங்களை ஸ்ரீஸூக்தவ்யாக்யானத்தில் பரக்கப்பேசினோம். அங்கு கண்டு கொள்வது.

(ப்₃ருஹஸ்பதிர் மாதரிஶ்வோத வாயுஸ் ஸந்து₃வா நா வாதா விஷ்டம்பே₄ா தி₃வ: த₄ருண: ப்ருதி₂வ்யா அஸ்யேஶா நா ஜக₃தோ விஷ்ணுபத்நீ ந: அபி₄க்₃ருணந்து) இவளுடைய அம்சபூ₄தர்களான ப்ருஹஸ்பதிவாயுக்களும், உலகின் தாயாகிய இவளும் நம்மை அநுக்ரஹிக்கட்டும். (விஷ்டம்பே₄ா தி₃வ: ப்₃ருஹஸ்பதி: த₄ருண ப்ருதி₂வ்யா மாதரிஶ்வா, உத வாயு:, ஸந்து₃வா நா வாதா:, அஸ்யே ஶா நா ஜக₃தோ விஷ்ணுபத்நீ ந: அபி₄க்₃ருணந்து) என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். "தேவலோகத்திற்கு த₄ாரகனான ப்₃ருஹஸ் பதியும், பூமிக்கு த₄ாரகமான விஷயவாயுவும், ப்ராணவாயுவும், மற்ற வாயுக்களும், இவ்வுலகின் ஈஶ்வரியும், விஷ்ணுவுக்குப் பத்தினியுமான நீளாதேவியும் நம்மை அனுக்ரஹிக்கட்டும" என்று பொருள். ப்ருஹஸ்பதி- வாயுக்கள் இவளுடைய அம்ஶபூ₄தர்கள் என்பது ஸாஹசர்யத்தாலே அர்த்தஸித்தம். ப்ருஹஸ்பதிவாயுக் களான பரிகரங்களோடு கூடிய பிராட்டி நமமை அனுக்ரஹிக் கட்டும் என்கை. இவ்வுலகில் உயிர் தரித்து நின்று இவளை ஆச்ர யிப்பது இவளுடைய அம்ஶபூ₄தமான வாயுக்களின் உதவியில்லா மலாகாதாகையாலும், இவள் விஷயமான அறிவைப் பெறுவது தேவகுருவாய் இவளுடைய அம்ஶபூ₄தனை ப்₃ருஹஸ்பதியின் அனு க்₃ரஹத்தால் ஏற்படுவதாகையாலும் அவர்களோடு கூடிய பிராட்டி நம்மை அனுக்ரஹிக்கட்டும் என்கிறுன். இவளுடைய அம்ஶபூ₄தர் களாகையாலே அவர்கள் அனுக்ரஹிப்பதும் இவளனுக்ரஹமே யாகும். ஆக, இம்மந்திரத்தால் ஸபரிகரையான பிராட்டி நம்மை அனுக்ரஹிக்கக் கடவளாக என்று பிராத்தித்தாருயிற்று.

ஸ்ரீதேவியானவள் செல்வத்துக்கு அதி₄தே₃வதை; இவளுடைய பெருமையை ஸ்ரீஸூக்தம் பேசிற்று. பூதேவியானவள் நிலத்துக்கு அதி₄தே₃வதை; இவளுடைய பெருமையை பூ₄ ஸூக்தம் பறை சாற்றியது. இவவிருவர்க்கும் நாதனுயிருப்பவனே பரம்பொருள் என்று "ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ' என்னும் புருஷஸூக்த வாக்கியம் நிர்ணயித்தது. இவ்வாக்கியத்தில் இரண்டாவது சகாரத்தால் உணர்த்தப்பட்ட நீளாதேவியின் மகிமையை மகிழ்ந் துரைத்தது இந்த ஸூக்தம். இந்த ஸூக்தத்தின் இரண்டு மந்திரங்களும் தைத்திரீயஸம்ஹிதை (4-4-12) யில் உள்ளன.

இவள் ஆநந்தத்திற்கும் ஆநந்தமளிக்கும் பொருள் களுக்கும், ப்ராணத₄ாரகமான வாயு முதலானவற்றுக்கும் புகழுக்கும் அபி₄மானி தேவதையாவாள். "ரந்தி:" என்னும் பதம் இவள் ஆநந்தமளிப்பவள் என்று காட்டிற்று. "க்₁ருதவதி பயஸ்வதி" என்னும் பதங்கள் ஆநந்தமளிக்கும் பொருள்களையளிப்பவள் என்று கோஷித்தது "ப்₃ருஹஸ்பதிர் மாதரிஶ்வோத வாயு:" என்ற மந்திரம் வாயு முதலானவற்றுக்கு இவள் அபிமானினி என்று உணர்த்திற்று. "ஆதி₄பத்யை:" என்னும் பதம் (தலைமைப்) புகழையளிப்பவள் இப் பிராட்டியென்று காட்டிற்று.

"தஸ்ய ப₄ார்யாஸ்திஸ்ருஷ்ஹ்ரீஸ்ரீகீர்த்யுபமாஸ்ச" [ரா-பா]

[பூ₄மிதே₃வி, ஸ்ரீதே₃வி, நீளாதே₃வி ஆகிய மூவரையும் ஒத்த அந்த மூன்று தசரத பத்னிகளிடத்தில்] என்ற விடத்திலே வால்மீகி பகவான் பொறுமையைக் குறிக்கும் ஹ்ரீசப்தத்தாலே பூமிப் பிராட்டியையும், செல்வத்தைக் குறிக்கும் ஸ்ரீஶப்தத்தாலே பெரிய பிராட்டியாரையும், புகழைக்குறிக்கும் கீர்த்தி சப்தத்தாலே இப் பிராட்டியாரையும் குறிக்கையாலே இந்நீளாதேவி புகழுக்கு அதி தேவதை என்பது தெளிவு. இப்படிப்பட்ட பெருமையையுடைய இப்பிராட்டிக்கும் நாயகனுயிருப்பவன் நாராயணனே என்பதை "விஷ்ணுபத்நீ" என்னும் சப்தத்தாலே வேதம் விளங்கவைத்தது. உலகில் சேதனர்களாலே புருஷார்த்தங்களாக நினைக்கப்பட்டிருக் கும் பொன்னும், மண்ணும், புகழும், இன்பமும், ப்ராணனும் இம் மூன்று தேவிகளின் வசப்பட்டவையென்பது இம்மூன்று ஸூக்தங் களாலும் ஸித்தம். இப்படிப்பட்ட இத்தேவிகளின் நாதனை நாரா யணனே பரம்பொருள் என்பதை நாம சொல்லவும் வேண்டுமோ?

इत्थं श्रीविष्णुचित्तवंश्यः श्रीमान् कृष्ण इति ख्यातः।
नीलासूक्तव्याख्यां रम्यामकरोत्सज्जनसन्तुष्ट्यै॥

இத்த₂ம் ஸ்ரீவிஷ்ணுசித்தவம்ஶ்ய: ஸ்ரீமாங் க்ருஷ்ண இதிக்₂யாத: ।
நீளாஸூக்தவ்யாக்₂யாம் ரம்யாமகரோத் ஸஜ்ஜநஸந்துஷ்ட்யை ॥

['ஸ்ரீவிஷ்ணுசித்தர்' என்னும் எங்களாழ்வானுடைய சிஷ்ய வமிசத் தைச்சேர்ந்த ஸ்ரீகிருஷ்ணன் என்பவர் நல்லோர்களின் உகப்பின் பொருட்டு அழகியதான நீளாஸூக்தவ்யாக்யானத்தை இவ்வண்ண மாக இயற்றினர்.]

ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயத்தில்
நீளாஸூக்தவ்யாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# விஷ்ணுஸூக்த வ்யாக்யானம்

श्रीभूमिनीलासहितं नत्वा विष्णुं सनातनम्।
व्याख्यानं विष्णुसूक्तानां सुरम्यं करवाण्यहम्॥

ஸ்ரீபூ₄மிநீளாஸஹிதம் நத்வா விஷ்ணும் ஸநாதநம்।
வ்யாக்₂யாநம் விஷ்ணுஸூக்தாநாம் ஸுரம்யம்கரவாண்யஹம்॥

*[ஸ்ரீபூமிநீளாதேவிகளோடு கூடியவனும், பழையோனுமான விஷ்ணுவை நமஸ்கரித்து, விஷ்ணுஸூக்தங்களுக்கு அழகியதொரு வியாக்கியானத்தை இயற்றக்கடவேனடியேன்.]*

ஸ்ரீபூமிநீளாதேவிகளைக்கொண்டு செல்வத்தையும், உணவுப் பொருள்களையும், ஆநந்தத்தையும் அளித்து ஸர்வேச்வரன் ரக்ஷிக்கும்படியை ஸ்ரீஸூக்தம், பூஸூக்தம், நீளாஸூக்தம் என்னும் ஸூக்தங்களை வியாக்கியானம் செய்து காட்டினோம். இனி, ஸர்வேச்வரன் தானே பலபடியாகச் செய்யும் ரக்ஷணங்களைப் பேசும் விஷ்ணு ஸூக்தங்களை விவரிப்பதன்மூலம் நாராயணனே ஸர்வரக்ஷகன் என்னும் அர்த்தத்தை நிலைநாட்டுவோம்.

"விஷ்ணோர் நுகம்" என்று தொடங்கும் சில மந்திரங்கள் 'விஷ்ணுஸூக்தம்' என்று வழங்கப்படுகிறது. ஆனால் விஷ்ணு ஸூக்த மந்திரங்கள் இவை மட்டுமல்ல. மற்றும் பற்பல மந்திரங்கள் ருக்யஜுர்வேதங்களில் உள்ளன. அவற்றில் முக்கியமான வற்றை இங்கு விவரிப்போம். விஷ்ணுஸூக்தங்கள் முக்கியமாக பகவான் விஷ்ணு பலபடியாக அவதரித்துச் செய்யும் ஆனைத் தொழில்களைச் சொல்லுகின்றன. முக்கியமாக, பகவான் திரிவிக்கிரமனாக அவதரித்து உலகத்தையெல்லாம் தன் அடிவைப்புக்களாலே அளந்தருளியதைச் சொல்லிச்சொல்லி வாய்வெருவுகிறது வேதம்.

இவவிஷணுஸூகதஙகளில, இவவுலகிலிருககும சேதனாகளை அவதரிதது ரக்ஷிபபதும, பரமபதததில நிதயமுகதாகளுககுத தன அனுபவததைக கொடுதது ரக்ஷிபபதும ஆகிய இருவகை ரக்ஷணஙகளும விளககபபடுகினறன. ஆகையால, 'நாராயணனே ஸாவரக்ஷகன' என று நிலைநாட்டும இபரகரணததில இதை விவரிபபது பொருததமானதே

ருகவேதம பரத$_2$மாஷ்டகம த$_3$விதீயாத$_4$யாயம ஏழாவது வாகக$_3$ததில [இதறகு சரியான முதலமண்டலம ஐநதாவது அததியாயம இருபததிரண்டாவது ஸூகததில] பதினாருவது மநதிரததிலிருநது இருபததோராவது மநதிரமவரையில விஷணுவின பெருமைகள பேசபபடுகினறன அவறறை விவரிபபோம முதலில

१. अतो देवा अवन्तु नो यतो विष्णुर्विचक्रमे।
पृथिव्याः सप्तधामभिः॥

**1. அதோ தே$_3$வா அவநது நோ யதோ விஷணுர் விசக்ரமே|**
**பருதி$_2$வயா ஸபதத$_4$ாமபி$_4$ ||**

பதவுரை.—**யத:** **பருதி$_2$வயா** —*யாதொரு பூமியிலிருநது,* **விஷணு** —*விஷணுபகவான்,* **ஸபதத$_4$ாமபி** –*ஏழு சந்தஸஸுககளையும ஸாதனமாககொண்டு,* **விசகரமே**-*அளந்தருளினாரோ,* **அத** —*அநத பூமியிலிருநது,* **தே$_3$வா:**—*நித்யஸூரிகள்,* **ந** — *நம்மை,* **அவந்து**—*காபபாறறடடும.*

*ஸமஸார மண்டலததிலிருநது விடுபடுவதறகு நிதயஸூரிகளைப புருஷகாரமாகப பறறுகிறான இமமநதிரததில*

(யதோ விஷணுா விசகரமே பருதி$_2$வயா) யாதொரு பூமியிலிருநது பரமபுருஷனான விஷணுவானவா அடிவைபபுககளை வைததருளினாரோ (யத.) யாதொரு பூமியிலிருநது, அன்றிககே, யாதொரு காரணததாலே என றுமாம தனககும சேதனாககுமுளள ஸவஸ்வாமிப$_4$ாவஸமப$_3$நத$_4$மாகிற யாதொரு காரணததாலே, எமபெருமான குழநதையை அணைததுக்கிடககும தாயைபபோலே உலகனைததையும திருவடியாலே தடவிகொடுததாரோ என று

குமபோதே, தன காரியமாகவே நினைததுததானே மேலவிழுநது எமபெருமானிடம புருஷகாரகருதயம செயகிருள எனறபடி அனறிககே, "ஶ்ரவ இச்சமாநா" எனறதறகு நனமையைப பிராாத திககப்படுகிறவளாய எனறு பொருள கொளவாருமுணடு (புணயம ஶ்லோகம யஜமாநாய கருணவதீ ஏதி) பரிசுததமான கீாததியைத தனனை ஆராதிபபவனுககு உணடுபணணுபவளாய்ப பரமபுருஷனை அடைகிருள. இவளுடைய கமனம பலபாயாநதமாகிறதெனகை "ஶ்ரூயத இதி ஶ்ரவ" [அனைவராலும கேடகபபடுகிறதாகையாலே (கீாததி) 'ஶ்ரவ' எனபபடுகிறது] எனறு ஶ்ரவஶ்ஶபதமும, "ஶ்லோக்யத இதி ஶ்லோக' [அனைவராலும புகழபபடுகிறதாகை யாலே (கீாததி) 'ஶ்லோகம' எனபபடுகிறது] எனறு சலோக சபதமும கீாததிவாசகமாகினறன இநத மநதிரததால பூமிப பிராடடியின புருஷகாரபாவம பிரகடீகரிககபபடடதாயிறறு

உலகினா அனைவராலும தாய் எனறு புகழபபடும பூமிககு அபிமானினியான பிராடடியைப பணடைமறை புகழநத பெறறியைக கணடோம இபபூஸூகததததில, இபபூமிததாயின நாயகன எவனோ அவனே பரமபொருள எனபது சொலலாமலே விளங்கும "ஜாத வேத" எனறு மறைததுபபேசிய ஸ்ரீஸூகததைபபோலவே, இநத பூஸூகததின முறபகுதி மநதிரஙகள 'பிதா' எனறும, 'அகனி' எனறும மறைததுபபேசியபோதிலும, பிறபகுதி மநதிரஙகள "விஷ்ணுபதநீம" "மாதவ பரியாம" 'அசயுத வலலபாம" "விஷ்ணுருருகாயோ விசகரமே" எனறு மிகவெளிபபடையாகவும பேசியுளளன ஸ்ரீமநநாராயணனே பூமிநாயகன எனபது கையி லஙகுகனியாக இவறறிலிருநது விளஙகுகிறது இவவேத பரஸிததி யினுலேயே லோகததிலும பூதேவிநாயகன புருஷோததமனே எனனும பரஸிததியுளளது இவறருல லோகமாதாவான பூமியின நாயகனுன நாராயணனே பரமபொருள எனபது வெளிபபடையாக விளஙகுகிறது

इत्थं श्रीश्रीनिवाससूरेः सूनुः कृष्ण इति ख्यातः।
अकरोद्रम्यां व्याख्यां भूसूक्तस्याच्युतप्रसादेन॥

இததம ஸ்ரீஸ்ரீநிவாஸஸூரே: ஸூநு கருஷண இதி க்யாத ।
அகரோத் ரமயாம வயாக்யாம பூஸூகதஸயாசயுதபரஸாதேந ॥

['கிருஷணன' எனறு பெயா பெறறவரான ஸ்ரீநிவாஸஸூரியின திருககுமாரா, அசசுதனின அருளாலே, பூஸூகததிறகு இவ வணணமாக அழகியதொரு வியாககியானததை இயறறினா ]

ஸ்ரீவிஷ்ணுசிதத விஜயததில பூஸூகத வயாகயானம முறறிறறு

மாவது பூலோகத்திலுள்ளவர்களுடைய பாபத்தைப் போக்கடிக்கை" என்று ஸாயணபாஷ்யம். (அதோ தே₃வா அவந்து ந:) யாதொரு ஸம்பந்தத்தைப் பார்த்து எம்பெருமான் திருவுலகளந்தருளினுனே அந்த ஸம்பந்தத்தையே பார்த்து நித்யஸூரிகளும் எங்களை ரக்ஷிக்கக்கடவர்கள் என்றும் பொருள்கொள்ளலாம். ஆக, இம் மந்திரத்தால் நித்யஸூரிகளைப் புருஷகாரமாக வரித்தானுயிற்று.

२. इदं विष्णुर्वि चक्रमे त्रेधा नि दधे पदम्।
समूढमस्य पांसुरे ॥

2. இத₃ம் விஷ்ணுர் வி சக்ரமே த்ரேத₄ா நி த₃தே₄ பத₃ம்।
ஸமூட₄மஸ்ய பாம்ஸுரே ॥

பதவுரை:—**விஷ்ணு:**—*திரிவிக்கிரமன்.* **இத₃ம்**—*(காணப்படும்) உலகமெல்லாவற்றையும் குறித்து,* **வி**—*விசேஷமாக,* **சக்ரமே**—*அடிவைப்புக்களைச் செய்தான்; (அப்போது)* **த்ரேத₄ா**—*மூன்றுவிதமாக.* **பத₃ம்**—*திருவடியை,* **நித₃தே₄**—*வைத்தருளினுன்.* **அஸ்ய**—*இப்பெருமானுடைய,* **பாம்ஸுரே**-*தூளியுடன் கூடிய பாத₃ஸ்த₂ானத்தில்.* **ஸமூட₄ம்**—*(எல்லாவுலகும்) நன்கு மறைக்கப்பட்டது.*

பகவானுடைய திருவடிகளின் கீழ் எல்லா உலகும் அடங்கிய பெருமையை விவரிக்கிருன் இம்மந்திரத்தில்.

(இத₃ம் விஷ்ணுர் விசக்ரமே) காணப்படும் எல்லா உலகையும் விஷ்ணுவானவன விசேஷமாக அளந்தருளினுன. (விசக்ரமே) விசேஷமாக அடிகளை வைத்தருளினுன்; உடையவனுகையாலே உரிமையோடு அளந்துகொண்டான். உறங்குகின்ற குழந்தையைத் தாயை அன்போடு அணைத்துக்கொள்ளும் தாயைப்போலே, அவர்கள் அபேக்ஷியாமலிருக்கும்போதே, உடையவன் உடைமையை விடமாட்டாத நசையாலே 'அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்' என்று அடியார் ஆசைப்படும் அடிகளை அன்போடு வைத்தருளினுன் என்றுமாம். (விஷ்ணுர் விசக்ரமே) ஸர்வவ்யாபகனுகையாலே இவன் எல்லாவுலகையும் அளந்துகொண்டது வியப்பில்லை என்கை. (இத₃ம் விசக்ரமே) உடைமையை உடையவன் அளந்து கொண்டான். எப்படி அளந்துகொண்டான்? எனில்: (த்ரேத₄ா

நிதஃ3தேஃ4 பதஃ3ம்) மூன்று விதமாகத் தன் திருவடிகளை வைப்பதன் மூலம் அளந்துகொண்டான். (அஸ்ய பாம்ஸுரே இதஃ3ம் ஸமூடஃ4ம்) இவனுடைய பாதஃ3தூஃ3ளியோடு கூடிய பாதஃ3 ஸ்தஃ2ானத்தில் இவ்வுலகெல்லாம் நன்கு அடங்கியது. முதல் பகுதியிலுள்ள 'இதஃ3ம்' என்னும் பதத்தை இங்கும் கூட்டிக்கொள்வது. (அஸ்ய பாம்ஸுரே இதஃ3ம் ஸமூடஃ4ம்) அவனுடைய பாததூளிபடாத இடம் இல்லை. பேச நின்ற தெய்வங்களான பிரமன் உருத்திரன் முதலியோரும் அவன் திருவடிகளின் கீழே துகையுண்டவர்களே என்கை.

३. त्रीणि पदा विचक्रमे विष्णुर्गोपा अदाभ्यः ।
अतो धर्माणि धारयन् ॥

3. த்ரீணி பதஃ3ா விசக்ரமே விஷ்ணுர் கோஃ3பா அதஃ3ாப்ஃ4ய: ।
அதோ தஃ4ர்மாணி தஃ4ாரயந் ॥

**பதவுரை;—கோஃ3பா:**—*ஸர்வரக்ஷகனும்,* **அதஃ3ாப்ஃ4ய:**—*எவராலும் ஹிம்ஸிக்க முடியாதவனுமான,* **விஷ்ணு:**—*விஷ்ணு பகவான்,* **த்ரீணி**—*மூன்று,* **பதா**—*திருவடிகளை,* **விசக்ரமே**—*விசேஷமாக வைத்தருளினான்;* **அத:**—*இப்படிச் செய்வதன் மூலம்,* **தஃ4ர்மாணி**—*அறங்களை,* **தஃ4ாரயந்**—*போஷித்துக்கொண்டு (திருவடிகளை வைத்தருளினான்.)*

*திருவுலகளந்தருளிய இச்செயலாலே இவனே ஸர்வரக்ஷகன் என்று முடிவுகட்டுகிறான் இம்மந்திரத்தில்.*

(த்ரீணி பதஃ3ா விசக்ரமே) மூன்று திருவடிகளை விசேஷமாக வைத்தருளினான். வைத்தருளினவன் யாரென்னில்: (விஷ்ணு:) ஸர்வவ்யாபியானவன் வைத்தருளினான். வியாபித்து ரக்ஷிப்பதோடு திருப்தியுறாமல் நேரில்தோன்றித் திருவடியாலே தடவிக்கொடுத்து ரக்ஷித்தருளினான். இப்படி ஆனைத்தொழில் செய்யக்காரணமென்ன? எனில்: (கோஃ3பா:) ஸர்வரக்ஷகனுகையாலே செய்தான் என்கை. "கோஃ3பா: ஸர்வஸ்ய ஜகஃ3த: ரக்ஷக:" [கோஃ3பா:' என்றது எல்லா உலகிற்கும் ரக்ஷகன் என்றபடி] என்று ஸாயணபஃ4ாஷ்யம். இவன் இச்செயலைச் செய்யும்போது மஹாபஃ3லிஷ்டர்களான மஹாபஃ3லி நமுசி முதலானுர் தடுத்தால் என் செய்வது எனில்: (அதஃ3ாப்ஃ4ய:) ஒருவராலும் ஹிம்ஸிக்க முடியாதவன். தடுத்த நமுசியையும் வானிற்

சுழற்றினனன்றோ. இப்படி உலகளந்தது எதற்காக எனில்; (அதோ த₄ர்மாணி த₄ாரயந்) இப்படிச் செய்வதன்மூலம் தர்மங்களை நிலை நிறுத்திக்கொண்டு அளந்தான். இந்திரன் முதலானோருடைய குடியிருப்புகளை அபஹரித்ததன்மூலம் தர்மத்துக்குப் புறம்பாக நடந்தான் மஹாபலி. உலகளந்து அவற்றை மீட்டுக் கொடுத்ததன் மூலம் தர்மத்தை நிலைநிறுத்தினன்; பின்புள்ளார்க்கும் தர்மத்திற்குப் புறம்பாக நடக்கக்கூடாது என்று இச்செயலாலே அறிவிப்பதன் மூலம் தர்மத்தை நிலைநிறுத்தினன்.

"பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் ।
த₄ர்ம ஸம்ஸ்த₂ாபநார்த்த₂ாய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ ॥"
[கீதை]

[ நல்லோர்களை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை அழிப்பதற்கும், அறத்தை நிலைநிறுத்துவதற்கும் ஒவ்வொரு யுகத்திலும் பிறக்கிறேன் நான்.] என்று தானே தர்ம ஸம்ஸ்த₂ாபனத்தை அவதாரப்ரயோஜநமாக அருளிச்செய்தானன்றோ.

४. विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे।
इन्द्रस्य युज्यः सखा॥

4. விஷ்ணோ: கர்மாணி பஶ்யத யதோ வ்ரதாநி பஸ்பஶே।
இந்த்₃ரஸ்ய யுஜ்ய: ஸக₂ா ॥

**பதவுரை:—யத:**—யாதொரு செயல்களாலே, **வ்ரதாநி**—(அக்நிஹோத்ராதி) கருமங்களை, **பஸ்பஶே**—(யஜமானன்) அனுஷ்டிக்கிறானோ. **விஷ்ணோ:**-விஷ்ணுவினுடைய, **கர்மாணி**-அந்தச் செயல்களை, **பஶ்யத**-காணுங்கள்; **இந்த்₃ரஸ்ய**-இந்திரனுடைய, **யுஜ்ய:**—அனுகூலனான, **ஸக₂ா**—நண்பனிவன்.

'விஷ்ணுபகவானின் திருச்செயல்களைப் பாருங்கள்' என்று உலகினரை அழைக்கிறான் இம்மந்திரத்தில்.

(விஷ்ணோ; கர்மாணி பஶ்யத) விஷ்ணுவினுடைய செயல்களைப் பாருங்கள்! (கர்மாணி) ஆனைத்தொழில்களை. "ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்" [கீதை] [என் பிறப்பும் செயல்களும் திவ்யமானவை] என்று அவனாலேயே புகழப்பட்ட செயல்களை. (பஶ்யத) கண் படைத்த பயன்பெறப்பாருங்கள்.

''அத்₃ய மே ஸப₂லம் ஜந்ம ஸு்ப்ரப₄ாதா ச மே நிஶா।
யதுₓந்நித்₃ராப்₃ஜபத்₃மாக்ஷம் விஷ்ணோர் த்₃ரக்ஷ்யாம்யஹம் முக₂ம் ॥''

[இன்றே என் பிறப்பு ஈடேறிற்று; என் இரவு நல்லதாக விடிந்தது; ஏனெனில்: மலர்ந்த தாமரைபோன்ற கண்ணையுடைய பகவானின் முகத்தை இன்று காணப்போகிறேன்] என்றானன்றோ அக்ரூரன். கர்மங்களைக் காணுங்கள் என்றது ஜந்மாதிகளுக்கும் உபலக்ஷணம். ''காணுதார் கண்ணென்றும் கண்ணல்ல கண்டோமே'' [பெரிய திரு 11-7-1] என்றும், ''ப₃ர்ஹாயிதே தே நயநே நராணும் விஷ்ணோர் ந லிங்கா₃நி நிரீக்ஷதோ யே'' [பாகவதம் 2-3-22] [விஷ்ணுவினுடைய அடையாளங்களை எவர்களுடைய கண்கள் காண்பதில்லையோ, அந்தக் கண்கள் மயிற்பீலிக்கண்களைப் போன்றவையே] என்றும் கண்ணுக்கு இழிவைத்தேடிக்கொள்ளாமலிருப்பதற்காகவாவது திருவுலகளந்தருளியது முதலான அவனுடைய செயல்களைக் காணுங்கள். (யதோ வ்ரதாநி பஸ்பஶே) யாதொரு செயலைக் காண்பதாலேயே வைதிகனானவன் அக்நிஹோத்ரம் முதலான விரதங்களை அனுஷ்டிக்கிறுனே. ''அதோ த₄ர்மாணி த₄ாரயந்'' என்ற சென்ற மந்திரப்பகுதியை விவரிக்கிறது. பகவானுடைய ஜன்மகர்மங்களைக்கண்டவுடன், துஷ்டநிக்ரஹத்தையும், சிஷ்ட பரிபாலனத்தையும் தர்மஸம்ஸ்தாபனத்தையும் செய்வதற்கு எம் பெருமானிருக்கிறுன் என்னும் நம்பிக்கை ஏற்படுகையால், பகவா னுக்கு ஆராதனமான யஜ்ஞம் முதலானவற்றை மனிதன் அனுஷ்டிக் கிறுன் என்று கருத்து. இந்த விஷ்ணுபகவான் திருவுலகளந் தருளியது முதலான இவ்வானைத்தொழில்களைச் செய்யக்காரண மென்ன? எனில்: (இந்த்₃ரஸ்ய யுஜ்ய: ஸகா) இந்திரனுக்கு அனு கூலனை நண்பனுயிருக்கிறுன் இவன். இந்திரனுக்குத் தம்பியாக வும், அதனாலேயே நண்பனுகவும் இருக்கையாலேயே இவ்வருஞ் செயல்களை அவனுக்காகச் செய்கிறுன் என்கை.

५. तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः।
दिवीव चक्षुराततम् ॥

5. தத்₃விஷ்ணே: பரமம் பத₃ம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:।
தி₃வீவ சக்ஷுராததம் ॥

பதவுரை:— தி₃வி—ஆகாயத்தில், ஆததம்—எங்கும் பரந்திருக்கும், சக்ஷு: இவ—லோகசக்ஷுஸ்ஸான சூரியனைப் போலிருப்பதான, விஷ்ணோ:—விஷ்ணுவினுடைய தத் பரமம் பதம்—அந்தப் பரமபதத்தை, ஸூரய:—நித்யஸூரிகள், ஸதா₃ பஶ்யந்தி—எப்போதும் காண்கிறார்கள்.

முன் மந்திரங்களில் இவ்வுலகத்தவரை அவதாரமெடுத்து ரக்ஷிப்பதைச் சொல்லிற்று. இனி இரண்டு மந்திரங்களாலே பரமபதத்திலுள்ளாரைத் தன் அநுபவத்தைக் கொடுத்து ரக்ஷிப்பதைச் சொல்லுகிறது.

"தி₃வீவ சக்ஷுராததம் விததம் யந்மஹாத்மநாம் |
விவேக ஜ்ஞாந த்₃ருஷ்டஞ்ச தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ||"
[வி-பு 2-8-105]

[ஆகாயத்திலுள்ள லோகசக்ஷுஸ்ஸான சூர்யனைப்போலே மிகப் பரந்திருப்பதும், மஹாத்மாக்களாலே விவேகஜ்ஞானத்தால் காணப்படுவதுமாயிருப்பது விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதம்] என்ற சுலோகத்தில் ஸ்ரீபராசரபகவான் இம்மந்திரத்தை விவரித்தருளினார்.

(தத் விஷ்ணோ: பரமம் பதம்) விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை. (தத்)ப்ரமாணங்களிலே ஸுப்ரஸித்தமாயிருப்பது. (பரமம் பத₃ம்) மேலான ஸ்தானத்தை. (பரமம்) "பரோ மா யஸ்மாத் ஸ பரம:" [எதைக்காட்டிலும் மேலானது இல்லையோ அது பரமம் எனப்படுகிறது] என்கிற வ்யுத்பத்தியாலே ப்ரஹ்மருத்ரேந்திராதிகளுடைய ஸ்தானத்தைக்காட்டிலும் உயர்ந்ததென்று உணர்த்தப்படுகிறது.

"யந்ந தே₃வா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர: |
ஜாநந்தி பரமேஶஸ்ய தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் ||" [வி-பு]

[யாதொன்றை தேவர்களும், முனிவர்களும், (பிரமனான) நானும், சங்கரனும் அறியமாட்டோமோ, அதுவே விஷ்ணுவின் பரமபதம்] என்று பிரமன் வார்த்தை. (ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:) நித்யஸூரிகள் அப்பரமபதத்தை எப்போதும் காண்கிறார்கள். 'ஸதா₃பஶ்யந்தி' [எப்போதும் காண்கிறார்கள்] என்றதால், கர்மஸம்பந்தமில்லாதவர்களாய், எப்போதும் பகவதநுபவம் செய்பவர்கள் சிலர் உள

ரென்றும், அவர்களே இங்கு 'ஸூரிகள்' என்று சொல்லப்படு கின்றனர் என்றும் தோற்றுகிறது. அத்தப் பரமபதம் எப்படியிருக் கிறது? எனில்: (தி₃வீவ சக்ஷுராததம்) ஆகாயத்திலிருக்கும் லோக சக்ஷுஸ்ஸான சூரியனைப்போல் மிகப்பரந்திருக்கிறது. சூரியன் எப்படித் தன் ஒளியாலே மிகப்பரந்திருக்கிறனோ அப்படியே இப் பரமபதமும் மிகப்பரந்திருக்கிறது.

"அத்யர்க்காநலதீ₃ப்தம் தத் ஸ்த₂ாநம் விஷ்ணோர் மஹாத்மந:।
ஸ்வயைவ ப்ரப₄யா ராஜந் து₃ஷ்ப்ரேக்ஷம் தே₃வதா₃நவை: ||"
[பாரதம்]

[அரசனே! மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தாநம், சூரியன், அக்னி ஆகியவர்களைக் காட்டிலும் மிகவும் ஒளியுடையது. தன் ஒளியாலேயே தேவாசுரர்களாலே காணவொண்ணாதது.] என்று சொல்லப்பட்ட இந்தப் பரமபதத்திற்கு சூரியன் சரியான உபமானமாகமாட்டானாகிலும், உலகில் காணப்படும் சோதிகளில் அவனே ஒளிவிஞ்சியவனாகக் காணப்படுகிறானாகையாலே சொல்லு கிறது. இப்பொருள் கீழ் எடுத்த [2-8-103] விஷ்ணுபுராண ச்லோகத்தில் எங்களாழ்வான் ஆதரித்தது. (திவீவ சக்ஷுராததம் ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:) "ஆகாயத்தில் கண் தடையின்றிப் பார்ப்பதுபோலே வித்வான்கள் பரமபதத்தை எப்போதும் காண் கிறார்கள்" என்று ஸாயணபாஷ்யம். இப்பொருளில் "ஸதா₃ பஶ்யந்தி" என்றதற்கு முக்கியார்த்தம் ஸித்திக்கமாட்டாது.

६. तद्विप्रासो विपन्यवो जागृवांसः समिन्धते।
विष्णोर्यत्परमं पदं ॥

6. தத்₃விப்ராஸோ விபந்யவோ ஜாக்₃ருவாம்ஸ: ஸமிந்த₄தே।
விஷ்ணோர் யத் பரமம் பத₃ம் ||

பதவுரை:— விஷ்ணோ:—விஷ்ணுவினுடைய, யத்— யாதொரு, பரமம் பதம்—பரமபதம் உண்டோ, தத்—அப்பரம பதத்தை, விப்ராஸ:-மேதாவிகளும், விபந்யவ:-விசேஷமாகத் துதிப்பவர்களும், ஜாக்₃ருவாம்ஸ:—மிகவும் ஜாக்ரதை யுடையவர்களுமான முக்தர்கள், ஸமிந்த₄தே—ஒளிவிடச் செய்கிறார்கள்.

நித்யஸூரிகள் பரமபதத்தில் ஸதா₃நுப₄வம் செய்வதைச் சொல்லிற்று முன் மந்திரத்தில். முக்தர்களும் அங்கு எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடிக்கொண்டு எழுந்தருளியிருப்பது உத்கோஷிக்கப்படுகிறது இம்மந்திரத்தில்.

''பல்லாண்டென்று பவித்திரனைப்
பரமேட்டியைச் சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்
விட்டுசித்தன் விரும்பியசொல்
நல்லாண்டென்று நவின்றுரைப்பார்
நமோ நாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச்
சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே''

என்று பெரியாழ்வார் இம்மந்திரப்பொருளை விவரித்தருளினார்.

(விஷ்ணோ யத் பரமம் பத₃ம்) விஷ்ணுவினுடைய ஸகலவேத₃ப்ரஸித்₃த₄மான யாதொரு பரமபதம் உண்டோ, (தத்) அந்தப் பரமபதத்தை (விப்ராஸ) மேதாவிகள். ''ப்ரா-பூரணே'' என்று தாதுவாகையாலே ''விசேஷமாகப் பூரணம் செய்பவர்கள்'' என்றும் பொருள் கொள்ளலாம் எம்பெருமானுடைய ஆனந்தத்தை விசேஷமாக நிறையச்செய்பவர்கள் என்று பொருள். சேதன லாப₄ம் ஈச்வரனுக்கு ஆனந்தஹேது என்னும் சாஸ்த்ரார்த்த₂ம் அறிவிக்கப்படுகிறது. நித்யஸூரிகளோடு நித்யாநுப₄வம் நடக்கச் செய்தேயும் அசித்கல்பரான ஸம்ஸாரி சேதனரைக்கண்டு உண்டது உருக்காட்டாமல் ''ஸ ஏகாகீ ந ரமேத'' [அப்பெருமான் தனியனாய ஆநந்திக்கவில்லை] என்று ஆநந்தமற்றவனாகிறானன்றே பரம புருஷன் அந்த சமயத்தில் அவனுடைய ஆனந்தத்தை நிறையச் செய்பவன் முக்தனேயன்றோ ஆகையாலே முக்தர்களை ''விப்ராஸ'' என்கிறது (விபந்யவ.) ''பநு-ஸ்துதௌ'' என்று த₄ாதுவாகையால், விசேஷமாகத் துதிப்பவர்கள் என்று பொருள்படுகிறது. விசேஷமாகத் துதிக்கையாவது — அன்பின் மிகுதியாலே பல்லாண்டுபாடித் துதிக்கை ''ஏத்துவர் பல்லாண்டே'' என்று இப்பதத்தை விவரித்தார் பெரியாழ்வார். அயாவற்ற அறிவுடையவர்களாயிருந்தபோதிலும் அன்பின் மிகுதியாலே அச்சுதனின் அழகைக்கண்டு அறிவுகெட்டு 'இவ்வழகு என்றும் மாறுமலிருக்க

வேணும்' என்று மங்களாசாஸனம் செய்கிறார்களன்றோ நித்ய முக்தர்களும். (ஜாக்$_3$ருவாம்ஸ:) அன்பின் மிகுதியாலே அஸ்த$_2$ானே ப$_4$யசங்கையுண்டாகி, அதிஜாக்ரதையாயிருப்பவர்கள்.

''ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழும்
பூங்காரரவு'' [நான்-திருவ 10]

என்று பரமபதத்தில் நித்யமுக்தர்கள் ஸாமக$_3$ானம் செய்யும் ஒலியைக்கேட்டு, அசுரரரக்கர் ஆரவாரம் செய்து வருகின்றனரோ என்று அஸ்த$_2$ாநே ப$_4$யசங்கைபண்ணி, நெருப்பைக்கக்குகிறான் திருவனந்தாழ்வான் என்றாரன்றோ மழிசைக்கிறைவன்.

''உறகல் உறகல் உறகல் ஒண்சுடராழியே சங்கே
அறவெறி நாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே
இறவுபடாமலிருந்த எண்மருலோகபாலீர்காள்
பறவையரையா உறகல் பள்ளியறை குறிக்கொண்மின்''
[பெரியாழ்திரு 5-2-9]

என்று பெரியாழ்வாரும் சங்கசக்ராதி நித்யஸூரிகளை 'உறங்காம லிருப்பீர்களாக' என்று வேண்டினாரன்றோ. இவ்வரும்பொருளையே ''ஜாக்$_3$ருவாம்ஸ:'' [உறங்காமலிருப்பவர்கள்] என்று உணர்த்துகிறது. (ஸமிந்த$_4$தே) அந்தப் பரமபதத்தை மிகவும் ஒளிவிடச் செய்கிறார்கள். ''தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழிதிகழ் திருச்சக்கரம்'' ''வடிவார் சோதி வலத்துறையும் சுடராழி'' என்கிறபடியே எல்லாச்சோதிகளிலும் ஒளிமிக்க பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையும் ஒளிபெறச்செய்யும் இவர்கள் பரமபதத்தை மிகவும் ஒளிபெறச்செய்கிறார்கள் என்பது மிகையில்லையன்றோ. 'ஸமிந்த$_4$தே-ஸம்யக் தீ$_3$பயந்தி' என்று ஸாயணபாஷ்யம். (தத் ஸமிந்ததே) 'அந்தப்பரமபதத்தை மிகவும் ஒளிவிடச்செய்கிறார்கள்' என்னும் பொருள் கீழே காட்டப்பட்டது. அந்தப் பரமபதத்திலே மிகவும் பிரகாசிக்கிறார்கள் என்றும் பொருள்கொள்ளலாம்.

ஆக, இவ்விரண்டு மந்திரங்களாலும் பரமபதத்தில் பரமபுருஷன் நித்யமுக்தர்களுக்குத் தன் அநுபவத்தைக் கொடுத்து ரக்ஷிக்கும் படியை வேதம் விவரித்ததாயிற்று.

இனி, ருக்வேதம் இரண்டாமஷ்டகம், இரண்டாமத்தியாயம் இருபத்தினாலாவது வர்க்கம்தொடங்கி—(இதற்கு சரியான முதல்

மண்டலம் இருபத்தோராவது அத்தியாயம் நூற்றைம்பத்து நாலா வது ஸூக்தம் தொடங்கி)—உள்ள மந்திரங்களை விவரிப்போம்.

१. विष्णोर्नु कं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजांसि।
यो अस्कभायदुत्तरं सधस्थं विचक्रमाणस्त्रेधोरुगायः॥

1. விஷ்ணோ நு கம் வீர்யாணி ப்ரவோசம்
யா பார்த்தி$_2$வாநி விமமே ரஜாம்ஸி।
யோ அஸ்கப$_4$ாயது$_3$த்தரம் ஸத$_4$ஸ்த$_2$ம்
விசக்ரமாணஸ் த்ரேதே$_4$ாருக$_3$ாய ॥

**பதவுரை** — *(மனிதர்களே!)* **விஷ்ணோ.**—*ஸர்வஸ்வாமி யான பரமபுருஷனுடைய,* **வீர்யாணி**-*வீரசரிதங்களை,* **நுகம்**-*மிகவிரைவாக,* **ப்ரவோசம்**—*சொல்லுகிறேன், (அவையெவை யெனில்)* **ய**·—*யாவரொரு விஷ்ணுவானவர்,* **பார்த்தி$_2$வாநி**—*பிருதிவியைச்சேர்ந்த (அதற்குக்கீழுள்ள)* **ரஜாம்ஸி**—*(ஏழு உலகங்களையும்),* **விமமே**—*ஸ்ருஷ்டித்தருளினர்,* **ய**—*யாவ ரொரு விஷ்ணுவானவர்,* **ஸத$_4$ஸ்தம்**—*(புண்ணிய சாலிகள்) கூடியிருக்குமிடமான,* **உத்தரம்**—*மேல (ஏழு) உலகங்களை யும்,* **அஸ்கப$_4$ாயத**-*ஸருஷ்டித்தருளினர்,* **உருக$_3$ாய** -*மிகவும் புகழப்படும் அப்பரமன்,* **த்ரேத$_4$ா**—*மூன்றுவிதமாக,* **விசக்ரமாண** —*(இவ்வுலகை) அளந்தருளினர்.*

*ஸர்வரக்ஷகனன விஷ்ணு ரக்ஷணத்துக்குறுப்பாகச்செய்யும் வீர சரிதங்கள் சிலவற்றைப் பேசுகிறன இம்மந்திரத்தில.*

*(விஷ்ணோ நுகம் வீர்யாணி ப்ரவோசம்) ஸர்வவ்யாபியான விஷ்ணுவின் வீரசரிதங்களை விரைவில் பேசுகிறேன். (விஷ்ணோ) ஸர்வவ்யாபியாகையாலே இவன் வீரச்செயல்களைச் செய்வது வியப்பில்லையென்கை (நுகம்) மிகவிரைவாக. ஸர்வத$_4$ானமாக உள்ளதெல்லாம் சொல்லுவதென்றல் காலமெல்லாம் சொன்னலும் மாளாது ஆகையால, மிகவிரைவாகச் சுருக்கிச் சொல்லுகிறேன் (வீர்யாணி) ஒவ்வொரு வீரச்செயலின் பெருமைக்கும் எல்லையில்லை என்பது மட்டுமில்லை, அச்செயல்களுக்கும் தொகையில்லை (ப்ரவோ சம்) சொல்லுகிறேன் (நுகம் ப்ரவோசம்) அத்தனையும் சொல்லாவ தில்லை, சில செயல்களைச் சடக்கெனச் சொல்லுகிறேன்*

மேலே சில செயல்களைச் சொல்லுகிறுன்,— (ய: பார்த்தி$_2$வாநி விமமே ரஜாம்ஸி) அந்த பகவான் பூமியோடு சேர்ந்த கீழேழு உலகங்களையும் விதவிதமாக ஸ்ருஷ்டித்தான். (பார்த்தி$_2$வாநி) பூமியோடு ஸம்பந்தப்பட்டவை. பகவான் திருவுலகளந்தருளியபோது பூமியில் நின்ற திருவடியாலே கீழ் ஏழு உலகங்களையும் அளந்தானன்றோ; அத்திருவடி ஸம்பந்தம்பெற்ற உலகங்கள் 'பிருதிவீ ஸம்பந்தியான உலகங்கள்' எனப்படுகின்றன "பார்த்திவாநி ரஜாம்ஸி" என்னும் தொடராலே. (ரஜாம்ஸி) உலகங்கள். "லோகா ரஜாம்ஸ்யுச்யந்தே" [உலகங்கள் 'ரஜஸ்ஸுக்கள்' எனப்படுகின்றன] என்று யாஸ்கர் நிர்வசனம் செய்தார். (விமமே) விதவிதமாக நிருமித்தான். சேதனரைப் பாபப$_2$லனை அனுபவிக்கச் செய்து திருத்தி ரக்ஷிப்பதற்காகக் கீழுலகங்களை விதவிதமாக ஸ்ருஷ்டித்தான் ஸர்வேச்வரன்; (யோ அஸ்கப$_4$ாயது$_3$த்தரம் ஸத$_4$ஸ்தம்) புண்ணியசாலிகள் கூடியிருக்கும் இடமான பூமிதொடக்கமான மேலுலகங்களையும் ஸ்ருஷ்டித்தான். சேதனருடைய புண்ணிய பலனைக் கழித்து மோக்ஷமடைவிப்பதற்காக மேலுலகங்களையும் ஸ்ருஷ்டித்தான். (ஸத$_4$ஸ்தம்) ஸஹஸ்தானம். புண்ணியசாலிகள் கூடியிருக்குமிடம். (உத்தரம்) மேலிருப்பது. (அஸ்கப$_4$ாயத்) நிலை நிறுத்தினுன்; ஸ்ருஷ்டித்தான் என்கை. "பார்த்தி$_2$வாநி விமமே ரஜாம்ஸி" என்று பூமியோடு சேர்ந்த மூவுலகையும், "யோ அஸ்கப$_4$ாயது$_3$த்தரம் ஸத$_4$ஸ்த$_2$ம்" என்று மிகப்பரந்ததாய், மூவுலகுக்கும் இருப்பிடமான அந்தரிக்ஷத்தையும் ஸ்ருஷ்டித்தான் என்பதாகவும் கொள்ளலாம். இப்படி ஸ்ருஷ்டித்த பின்பு, ஸ்ருஷ்டிக்கப்பட்ட உலகம் துஷ்டர்களால் ஆக்ரமிக்கப்பட்டால் வாளாவிருப்பனே? எனில்: (விசக்ரமாணஸ் த்ரேதே$_4$ாருக$_3$ாய:) அப்போது மூன்று வகையாக எல்லை நடந்து அளந்துகொண்டு உடையவன் உடைமையை ரக்ஷித்தான் என்கிறுன். (உருக$_3$ாய:) இப்படி ஸர்வ ப்ரகாரத்தாலும் ரக்ஷகனுயிருக்கையாலே உயர்ந்தவர்களாலே துதிக்கப்பட்டான். (விசக்ரமாண உருக$_2$ாய:) திருவுலகளந்தருளின போது, ஜாம்பவான் முதலானவர்களாலும், மற்றும் பலராலும் துதிக்கப்பட்டான். (உருக$_3$ாய:) பெரியோர்களாலே துதிக்கப்பட்டான்; பெரியதாகத் துதிக்கப்படான். "மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி" என்றும்,

**"ஸங்கை$_4$ஸ் ஸுராணும் தி$_3$வி பூ$_4$தலஸ்தை$_2$ஸ்**
**தத$_2$ா மருத்$_3$பி$_4$ர் க$_3$க$_3$நே ச கே$_2$சரை:।**

ஸதுத கரமாங ய பரசகார ஸர்வத₃ா
மமாஸது மாஙக₃ளயவிவருத₃த₄யே ஹரி ||
[விஷ்ணுதாமம]

[தேவருலகில தேவாகூட்டஙகளாலும, பூமியில உளளவாகளாலும, ஆகாயததில மருததுக்களாலும, ஆகாசஸஞசாரிகளாலும துதிக் கபபட்டவனுய எவனெருவன திருவடிகளை வைததானே அநத பகவான எனககு மஙகளததைப பெருகச செயவானுக] எனறும பரஹமாதிகள பலராலும துதிககபபட்டானனறே திரிவிககிரமன.

வேறெரு வகையாகவும பொருள கொளளலாம. (ய பாாத்தி₂வாநி விமமே ரஜாமஸி) பகவான பூமிமுதலான உலகஙகளைக் காம ப₂லபே₄ாக₃ததின பொருட்டு ஸருஷ்டிததான. (யோ அஸகப₄ாய து₃ததரம ஸத₄ஸத₂ம) அககாமம விட்டவுடன தனனை அடைநதுய் வதறகாக, இவையெல்லாவறறுக்கும மேலானதும, நிதயமுக்தாகள கூடியிருபபதுமான பரமபததைத நிலைநிறுததினுன. (உததரம) எலலாவறறுக்கும மேலிருபபது. அபராகருதமாகையாலும, புநராவ்ருததி (திருமபிவருதல) இல்லாமையாலும உயாநதது. "அபுநராவருததேஸ தஸய உதகருஷ்டதவம" [புநராவருததி இல்லாமையால அவவுலகம உயாநததாகிறது]எனறு ஸாயண பாஷயம.(ஸத₄ஸதம) "அடியாாகள குழாஙகளை உடனகூடுவதெனறுகொலோ"[திருவாய்] எனகிறபடியே ஸத₃ாத₃ர்சனம பணணும நிதயஸூரிகளும, சூழநதிருநதேததும முகதாகளும கூடியிருககுமிடம (அஸகப₄ாயத) திருடமாக நிலைநிறுத்தினுன அழிவில்லாதபடி ஆககிவைததான. முதலும முடிவுமில்லாதபடி செயதுவைததான.

மநதிரம முழுவதையும திரிவிககிரமாவதாரபரமாகவும் பொருள கொளளலாம (உருக₃ாய உததரமஸத₄ஸத₂ம தரேத₄ா விசகரமாணய. அஸகப₄ாயத) பெரியோாகளால (மிகவும) துதிககபபடும் எநத பகவான உததரவேதியினின்று தொடஙகி மூனறுவிதமாக அடிவைபபுக்களைச் செய்துகொண்டு, (குடியிருபபையிழநது கிடந்த தேவாகளை) உறுதியாக நிலைநிறுததினுரோ, (அஸகப₄ாயத) இன்னுரை நிலைநிறுததினுன எனறு சொலலாமையாலே, தேவாகளைக குடியிருபபைககொடுதது நிலைநிறுததியதையும, மஹாபலியைப பாதாளததிலவைதது நிலைநிறுததியபடியையும, உலகஙகளையும, தர்மததையும நிலைநிறுததியபடியையும எலலாம குறிககிறது. (உத்தரம ஸத₄ஸ்த₂ம) மஹாபலி யாகமசெய்த இடமான

உத்தரவேதி. (ஸத₄ஸ்த₂ம்) ரித்விக், ஹோதா, அத்₄வர்யு முதலானோர் கூடியிருக்குமிடம். (உத்தரம் ஸத₄ஸ்தம்) வாமனன் வருகையாலே உத்தரவேதியாயிற்று.

"சத்திரமேந்தித் தனியொரு மாணியாய்
உத்தரவேதியில் நின்றவொருவனைக்
கத்திரியர் காணக் காணி முற்றுங்கொண்ட
பத்திராகாரன் பாரளந்தான்" [பெரியாழ்திரு 1-9-6]

என்று மஹாபலி யாகம்செய்த இடத்தை உத்தரவேதியென்றுரன்றோ பெரியாழ்வார்.(உத்தரம் ஸத₄ஸ்த₄ம் த்ரேத₄ா விசக்ரமாண:) உத்தரவேதியிலே நின்று 'மூவடி மண் தா' என்று யாசித்துப் பெற்று, மூன்று அடிவைப்புகளை அங்கு செய்யப்புகுகிறவனாய்; அளக்கத்தொடங்கியது உத்தரவேதியில்; அளந்து முடித்தது எதையென்னில்: (ய: பார்த்தி₂வாநி விமமே ரஜாம்ஸி) பூமியோடு கீழும் மேலும் ஸம்பந்தித்திருக்கும் உலகங்களையெல்லாம் ஒரு புழுதிவிடாமல் எந்த பகவான் அளந்தருளினானோ. (விஷ்ணோர் நுகம் வீர்யாணி ப்ரவோசம்) அந்த பகவானுடைய வீரசரிதங்களை விரைவில் பேசுகிறேன்.

२. प्र तद्विष्णुः स्तवते वीर्येण मृगो न भीमः कुचरो गिरिष्ठाः।
यस्योरुषु त्रिषु विक्रमणेषु अधिक्षियन्ति भुवनानि विश्वा॥

2. ப்ர தத்₃விஷ்ணு: ஸ்தவதே வீர்யேண
ம்ருகே₃ா ந பீ₄ம: குசரோ கி₃ரிஷ்ட₂ா:।
யஸ்யோருஷு த்ரிஷு விக்ரமணேஷு
அதி₄க்ஷியந்தி பு₄வநாநி விஶ்வா ॥

பதவுரை:— யஸ்ய—எந்த பகவானுடைய, உருஷு த்ரிஷு விக்ரமணேஷு—மிகப்பெரிய மூன்று அடிவைப்புக்களில், விஶ்வா பு₄வநாநி—எல்லாவுலகங்களும், அதி₄க்ஷியந்தி—அடங்குகின்றனவோ, தத்விஷ்ணு—அந்த விஷ்ணுவானவர், பீ₄ம:—பயங்கரமானதாய், குசர:—பூமியில் ஸஞ்சரிப்பதாய், கி₃ரிஷ்ட₂ா:—மலைக்குத்தாவுவதான, ம்ருகே₃ா ந — சிங்கம் போலேயிருப்பவனாய். வீர்யேண-வீரச்செயலினால், ஸ்தவதே-துதிக்கப்படுகிறான்.

திரிவிககிரமாவதாரச செயலாலே உலகினா அனைவராலும துதிககபபடுகிருன எனகிறது.

(பர தத விஷ்ணு ஸதவதே வீாயேண) விஷ்ணுவானவன தன வீரசசெயலாலே மிகவும துதிககபபடுகிருன இவன செய்த செயலுககு உபமானமுணடோ? எனில (மருகோ₃ா ந பீ₄ம குசரோ கி₃ரிஷ்டா₂ா:) பூமியில் ஸஞ்சரிபபதாய பயஙகரமானதான சிஙகம மலைககுததாவுவதுபோனற செயலைசசெயதவன. (மருக:) தன விரோதிகளை வேடடையாடுவதாலே 'மருக₃ம' எனபபடுகிறது சிஙகம, இவனும நமுசிமுதலான விரோதிகளை வேட்டையாடுகிருன. (பீ₄ம ) அதிபயஙகரமாயிருககிறது சிஙகம "பீ₄மோ பீ₄மபராகரம" எனபபடும இவனும விரோதிகளுககு அதிபயஙகரனுயிருபபவன. "பீ₄ஷாஸமாத₃ வாத பவதே" [இவனிடம பயததாலே வாயு வீசுகிறது] எனபபடுமவன (குசர -கி₃ரிஷடா₂ா ) பூமியில ஸஞ்சரிததுக கொணடே மலைககுத தாவும சிஙகம, இவனும பூமியில நினறு கொணடே உயரேயுளள லோகஙகளுககுத தாவினுன. (குசர:) குதஸிதமான ஹிமஸாதிகளைச்செயவது ஸிமஹம. இவனும ஹிரணயாதிகள விஷயததிலே ஹிமஸாதிகளைச செய்பவன். (குசர ) பூமி முழுவதும ஸஞ்சரிபபவன ஸாவாநதாயாமியாயிருப்பவன (கி₃ரிஷடா₂ா ) மலைபோலே உயரேயுளள பரமபதததில எழுநதருளியிருபபவன அனறிககே, 'கீ₃' எனனும சபதம சொலலைக குறிககுமாகையாலே, 'கி₃ரிஷடா₂ா' எனறு மறைசசொறகளிலே மறைநதிருபபவன' எனறும பொருள கொளளலாம. "வேதைஃ₃ஶச ஸாவைரஹமேவ வேத₃ய" [எலலா வேதஙகளாலும சொலலபபடுபவன நான] எனருன அவன "மறையாய நாலவேதததுள நினறமலாசசுடரே" எனருா ஆழவாா. (குசர ) ராமகிருஷ்ணுதயவதாரஙகளில பூமியிலே ஸஞ்சரிததவன. (கி₃ரிஷடா₂ா ) திருமலை, திருமாலிருஞசோலைமலை, சிஙகவேளகுனறம, ஹஸதிகி₃ரி, ஶவேதகி₃ரி முதலான மலைகளிலே அாசசாரூபியாய் எழுநதருளியிருப்பவனிவன. (மருகோ₃ா நபீ₄ம: குசரோ கி₃ரிஷடா₂ா ) நருஸிமஹாவதாரத்தை பரஸதாவிபபதாகவும கொளளலாம

(மருக₃.) சிஙகமாயவதரித்தவன சிஙகமபோலே பயஙகரனுயிருபபானே எனில (ந பீ₄ம ) அதிமநோஹரனுயிருபபவன "நாரஸிமஹவபு ஸ்ரீமாந" [விஷ்ணுஸஹஸரநாமம] எனறு வியாஸரும, "அழகியான் தானே அரியுருவன தானே" "நரஙகலநத சிஙகமாய்ககீணடதிருவன" எனறு ஆழவாாகளும இவவழகியசிஙகனின்

அழகிலே ஈடுபட்டனர். (குசர:) ஹிரண்யனேடு யுத்தம்செய்யும் போது பூமியெங்கும் ஸஞ்சரித்தவன். (கி₃ரிஷ்ட₂ா:) பூமியிலுமில்லாமல் ஆகாசத்திலுமில்லாமல் உயர்ந்த ப்ரதேசமான படியின் மேலிருந்து ஹிரண்யனை ஸம்ஹரித்தவன். (தத் விஷ்ணு: வீர்யேண ப்ரஸ்தவதே) அந்த விஷ்ணு இப்படிப்பட்ட வீரச்செயலினுலே அனைவராலும் மிகவும் துதிக்கப்படுகிருன். இந்த மந்திரம் ந்ருஸிம்ஹதாபனீய உபனிஷத்தில் ந்ருஸிம்ஹவிஷயமாக உதாஹரிக்கப்பட்டதாகையாலே இப்படிப் பொருள்கொள்ளப்பட்டது. (யஸ்யோருஷு த்ரிஷு விக்ரமணேஷு) எவனுடைய மிகப்பெரிய மூன்று அடிவைப்புகளில். (அதி₄க்ஷியந்தி பு₄வநாநி விஶ்வா) அனைத்துலகும் அண்டி வாழ்கின்றதோ; அப்படிப்பட்ட விஷ்ணுபகவான் தன் வீரச்செயலாலே துதிக்கப்படுகிருன் என்று மேலோடு கூட்டிக் கொள்வது. ஆக, இம்மந்திரத்தால் ந்ருஸிம்ஹத்ரிவிக்ரமாவதாரங்களான இரண்டு வீரச்செயல்கள் பேசப்பட்டன.

३. प्र विष्णवे शूषमेतु मन्म गिरिक्षित उरुगायाय वृष्णे।
य इदं दीर्घं प्रयतं सधस्थमेको विममे त्रिभिरित्पदेभिः॥

3. ப்ர விஷ்ணவே ஶூஷமேது
மந்ம கி₃ரிக்ஷித உருகா₃யாய வ்ருஷ்ணே।
ய இத₃ம் தீ₃ர்க்க₄ம் ப்ரயதம்
ஸத₄ஸ்த₂மேகோ விமமே த்ரிபி₄ரித்பதே₃பி:॥

பதவுரை:— ய:—யாவனெருபகவான், தீ₃ர்க்க₄ம்—நீண்டதும், ப்ரயதம்—பரந்ததுமான, இத₃ம் ஸத₄ஸ்தம்—இந்த உலகையெல்லாம். ஏக: இத்—ஒருவனுகவே, த்ரிபி₄: பதே₃பி₄:—மூன்று பதங்களால், விமமே—அளந்தருளினுனே, வ்ருஷ்ணே—(காமங்களை) வர்ஷிப்பவனும், உருகா₃யாய—மிகவும் துதிக்கப்படுபவனும், கி₃ரிக்ஷிதே—உயர்ந்த ஸ்தானத்திலிருப்பவனுமான, விஷ்ணவே—அந்த விஷ்ணுவுக்கு, ஶூஷம்—ப₃லமும், மந்ம—(என்) துதியும், ப்ர ஏது—போய்ச்சேரட்டும்.

சென்ற மந்திரத்தில் சொல்லப்பட்ட ஆனைத்தொழில்களை நினைத்து மங்களாசாஸனம் செய்கிருன் இம்மந்திரத்தில்.

(ப்ர விஷ்ணவே ஶூஷமேது மந்ம) என் மங்களாசாஸனமும், அதனாலேற்படும் ப₂லமும் விஷ்ணுவை அடையட்டும். (மந்ம) மனனம்; மனத்தால் செய்யப்படும் மங்களாசாஸனம். (ஶூஷம்) அதனாலேற்படும் பலம். எப்படிப்பட்ட விஷ்ணுவுக்கு? எனில்: (கி₃ரிக்ஷிதே) மிகவுயர்ந்த ஸ்தானமான பரமபதத்திலிருப்பவனுக்கு; சென்ற மந்திரத்தில் சொல்லப்பட்ட மாரிமலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சீரியசிங்கமாகிற ந்ருஸிம்ஹனுக்கு என்றுமாம்.

''அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனைப்
பந்தனைதீரப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று பாடுதுமே''

என்று ந்ருஸிம்ஹன் செய்த ஸாஹஸச்செயலுக்குப் பல்லாண்டு பாடினாரன்றோ பெரியாழ்வாரும். (கி₃ரிக்ஷிதே) பலவேதவாக்குக்களிலே படிக்கப்படும் திரிவிக்கிரமனுக்கு என்றுமாம். '' நடந்த கால்கள் நொந்தவோ '' [திருச்சந்த-61] '' தாளாலுலகமளந்த அசைவேகொல்'' [நான்திருவ-35] '' இப்படிதான் நீண்டு தாவிய அசைவோ '' [திருவாய் 8-3-5] என்று ஆழ்வார்களும் இச்செயலைக் கண்டு அதிசங்கை செய்து மங்களாசாஸனம் செய்தனரன்றோ. (உருகா₃யாய) இவ்வீரச்செயலைக்கண்டு வியந்தவர்களால் மிகவும் துதிக்கப்படுமவனுக்கு. (வ்ருஷ்ணே) மஹாபலிக்கும், இந்த்ராதிகளுக்கும் பெரும்பலன்களையளித்து, உலகனைத்துக்கும் தன் ஸ்பரிசத்தை அளித்த பெருங்கொடையாளியான திரிவிக்கிரமனுக்கு. ப்ரஹ்லாதனுக்கு வரங்களை வர்ஷித்து, தேவர்களுக்குக் குடியிருப்பைக் கொடுத்த நரசிங்கனுக்கு என்றுமாம். (விஷ்ணவே) எங்கும் வியாபித்தவனுக்கு. இரண்டு அவதாரங்களுக்கும் பொருந்தும்.

(ய:) யாவனொரு பகவான். (இத₃ம்) நாம் கண்ணெதிரில் காணும் இவ்வுலகை. (தீ₃ர்க்க₄ம்) நீளத்தில் குறைவுள்ளதாயிருக்கையால் அளந்தானோ? (ப்ரயதம்) பரப்பில்தான் குறையுண்டாய் அளந்தானோ? (ஸத₄ஸ்த₂ம்) அதன்மேல் வாழ்பவர்க்குத் தீங்குண்டாகும்படிதான் அளந்தானோ? (ஏகஇத்) துணையுண்டாகித்தான் அளந்தானோ? (த்ரிபி₄: பதே₃பி₄:) பத்தெட்டடியிட்டு அளந்தானோ? நீளத்திலும் குறைவில்லை; பரப்பிலும் குறைவில்லை. திருவடி பட்டதனால் வாழ்வார்க்கும் ஒரு தீங்குமில்லை. அளக்கும்போது துணையில்லை ; மூன்றேயடியிட்டு அளந்தான். இதோராச்சரியமிருந்தபடியென்! (விமமே) விசேஷமாக₄ அளந்தான். பேரன்

போடு அளந்தான். அன்றிக்கே, "பூ₄ர் பு₄வ: ஸுவ:" என்னும் மூன்று பத₃ங்களைக்கொண்டு மூவுலகையும் விசேஷமாக ஸ்ருஷ்டித்தான் என்றும் பொருள் கொளளலாம், முந்தியபொருளிலே அர்த்த₂ஸ்வாரஸ்யம் அதி₄கம்.

ஆக, இம்மந்திரத்தால் பகவானுடைய ஆணைத்தொழில்களை அனுஸந்தித்துப் பல்லாண்டு பாடிற்றாயிற்று.

४. यस्य त्री पूर्णा मधुना पदानि अक्षीयमाणा स्वधया मदन्ति।
य उ त्रिधातु पृथिवीमुत द्यामेको दाधार भुवनानि विश्वा॥

4. யஸ்ய த்ரீ பூர்ணா மது₄நா பத₃ாநி
அக்ஷீயமாணா ஸ்வத₄யா மத₃ந்தி।
ய உ த்ரித₄ாது ப்ருதி₂வீமுத த்₃யாம்
ஏகோ த₃ாத₄ார பு₄நாநி விஶ்வா॥

பதவுரை:—யஸ்ய—எந்த விஷ்ணுவினுடைய, த்ரீ பத₃ாநி—மூன்று அடிவைப்புக்களும், மது₄நா—அமுதத்தாலே, பூர்ணா—நிறைந்தவையாய், அக்ஷீயமாணா—அழிவற்றவையாய், ஸ்வத₄யா மத₃ந்தி—(அடியார்களை) அந்நத்தினால் களிப்பூட்டுகின்றனவோ; ய: உ—அந்த பகவானே, ப்ருதி₂வீம்—பூமியையும், உத த்₃யாம்—மேலும் அந்தரிக்ஷத்தையும், விஶ்வா பு₄வநாநி—எல்லா உலகையும், த்ரித₄ாது—நிலம், நீர், தீ என்னும் மூன்று தாதுக்களை உடையதாம்படி, ஏக:—ஒருவனாகவே, த₃ாத₄ார—தரித்து நின்றான்.

அனைத்துலகையும் உடையவனாகையாலே, இவற்றைதரித்து நிற்பதோடு நில்லாமல், அனைவரையும் தன் அமுதவடிகளாலே தடவிக்களிப்பூட்டினான் என்கிறான் இம்மந்திரத்தில்.

(யஸ்ய ஸுப்ரஸித்தனை) விஷ்ணுவினுடைய. (த்ரீ பதாநி) த்ரீணி பதாநி; மூன்று அடிவைப்புக்களும். (மது₄நா பூர்ணா) மது₄நா பூர்ணாநி; இனிய திவ்யாமுதத்தால் நிறைந்தவையாய். "தி₃வ்யேந அம்ருதேந பூர்ணாநி" என்று ஸாயணபாஷ்யம். "தேனே மலரும் திருப்பாதம்" [திருவாய் 1-5-5] என்று நம்மாழ்வாரும், "தவாம்ருத ஸ்யந்தி₃நி பாத₃பங்கஜே" [ஸ்தோ-ர] [அமுதமொழுகும் உன் திருவடித்தாமரையில்] என்று ஆளவந்தாரும் அருளிச்

செயததறகு அடி இம்மநதிரமும "விஷ்ணோ பதே₃ பரமே மத்₄வ உதஸ" எனனும அடுதத மநதிரபபகுதியுமாம அனறிககே இஙகு 'மது₄' எனறது திருவடியின இனிமையாகவுமாம அனறிககே, திருவடியிலிருநது புறபபடும கிரணஸமூஹம தேனவெளளமாக ரூபிககபபடுவதாகவும கொளளலாம.

"ஶ்ரேய கிரநது கிரணாஶ சரணாரவிநத₃
நிஷ்யநத₃மாந மகரநத₃ ரஸௌக₄தே₃ஶ்யா |
தஜ்ஜா ஶ்ருதோ மது₄ந உதஸ இதி ப்ரதீதா
மாஙக₃ளயரஙக₃நிலயஸ்ய பரஸய த₄ாமந ||

[மஙகளததுககிருபபிடமான அரஙகநகரிலவாழும பரமபுருஷனுடைய திருவடித்தாமரையிலிருநது வெளிவருமவையாய, திருவடித்தாமரையிலிருநது வெளிவரும தேனவெளளம போனறவையாய, வேதததில "மது₄வின பரவாஹம" எனறு சொலலபபடுமவையான கிரணஙகள எனககுச் சிறபபைச செயயட்டும] எனகிற சலோகம இவவாத ததில பரமாணம. (அக்ஷீயமாணா) அக்ஷீயமாணாநி. அழியாதவை "தவத₃ஙக₄ரிமுத₃தி₃ஶ்ய ஸக்ருத கருதோஞ்ஜலி ந ஜாது ஹீயதே" [ஸதோ-ர] [உன திருவடியைக குறிததது ஒருகால செயயபபட்ட அஞ்சலி ஒருபோதும அழிவதிலலை] எனகிறபடியே ஸாத₄னமான அஞ்ஜலியே அழியாததாயிருககுமபோது, ஸாத₄யமான திருவடி அழியாததெனனுமிடம சொலலவுமவேணுமோ? (அக்ஷீயமாணா ஸவத₄யா மத₃நதி) அழியாததாய அனனததையளிததுக களிப பூட்டுகினறன இஙகு அனனமாவது தன விஷயமான அனுபவம "அநநமத₃நதமத₃மி" [தைத] [அனனமாகிற எனனை உணணும பரமனை நான உணகிறேன] எனறு பகவதனுபவததை உணவாகச சொலலிறறனரே. (அக்ஷீயமாணா மத₃நதி) இவனுககு எனறும அநுப₃ாவயமாயிருபபது பகவானுடைய திருவடிகளனறே (மத₃நதி) மாத₃யநதி மதமூட்டுகினறன (மது₄நா பூர்ணா மத₃நதி) மதுவால நிறைநதவை மதமூட்டச்சொலலவேணுமோ?

அடுததபடியாக, இவையனைததையும எபபோதும தரிததது நிறபவனும அவனெனகிறன (ய உ) அநத பகவானே உகாரம அவத₄ாரணப பொருளையுடையது பரஹமருதராதிகள இசசெயலைச செய்யவிலலை எனறு கருதது (தரித₄ாது) நிலம, நீர, தீ எனனும மூனறு தாதுககளை உடையதாமபடி. ச₂நதே₃ாக₃ாரணயததில "தத தேஜோஸருஜத₃, தத₃போஸருஜத, தா அநநமஸருஜநத"

என்று இப்மூன்று பூதங்களின் படைப்பைச்சொல்லி, "ஹந்தாஹ மிமாஸ் திஸ்ரோ தே₃வதாஸ் தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதமேகைகாம் கரவாணி" [சாந் 6-3-2, 3] என்று த்ரிவ்ருத்கரணம் சொல்லப்பட்டதன்றோ. அப்படி த்ரிவ்ருத்க்ருதமாம்படி தரித்தான் என்று மேலோடு அந்வயம். அன்றிக்கே, (த்ரித₄ாது) என்று வருங்காலம் நிகழ் காலம் கழிகாலம் என்னும் மூன்று காலத்தையும். ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிய முக்குணங்களையும், ப்ரக்ருதி, சுத்தஸத்வம், காலம் ஆகிய த்ரிவித அசேதனங்களையும், பத்த முக்த நித்யர்களாகிய த்ரிவித சேதனங்களையும் குறிப்பதாகவும் பொருள் கொள்ளலாம். (ப்ருதி₂வீம்) பிரஸித்தமான பூமியையும்; (உத த்₃யாம்) ஒளிவிடும் அந்தரிக்ஷத்தையும். (விஶ்வா பு₄வநாநி) மற்றுள்ள எல்லா உலகங்களையும். அன்றிக்கே, "ப்ருதி₂வீ" என்று ஜஹல் லக்ஷணையாலே கீழேழு லோகங்களையும், 'த்₃யாம்' என்று பூமி முதலான மேலேழுலோகங்களையும் சொல்லி, "விஶ்வாபு₄வநாநி" என்று அவ்வுலகங்களிலுள்ள ஜீவராசிகளனைத்தையும் எடுப்பதாகவும் கொள்ளலாம். (ஏகோ தா₃ாத₄ார) ஒருவனுகவே தரித்து நின்றுன். 'ய உ' என்றவிடத்தில் உகாரத்தாலே தேவதாந்தரங்கள் இச்செயலைச் செய்யவில்லையென்றது. இங்கு 'ஏக:' என்றதாலே அவை துணையும் புரியவில்லை என்கிறது. (ஏகோ தா₃ாத₄ார பு₄வநாநி விஶ்வா)

"யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்தி₂தா"[வி-பு]

[எவனுடைய பல்லாயிரத்திலொருபகுதியில் இவ்வுலகசக்தி நிலை நிற்கிறதோ] என்று பராசரராலும்,

"விஷ்டப்₄யாஹமித₃ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி₂தோ ஜக₃த்"
[கீதை]

[இவ்வுலகையெல்லாம் என் ஒரு பகுதியாலே தாங்கி நிற்கிறேன்] என்று பகவானுலேயும் இவ்வருமறைப்பொருள் விவரிக்கப்பட்டது.

५. तदस्य प्रियमभि पाथो अश्यां नरो यत्र देवयवो मदन्ति।
उरुक्रमस्य स हि बन्धुरित्था विष्णोः पदे परमे मध्व उत्सः॥

5. தத₃ஸ்ய ப்ரியமபி₄ பாதே₂ா அஶ்யாம்
நரோ யத்ர தே₃வயவோ மத₃ந்தி।
உருக்ரமஸ்ய ஸ ஹி ப₃ந்து₄ரித்த₂ா
விஷ்ணோ: பதே₃ பரமே மத்₄வ உத்ஸ ॥

பதவுரை—இத்த₂ா—முன் மந்திரத்தில் சொன்ன ரீதியில், விஷ்ணோ:—விஷ்ணுவினுடைய, பரமே பதே₃—மேலான பதத்தில், மத்₄வ: உத்ஸ:—மதுவின் வெள்ளம் (உள்ளது); யத்ர—யாதொரு மதுவெள்ளத்திலே, தே₃வ யவ: நர:—பரமபுருஷனைவிரும்பும்மனிதர்கள், மத₃ந்தி-களிக்கின்றனரோ, அஸ்ய உருக்ரமஸ்ய—இந்தத்திரிவிக்கிரமனுடைய, ப்ரியம்—இனியதான, தத்பாத₂:—அந்தத் திருவடித்தேன் பெருக்கை, அஶ்யாம்-குடிக்கக்கடவேன்; ஸ ஹி ப₃ந்து₄:-அந்தப்புருஷோத்தமனேயன்றோ (நமக்கு) எல்லாவித உறவினனுமாவான்.

ஸர்வவித பந்துவுமான அவனுடைய திருவடியிலிருந்து பெருகும் தேன்வெள்ளத்தைப் பருகிக்களிப்போமாக என்கிறான். இம்மந்திரப் பகுதியையே "தேனே மலரும் திருப்பாதம்" என்று ஆழ்வாரும் "தவாம்ருதஸ்யந்தி₃நி பாத₃பங்கஜே" என்று ஆளவந்தாரும் "ஶ்ரேய: கிரந்து" என்று தொடங்கி அபி₄யுக்தர்களும் விவரித்தார்கள். இங்கு திருவடியில் தேன் வெள்ளம் என்றது திருவடியின் போ₄க்₃யதையைச்சொல்லுகிறது என்று ஒருபொருளும், திருவடியிலிருந்து திரிவிக்கிரமாவதாரத்தில் வெள்ளமிட்ட கங்கையைச் சொல்லுகிறது என்று ஒரு பொருளும் பட்டருடைய சிஷ்யரான நலந்திகழ்நாராயணச்சீயரால் அருளிச்செய்யப்பட்டதாக திருவாய்மொழி [1-5-5] ஈட்டின் அரும்பதவுரைகளில் காணப்படுகிறது. அவ்விருவழியிலேயும் இங்கு நாம் மந்திரத்தை விவரிப்போம்.

(அஸ்ய உருக்ரமஸ்ய ப்ரியம் தத் பாத₂: அஶ்யாம்) இந்தத் திரிவிக்கிரமனுடைய இனியதான அந்த திருவடித் தேன்வெள்ளத்தைப் பருகக்கடவேன். "கப₃ந்த₄முத₃கம் பாத₂:" [அமரம்] என்கிறபடியே பாத₂ஶப்தம் நீர்ப்பெருக்கைச் சொல்லும். இங்கு திருவடியிலிருந்து பெருகும் அமுதநீர்ப்பெருக்கைச் சொல்லுகிறது. திருவடியிலிருந்து பெருகும் அமுதநீராவது,—திருவடியின் போ₄க்யதை. "ஶ்ரேய: கிரந்து கிரணா:சரணாரவிந்த₃நிஷ்யந்த₃மாந மகரந்த₃ரஸௌக₄தே₃ஶ்யா:" [திருவடியிலிருந்து பெருகும் தேன்வெள்ளத்தையொத்த கிரணங்கள் எனக்குப் பெருமையளிக்கட்டும்] என்ற ச்லோகத்தில் சொல்லப்பட்டபடியே திருவடியிலிருந்து புறப்படும் ஒளிக்கிரணங்களாகவுமாம். பரமபுருஷனுடைய திருவடியினுடைய மிகவினிய போக்யதையை—அல்லது ஒளிக்கிரணங்களைப்-பருகக் கடவேன் என்ற

தாயிறறு 'தத' எனறு-சென்ற மநதிரததில "பூாணு மது₄நா பத₃ாங்" எனறும, இமமநதிரததின பினனடியில "பதே₃ பரமே மத₄வ உதஸ" எனறும எடுககபபடும திருவடித தேனபெருககை எடுககிறது. இநத போகயதை—அலலது கிரணஙகள-எபபடிபபடடது எனில (நரோ யதர தே₃வயவோ மத₃நதி) யாதொரு திருவடியினினிமையிலே தேவனுகிற பரமபுருஷனை விருமபுமவாகள களிககினறனரோ கைககுழநதைககுத தாயமுலைபோலேயிருபபதொனறனறே சேஷ பூ₄தனுககுத திருவடி அமமுலையிலவரும பாலபோனறது திருவடி நீாபபெருககெனபபடும போக₃யதை (தே₃வயவ யதரமத₃நதி) தேவனைவிருமபுமவாகள, மறறுளள அவயவஙகளெலலாம கிடகக, இததிருவடியிலேயே களிககினறனா (தே₃வயவ) 'தேவதவததை விருமபுமவாகள' எனறு பொருள கொளவாருமுணடு அதாவது மோக்ஷமடைய விருமபுமவாகள இததிருவடியினிமையிலே களிக கினறனரெனகை

எவவளவோ தெய்வஙகளிருகக, இவனுடைய திருவடியினிமையிலே முமுக்ஷுககள களிககக காரணமெனனன? எனில: (ஸ ஹி ப₃நது₄) அவனனறே ஸாவவித₄ப₃நது₄வுமாயிருககிறுன. "மாதா பிதா ப₄ராதா ஙிவாஸ: ஶரணம ஸுஹ்ருத க₃திா நாராயண" [ஸுபால] [தாய, தநதை, தமையன, இருபபிடம, உபாயம, நணபன, உபேயம ஆகிய அனைததும நாராயணனே] எனறு வேதஙகளும, "ஸாவேஷாமேவ லோகாநாம பிதா மாதா ச மாத₄வ." [பாரதம] [எலலாவுலகுககும தாய தநதையா மாதவனே]

"த்வமேவ மாதா ச பிதா தவமேவ
தவமேவ ப₃நது₄ஶச கு₃ருஸ த்வமேவ।
த்வமேவ வித்₃யா த₃ரவிணம் த்வமேவ
தவமேவ ஸாவம மம தே₃வதே₃வ ॥"

[தேவதேவனே! நீயே தாய, நீயே தநதை, நீயே பநது, நீயே குரு, நீயே கலவி, நீயே பொருள, நீயே எனககு எலலாம] எனறு ரிஷிகளும, "பெறறதாய நீயே பிறபபிதத தநதைநீ மறறை யாராவாரும நீபேசில" [பெரியதிருவ 5] "தஞசமாகிய தநதை தாயொடு தானுமாய அவையலலனுய" [திருவாய் 3-6-9] எனறும "தநதையும தாயுமாவாா" [திருமாலை 37] எனறும ஆழவாாகளும இவவாததததை விவரிததனரனறே. (உருகரமஸய ஸ ஹி ப₃நது₄) இநத அமுதததைப பருகுமவனே திரிவிககிரமனுககு பநதுவாவான எனறு பொருளகொளவாருமுணடு

(இத்த₂ர) இம்மாதிரியாக முன் மந்திரத்தில் சொன்ன ரீதியில், இம்மந்திரத்தின் முற்பாதியில் சொன்ன ரீதியில் என்றுமாம் (விஷ்ணோ. பதே₃ பரமே மத₄வ உத்ஸ) விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் மதுவின்வெள்ளம் பெருகுகிறது (பதே₃ பரமே) மேலான ஸாத₄னமாகவும், ஸாத₄யமாகவுமிருக்கும் திருவடியில் (மத₄வ உத்ஸ.) தேனின் ப்ரவாஹம் (விஷ்ணோ பதே பரமே மத₄வ உத்ஸ:) "தேனே மலரும் திருப்பாதம்" [திருவாய் 1-5-5] என்றார் ஆழ்வார் "அம்ருதஸ்யந்தி₃நி பாத₃பங்கஜே" [ஸ்தோ-ர] என்றார் ஆளவந்தார் "கிரணசரணாரவிந்த₃ நிஷ்யந்த₃மாந மகரந்த₃ரஸௌக₄தே₃ஶயா. தஜ்ஜா ஶ்ருதோ மது₄ந உத்ஸ இதி ப்ரதீதா" [திருவடித்தாமரையில் பெருகும் தேன்வெள்ளத்தை யொத்தவையும், "மதுவின் ப்ரவாஹம்" என்று வேதத்தில் சொல்லப் பட்டவையுமான திருவடிக்கிரணங்கள்] என்றார் அபியுக்தர்.

இனி, இம்மந்திரம் பகவானுடைய ஸ்ரீபாததீர்த்தமான கங்கையைச் சொல்லுகிறது என்னும் இரண்டாவது பொருளை விவரிப்போம். (உருக்ரமஸ்ய விஷ்ணோ: பதே₃ பரமே மத₄வ உத்ஸ) திரிவிக்கிரமனான விஷ்ணுவின் மேலான திருவடியில் தேன்வெள்ளம் போன்று கங்கை பெருகுகிறது. (தத₃ஸ்ய ப்ரியமபி₄ பாதே₂ர அஶ்யாம) பரமபுருஷனுக்குப் பிரியமான அந்த ஸ்ரீபாத₃தீர்த்த₂மாகிற கங்காஜலத்தைப் பருகக்கடவேன். (பாத₂) தீர்த்தம், இங்கு ஸ்ரீபாத தீர்த்தமான கங்கை அந்த கங்கை எப்படிப்பட்டது? எனில்: (நரோ யத்ர தே₃வயவோ மத₃ந்தி)தே₃வத்வத்தை விரும்பும் ருத்ரன் முதலானோர் எதில் நீராடிக்களிக்கின்றனரோ பாதகம் செய்து, தேவத்வத்தையிழந்து நின்ற ருத்ரன் இந்த ஸ்ரீபாததீர்த்தத்தில் நீராடிக் களித்தானன்றோ

த₃ரவீபூ₄தஸ் தத₃ா த₄ாமோ ஹரிப₄க்தயா மஹாமுநே।
க்₃ருஹீத்வா த₄ாமபாநீயம பத்₃ம நாத₂ஸ்ய துஷ்டயே॥
க்ஷாளிதம பரயா ப₄க்த்யா பாத₃யாாக₄யாதி₃பி₄ராசசிதம்।
தத₃மபு₃ பதிதம த₃ருஷ்ட்வா த₃த₄ார ஶிரஸா ஹர.॥
பாவநாாதத₂ம ஜடாமத₄யே யோக₃யோऽஸமீதயவத₄ாரணாத।
வாஷாயுதாநயத₂ ப₃ஹூநி ந முமோச தத₃ா ஹர॥

[ ரிஷிஶ்ரேஷ்டரே! (பகவான் திருவுலகளந்தருளின) அச்சமயம், ஹரியினிடம் பக்தியினால் தாமம் ஜலமாயிற்று. தாமமாகிய அந்த ஜலத்தை எடுத்து, ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக

(அவனுடைய) திருவடியானது (என்றால்) மேலான பக்தியுடன் விளக்கப்பட்டது; பாத்$_{3}$யம், அர்க்$_{4}$யம் முதலியவைகளாலும் பூஜிக்கப் பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப்பார்த்து, 'நான் (பரிசுத்தப் படுத்தத்) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிச்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு, பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள், உருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை.] என்று ஈச்வரஸம்ஹிதையில் சொல்லப்பட்டதன்றோ. (நரோ யத்ர தே$_{3}$வ யவோ மத$_{3}$ந்தி) யாதொரு கங்காஜலத்தில் தேவனாகிற பரமபுருஷனை விரும்பும் மனிதர்கள் களிக்கின்றனரோ என்றுமாம். இப்படி அவனுடைய ஸ்ரீபாததீர்த்தத்தில் அனைவரும் அன்புசெலுத்தக் காரணமென்னென்னில்: (ஸஹி ப$_{3}$ந்து$_{4}$:) அவனன்றோ ஸர்வவித$_{4}$ ப$_{3}$ந்து$_{4}$வுமாவான். (இத்த$_{2}$ா) இம்மாதிரியாக; (விஷ்ணோ: பரமே பதே$_{3}$ மத்$_{4}$வ உத்ஸ:) விஷ்ணுவின் மேலான பாதத்தில் தேன்போன்ற க$_{3}$ங்க$_{3}$ா ப்ரவாஹம் உள்ளது. (பரமே)

"ஏக: ப்ராஸீஸரத் பாத$_{3}$ம் ஏக: ப்ராசிக்ஷளந் முத$_{3}$ா ।
அபரோப்யத$_{4}$ரந் மூர்த்$_{4}$னா கோதி$_{4}$கஸ் தேஷு கு$_{3}$ண்யதாம் ॥"

[ஒருவன் திருவடியை நீட்டினான்; ஒருவன் உகப்புடன் அதைக் கழுவினான்; மற்றொருவன் தலையாலே அந்நீரைத்தாங்கினான். இவர்களுள் எவன் பெரியவன் என்று எண்ணிப்பாருங்கள்] என்கிறபடியே இந்த கங்கா ப்ரவாஹமே இவனுடைய ஸர்வாதி$_{4}$ கத்வத்தை நிலைநாட்டித்தருகிறது என்கை.

இம்மந்திரத்துக்கு ஸாயணர் பின்வருமாறு பாஷ்யமிட்டார். (அஸ்ய) மஹாவிஷ்ணுவுக்கு. (ப்ரியம்) இனியதும்; (தத்) அனைவராலும் ஸேவிக்கத்தக்கதென்று பிரஸித்தமானதுமான. (பாத$_{2}$:) அந்தரிக்ஷம்; இங்கு அழியாத ப்ரஹ்மலோகம். இதை (அஶ்யாம்) 'அஶூ வ்யாப்தௌ' என்று தாதுவாகையாலே வியாபிக்கக்கடவேன்; நுழையக்கடவேன் என்கை. (யத்ர) யாதொரு பரமபதத்தில் (தே$_{3}$வ யவ:) தேவனை பகவானை விருப்புமவர்களான (நர:) மனிதர்கள் (மத$_{3}$ந்தி) திருப்தியை அனுபவிக்கிறார்களோ அந்தப் பரமபதத்தில் நுழையக்கடவேன். அந்தப் பரமபதத்தையே மேலும் விசேஷிக்கிறான்,— (உருக்ரமஸ்ய) எல்லாவுலகையும் அளந்துகொண்ட; (விஷ்ணோ:) ஸர்வவ்யாபகனான விஷ்ணுவினுடைய. (பரமே பதே) மிகவுயர்ந்த ஸ்தானத்தில் (மத்$_{4}$வ:) இனிமையின். (உத்ஸ:) பெருக்கு

உள்ளது (தத்₃ஶ்யாம) அதை அடையக்கடவேன. (இத்த₂ர) முற கூறிய ரீதியில (ஸ ஹி ப₃ந்து₄.) அந்த விஷ்ணுவன்றோ அணைவாக கும நனமைசெய்யும் பந்து ஆவான அவனுடைய பரமபதத்தை அடைந்தவாகன திருமபிவருவதில்லையன்றோ "யத்ர க்ஷுத்த்ருஷ்ணு ஜராமரண புநராவருத்யாதி₃கம நாஸதி, ஸங்கல்பமாத்ரேண அம்ருத குலயாதி₃பே₄ாக₃ா ப்ராப்யந்தே தாத₃ருஶமித்யாதத₂ | ததோதி₄கம நாஸதீதயாஹ | தஸய பத₃ம ப்ராபதவதாம ந புநராவந்ததே | 'ந ச புநராவாததே' இதி ஶ்ருதேஸ தஸய ப₃ந்து₄தவம| ஹிஶபத₃ ஸாவஶ்ருதி ஸம்ருதி புராணாதி₃ ப்ரஸித்₃தி₄ த்₃யோதநாாதத₂ ||" [யாதொரு பரம பதத்தில பசி, தாகம, மூப்பு, மரணம திருமபிவருதல முதலானவை இல்லையோ, ஸங்கல்பமாத்திரத்தால அமுதவோடை முதலான வறறில இன்பமனுபவிக்கலாமோ, அப்படிப்பட்டது எனகை, அதறகு மேறபட்டதில்லையெனகிறது விஷ்ணுவின பதத்தை அடைந்தவாகள திருமபி வருவதில்லையாகையால, முகதன திருமபி வருவதில்லை' எனற வேதவாக்கியத்தினால இவன பந்துவெனபது ஸித்தம. 'ஹி' என்னும சபதம எல்லா சருதி, ஸம்ருதி, புராணம முதலானவறறில இவ்வாத்தத்தின பிரஸித்தியைக காட்டுகிறது] எனபவை ஸாயணபாஷ்யத்திலுள்ள பகவதபரத்வத்தை உத கோஷிக்கும வாக்கியஙகள

ஆக, இமமந்திரத்தால பகவானுடைய நிரதிஶயபே₄ாக₃யத்வமும, ஸாவவித₄ ப₃ந்து₄த்வமும விவரிக்கப்பட்டனவாயிறறு

६. ता वां वास्तून्युश्मसि गमध्यै यत्र गावो भूरिशृङ्गा अयासः।
अत्राह तदुरुगायस्य वृष्णः परमं पदमव भाति भूरि॥

6. தா வாம வாஸதூநயுஶமஸி க₃மத₄யை
யத்ர க₃ாவோ பூ₄ரிஶருங்க₃ா அயாஸ |
அத்ராஹ தது₃ருக₃ாயஸய வருஷண
பரமம பத₃மவ ப₄ாதி பூ₄ரி ||

பதவுரை — வாம—உங்களுக்காக, தா வாஸதூநி— அந்த ஸதானங்களை, க₄மத₄யை—(நீஙகள்) செலவதறகாக, உஶமஸி—(பகவானிடம்) பிராாததிககிறோம, யத்ர—அந்த ஸதானங்களில, பூ₄ரிஶருங்க₃ா -மிகவுயர்நதவையும, அயாஸ -

மிகப்பரந்தவையுமான, **க₃ாவ:**—கிரணங்கள் (உள்ளன); **அத்ர அஹ**—அந்த லோகங்களிலன்றோ, **உருக₃ாயஸ்ய**—மிகத்துதிக்கப்படுபவனும், **வ்ருஷ்ண:**—(விருப்பங்களை) வர்ஷிப்பவனுமான பரமபுருஷனுடைய, **தத்**—மிகப்பிரஸித்த மான, **பரமம்**—மிகச்சிறந்த, **பத₃ம்**—ஸ்தானம், **பூ₄ரி**—மிகப் பெரிதாக, **அவப₄ாதி**—பெருமைபெற்று விளங்குகிறது.

தன்னை ஆச்ரயித்த தம்பதிகளுக்காகப் பரமபுருஷனிடம் பரம பதத்தை ஆசாரியன் பிரார்த்திப்பதைக் கூறும் மந்திரமிது. பரம பதத்தின் பெருமைகளும் இம்மந்திரத்தில் பேசப்படுகின்றன.

(வாம்) உங்களுக்காக. (தா வாஸ்தூநி) தாநி வாஸ்தூநி. (தா) அவைகள்; சென்று சேரத்தக்கவையாக சாஸ்திரங்களிலே பிரசித்தமானவைகள். (வாஸ்தூநி) ஸுகமாக வஸிக்கத்தக்க ஸ்தானங்களை; மண்டபம், தோட்டம், நகரம் முதலாகப் பலவித மான அமைப்புக்களோடு பரமபதம் கூடியிருப்பதால் 'தா வாஸ் தூநி' (அந்த ஸ்தானங்களை) என்று பஹுவசனமாக-(பன்மை யாக)-பேசப்படுகிறது. ஸ்ரீராமாயணத்திலும் 'க₃ச்ச₂லோகாந் அநுத்த மாந்' [தமக்கு மேலில்லாத உலகங்களை அடைவாயாக] என்று பன்மையாகப் படிக்கப்பட்டதன்றோ. (க₃மத்₄யை உஶ்மஸி) நீங்கள் செல்லுவதற்காக (அந்த ஸ்தானங்களை) விரும்புகிறோம்; அதற் காகப் பரமபுருஷனைப் பிரார்த்திக்கிறோம் என்று கருத்து. அந்த ஸ்தானங்கள் எப்படிப்பட்டவை? எனில்: (யத்ர க₃ாவ: பூ₄ரிஶ்ருங்க₃ா: அயாஸ:) யாதொரு ஸ்தானத்தில் மிகவுயர்ந்தவையும், மிகப் பரந்தவையுமான கிரணங்கள் உள்ளனவோ. (க₃ாவ:) கிரணங்கள்; (பூ₄ரிஶ்ருங்க₃ா:) "ப₃ஹுஶ்ருங்க₃ா:-பூ₄ரீதி ப₃ஹுநோ நாமதே₄யம்" [பல ச்ருங்கங்களையுடையவை என்கை. 'பூ₄ரி' என்று பலவற்றைச் சொல்லுகிறது] என்ற யாஸ்க நிருக்தத்தின்படியே பல கொம்பு களை (கற்றைகளை) உடைய கிரணங்கள் எனகை. அதாவது மிகவுயர்ந்த கிரணங்கள் என்று கருத்து. (பூ₄ரிஶ்ருங்க₃ா:) பலரால் ஆச்ரயிக்கப்படுமவை என்றும் பொருள் கொள்வர். (அயாஸ:) 'அயாஸ:— அயநா:' என்று யாஸ்கநிருக்தம். அதாவது— எங்கும் செல்லும் கிரணங்கள் எனகை. எங்கும் பரந்த கிரணங்கள் எனறபடி. அன்றிக்கே, 'யாஸ:' என்றது செல்லுமவை, அதாவது விரைவில அழியுமவை என்ருய், அயாஸ:' என்றது அழியாத பேரொளியையுடையவை என்பதாகவும் கொள்ளலாம். (யத்ர க₃ாவோ பூ₄ரிஶ்ருங்க₃ா அயாஸ:)

"அத்யர்க்கானலதீ₃ப்தம் தத் ஸ்தா₂னம் விஷ்ணோர் மஹாத்மந:|
ஸ்வயைவ ப்ரப₄யா ராஜந் து₃ஷ்ப்ரேக்ஷம் தே₃வதா₃நவை:||"

[அரசனே! மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்தப்பரமபதம் சூரியன், அக்னி ஆகிய சோதிகளை விஞ்சிநிற்கும் ஒளியையுடையது. தன் ஒளியாலேயே தேவதானவர்களால் காணவொண்ணாததா யிருப்பது அது] என்று மஹாபாரதத்தில் இம்மந்திரம் விளக்கப் பட்டது. (அத்ராஹ) இந்த லோகங்களினிடையன்றோ. (உருகா₃யஸ்ய வ்ருஷ்ண: தத் பரமம் பத₃ம்) மிகவும் புகழப்படுமவனும், விருப்பங்களை வர்ஷிப்பவனுமான விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதம். (உருகா₃யஸ்ய) பலராலும் புகழப்படுமவன்; மிகவும் புகழப்படுமவன்.

"ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்தெவ்வெவையும்
சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லை" [திருவாய்]

என்கிறபடியே புகழென்பதெல்லாம் இவனையே பற்றிநிற்குமாகை யாலும், யாரைப்புகழ்ந்தாலும் இவனையே புகழ்ந்ததாகுமாகையாலும் "உருகா₃ய:" [பலராலும் மிகவும் புகழப்படுமவன்] என்றே வாய் வெருவுகிறது வேதம். (வ்ருஷ்ண:) நாலுவிதமான புருஷார்த் தங்களையும் வர்ஷிப்பவன். வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் வள்ளலன்றோ இவன். நாலுவகைப் புருஷார்த்தங்களையும் அளிக்க வல்லவனென்பதை அறிவிக்கவன்றோ நாலு கைகளை தரித்து நிற்கின்றானிவன். "சதுர்ணாம் புருஷார்த்தா₂நாம் தா₃தா தே₃வஶ் சதுர்ப்பு₄ஜ:" [சந்த்ராலோகம்-குவலயாநந்தம்] [சதுர்ப்புஜனை பரமபுருஷன் நான்கு புருஷார்த்தங்களையும் தருமவன்] என்று இவ்விஷயம் ஆலங்காரிகர்களிடத்தும் பிரஸித்தமன்றோ. "மோக்ஷ மிச்சே₂த் ஜநார்த்த₃நாத்" [மோக்ஷபலனை ஜநார்த்தனனிடமிருந்து விரும்பக்கடவன்] என்று மோக்ஷபலனை அளிக்கவல்லவன் இவனே யென்றது சாஸ்திரம். மற்ற பலன்களை ஒவ்வொருவர் அளிப்பதும் தானளிப்பதேயாம் என்பதை "மயைவ விஹிதாந்" என்று கீதை யில் தானே அருளினான். ஆகையாலே இவனை 'விருப்பங்களை வர்ஷிப்பவன்' என்று அடிக்கடி வாய்புலத்துகிறது அருமறை. (தத் பரமம் பத₃ம்) ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே ஸுப்ரஸித்தமான அந்தப் பரமபதம். (அத்ராஹ தத் பரமம் பத₃ம்) 'அத்ர' என்று த்ரிபாத் விபூதியைச் சொல்லுகிறது. 'பரமம் பத₃ம்' என்று 'ஸ்ரீவைகுண்டம்' என்றும், 'அயோத்₄யா' என்றும், 'அபராஜிதா' எனறும் பிரசித்த

மான திவ்யநகரத்தைச்சொல்லுகிறது. (பரமம் பத₃மவப₄ாதி பூ₄ரி) திரிபாத்₃விபூ₄தி ஒருமடங்கு ஒளிவிடுகின்றதென்ருல், அதிலிருக்கும் பரமபதம் பகவானுடைய பரரூப ஸாந்நித்₄யத்தாலே பன்மடங்கு ஒளிவிடுகின்றது. (அவப₄ாதி) 'தன் மஹிமையாலே ஒளி விடுகிறது' என்று ஸாயணபாஷ்யம்.

७. प्र वः पान्तमन्धसो धियायते महे शूराय विष्णवे चार्चत।
या सानुनि पर्वतानामदाभ्या महस्तस्थतुरर्वतेव साधुना॥

7. ப்ர வ: பாந்தமந்த₄ஸோ தி₄யாயதே
மஹே ஶூராய விஷ்ணவே சார்ச்சத।
யா ஸாநுநி பர்வதாநாமத₃ாப்₄யா
மஹஸ்தஸ்த₂துரர்வதேவ ஸாது₄நா ॥

பதவுரை:— வ:—உங்களுடைய, பாந்தம்—ரக்ஷியப் பொருள்களையும், அந்த₄ஸ:—அந்நத்தையும், ப்ர அர்ச்சத—அதிகமாக ஸம்பாதியுங்கள்; (எவருக்காகவெனில்) தி₄யாயதே—துதிகளை விரும்புமவனும், மஹே—பெரியோனுமான, சூராய—வீரனை இந்திரனுக்கும், விஷ்ணவே—(ஸர்வவ்யாபியான) விஷ்ணுவுக்கும் (ஸம்பாதியுங்கள்). (அவர்கள் எத்தகையவ ரெனில்:) யா—யாவரிருவரும். அத₃ாப்₄யா—(பிறரால்) வெல்லமுடியாதவர்களாய், மஹ:—(ஆகையாலே) பெரியோர்களாய், ஸாது₄நா அர்வதா இவ—நல்ல குதிரையிலேறிச் செல்லுமவர்கள்போலே, பர்வதாநாம்—உயர்ந்த உலகங்களின், ஸாநுநி—உச்சியில், தஸ்த₂து:—நிற்கின்றனரோ (அவர்களுக்காக ஸம்பாதியுங்கள் என்று கீழோடு அந்வயம்.)

இம்மந்திரத்திலிருந்து தொடங்கி மூன்று மந்திரங்களில் இந்திராநுஜனை பகவானோடு கூட, அவனுக்குத் தமையனென்னும் பெருமையைப்பெற்ற இந்திரனையும் கூட்டித் துதிக்கிறது. பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுமாபோலே, எம்பெருமானைத் துணை கொண்ட இந்திரனும் பெருமைபெறுகிறபடி. இம்மந்திரத்தில் உங்களுடைமைகளை அவர்களுக்காக்குங்கள் என்கிறது.

(வ: பாந்தம் அந்த₄ஸ: ப்ர அர்ச்சத) சேதனரே! உங்களுடைய உடைமைகளையும் அந்நத்தையும் அதிகமாக ஸம்பாதியுங்கள். எதற்காகவெனில், உங்களுடைய உபயோகக்துக்காகவன்று; பரம புருஷனுக்கும், அவனுடைய தமையனை இந்திரனுக்கும் ஸமர்ப்பிப்பதற்காக என்கிறது அடுத்தபடியாக: (தி₄யாயதே) துதிகளை விரும்புமவனுக்கு. இந்திரனுக்கும், விஷ்ணுவுக்கும் ஸாமான்யமான விசேஷணங்களிவை. "ஸ்தவப்ரிய:" [ துதிகளை விரும்புமவன் ] என்றதன்றோ ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம. (மஹே) பெரியவனுக்கு. வயதில் பெரியவன் மஹேந்திரன். பெருமையில் பெரியவன் மஹாவிஷ்ணு. ( சூராய ) இந்திரனுக்கு. இது இந்திரனின் நாமம். (விஷ்ணவே ச) ஸர்வவ்யாபியாகையாலே விஷ்ணுவெனப்படும் தேவனுக்கும். 'வ்யாபகாய ஏதந்நாமகாய தே₃வாய ச' என்று ஸாயணபாஷ்யம்.

அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? எனில்: (யா பர்வதாநாம் ஸாநுநி தஸ்த₂து:) எவர்களிருவரும் பர்வதங்களெனப்படும் மிகவுயர்ந்த மிகவினிய சுவர்க்க வைகுண்டலோகங்களின் உச்சியிலே நின்றனரோ. ( பர்வதாநாம் ) 'பர்வவாந் பர்வத:- பர்வம் புந: ப்ருணாதே: ப்ரீணாதேர்வா' என்று பர்வதசப்தத்துக்கு யாஸ்க நிருக்தி. ப்ரீணனம் என்னும் இனிப்பையூட்டுவது, அல்லது பூர்த்தியென்னும் நிறைவையூட்டுவது பர்வதமாகிறது. இங்கு இந்திரனும், உபேந்திரனுமிருக்கும் சுவர்க்கமும், பரமபுருஷனிருக்கும் வைகுண்டமும் இனிப்பையும, நிறைவையும் அளிக்கும் பர்வதங்களாகச் சொல்லப்படுகின்றன. மிகவுயர்ந்த லோகங்களாகையாலும் இவற்றைப் பர்வதமென்பது பொருந்தும். (யா பர்வதாநாம் ஸாநுநி தஸ்த₂து:) எவர்களிருவரும் மிகவுயர்ந்தவையாய், களிப்பூட்டி, நிறைவளிப்பவையான உலகங்களாகிற மலைகளின் உச்சியிலே நிற்கின்றனரோ; அன்றிக்கே, பர்வதமென்று மேகத்தையும் குறிக்குமாகையால், மேகத்தின் மேலிருந்துகொண்டு மழை பொழிகின்றனர் இந்திரனும் உபேந்திரனும் என்பதாகவும் கொள்ளலாம். அவர்கள் மேலும் எத்தகையவர்கள்? எனில்: (அதா₃ப்₄யா) ஒருவராலும் வெல்லவொண்ணாதவர்கள். காற்றோடு சேர்ந்த தீயைப்போன்றவர்கள். ( மஹ: ) அக்காரணத்தாலே பெரியவர்கள். மஹேந்திரன் என்றும், மஹாவிஷ்ணுவென்றும் உலகெங்கும் பறைசாற்றப்படுமவர்கள். அன்றிக்கே, (மஹ: ஸாநுநி தஸ்த₂து:) தம் தேஜஸ்ஸாகிற மலைச்சிகரத்திலே நிற்பவர்கள் என்றுமாம். (அர்வதேவ ஸாது₄நா) விரும்புமிடத்துக்கு விரைவில்

செல்லும் குதிரையோடு கூடியவர்கள்போலே மிகவுயர்ந்த லோகத்தை அடைந்தவர்கள். இப்படிப்பட்ட தேவதைகளுக்கு ஸமர்ப்பிப்ப தற்காக அவர்களைக்குறித்த யாகத்துக்கு வேண்டிய உடைமை களையும், அந்நத்தையும் சேகரியுங்கள். உங்கள் வயிற்றுக்குழியை யும், உள்ளப்பள்ளத்தையும் நிரப்புவதற்காக இவற்றைத் தேடா தீர்கள் என்று கருத்து.

வேறொருவகையாகவும் பொருள் கொள்ளலாம். (வ:) உங்க ளுடைய (பாந்தம்) ரக்ஷிக்கப்படவேண்டியதான சரீரத்தையும்; "சரீரமாத்₃யம் க₂லு த₄ர்மஸாத₄நம்" [குமாரஸம்பவம் 5] [சரீர மன்றோ முதன்மைபெற்ற த₄ர்மஸாதனம்] என்கையாலே ரக்ஷிக்கப் படவேண்டியவற்றில் முதன்மைபெற்றதான சரீரம் 'பாந்தம்' எனப்படுகிறது. (அந்த₄ஸ:) அந்நத்தால் போஷிக்கப்படும் இந்திரி யங்களையும். (தி₄யாயதே...விஷ்ணவே சார்ச்சத) துதியை விரும்பு மவனும், பெரியோனும், சூரனுமான விஷ்ணுவுக்கே ஸமர்ப்பி யுங்கள். (தியாயதே) துதிக்கத் தக்கவனுகையாலும், துதியை விரும்பு மவனுகையாலும் வாக₃ாதீ₃ந்திரியங்களை அவனுக்கே ஆக்குவது தக்கது. (மஹே) மநோவாக்காயங்களால் எவ்வளவு கைங்கரியம் செய்தாலும் ஏற்கும்படியான பெருமையை உடையவன். (சூராய) வீரச்செயல்களையுடையவன். (விஷ்ணவே ச) ஸர்வவ்யாபியான அவனுக்கும். சகாரத்தால் அவனைத் துணையாகக்கொண்ட இந்திரனை ஸமுச்சயிக்கிறது. அநுக்த ஸமுச்சயம். (அர்ச்சத) அர்ச்சியுங்கள் ஸமர்ப்பியுங்கள் என்கை. பிற்பாதிக்கு முன்போல் பொருள்.

௮. त्वेषमित्था समरणं शिमीवतोरिन्द्राविष्णू सुतपा वामुरुष्यति ।
या मर्त्याय प्रतिधीयमानमित्कृशानोरस्तुरसनामुरुष्यथः ॥

8. த்வேஷமித்த₂ா ஸமரணம் ஶிமீவதோ
ரிந்த்₃ராவிஷ்ணூ ஸுதபா வாமுருஷ்யதி ।
யா மர்த்யாய ப்ரதிதீ₄யமாநமித்
க்ருஶாநோரஸ்துரஸநாமுருஷ்யத₂: ॥

பதவுரை:-இந்த்₃ராவிஷ்ணூ-ஹே இந்திர விஷ்ணுக்களே, ஶிமீவதோ:—(விரும்பிய வரமளிப்பது முதலான) கர்மத்தை யுடைய, வாம்—உங்களுக்காக, இத்த₂ா—இம்மாதிரியாக, த்வேஷம்—பிரகாசமான, ஸமரணம் — யாகதேசத்தை

அடையும் வழியை, ஸுதபா:—நன்கு யாகம் செய்யும் யஜமானன், உருஷ்யதி—ரக்ஷித்து வருகிறான்; யா—எந்த நீங்கள், மர்த்யாய—யாகம் செய்யும் மனிதனுக்கு, ப்ரதிதீ₄ய மாநம் இத்-கொடுக்கவேண்டிய பலத்தை, அஸநாம் அஸ்து:- ஹவிஸ்ஸை (அக்னியில்) ஹோமம்செய்யும் அம்மனிதனுக்கு, க்ருமாநோ:—அக்னியின் மூலமாகவே, உருஷ்யத₂:—இடையூறில்லாமல் அடைவிக்கின்றனரோ (அவர்க்காக ரக்ஷித்து வருகிறான்.)

இந்திரவிஷ்ணுக்களைக்குறித்து யாகம் செய்யுங்கள் என்றது சென்ற மந்திரம். இந்திரவிஷ்ணுக்கள் தம்மைக்குறித்து யாகம் செய்பவனுக்கு உடனே கைமேல் பலனளிக்கவல்லவர்கள் என்கிறது இம்மந்திரம்.

(இந்த்₃ராவிஷ்ணூ) ஹே இந்திரவிஷ்ணுக்களே! இந்திரனும், உபேந்திரனுமாகிய தே₃வதாத்₃வந்த்₃வத்தை நினைக்கிறது. (ஶமீவதோ:வாம்) இஷ்டங்களையளித்தல், அநிஷ்டங்களைத் தவிர்த்தல் முதலியசெயல்களை உடைய உங்களுக்காக. (த்வேஷம் ஸமரணம்) கொழுந்துவிட்டெரியும் அக்னியோடு கூடிய யாகப்ரதேசத்துக்குச் செல்லும் வழியை. (ஸுதபா:)யாகத்தை நன்கு செய்யும் யஜமானன். (இத்த₂ா உருஷ்யதி) இம்மாதிரியான ரீதியிலே ரக்ஷிக்கிறான். உங்களை யாகத்துக்கு வரவழைத்துப் பூஜிக்கிறான் என்று கருத்து. அன்றிக்கே, (ஶமீவதோ:) வஜ்ரத்தாலும், சக்கரத்தாலும் அடிப்பது முதலிய கர்மங்களையுடைய (வாம்) உங்களுடைய (த்வேஷம்) பிரகாசிக்கின்ற—வீர்யத்துடன் கூடிய (ஸமரணம்) மழை பொழிவதற்காக மேகத்தை நன்கு பிளப்பதாகிற செயலை (ஸுதபா உருஷ்யதி) யஜமானன் துதிக்கிறான் என்றும் பொருள் கொள்வர்.

அவர்கள் மேலும் எப்படிப்பட்டவர்? எனில்: (யா) யௌ; எந்த இந்திரவிஷ்ணுக்கள்: (மர்த்யாய ப்ரதிதீ₄யமாநமித்) யாகம் செய்யும் மனிதனுக்குக் கொடுக்கவேண்டிய பலனை. (அஸநாம் அஸ்து:) எரியில் -(அக்னியில்)- எறியத்தக்க அவியை -(ஹவிஸ்ஸை)- எறியும் யஜமானனுக்கு. (க்ருமாநோ: உருஷ்யத₂:) அவ்வெரியின் மூலமாக உடனே (பலனை) அளிக்கின்றனர். அக்நியில் ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸை ஏற்றுக்கொண்டு அதன் மூலமாகவே பலனை அளிக்கின்றனர் என்று கருத்து.

९. ता ईं वर्धन्ति मह्यस्य पौंस्यं नि मातरा नयति रेतसे भुजे।
दधाति पुत्रोऽवरं परं पितुर्नाम तृतीयमधि रोचने दिवः॥

9. தா ஈம் வர்த்த$_4$ந்தி மஹ்யஸ்ய பௌம்ஸ்யம்
நி மாதரா நயதி ரேதஸே பு$_4$ஜே।
த$_3$த$_4$ாதி புத்ரோऽவரம் பரம் பிதுர்
நாம த்ருதீயமதி$_4$ ரோசநே தி$_3$வ:॥

**பதவுரை:—** **தா**—அந்த ஆஹுதிகள். **அஸ்ய** — இந்த யஜமானனுக்கு. **ஈம்**—செல்வத்தையும். **மஹி**—பெருமையையும். **பௌம்ஸ்யம்**—ஆண்மையையும். **வர்த்த$_4$ந்தி**—வளர்க்கின்றன. **தி$_3$வ:**—ஒளிவிடும் சூரியனுடைய. **அதி$_4$ரோசநே**—மிகவும் ஒளிவிடும் மண்டலத்தில் (ஜீவனைச்சேர்த்து) **ரேதஸே**—(ப்ராணிகள்) பிரஜைகளை உற்பத்தி செய்வதன் பொருட்டும். **பு$_4$ஜே**—போகத்தின் பொருட்டும். **மாதரா**—அந்தரிக்ஷத்தையும் பூமியையும், **நி நயதி**—மிகவும் அடைவிக்கிறான் (பிதாவான விஷ்ணு); **பிது:**—(ரக்ஷகனான) விஷ்ணுவின் அனுக்ரஹத்தால், **புத்ர:**—(ஒருவனுக்குப்) புத்திரனாய்ப் பிறக்கும் இந்த ஜீவன். **பரம் நாம**—மேலான (புத்திரன் என்னும்) நாமத்தையும். **அவரம் நாம**—கீழான (பௌத்திரன் என்னும்) நாமத்தையும். **த்ருதீயம் நாம**—(அதற்குப்பின்) பிதா என்னும் நாமத்தையும், **த$_3$த$_4$ாதி**—தரிக்கிறான்.

பொதுவாக இந்திரவிஷ்ணுக்கள் உலகத்துக்குச் செய்யும் நன்மைகளையும், குறிப்பாக பகவான் விஷ்ணுவால் செய்யப்படும் ப்ரஜாஸ்ருஷ்டியையும் புகழ்கிறது இம்மந்திரம்.

(தா ஈம் வர்த்த$_4$ந்தி) இந்திரவிஷ்ணுக்களைக் குறித்துச்செய்யப் படும் அந்த ஆஹுதிகள் செல்வத்தை வளர்க்கின்றன. யாருக்கெனில்: (அஸ்ய) அவ்வாஹுதிகளை அக்கினியிலிட்ட யஜமானனுக்கென்கை. (மஹி) பெருமையையும் வளர்க்கின்றன. (பௌம்ஸ்யம்) பிரஜாஸ்ருஷ்டிக்குறுப்பான ஆண்மையையும் வளர்க்கின்றன.

பரஜாஸருஷடி பரஸதுதமாகையாலே பரமபுருஷன செய்யும அசசெயலை விவரிககிருன இனி (தி₃வ ரோசநே அதி₄) பிரகாசிககும சூரியமணடலததிலிருநது (ரேதஸோ) பிரஜைகளை உறபததிசெயயும பொருட்டும (பு₄ஜே) காமபலபோகததின பொருட்டும. அலலது ரக்ஷணததின பொருட்டும. (மாதரா நிநயதி) (மழையின மூலம) அநதரிக்ஷலோகததையும பூமியையும நனகு அடைவிககிருன பரமபுருஷன ஏகவசனததால இககாரியததில இநதிரனுககு அநவயமிலலை எனகை. அடைநதபிறகு எனகிறதெனனில (புதர) ஒருவனுககுப புததிரனுகப பிறககுமவன (பிது) பாலகனும ஸாவலோக பிதாவுமான விஷணுவின அனுக₃ரஹததால "பிது – பாலகாத விஷ்ணோரநுக₃ரஹாத" எனறு ஸாயணபாஷயம. அனறிககே, (பிது புதர) ஒரு தநதைககுப பிளளையாமவன எனறுமாம (பரம நாம) மேலான புததிரன எனனும பெயரையும. (அவரம நாம) கீழான பௌததிரன எனனும பெயரையும. தநதைககுப புததிரனுமபோதே பாட்டனுககுப பௌததிரனுகிருனனறே. (தருதீயம நாம) பிறகு சிலகாலம சென்றபின் தான ஒருவனைப பிளளையாகப்பெறுமபோது 'பிதா' எனனும மூனருவது நாமததையும, (த₃த₄ாதி) தரிககிருன ஜீவன

१०. तत्तदिदस्य पौंस्यं गृणीमसीनस्य त्रातुरवृकस्य मीढुषः।
य: पार्थिवानि त्रिभिरिद्विगामभिरुरु क्रमिष्टोरुगायाय जीवसे ॥

10. தததி₃த₃ஸய பௌமஸயம க₃ருணீமஸி
இநஸய தராதுரவருகஸய மீடு₄ஷ ।
ய: பாாததி₂வாநி தரிபி₄ரித₃விக₃ாமபி₄
ருருகரமிஷ்டோருக₃ாயாய ஜீவஸே ॥

பதவுரை — ய -யாவனெருவ பகவான், பாாததி₂வாநி— பூமியிலுள்ள புழுதிகளை, திரிபி₄ இத₃விக₃ாமபி₄ —மூனறே அடிவைப்புககளாலே, உருக₃ாயாய—மிகவும புகழபபடுவதறகாகவும, ஜீவஸே—(லோகததை) ரக்ஷிபபதறகாகவும், உருகரமிஷ்ட—அளநதருளினனே இநஸ்ய—ஸாவஸவாமியாய, தராது—ஸாவ ரக்ஷகனுய், அவருகஸய—பரமதயாளுவாய், மீடு₄ஷ.—நிதய யௌவனமுடையவனுன, அஸய—

இந்த விஷ்ணுவினுடைய, தத் தத் பௌம்ஸ்யம்—அந்தந்த ஆண்மைச் செயல்களையே, க்₃ருணீமஸி—துதிக்கக்கடவோம்.

ஸர்வேச்வரனுடைய ஸ்ருஷ்டிச்செயல் ப்ரஸ்துதமாகையாலே அவனுடைய மற்ற வீரச்செயல்களையும் விவரித்துப் பேசத் தொடங்குகிறன.

( தத் ததி₃த₃ஸ்ய பௌம்ஸ்யம் க்₃ருணீமஸி ) இவனுக்கேயுரித்தான அந்தந்த ஆண்மைச் செயல்களைப் புகழக்கடவோம். (அஸ்ய இத் பௌம்ஸ்யம்) " ஸ்த்ரீப்ராயமிதரத் ஸர்வம் " என்கிறபடியே பரமபுருஷனாகிற இவனொருவனுக்கே ஆண்மையுள்ளதாகையாலும், மற்றுள்ளாரெல்லாம் பெண்மையுள்ளவரேயாகையாலும் 'இவனுக்கேயுள்ள ஆண்மை' என்கிறது. ' இத் ' என்பது ஏகாரப் பொருளையுடையது. இவன் எப்படிப்பட்டவன்? எனில்: (இநஸ்ய) அரசனாயிருப்பவன. " ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணு: " [ பாரதம் ] எனப்படுமவன். ஸர்வஸ்வாமியாயிருப்பவனென்கை. ஸ்வாமியாயிருக்குமளவேயோ? குடிகளை ரக்ஷிக்கவல்லனல்லனோ? எனில்:(த்ராது:)ஸர்வரக்ஷகனாவுமிருப்பவன் என்கை. ஒருகால் ரக்ஷகனாயிருப்பினும், மற்றொருகால் ஹிம்ஸகனாயிருப்பானோ ? எனில்: ( அவ்ருகஸ்ய ) ஹிம்ஸகனாயிராதவன் என்கை. நரகம் முதலான தண்டனைகளைக் கொடுக்கும் இவன் ஹிம்ஸகனன்றோ ? எனில்: அந்த தண்டனைகளும் இவனைத் திருத்துவதற்குறுப்பாகையாலே ரக்ஷணத்தில் சேருமேயொழிய ஹிம்ஸையில் சேராது. தந்தை தனயனைத் திருத்துவதற்காக தண்டித்தால், அதைக்கொண்டு அவனை ஹிம்ஸகன் என்னமுடியாதன்றோ. ஸ்வாமியானாலும். ரக்ஷகனானாலும், ஹிம்ஸகனன்றாகிலும் காணில் உருப்பொலாதவனாயிருப்பானோ? எனில்: (மீடு₄ஷ:) நித்யயௌவனமான பரமமங்களத் திருமேனியை உடையவனாயிருப்பவன் என்கை.

இவன்செய்த ஆண்மைச்செயல்களில் ஒன்றைச் சொல்லலாகாதோவெனில்: (ய:) யாவனொரு பகவான். (பார்த்தி₂வாநி) பூமியிலுள்ள புழுதிகளையெல்லாம். ' ரஜாம்ஸி ' என்று அத்யாஹாரம் செய்துகொள்வது. ஒரு புழுதிவிடாமல் அளந்தானென்கை. ( த்ரிபி₄ரித்₃ விக₃ாமபி₄: ) மூன்றே அடிவைப்புக்களாலே. (உருக்ரமிஷ்ட) அளந்தருளினானே; அவனைத் துதிப்போம் என்று கீழோடு கூட்டுவது. எதற்காக அளந்தானென்னில்: (உருக₃ாயாய) மிகவும் புகழப்படுவதற்காக. (ஜீவஸே) ரக்ஷணம் செய்வதற்காக.

உடையவன் உடைமையை விடமாட்டாமையாலே என்கை. அன்றிக்கே, (உருகா₃யாய) உருகா₃யஸ்ய என்றபடி. (உருகா₃யாய பௌம்ஸ்யம் க்₃ருணீமஸி) மிகவும் புகழப்படும் விஷ்ணுவின் ஆண்மைச்செயலைத் துதிப்போம். எதற்கெனில்? (ஜீவஸே) நாம் ஜீவிப்பதன்பொருட்டு; அவன் புகழ்பாடுவதே நமக்கு உஜ்ஜீவன மென்கை.

११. द्वे इदस्य क्रमणे स्वर्दृशोऽभिख्याय मर्त्यो भुरण्यति।
तृतीयमस्य नकिरा दधर्षति वयश्चन पतयन्तः पतत्रिणः॥

11. த்₃வே இத₃ஸ்ய க்ரமணே
ஸ்வர்த்₃ருஶோऽபி₄க்₂யாய மர்த்யோ பு₄ரண்யதி।
த்ருதீயமஸ்ய நகிரா த₃த₄ர்ஷதி
வயஶ்சந பதயந்த: பதத்ரிண: ||

பதவுரை:—அஸ்ய—இந்த, ஸ்வர்த்₃ருஶ:-சுவர்க்கத்தைக் காண்பவனான விஷ்ணுவினுடைய, த்₃வே இத் க்ரமணே— இரண்டு அடிவைப்புக்களையே, மர்த்ய:—மனிதன், அபி₄க்₂யாய—நன்கறிந்து, பு₄ரண்யதி—பஜிக்கிறான்; அஸ்ய—இந்த விஷ்ணுவின், த்ருதீயம் க்ரமணம்–மூன்றாவது அடிவைப்பை, நகி: ஆத₃த₄ர்ஷதி-ஒருபோதும் அறியவல்லனல்லன்; பதயந்த:- (எங்கும்) வீசும், வயஶ்சந—வாயுக்களும், பதத்ரிண: — (பறக்கும்) பறவைகளும் (அறியவல்லனவல்ல).

"ஒண்மிதியிற்புனலுருவி ஒருகால் நிற்ப ஒருகாலும் காமரு சீர வுணனுள்ளத்து எண்மதியும் கடந்து அண்ட மீதுபோகி இருவிசும்பி னூடுபோய் எழுந்து மேலைத்தண்மதியும் கதிரவனும் தவிரவோடித் தாரகையின் புறந்தடவி அப்பால்மிக்கு மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை" [திருநெடு] என்கிறபடியே ஓரடியாலே கீழுலகங் கங்களையும், ஓரடியாலே மேலுலகங்களையும் அளந்தது லோக ப்ரஸித்தமாயிருக்க, "த்ரிபி₄ரித் விசக்₃ரமபி₄ருருக்ரமிஷ்ட" என்று சென்ற மந்திரத்தில் சொன்னதெப்படி என்னும் ஆசங்கை எழ, அதற்கு பதிலுரைக்கிறது இம்மந்திரம்.

(ஸ்வர்த்₃ருஶ: அஸ்ய) சுவர்க்கத்தைக்காணும் இப்பரமபுருஷனுடைய; இங்கு சுவர்க்கமாவது,— எல்லையற்ற ஆநந்தத்தைத்தரும் பரமபதம்; இவ்வுலகிலுள்ளார் பரமபதத்தைக் காணமுடியாதாகையாலே இவனை 'சுவர்க்கத்தைக் காண்பவன்' என்கிறது. (த்₃வே இத் க்ரமணே) கீழ் மேல் உலகங்களாகிற இரண்டு அடிவைப்புக்களையே. (மர்த்ய: அபி₄க்₂யாய பு₄ரண்யதி) மரணத்தை இயற்கையாகக்கொண்ட மனிதன் நன்கறிந்து பஜிக்கிறான். (த்ருதீயமஸ்ய) இவனுடைய மூன்றுவது அடிவைப்பை. (நகிரா த₃த₄ர்ஷதி) ஒரு மனிதனும் அறிவதில்லை; மனிதன் ஸஞ்சரியாத இடங்களிலும் ஸஞ்சரிக்கும் காற்றுக்களும், பறவைகளும் அறியுமோவெனில்: (வயஶ்சந பதயந்த: பதத்ரிண:) எங்கும் வீசும் காற்றுக்களும், பறவைகளுங்கூட அறியமாட்டா.

நாச்சியார் திருமொழி [4-9] வியாக்கியானத்தில் எடுக்கப்பட்ட பின்வரும் ஐதிஹ்யம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது:—

"த்ரீணி பத₃ா விசக்ரமே" [மூன்று அடிவைப்புக்களாலே அளந்தான்] என்றும், "மூன்றடி நிமிர்த்து" என்றும் சொல்லப்படும்போது, இங்கு இரண்டடியாலே என்று சொல்லுவதெப்படி? என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க,

"பரோ மாத்ரயா தநுவா வ்ருத₄ாந।
ந தே மஹித்வமந்வஶ்நுவந்தி
உபே₄ தே வித்₃ம ரஜஸீப்ருதி₂வ்யா:।
விஷ்ணோ தே₃வ த்வம் பரமஸ்ய வித்ஸே ||"

[விஷ்ணுவே! மேலானவனை நீ மிகப்பெரிய உருவுடன் வளர்ந்தருளினாய். (அப்போது) உன் பெருமையை அளவிட்டு அநுபவித்தார் ஆருமில்லை. பூமியிலும், ஆகாயத்திலும் நீ வைத்த இரண்டடிகளை யாமறிவோம்; இதற்கு மேற்பட்ட மூன்றுவது அடிவைப்பை நீயே அறிவாய்போலும்!] என்று வேதபுருஷனே இரண்டடியாலளந்தது எல்லாருக்கும் தெரியும்; நீ மூன்றடியால் அளந்தது உனக்கே தெரியுமித்தனை' என்று காணமல் விட்டான்; அவன் அளந்தமையுண்டு; அவனுக்கே தெரியுமித்தனை" என்று பட்டர் அருளிச்செய்தார்.

இங்கு இரண்டுவகையாக நிர்வஹிக்கலாம்; ஈரடியால் உலகமளந்த பிறகு, வாமனன் மாவலி தலையில் காலைவைத்து அவனைப்

பாதாளததில அழுததி, அஙகு அவனுககுப பெருஞ்செல்வததைப பணணிககொடுததுத தானே அவனுககு த்வாரபாலகனுயநினறதாக ப்ரஸிததியுளளது "உதாரா:" எனனும தன திருவுளளததாலே பகதனை மாவலியின தலைமேல வைதத அடிவைபபையே கீழமேல உலகஙகளோடு ஒரு நிலையில வைதது மூனறுவது அடிவைபபாகக கருதியிருககிறுன இநத வணமைககுணம ஒருவாககு நிலமலலாத தாகையாலே இதை மனுஷயவாயு பக்ஷிகள அறியமாடடாாகள எனபதாக ஒரு நிாவாஹம அஙஙனனறிககே, "தாவியனறுலக மெலலாம தலைவிளாககொணட எநதாய" [திருமாலை-85]

"ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ । ஸஹஸ்ராக்ஷ ஸஹஸ்ரபாத ।
ஸ பூமிம விஶ்வதோ வருதவா। அதயதிஷடதத தஶாஙகுலம॥

[புருஷனெனபபடும நாராயணன கணககறற தலைகளையும, அள வறற கணகளையும, அநநதமான காலகளையும உடையவா. அவா பூமியை எலலாப புறமும சூழநது, அதறகுமேலும அநநத யோஜனைகள வியாபிததாா] எனகிறபடியே, ரக்ஷகனின பாரிபபு ரக்ஷ்யததின அளவலலவாகையாலே மஹாபலியால அபஹரிககப படட லோகஙகளை மீடடுககொடுககபபுகுந்த இவன. இவவிபூதி முழுவதும இரணடே அடிவைபபுககுக காணகையாலே, மாவலி யால அபஹரிககபபடுவதறகு பரஸகதியேயிலலாத நிதயவிபூதி யையும மூனறுவது அடியாலே அளநது கொணடான எனறும நிாவஹிககலாம. இநத நிாவாஹம "தருதீயமஸய நகிரா ததா ஷதி வயஶசந பதயநத பததரிண [இவனுடைய மூனறுவது அடிவைபபை மனிதனும, வாயுககளும, பறவைகளும காண மாடடா] எனற மந்திரபபிறபகுதிககு மிகபபொருநதியிருககும ப்ரஹமருதராதிகள தொடஙகி ஒருவருககும காண நிலமலலா திருப்பதனறே பரமபதம.

१२. चतुर्भिस्साकं नवतिञ्च नामभिश्चक्रं न वृत्तं व्यतीनवीविपत्।
बृहच्छरीरो विमिमान ऋक्वभिर्युवाकुमारः प्रत्येत्याहवम्॥

12. சதுாபபிஸஸாகம நவதிஞ்ச நாமபிஶ
சகரம ந வ்ருததம் வ்யதீநவீவிபத।
பருஹசசரீரோ விமிமாந ருககவபிா
யுவாகுமாா. பரதயேத்யாஹவம॥

**பதவுரை**:—(*அந்த விஷ்ணு*) **வ்யதீந் வ்ருத்தம் சக்ரம் ந**—*பல ஆரங்களைக் கொண்ட உருண்டையான (தன்) சக்கரத் தாழ்வானைப்போலே*, **சதுர்ப்பி₄: ஸாகம் நவதிம் ச**—*தொண் ணூற்றுநாலு அவயவங்களைக்கொண்ட காலசக்கரத்தையும்*, **நாமபி₄**:—(*தன்*) *நியமனங்களாலே*. **அவீவிபத்**—*சுழற்று கிறன்*; **ப்₃ருஹச்சரீர**:-*பெரிய சரீரமுடையவனாய்*. **ருக்வபி₄**:-*துதிப்பவர்களால்*; **விமிமாந**:—*விசேஷித்து அளக்கப்படு மவனாய்*. **யுவா**-*யௌவன வயஸ்ஸையுடையவனாய்*. **அகுமார**:-(*சிறிது*) *குமாரனாகவுமிருப்பவனாய்*. **ஆஹவம்**—*போர்க் களத்தை*. **ப்ரத்யேதி**—*அடைகிறன்*.

"தத் ததி₃த₃ஸ்ய பௌம்ஸ்யம் க்₃ருணீமஸி" [இந்த பகவா னுடைய அந்தந்த ஆண்மைச்செயலைச் சொல்லுவோம்] என்று தொடங்கி, மூவுலகளந்ததோர் செயலைச் சொல்லிநின்றன் சென்ற மந்திரத்திற்கு முன் மந்திரத்தில், அதன்மேல் ஏற்பட்டதோர் ஆக்ஷேபத்தைப் பரிஹரித்தது சென்ற மந்திரத்தில். இனி இம்மந்தி ரத்தில் மற்றுமிரு ஆண்மைச் செயல்களைச் சொல்லுகிறது. அவை யாவன:-காலத்தை நியமிக்கையும், தேவர்களுக்காகப் போர்க் களத்தில் நின்று போர்புரிகையும்.

(சதுர்ப்பி₄ஸ் ஸாகம் நவதிம் ச) தொண்ணூற்று நாலு அவய வங்களைக் கொண்ட காலத்தையும்; அவை எவையெனில்: வருடம் ஒன்று; அயனங்கள் இரண்டு; ருதுக்கள் ஐந்து; மாதங்கள் பனிரண்டு; பக்ஷங்கள் இருபத்துநாலு; முப்பது நாட்கள்; எட்டு யாமங்கள்; பனிரண்டு லக்னங்கள் ஆக தொண்ணூற்று நாலு அவயவங்களாகின்றன. (வ்யதீந் சதுர்ப்பி₄ஸ்ஸாகம் நவதிம்) வித விதமான தன்மைகளையுடைய தொண்ணூற்றுநாலு காலாவய வங்களை. (சக்ரம் ந வ்ருத்தம் அவீவிபத்) உருண்டையாயுள்ளதும் பல ஆரங்களையுடையதுமான ஸுதர்சன சக்ரத்தைச் சுழற்றுவது போலே காலசக்கரத்தையும் சுழற்றுகிறன். சக்கரத்தாழ்வான் பல ஆரங்களை உடையவனாயிருப்பதுபோலே காலமும் பல அவயவங்களை உடையதாயிருக்கிறது. அவ்வாரங்கள் சுழலும்போது திரும்பித் திரும்பி வருவதுபோலே காலாவயவங்களான ஸம்வத்ஸராயந மாஸ பக்ஷாதிகளும் திரும்பித்திரும்பி வருகின்றன. இதனாலேயே 'காலசக்கரம்' என்றும் உலகில் சொல்லப்படுகிறதன்றோ. (நாமபி₄:) நமநப்ரகாரங்களாலே; நியமன விசேஷங்களாலேயென்றபடி.

சக்கரத்தாழ்வானைச் சத்துருக்களைக்குறித்து ப்ரேரண விசேஷங்களாலே சுழற்றுவதுபோலே, காலசக்கரத்தையும் தன் நியமனத்தாலேயே சுழற்றுகிறான் என்று கருத்து. "காலம் ஸ பசதே" [பா-மோ 25-9] [காலத்தை அவன் சமைக்கிறான் (பக்குவமாக்குகிறான்; நியமிக்கிறான்)] என்றும், "அஹமேவாக்ஷய: கால:" [கீதை 10-33] [அழிவற்ற காலமும் யானே] என்றும், "சென்று செல்லாதன முன்னிலாம் காலமே" [திருவாய் 3-8-8] என்றும் கால நிர்வாஹகனாயிருக்கும்படியை ரிஷிகளும், ஸர்வேஶ்வரன்தானும், ஆழ்வாரும் விவரித்தருளினர்.

இனி, தேவர்களுக்காக, போர்க்களத்திலே மார்பிலே அம்பு தைக்கும்படியாக நின்று சண்டைசெய்யும் ஆண்மைச்செயலைப் பேசுகிறது. (ப்₃ருஹச்ச₂ரீர:) பெருமைபெற்ற சரீரத்தையுடைய இவன்.

"ந பூ₄தஸங்க₄ஸம்ஸ்த்₂ானோ தே₃ஹோ(அ)ஸ்ய பரமாத்மந: ||"
[பார-சாந் 206-60]

[இந்தப் பரமாத்மாவினுடைய திருமேனி பஞ்சபூதங்களுடைய சேர்க்கையால் உண்டானதன்று.]

"ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமஜ்ஜாஸ்த்₂ிஸம்ப₄வா|"
[வராஹ 14-41]

[அவனுக்கு, மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு இவைகளாலுண்டான ப்ரக்ருதி ஸம்பந்தமுள்ள உடம்பு கிடையாது.] என்றும், "மாசூணச் சுடருடம்பாய்" [திருவாய் 3-1-1] என்றும் சொல்லுகிறபடியே பெருமைபெற்ற சரீரத்தையுடையவனான இவன். பெருமைபெற்றவனால் அறியமுடியாதவனாயிருப்பானோ? எனில்: (விமிமாந: ருக்வபி₄:) பக்தியால் உளங்கனிந்து துதிப்பவர்களால் அளக்கப் படுமவனாய். "ப₄க்திக்ரீதோ ஜநார்த்த₃ந:" [விஷ்ணுதர்மம்-3] [பக்தியால் விலைக்கு வாங்கப்படுமவனான ஜநார்த்தனன்] என்கிறபடியே அளவிடப்படமுடியாத தனனையும் அளவிடும்படி செய்கிறான் பக்திக்ரீதனாய்க்கொண்டு. "யத்₃யபி விபு₄:, தத₂ாபி ப₄க்த்யதீ₄நத்வாத் ஸ்துத்யா மீயதே" [விபுவாயிருப்பினும், பக்திபரதந்திரனகையால் பக்தியால் அளக்கப்படுகிறான்] என்று ஸாயணபாஷ்யம். (விமிமாந ருக்வபி₄: ப்ரத்யேதி) அசுரர்கள் முதலானாராலே நலிவடைந்த தேவர்கள், ரிஷிகள் முதலானாராலே துதிகளால் துதிக்கப்பட்டவனாய்ச் செல்கின்றான். எங்கு செல்கின்றான்? (ஆஹவம்) யுத்த பூமிக்குச் செல்கின்றான். எப்படிப்பட்ட திருமேனியையுடையவன்

செல்கின்றான்? (யுவாகுமார:) யுவா அகுமார: என்று பத₃ச்சே₂த₃ம். (யுவா) நித்தியயௌவனமான திருமேனியைக்கொண்டு செல்கின்றான். யௌவனத்தையுடைய திருமேனியெனில் முரட்டுத் திருமேனியாயிருக்குமோ? எனில்: (அகுமார:) ஈஷத்குமார: சிறிது குமாரனுயுமிருப்பவன்.

''தத்ஸாத்₃ருஶ்யமபா₄வஶ்ச தத₃ந்யத்வம் தத₃ல்பதா ।
அப்ராஶஸ்த்யம் விரோத₄ஶ்ச நஞர்த்த₂ா: ஷட் ப்ரகீர்த்திதா: ॥''

[ 1. ஒற்றுமை, 2. இன்மை, 3. வேற்றுமை, 4. சிறுமை, 5. தாழ்மை 6. பகைமை என்னும் ஆறு பொருள்கள் உள்ளதாகச் சொல்லப் படுகிறது 'நஞ்'] என்கிற பலபொருள்களில் இங்கு நாலாவது பொருளான 'ஈஷத்' [சிறிது] என்னும் பொருளிலே 'நஞ்' பிர யோகிக்கப்பட்டுள்ளது. (யுவாகுமார:) வாலிபனுகவுமிருப்பவன்; சிறிது குமாரனுகவுமிருப்பவன். அதாவது:– கௌமாரநிலை அப் போதே முடிந்ததாய், யௌவனநிலை அப்போதுதான் ஆரம்பித் திருக்கும் ஓர் ஆணழகனுயிருப்பவன். '' அரும்பினை அலரை '' [பெரியதிரு 7-10-1] என்று திருமங்கைமன்னன் இந்த ச்ருதியை விவரித்தருளினுர். '' ப்₃ருஹச்ச₂ரீர: '' என்றதை '' மாசூணுச்சுட ருடம்பாய் '' என்று விவரித்த நம்மாழ்வார் '' யுவாகுமார: '' என்றதை ''மலராது குவியாது'' என்று விவரித்தருளினுர். புஷ்ப மானது அரும்பாயிருக்கும் நிலையில் குவிந்திருக்குமாகையால் அதன் அழகு முழுவதும் காணத்தக்கதாயிராது. மலர்ந்து சிறிது நேரமானுலும் வாடிவிடுமாகையால் பூர்ணப்பொலிவுடன் காட்சி யளிக்காது. முழுதும் மலராமலும், குவியாமலும் அரும்பின் முடிவு நிலையாய், மலரின் முதல் நிலையாயிருக்கும்போது முழு அழகுடன் பொலியும். அப்படியே இவனும் குமாராவஸ்தை₂யின் முடிவுநிலை யிலும், யௌவநாவஸ்தையின் தொடக்க நிலையிலுமிருப்பவனுய் ஒப்பற்ற ஆணழகனுயிருப்பான். ''அரும்பினையலரை '' என்ற விடத்து வியாக்கியானத்தில் '' இரண்டு அவஸ்தையும் ஒருகாலே சூழ்த்துக் கொடுக்கலாம்படியிருக்கிறவனை. ' யுவாகுமார: ''' என் றருளினுர் பெரியவாச்சான்பிள்ளை. '' மலராது குவியாது '' என்னு மிடத்து வியாக்கியானத்தில், '''அரும்பினை அலரை' என்னுமா போலே செவ்விமாருத போக்யதையைச்சொல்லுதல்'' என்றருளினுர். '' 'அரும்பினை அலரை' என்னும்படியாயிருக்கும்; ' யுவாகுமார: ' என்கிறபடியே ஏககாலத்தில் இரண்டு அவஸ்தையும் சொல்லலா யிருக்கை.'' என்று நம்பிள்ளையீடு.

இப்படி இரண்டு அவஸ்தை₂யுமுடையவனுனல் 'யுவா குமார; என்று பிரயோகிக்கவேண்டியிருக்க, 'யுவா அகுமார:' என்று பிரயோகிப்பதன் மூலம் யௌவநாவஸ்தை₂யை அதிகமாகவும், கௌமாராவஸ்தை₂யைக் குறைவாகவும் சொல்லுவதற்குக் கருத்தென்னென்னில்: ஆண்மைமிக்கவனுகையாலே யௌவநாவஸ்தை₂யே கௌமாராவஸ்தை₂யிலும் விஞ்சியிருக்கும் என்றபடி. இதற்கு எதிர்த்தட்டாகப் பெண்மைமிக்கவளான பிராட்டிக்குக் கௌமாராவஸ்தை₂யே விஞ்சிநிற்பதாய், யௌவநாவஸ்தை₂ சிறிது தலைகாட்டி நிற்கும் என்பதை "யுவதிஶ்ச குமாரிணீ" [குமாரியேயிவள்: (சிறிது) மங்கையுமாவள்] என்னும் ப்ரமாணம் காட்டிற்று. 'யுவதிஶ்ச' என்றவிடத்தில் சகாரத்துக்கு அப்ராத₄ாந்யம் பொருள். "வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்" என்றவிடத்து வியாக்கியானத்தில், "'யுவதிஶ்ச குமாரிணீ' என்கிற பருவத்தைச் சொல்லுகிறது; 'யுவாகுமார:' என்று இவ்விரண்டவஸ்தையும் உண்டே அவனுக்கு. இவளுக்குக் கௌமாராவஸ்தையால் வந்த மௌக்₃த்₄யமே உள்ளது. யுவதியுமாகக் கடவள். எங்ஙனேயென்னில்: போ₄க₃ஸ்ரோதஸ்ஸில் வந்தால் இவள் தளர்த்திக்கு அவன் கைகொடுக்கவேண்டும்படியான மௌக்₃த்₄யத்தைச் சொல்லுகிறது" என்று பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை இப்பொருளைத் தெரிவித்தார்.

(ஆஹவம் ப்ரத்யேதி)போர்க்களத்திற்குந்தானே செல்கின்றுன்; "அபி₄யாதா ப்ரஹர்த்தா ச" [ரா-அ 1-29] [சென்று எதிரிகளோடு போர்செய்பவன் ராமபிரான்] என்றும், "சென்று கொன்று வென்றி கொண்ட வீரனே" [திருச்சந்த-56] என்றும் சொல்லப்படுகிறதன்றோ. எதிரிகள் படையெடுத்துவரப் பார்த்திருக்கும் தாழ்ந்த வீரனல்லனிவன்; அவர்களிருக்குமிடம் சென்று போர்புரிந்து வெல்லும் உத்தமவீரன் என்று உணர்த்துகிறது.

ஆக, இம்மந்திரத்தால், காலநியந்த்ருத்வமும், தேவர்க்காக ஸூகுமாரமான திருமேனியிலே அம்பு தைக்கப் போர்புரிவதுமாகிற ஆண்மைச்செயல்கள் பேசப்படுகின்றன.

१३. भवा मित्रो न शेव्यो घृतासुतिर्विभूतद्युम्न एवया उ सप्रथाः।
अधा ते विष्णो विदुषा चिदर्ध्यः स्तोमो यज्ञश्च राध्यो हविष्मता॥

13. ப₄வா மித்ரோ ந ஶேவ்யோ க்₄ருதாஸுதிர்
விபூ₄தத்₃யும்ந ஏவயா உ ஸப்ரத₂ா: ।
அத₄ா தே விஷ்ணோ விது₃ஷா சித₃ர்த்₄ய:
ஸ்தோமோ யஜ்ஞஶ்ச ராத்₄யோ ஹவிஷ்மதா ॥

பதவுரை:— **விஷ்ணோ** — *விஷ்ணுவே!* **மித்ர: ந**—*நண்பனைப்போலே.* **ஶேவ்ய:**—*சுகமளிப்பவனாய்.* **க்₄ருதாஸுதி:**—*(கருணை) நீரைப் பொழிவிப்பவனாய்.* **விபூ₄தத்₃யும்ந:**—*பெரும் புகழையுடையனாய்.* **ஏவயா:**—*ரக்ஷணத்தையும் அடைவிப்பவனாய்,* **ஸப்ரத₂ா:**—*எல்லாவிதத்திலும் பெருமையுடையனாய்,* **ப₄வ**—*(எங்களுக்கு) ஆவாயாக.* **அத₄ா**—*அக்காரணத்தாலே,* **தே ஸ்தோம:**—*உன் துதி.* **விது₃ஷா**—*(உன் மஹிமையை) அறியும் சேதனனாலே.* **அர்த்₄ய:**—*பலகாலும் செய்யப்பட வேண்டும்;* **ஹவிஷ்மதா**—*ஹோமம் செய்யும் யஜமானனாலே.* **தே யஜ்ஞ: ச**—*உன் விஷயமான யஜ்ஞமும்.* **ராத்₄ய:**—*ஆதரிக்கப்படவேண்டும்.*

பகவத் கடாக்ஷத்தைப் பிரார்த்திக்கிறான் இம்மந்திரத்தில்.

(ப₄வாமித்ரோ ந ஶேவ்ய:) நண்பனைப்போலே சுகமளிப்பவனாவாயாக. (மித்ர:) "மிதாத் த்ராயதே இதி மித்ர:" [மிதமெனப்படும் துக்கத்திலிருந்து காப்பாற்றுகையால் மித்ரனாகிறான்] என்கிற வ்யுத்பத்தியாலே நண்பனைக் குறிக்கிறது. அன்றிக்கே ஆதித்யனைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். இருளைப்போக்கி இன்பமளிக்கும் சூரியனைப்போலே, அஞ்ஞானவிருளைப் போக்கி மெய்ஞ்ஞான ஒளியைத் தருவாயாக என்று கருத்து.

(க்₄ருதாஸுதி:) "க்₄ருதம் ஆஸுயதே யேந" கருணை மாமழையைப் பொழிபவன்; 'க்₄ருதம்' என்னும் சொல் நீரையும் குறிக்கும்; இங்கு கருணைநீர்ப்பெருக்கைக் குறிக்கிறது. அன்றிக்கே, 'க்₄ருதம்' என்று நெய்யையே குறிப்பதாய், "க்₄ருதம் ஆஸுயதே யஸ்மை" என்னும் வ்யுத்பத்தியாலே, யாகத்தில் எரியில் சொரியப்படும் நெய்யை புஜிப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். (விபூ₄தத்₃யும்ந:) பெரும்புகழையுடைவன். "நிகரில் புகழாய்" [திருவாய் 6-10-10] எனப்படுமவனன்றோ. அதிசமான அன்னத்தை (யாகத்திலே) புஜிப்பவன் என்றுமாம். (ஏவயா:) "ரக்ஷணஸ்ய மிஶ்ரயிதா–ப்ராபயிதா" ரக்ஷிப்பவன் என்றபடி.

'ந ஹி பாலநஸாமர்த்₃யம் ருதே ஸர்வேஸ்வரம் ஹரிம்।
ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாப₄ாக₃ ப₄வத்யந்யஸ்ய கஸ்யசித்॥''
[வி-பு 1-22-21]

[ மஹாத்மாவே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேச்வரனை ஹரியைத் தவிர வேறொருவனுக்கு ரக்ஷண ஸாமர்த்தியம் இல்லை ] என்றார் பராசரர். யஜ்ஞ ஸம்ரக்ஷகன் என்றுமாம். ''ஸர்வயஜ்ஞா நாம் பே₄ாக்தா ச ப்ரபு₁:'' [கீதை 9-24]

''யஜ்ஞோ யஜ்ஞபதிர் யஜ்வா யஜ்ஞாங்கோ₃ யஜ்ஞவாஹந:।
யஜ்ஞப்₄ருத் யஜ்ஞக்ருத் யஜ்ஞீ யஜ்ஞபு₄க் யஜ்ஞஸாத₄ந:॥
யஜ்ஞாந்தக்ருத் யஜ்ஞகு₃ஹ்யமந்நமந்நமந்நாத₃ ஏவ ச॥
[வி-ஸ 971-984]

[யஜ்ஞமாகவும், யஜ்ஞபதியாகவும், யாகம் செய்பவனாகவும், யாகத்தை அங்கமாக உடையவனாகவும், யஜ்ஞத்தை வஹிப்பிப்ப வனாகவும், யஜ்ஞத்தைப் போஷிப்பவனாகவும், யஜ்ஞத்தை ஸ்ருஷ்டிப்பவனாகவும், யஜ்ஞசேஷியாகவும், யஜ்ஞ ரக்ஷகனாகவும்; யஜ்ஞத்தை ( தன்னையடைய ) ஸாதனமாகக் கொண்டவனாகவும், யஜ்ஞபலமான ஞானத்தையளிப்பவனாகவும், யாகரஹஸ்யமாகவும், அன்னமாகவும், அன்னத்தையுண்பவனாகவுமிருப்பவனிவனே]

''ஸர்வே வேதா₃ஸ் ஸர்வவேத்₃யா: ஸஶாஸ்த்ரா:
ஸர்வே யஜ்ஞா: ஸர்வ இஜ்யாஶ்ச க்ருஷ்ண:।
விது₃: க்ருஷ்ணம் ப்₃ராஹ்மணாஸ் தத்த்வதோ யே
தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:॥''

[அரசனே! எல்லா வேதங்களும், அறிவிக்கும் சாஸ்திரங்களோடு கூடிய அறியப்படும் எல்லாப்பொருள்களும், எல்லா யஜ்ஞங்க ளோடுகூட யஜ்ஞங்களில் ஆராதிக்கப்படும் எல்லா தேவதைகளும் கண்ணனே. கண்ணனை உள்ளபடி அறிந்த அந்தணர்க்கு எல்லா யஜ்ஞங்களும் முடிந்தன.]

''ஜ்யோதீம்ஷி ஶுக்லாநி ச யாநி லோகே
த்ரயோ லோகா லோகபாலாஸ் த்ரயீ ச।
த்ரயோக்₃நயஶ் சாஹுதயஶ்ச பஞ்ச
ஸர்வே தே₃வா தே₃வகீபுத்ர ஏவ॥''

[உலகில் காணும் வெளுத்த சோதிகளும், மூவுலகங்களும், லோக பாலர்களும், வேதமும், மூன்று அக்னிகளும், ஐந்து ஆஹுதி களும், எல்லா தேவர்களும் தேவகீபுத்திரனே] என்கிறபடியே யஜ்ஞத்தைப் பலபடியாலும் ரக்ஷிப்பவன் இவனன்றோ.

(ஸப்ரத2ா:) ஸர்வத: ப்ருது2:; எல்லாவிதத்திலும் பெரியவனு யிருப்பவன். ஸ்வரூபத்தில் இவன் ஒருவனே விபு4வாயிருப்பதால் ஸ்வரூபத்தால் பெரியவன் இவனே. அஸ்த்ரபூ4ஷணாத்4யாயத்தில் சொன்ன ரீதியிலே உலகையெல்லாம் தரிப்பதாய், ஸர்வமங்க3ளா காரையான பிராட்டிக்கு இருப்பிடமாய், பரம், வ்யூஹம், விப4வம் அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து பிரிவுகளையுடையதாய், "ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி:" "ந பூ4த ஸங்க4ஸம்ஸ்த2ாநோ தே3ஹோஸ்ய பரமாத்மந:" என்கிறபடியே அப்ராக்ருதமானதாய், "ஆதி3த்ய வர்ணம்" [சூரியன் போன்ற நிறமுடையவன்] "வித்3 யுத: புருஷாத்" [மின்னொளிப் புருஷன்] "நீலதோயத3மத்4யஸ்த2ா வித்3யுல்லேகே2வ ப4ாஸ்வரா" [நீலமேகமுண்ட மின்னற்கொடி போல் ஒளியுடையது] "தமேவ ப4ாந்தமநுப4ாதி ஸர்வம் தஸ்ய ப4ாஸா ஸர்வமித3ம் விப4ாதி" [ஒளிவிடும் அவனைப்பின்பற்றியே எல்லாம் ஒளிவிடுகின்றன; அவனுடைய ஒளியாலே இவையெல்லாம் ஒளிவிடுகின்றன.] "நாராயண பரோ ஜ்யோதி:" "பரம் ஜ்யோதி ருபஸம்பத்3ய" என்று ஓதப்படுகிறபடியே நித்யமுக்தர்களின் வடிவை யும் இரவிக்கெதிர் மின்மினியாக்கும் பேரொளியையுடையதா யிருக்கையாலே ரூபத்தால் பெரியவனும் இவனே. "த4ாதூநாமிவ ஶைலேந்த்3ரோ கு3ணாநாமாகரோ மஹாந்" [ரா] [பொன் வெள்ளி முதலான தாதுக்களுக்கு மலை பெரியதோர் இருப்பிடமாயிருப்பது போல், குணங்களுக்குப் பெரியதோர் இருப்பிடமாயிருப்பவன்]

"யத2ா ரத்நாநி ஜலதே4ரஸங்க்2யேயாநி புத்ரக|
தத2ா கு3ணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்2யேயா மஹாத்மந:||"

[குழந்தாய்! கடலில் ரத்தினங்கள் கணக்கற்றவையாயிருப்பது போலே மஹாத்மாவான அனந்தனின் குணங்களும் கணக்கற்றவை யாகும்.] "ஸமஸ்தகல்யாணகு3ணாத்மகோஸௌ" [வி-பு] [எல்லாக் கலியாணகுணங்களுமுடையவன் இவன்] என்கிறபடியே குணங் களாலும் பெரியவன் இவனே. தன்னையொழிந்த மற்ற எல்லா வற்றையும் தன் விபூதியாகக் கொண்டிருப்பவனாகையாலே விபூதி யாலும் பெரியவன் இவன். ஆகவிப்படிப் பிராட்டிதொடங்கி,

ப்ரஹ்மருத்ராதிகள் நடுவாக, புல்லெறும்பாதிகளீருகவுள்ள ஸமஸ்த சேதனரைக்காட்டிலும் ஸர்வவிதத்திலும் பெரியவனுகையாலே "ஸப்ரத₂ா:" எனப்படுகிருன் இவன். (மித்ரோ ந ஶேவ்யோ க்₄ருதா ஸுதிர் விபூ₄தத்₃யும்ந ஏவயா உ ஸப்ரத₂ா: ப₄வ) நண்பனைப்போலே இன்பமளிப்பவனும், கருணைமாமழையைப் பொழிபவனும், பெரும் புகழாளனும், ஸர்வரக்ஷகனும், ஸர்வாதி₄கனும் எங்களுக்கு ஆவாயாக; இப்படிப்பட்டவனும் எங்களுக்குத் தோன்றுவாயாக. (அத₄ா தே விஷ்ணோ விது₃ஷா சித₃ர்த்₄ய: ஸ்தோம:) இப்படிப் பெருமை பெற்றவனுயிருக்கும் காரணத்தாலே உன் மஹிமையை அறியும் சேதனனுலே உன் விஷயமான துதி பலகாலும் செய்யப்பட வேண்டும்; ஒருகால் துதித்தால் உன் பெருமைக்குப்போராது; பலகாலும் துதிக்கவேண்டும். (யஜ்ஞஶ்ச ராத்₄யோ ஹவிஷ்மதா) ஹோமம் செய்யும் யஜமானனுலே உன் விஷயமான யஜ்ஞமும் பலகால் அனுஷ்டிக்கப்படவேண்டும்.

१४. यः पूर्व्याय वेधसे नवीयसे सुमज्जानये विष्णवे ददाशति।
योजातमस्य महतो महि ब्रवत्सेदु श्रवोभिर्युज्यं चिदभ्यसत्॥

14. ய: பூர்வ்யாய வேத₄ஸே நவீயஸே
ஸுமஜ்ஜாநயே விஷ்ணவே த₃த₃ாஶதி।
யோ ஜாதமஸ்ய மஹதோ மஹி ப்₃ரவத்
ஸேது₃ ஶ்ரவோபி₄ர் யுஜ்யம் சித₃ப்₄யஸத்॥

**பதவுரை:**— **ய:**–எந்த மனிதன், **பூர்வ்யாய**–முதல்வனும், **வேத₄ஸே**—விதவிதமான உலகைப் படைத்தவனும், **நவீயஸே**—(என்றும்) புதியவனும், **ஸுமஜ்ஜாநயே**—லக்ஷ்மீநாதனுகவுமுள்ள, **விஷ்ணவே**—விஷ்ணுவுக்கு, **த₃த₃ாஶதி**—தன்னை அளிக்கிருனே (அவனும்) **மஹத:**—மஹாநுபாவனுன, **அஸ்ய**—இந்த பகவானுடைய, **மஹி**—பூஜிக்கத்தகுந்த, **ஜாதம்**—ஜன்மத்தை, **ப்₃ரவத்**—(எவன்) ஸங்கீர்த்தனம் செய்கிருனே. **ஸேது₃**—அவனும், **ஶ்ரவோபி₄:**–பெரும்புகழாளனுய், **யுஜ்யம் சித்**—(அனைவரும்) அடையத்தக்க அந்த பகவானுடைய பரமபதத்தை, **அபி₄ அஸத்**—எதிர்நோக்கிச் செல்கின்றுன்.

இந்தப்பரமபுருஷனைப் பெறுவதற்குச் சில ஸாதனங்களைச் சொல்லப்புகுந்து, சரணாகதி, அவதாரரஹஸ்யஜ்ஞானம் என்னும் இரண்டு ஸாதனங்களைக் காட்டித்தருகிறான் வேதபுருஷன் இம்மந்திரத்தில்.

(ய:) எந்தச் சேதனன். (பூர்வ்யாய) பூர்வகாலத்தைச் சேர்ந்தவனுக்கு. "யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்" [எவனொருவன் பிரமனை முன் படைத்தானோ] என்கிறபடியே பிரமனுக்கும் முன்னால் இருந்தவனை. நித்யனாயிருப்பவனை என்றபடி. (பூர்வ்யாய) "பூர்வோ யோ தே₃வேப்₄யோ ஜாத:" [எவன் அநாதிஸித்தனாயிருந்தும் தேவர்களுக்காகப் பிறந்தானோ] என்று புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்டபடியே ஆதிகாலத்தில் அவதரித்தவனுக்கு என்றும் கொள்ளலாம். இத்தால் சரண்யனுக்கு வேண்டியதான ஸௌலப்ய ஸௌசீல்ய வாத்ஸல்யங்களையுடையவன் என்று காட்டப்பட்டது. (வேத₄ஸே)விதவிதமான ஜகத்தை உண்டாக்கினவனுக்கு. இத்தால் ஸ்வாமித்வம் உணர்த்தப்பட்டது. (நவீயஸே) எப்போதும் புதியவனாயிருப்பவன. (பூர்வ்யாய-நவீயஸே) பழையவனாயினும் புதியவனாயிருப்பவன்.

"எப்பொழுதும் நாள்திங்களாண்டூழியூழிதொறும்
அப்பொழுதைக்கப் பொழுதென் ஆராவமுதமே"
[திருவாய் 2-5-4]

என்று இதை விவரித்தருளினார் வேதம் தமிழ்செய்த மாறன். (நவீயஸே) ஸ்வரூபரூபகுணங்களில் என்றும் புதியவனாயிருப்பவனுக்கு. இத்தால் விலக்ஷண விக்₃ரஹயோக₃மும், போ₄க்யதையும் சொல்லிற்று. (ஸூமஜ்ஜாநயே) "ஸூதராம் மாத₃யதீதி ஸூமத்; தாத்₃ருஶீ ஜாயா யஸ்ய ஸ ததோ₂க்த: தஸ்மை ஸகல ஜகந்மாத₃ந ஶீல ஶ்ரீபதயே" [மிகவும் மயக்குகிறாளாகையாலே 'ஸூமத்' எனப்படுகிறாள் ஸ்ரீதேவி; அவளைப் பத்தினியாகக்கொண்டவன் 'ஸூமஜ்ஜாநி' ஆகிறான்; எல்லாவுலகையும் மயக்கும் ஸ்ரீதேவிக்குப் பதியானவனுக்கு] என்பது ஸாயணர் காட்டிய வ்யுத்பத்தி. தன் விபூதியான செல்வத்தைக்கொண்டு உலகை மயக்குகையாலே 'ஸூமத்' என்னும் பெயரைப் பிராட்டிக்குப் பொருந்தவிட்டார் அவர். தன் ஸ்வரூபரூபகுணங்களாலே எம்பெருமானை மயக்குமவளாகையாலே 'ஸூமத்' எனப்படுகிறாள் பிராட்டி என்பது சுவைமிக்கது. இவளுடைய ஸ்வரூபம், "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம்"

[ரா-ஸு 66-10][அந்த தேவியைவிட்டு நான ஒருகணமும வாழேன] என்னப்பண்ணும அவனை, ரூபகுணங்களோவெனில, "அஸிதேக்ஷணும விநா-ந ஜீவேயம க்ஷணமபி" [கறுத்த கணகளையுடைய அவளைவிட்டுப பிரிந்தால கணநேரமும வாழமாட்டேன]

"புரேவ மே சாருத₃தீமநிந்தி₃தாம
தி₃ஶந்தி ஸீதாம யதி₃ நாத₃ய மைதி₂லீம ।
ஸதே₃வ க₃ந்த₄ாவ மநுஷ்யபந்நக₃ம
ஜக₃த ஸஶைலம பரிவாதத்யாமயஹம ॥ [ரா-ஆ]

[முனபோலே அழகிய புனமுறுவலையுடையவளும, குற்றமற்றவளும மிதிலா ராஜகுமாரியுமான சீதையை எனக்குக்காட்டாரகளாகில, தேவா, கநதருவா, மனிதா, பாமபுகள ஆகியவாகளோடுகூடி மலைகளோடும கூடிய உலகைத தலைகீழாககிவிடுவேன] என்று பிரிவிலே தனனையும விபூதியையும அழிக்கையிலே மூட்டும ஆகையாலே இவளுடைய ஸவரூபரூபகுணங்களில மயங்கிக கிடககிறுன எமபெருமான எனபது மிகபபொருநதும "அலலிமலாமகள போகமயக்குக்களாகியும" [திருவாய 3-10-8] என்றுா ஆழவார் சரணுகதியைச சொலலும இபரகரணத்தில லக்ஷ்மீ ஸமபநதத்தைச சொலலுகையாலே புருஷகாரபூ₄தையான இவளைமுனனிட்டே சரணமடையவேணடும எனனும அாத்தம உணாத்தபபடுகிறது. அதிலும பிராட்டியை 'ஸூமத' [(ஸவரூபரூபகுணங்களாலே எமபெருமானை) மிகவும மயக்குமவள] எனகையாலே, எமபெருமானிடம இவளுடைய புருஷகாரம என்றும பழுதாகாது என்று உணாத்தபபடுகிறது. (விஷணவே) அாசசாவதார பாயநதமான அவதாரங்களாலே எங்கும வியாபித்திருபபவனுக்கு "ததோ விஷ்வங வயகராமத ஸாஶநாநஶநே அபி₄" [அதறகுபபின சேதனருககாக எங்கும (அவதாரம செயவதன மூலம) வியாபித்தான.] என்று புருஷஸூக்தத்தில சொலலிய அவதார வயாபதியே இங்கு சொலலபபடுகிறது இததால, சரணமடைய நினைததவனுககு இவளைத தேடி நெடுநதூரம போகவேணடாதபடி குடீகுஞஜங்கள தோறும எழுநதருளியிருபபவன என்று உணாததபபடுகிறது (ய த₃த₃ாஶதி) எவன (தனனைக) கொடுக்கிறுனே, எவன ஆதமஸமாபபணம செயகிறுனே

"பிதரம மாதரம த₃ாராந புதராந ப₃நதூ₄ந ஸகீ₂ந கு₃ரூந ।
ரதநாநி த₄நத₄ாந்யாநி க்ஷேதராணி ச க்₃ருஹாணி ச ॥

**ஸர்வத₄ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந் ।**
**லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ₄ ॥"**

*[எம்பிரானே! தந்தை, தாய், பெண்டு பிள்ளைகள், உற்றார்] நண்பர், ஆசாரியர்கள், ரத்தினங்கள், தனதானியங்கள், வயல்கள், வீடுகள், எல்லா உபாயங்கள், கைவல்யமுள்ளிட்ட எல்லாப் பலன்கள் ஆகிய அனைத்தையும் விட்டு, திருவுலகளந்தருளிய உன் திருவடிகளை சரணமடைகிறேன்] என்றும்*

**" அஹமஸ்ம்யபராத₄நாமாலயோऽகிஞ்சநோऽக₃தி: ।**
**த்வமேவோபாய பூ₄தோ மே ப₄வ ॥ "**

*[நான் குற்றங்களனைத்துக்கும் கொள்கலமாயிருப்பவன்; கைம்முதலில்லாதவன்; (வேறு) புகலற்றவன். நீயே எனக்கு உபாயமாவாயாக] என்றும் சொல்லுகிற ரீதியிலே எவனொருவன் ஸர்வேச்வரனிடம் தன்னுடைய ஆத்மாவை ஸமர்ப்பித்து சரணமடைகிறானோ' ஆக, இவ்வளவால், " தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" [ஆகையாலே இந்த ஸாதனங்களுக்குள் சரணாகதியையே சிறந்ததாகச் சொல்கின்றனர்.] என்று மிகச்சிறந்த ஸாதனமாக நாராயணவல்லியில் ஓதப்பட்ட சரணாகதியான ஸாத₄னம் சொல்லப்பட்டது.*

*இந்த சரணாகதிதன்னிலும், " மஹாவிஶ்வாஸ பூர்வகம் ததே₃கோபாயதாயாச்ஞா ப்ரபத்தி: ஶரணாக₃தி: " [மஹாவிச்வாஸத்தை முன்னிட்டுக்கொண்டு, அந்த பகவான் ஒருவனையே உபாயமாயிருக்கும்படி வேண்டுவது ப்ரபத்தியென்றும் சரணாகதியென்றும் சொல்லப்படுகிறது.] என்கிறபடியே மஹாவிஶ்வாஸம் வேண்டியிருக்கையாலும், அது பலருக்குப்பெற அரிதாயிருக்கையாலும் மற்றும் சில ஸுகரோபாயங்களைச் சொல்ல முற்பட்டு, அதில் முதன் முதலாக அவதாரரஹஸ்யஜ்ஞானமாகிற உபாயத்தைப் பேசுகிறது. (யோ ஜாதமஸ்ய மஹதோ மஹி ப்₃ரவத்) மிகப்பெரியவனாகிற இவனுடைய மிகச்சிறந்த பிறப்பை எவன் சொல்லுகிறானோ.*

**"ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: ।**
**த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥"**

*[கீதை 4-9]*

அர்ஜுனா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும், செயல்களையும் இம்மாதிரியாக எவன் உள்ளபடி அறிகிறானோ, அவன் இவ்வுடம்பை விட்டு மறுபிறப்பையடைவதில்லை.] என்று இவ் வாக்கியப்பகுதி கீதையில் கண்ணனாலேயே விவரிக்கப்பட்டது. (மஹத: அஸ்ய ஜாதம்) மிகப்பெரியவனான இவனுடைய பிறப்பு; அனைவர்க்கும் தந்தையான இவனுடைய பிறப்பு. "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநெள நாவேத₃விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்" [எல்லா உலகுக்கும் தந்தையானவன் தன் பிள்ளையொருவனைத் தந்தையாகக்கொண்டு பிறக்கிறான்; வேதமறியாதவன் அவனைப் பெரியோனென அறியமாட்டான்] என்று வேதத்தில் ஓதப்பட்ட படியே மிகப்பெரியவனுடைய பிறப்பு. (மஹி ஜாதம்) சிறந்த பிறப்பு; பூஜிக்கத்தகுந்த பிறப்பு; "ஜந்ம மே தி₃வ்யம்" [என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பு] என்று அவனாலேயே புகழப்பட்ட அப்ராக்ருதமான பிறப்பு. கர்மத்தாலேற்படும் மற்றுள்ளார் பிறப்புப்போலன்றியே,

"அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ₄தாநாமீஸ்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்டா₂ய ஸம்ப₄வாம்யாத்மமாயயா ॥"
[கீதை 4-6]

[பிறப்பவற்றவனாயும், அழிவற்றவனாயும், பூதங்களுக்கு ஈச்வரனாயும் இருந்துகொண்டே என் தன்மையைப் பற்றி நின்றுகொண்டே, என் ஸங்கல்பத்தாலே சிறப்புடன் பிறக்கிறேன்.] என்கிறபடியே இச்சையால் ஏற்படும் பிறப்பு. (மஹி ஜாதம்) ஸ்வார்த்தமாக வன்றிக்கே, பரார்த்தமாகவாகையாலே சிறந்த பிறப்பு.

"யதா₃ யதா₃ ஹி த₄ர்மஸ்ய க்₃லாநிர் ப₄வதி பா₄ரத ।
அப்₄யுத்தா₂நமத₄ர்மஸ்ய ததா₃ऽऽத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥
பரித்ராணாய ஸாதூ₄நாம் விநாஶாய ச து₃ஷ்க்ருதாம் ।
த₄ர்மஸம்ஸ்தா₂பநார்த்தா₂ய ஸம்ப₄வாமி யுகே₃ யுகே₃ ॥"
[கீதை 4-7, 8]

[பாரதனே! எப்போதெல்லாம் அறத்திற்கு வாட்டம் ஏற்படுகிறதோ, மறத்திற்கு எழுச்சி ஏற்படுகிறதோ, அப்போது என்னை நானே பிறப்பித்துக் கொள்ளுகிறேன். நல்லோர்களை அளிப்பதற்காகவும், தீயவர்களை அழிப்பதற்காகவும், அறத்தை நிலைநிறுத்துவதற்காகவும் யுகந்தோறும் சிறப்புடன் பிறக்கிறேன்.] என்கிறபடியே

பிறர்க்கேயாயிருப்பதன்றே இவன் பிறப்பு. (ய: அஸ்ய ஜாதம் ப்₃ரவத்) எவன் இப்பரமபுருஷனுடைய பிறப்பைச் சொல்லுகிறனே; " மந: பூர்வோ வாகு₃த்தர: " [முதலில் மனமும், பிறகு வாக்கும் பிரவர்த்திக்கிறது.] என்று வேதம் ஓதுகையாலே, அவதார ரஹஸ்யஜ்ஞானத்தைத் தான் முதலில் அறிந்து, 'பிறந்தவாறும்' 'எத்திறம்' என்றுப்போலே அதிலே ஈடுபட்டுப் பிறர்க்கும் எவன் அதை உபதேசிக்கிறனே. இங்கு அர்த்தஸித்தமான ஜ்ஞானத்தை " ஏவம் யோ வேத்தி " [எவன் இப்படி அறிகிறனே] என்று கீதாசார்யன் வெளிப்படுத்தினன். ஆக, இவ்வளவால் சரணுகதியும், அவதார ரஹஸ்யஜ்ஞானமுமாகிற இரு உபாயங்கள் உரைக்கப்பட்டன; " ய: பூர்வ்யாய " " யோ ஜாதமஸ்ய " என்று இரண்டு யச்சப்தங்கள் பிரயோகிக்கப்பட்டிருக்கையாலே இரண்டும் தனித் தனி உபாயங்கள், அவற்றை அனுஷ்டிப்பவர்கள் வெவ்வேறனவர் என்று தெளிவிக்கப்படுகிறது.

இனி, இவ்விரு உபாயங்களுக்கும் பொதுவான பலன் சொல்லப்படுகிறது,– (ஸேது₃) ஸோபி; அவனும்; 'உ' சப்தம் 'அபி' சப்தபர்யாயமாய், இருவரையும் ஸமுச்சயிக்கிறது. ஆத்மஸமர்ப்பணம் செய்தவனும், அவதாரரஹஸ்ய ஜ்ஞானமுள்ளவனும். (ஶ்ரவோபி₄:)புகழ்களோடு கூடியவனுய்; இவ்வுலகிலிருக்கும்போதும் பெரும்புகழோடு கூடியவனுய்; " வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே " [திருவாய் 3-3-11] என்கிற பலனை இம்மையில் பெற்று. (யுஜ்யம் சித்) அனைவரும் செல்லத்தக்கதான பரமபதத்தை. " வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே " [திருவாய் 10--9-9] எனப்படும் பரமபதத்தை. (அப்₄யஸத்) விரும்பிச் செல்கின்றன்.

१५. तमु स्तोतारः पूर्व्यं यथा विद ऋतस्य गर्भं जनुषा पिपर्तन।
आस्य जानन्तो नाम चिद्विवक्तन महस्ते विष्णो सुमतिं भजामहे॥

15. தமு ஸ்தோதார: பூர்வ்யம் யத₂ா வித₃
ருதஸ்ய க₃ர்ப்ப₄ம் ஜநுஷா பிபர்த்தந ।
ஆஸ்ய ஜாநந்தோ நாம சித்₃விவக்தந
மஹஸ்தே விஷ்ணோ ஸுமதிம் ப₄ஜாமஹே ॥

பதவுரை:—ஸ்தோதார:—துதிப்பவர்களே!, பூர்வ்யம்—அநாதிஸித்தனுய், ருதஸ்ய க₃ர்ப்ப₄ம்—ஜலத்துக்கு உத்பாத

கனுன. தம் உ—அந்த விஷ்ணுவையே, யதா₂ விது₃—அறிந்த படி, ஜநுஷா—நிருபாதிகமாக, பிபர்த்தந—(துதியால்) உகப்பியுங்கள்; அஸ்ய—இந்த விஷ்ணுவுடைய, நாம—திரு நாமத்தை, ஜாநந்த:—அறிபவர்களே! ஆ—எங்கும், விவக்தந—(அந்த நாமத்தை) ஸங்கீர்த்தநம் செய்யுங்கள்; தே₃வவிஷ்ணோ—தேவனுன விஷ்ணுவே! மஹ:தே—பெரியோனுன உன்னுடைய, ஸுமதிம்—நல்ல அறிவான பக்தியை, ப₄ஜாமஹே—அடைவோம்.

பகவானே அடைய ஸாதனமாயிருக்கும் ஸ்துதி, திருநாம ஸங்கீர்த்தனம், பக்தி என்னும் உபாயங்கள் உபதேசிக்கப்படு கின்றன இம்மந்திரத்தில்.

(ஸ்தோதார:) துதிக்கத்தெரிந்த புலவர்களே! (தம் உ பிபர்த்தந) உங்கள் துதிகளால் அவனேயே உகப்பியுங்கள். மற்றுள்ளாரைத் துதிப்பதால் பயனில்லே. "உளனுகவேயெண்ணித் தன்னே யொன்ருகத்தன் செல்வத்தை வளனுமதிக்கும இம்மானிடத்தைக் கவிபாடியென்? ஒழிவொன்றிலாத பல்லூழிதோறூழி நிலாவப் போம் வழியைத்தரும் நங்கள் வானவரீசனே நிற்கப்போய் கழிய மிக நல்ல வான்கவிகொண்டு புலவீர்காள்! இழியக்கருதி ஓர் மானிடம் பாடல் எனனுவதே? என்னுவதெத்தனே நாளைக்குப் போதும் புலவீர்காள்! மன்னு மனிசரைப்பாடிப் படைக்கும் பெரும் பொருள்? மின்னுர் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினல் தன்னுகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே. கொள்ளும் பயனில்லே குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை வள்ளல் புகழ்ந்து நும் வாய்மையிழக்கும் புலவீர்காள்! கொள்ளக் குறை விலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதிலென் வள்ளல் மணி வண்ணன் தனனேக் கவிசொல்ல வமினே. வம்மின் புலவீர்! நும் மெய்வருத்திக் கைசெய்துய்ம்மினே; இம்மன்னுலகில் செல் வரிப்போதில்லே நோக்கினேம. நும்மின்கவிகொண்டு நும் நுமிட்டா தெய்வமேத்திஞல் செம்மின் சுடர்முடி என் திருமாலுக்குச் சேருமே" அவனேயே துதிக்கவேண்டும்படி அவனுக்குள்ள பெருமையென் னென்னில்; (பூர்வ்யம்) ஆதிப்பிரானுயிருப்பவனே. (ருதஸ்ய க₃ர்ப்ப₄ம்) ஆதியில் ஜலத்தைப் படைத்தவனே. "அப ஏவ ஸஸர்ஜா தெ₃ள" [முதலில் நீரைப் படைத்தான்] "தானேர் பெருநீர் தன் னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும் வானேர் பெருமான்"

என்கிறபடியே. இங்கு ஜலத்தைச் சொன்னது எல்லாப் பொருள்களுக்கும் உபலக்ஷணம். ஸர்வஸ்ரஷ்டாவாகையாலே இவனே துதிக்கத்தகுந்தவனென்கை. (ருதஸ்ய க₃ர்ப்ப₄ம்) ஸத்யமான இவ்வுலகனைத்துக்கும் காரணனை என்றுமாம். இப்படி ஸர்வாதி₄கனுகில் அவனையறிந்து துதிக்க முடியுமோ? என்னில்: (யதா₂ விதா₃பிபர்த்தந) எப்படி அறிகிறீர்களோ அப்படியே துதியுங்கள். அவனை உள்ளபடியெல்லாம் அறிந்து பிறகு துதிப்பதென்பது யாராலுமாகாது. நீங்கள் அறிந்தபடியே துதித்தால், அப்படியே ஆவானவன்.

"யே யதா₂ மாம் ப்ரபத்₃யந்தே தாம்ஸ்ததை₂வ ப₄ஜாம்யஹம்"

[என்னை எவர்கள் எப்படி அடைகின்றனரோ. அவர்களை நான் அப்படி அடைகிறேன்] என்றான் கண்ணனும் கீதையில்.

"தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்ததெப்பேர் மற்றப்பேர்—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவ்வண்ணம் ஆழியானும்" [முதல்திருவ 44]

என்றார் பொய்கையாழ்வார். (ஜநுஷா பிபர்த்தந) "(ஜநுஷா)-ஜந்மநா—ஸ்வத ஏவ- ந கேநசித் வரலாப₄ாதி₃நா" என்று ஸாயண பாஷ்யம். துதித்துவிட்டு மடியேற்காமல், ஸ்வரூபப்ராப்தமாக நினைத்துத் துதியுங்கள் என்றபடி.

"ஸோஹம் தே தே₃வதே₃வேஶ நார்ச்சநாதௌ₃ ஸ்துதௌ ந ச ।
ஸாமர்த்₂யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத₃ மே ॥"
[வி-பு]

[தேவதேவேசனே! உன்னைத் துதிப்பதிலும், அர்ச்சனம் முதலியவற்றிலும் நான் வல்லமையுள்ளவனல்லன்; அருளே நிறைந்த மனத்தினுய் எனக்கருளவேண்டும்.] என்கிறபடியே முன்கூறிய ஸ்துதிருபமான உபாயமும் வாக்குவன்மையுள்ள சிலர்க்கே அனுஷ்டிக்கக்கூடுமாகையால், ஸர்வஸுலபமான திருநாமஸங்கீர்த்தனத்தை விதிக்கிறது அடுத்தபடியாக: (அஸ்ய நாம ஜாநந்த:- ஆ விவக்தந) இவனுடைய நாமத்தை அறிபவர்களே! அதை எங்கும் சொல்லுங்கள். (நாம) செவிப்பட்ட மாத்திரத்தில் அனைவராலும் வணங்கத்தக்க

தாயிருக்கிறபடியால், "நாமம்" எனப்படுகிறது. "மந்த்ரம்" என்று தொழிந்தது காலநியமம், அதிகாரிநியமம் முதலியவை வாராமைக்காக. இடறினவன் 'அம்மே' என்னும்போது ஒரு சடங்கு வேண்டாமன்றோ. (அஸ்ய நாம) இன்ன நாமம் என்று விசேஷியாமலிருக்கையாலே, பேருமோராயிரம் பிற பல உடைய எம்பெருமானை அவனுடைய பெயரில் எதையாகிலும் உச்சரிக்க அமையும் ஸம்ஸாரவியாதி தீருகைக்கு: இவனுடைய நாமமாயிருக்க வேண்டுமத்தனையே வேண்டுவது என்று கருத்து. இவ்வர்த்தத்தை ஶ்ருதிஸ்ம்ருதிகளும், ஆழ்வாராசாரியர்களும் பன்னியுரைத்தனர். எங்ஙனேயென்னில்;

"அச்யுதாநந்தகோ₃விந்த₃ நாமோச்சாரணபே₄ஷஜாத் ।
நஶ்யந்தி ஸகலா ரோக₃ா: ஸத்யம் ஸத்யம் வத₃ாம்யஹம் ॥"

[அச்சுதன், அனந்தன், கோவிந்தன் என்னும் திருநாமங்களை உச்சரிப்பதாகிற மருந்தினால், எல்லா வியாதிகளும் நாசமடைகின்றன. 'உண்மை உண்மை' என்று இருகால் ஸத்யம் செய்து சொல்லுகிறேன் நான்.] என்று அச்யுதன், அநந்தன், கோவிந்தன் என்னும் திருநாமங்களின் பெருமை விஷ்ணுதர்மத்தில் உத்கோஷிக்கப்பட்டது.

"ஆர்த்தா விஷண்ணா: ஶிதி₂லாஶ்ச பீ₄தா:
கோ₄ரேஷு ச வ்யாதி₄ஷு வர்த்தமாநா: ।
ஸங்கீர்த்ய நாராயணஶப்₃த₃மாத்ரம்
விமுக்தது₃:க்க₂ா: ஸுகி₂நோ ப₄வந்தி"

[ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்னும் தாபங்களினால் தபிக்குமவர்களும், பயந்தவர்களும், கோரமான வியாதிகளினால் துன்பமடைபவர்களும் நாராயணன் என்னும் சப்தத்தை மட்டும் கீர்த்தனம் செய்வதாலேயே எல்லா துக்கங்களும் நீங்கப் பெற்று, மோக்ஷஸுகத்தையும் அடைகிறார்கள்.] என்று பாரதத்தில் நாராயணநாமப்பெருமை பேசப்பட்டது.

"அவஶேநாபி யந்நாம்நி கீர்த்திதே ஸர்வபாதகை: ।
புமாந் விமுச்யதே ஸத்₃ய: ஸிம்ஹத்ரஸ்தைர் ம்ருகை₃ரிவ ॥
யந்நாம கீர்த்தநம் ப₄க்த்யா விலாயநமநுத்தமம் ।
மைத்ரேயாஶேஷபாபாநாம் த₄ாதூநாமிவ பாவக: ॥"

[அந்த பகவானுடைய திருநாமம் யத்ருச்சையாகக் கீர்த்திக்கப்பட்ட போதிலும் ஒரு மனிதனுடைய பாபங்கள் ஸிம்ஹத்தினால் பய முறுத்தப்பட்ட மருகங்கள் விலகிப்போவதுபோல, விட்டோடிப் போகின்றன மைத்ரேயரே! ஸுவர்ணம் முதலிய தாதுக்களுடைய அழுக்கை நெருப்பு போக்குவதுபோல பக்தியுடன் அப்பெருமா னுடைய திருநாமஸங்கீர்த்தனம் செய்தல் எல்லாப் பாபங்களையும் அழிக்கும் ஒப்பற்ற ஸாதனமாகும்] என்றும்

'த்4யாயந் க்ருதே யஜந் யஜ்ஞை: த்ரேதாயாம்
த்3வாபரேர்சசயந் ।
யதா3ப்நோதி தத3ாப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேசவம் ॥

[பகவானை தியானிப்பதால் க்ருதயுகத்திலும் யஜ்ஞங்களைக்கொண்டு ஆராதிப்பதால் த்ரேதாயுகத்திலும், அர்ச்சனைசெய்வதால் த்வாபர யுகத்திலும் எதை அடைகிறானோ அதைக் கலியுகத்தில் கேசவனை ஸங்கீர்த்தனம் செய்வதாலேயே அடையலாம்] என்றும்

"கிம் சித்ரம் தத்3க4ம் ப்ரயாதி விலயம் தத்ராச்யுதே கீர்த்திதே

[அச்யுதனுடைய நாமம் கீர்த்திக்கப்பட்டவுடன் அவ்விடத்திலேயே பாபங்கள் நாசமடைகின்றன என்னுமிவ்விஷயத்தில் ஆச்சரியம் என்ன] என்றும் விஷ்ணுபுராணத்தில் உரைக்கப்பட்டது

"அஜ்ஞாநதோ ஜ்ஞாநதோ வா வாஸுதே3வஸ்ய கீர்த்தநாத் ।
தத்ஸர்வம் விலயம் யாதி தோயஸ்த2ம் லவணம் யதா2 ॥

[அறிந்தோ, அறியாமலோ வாஸுதேவனுடைய திருநாமத்தைச் சொன்னானாகில் அவனுடைய பாபமெல்லாம் தண்ணீரினுள்ளிருக்கும் உப்பைப்போல கரைந்துவிடுகின்றன] என்றும்,

"ஶமாயாலம் ஜலம் வஹ்நேஸ் தமஸோ பா4ஸ்கரோத3ய ।
ஶாந்தி கலேரகௌ4க4ஸ்ய நாமஸங்கீர்த்தநம் ஹரே ॥

[நெருப்பை அணைப்பதற்கு நீரும், இருட்டைப் போக்கடிக்க ஸூர் யோதயமும் போதுமானவை (அதுபோலவே) கலிகோலாஹலத்தின் லுண்டாகும் பாபவெள்ளத்தைப் போக்கடிப்பது ஹரியின் நாம ஸங்கீர்த்தனமே] என்றும் "யந்நாம ஸங்கீர்த்தநதோ விமுச்யதே' [எவனுடைய திருநாமஸங்கீர்த்தனத்தினால் மோக்ஷமடைகிறானோ] என்றும், "யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாப4யாத் விமோக்ஷமாப்நோதி

ந ஸம்ஶயம் நர:" [எவனுடைய ஸங்கீர்த்தநத்தால் மனிதன் பேராபத்தினின்றும் ஸந்தேஹமில்லாமல் விடுதலையடைகிறானோ.........] என்றும்,

"ஸக்ருதுச்சரிதம் யேந ஹரிரித்யக்ஷரத்வயம்।
பத்த: பரிகரஸ்தேந மோக்ஷாய கமநம் ப்ரதி॥"

['ஹரி' என்னுமிவ்விரண்டெழுத்தும் எவனால் ஒருதடவை உச்சரிக்கப்பட்டதோ, அவன் மோக்ஷத்திற்குப் போவதற்காகச் செய்ய வேண்டியவைகளைச் செய்துவிட்டான்.] என்றும்,

"யஸ்ய நாம்நி ஸ்ம்ருதே மர்த்யஸ் ஸமுத்க்ராந்தேரநந்தரம்।
ப்ராப்நோதி வைஷ்ணவம் ஸ்தாநம் புநராவ்ருத்திவர்ஜிதம்॥"

[எவனுடைய திருநாமத்தை நினைத்த மனிதன் இறந்தபின்பு திரும்பி வருகையற்றதான விஷ்ணுவினுடைய பரமபதத்தை அடைகிறானோ...] என்றும் விஷ்ணுதர்மத்தில் பலவிடங்களில் பேசப்பட்டதன்றோ. மற்றோரிடத்தில்.

"ஸர்வாந் காமாந் ப்ராப்நுவந்தே விஶாலாந்
த்ரைலோக்யேஸ்மிந் க்ருஷ்ணநாமாபிதாநாத்"

[இம்மூவுலகிலுமுள்ள மிகப்பெரிய இஷ்டவஸ்துக்களெல்லாவற்றையும் கிருஷ்ணனென்னும் திருநாமத்தைச் சொல்லுவதன் மூலமாகவே அடைகிறார்கள்] என்று கோஷிக்கப்பட்டது. வேறோரிடத்தில்

"ஸங்கீர்த்தயேஜ்ஜகந்நாதம் வேதம் வாபி ஸமீரயேத்"

[ஜகந்நாதனை பெருமானை ஸங்கீர்த்தனம் செய்யக்கடவன்; அல்லது வேதத்தையாவது ஜபிக்கடவன்,] என்று நாராயண நாம ஸங்கீர்த்தனம் வேதாத்யயனத்தைக்காட்டிலும் மேலானதென்று உணர்த்தப்பட்டது. இவையெல்லாவற்றிருக்கும் மூலமான வேதத்திலும் "த்ருவாஸோ அஸ்ய கீரயோ ஜநாஸ:" [இவனைக்கீர்த்திக்கும் ஜனங்கள் நிலையான மோக்ஷஸ்தானத்தை அடைகிறார்கள்.] என்று உத்கோஷிக்கப்பட்டது.

"கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்"
—என்று நம்மாழ்வார் அருளினார்.

"காவலிற் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து
நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின் நாமங்கற்ற
ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமாநகருளானே"

என்றும்,

"பச்சைமாமலைபோல் மேனிப்பவளவாய்க் கமலச்செங்கண்
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே!"

—என்றும்,

"மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்துடைய பேரால்
கத்திரபந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்"

—என்றும்,

"நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி"

என்றும் தொண்டரடிப்பொடியாழ்வார் திருநாமஸங்கீர்த்தந ப்ரபாவத்தைப் பலகால் அருளிச்செய்தருளினர். திருமங்கையாழ்வாரும் முதல் திருமொழியில் நாராயணநாம ப்ரபாவத்தைப் பலபடியாகப் பேசியருளினர்.

"இத்திருநாமந்தான் ப்ரயோஜநாந்தரபரர்க்கு ப்ரயோஜனத்தைக் கொடுக்கும்; உபாயாந்தரநிஷ்டர்க்குப் பாவநமாயிருக்கும்; ப்ரபந்நர்க்கு தேஹயாத்ராசேஷமாயிருக்கும்; முத்துப்படும் துறையில் முழுகுவார் முத்தைக்கொடுத்துப் பழங்கொள்ளுவர்கள். 'செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று' மாறுவர்களிறே. விலையறியும் செட்டிகள் பக்கல் புகுந்தவாறே பெருவிலையனும்; செருக்கரானார் இத்தைப்பூண்டு அநுபவிப்பார்கள்; அப்படியே ப்ரயோஜநாந்தரபரர்க்கும் உறுப்பாய், ஸாதநாந்தரநிஷ்டர்க்கும் உறுப்பாய், ப்ரபந்நர்க்கு ஸ்வயம்ப்ரயோஜநமாயாய்த்து இத்திருநாமமிருப்பது" என்றும், "இப்படிச் சேதநன்தான் மூலையடியே திரிந்தாலும் அவன் தோஷங்களைப் போக்கி, மேல்சொல்லுகிற நன்மைகளைக் கொடுக்கும்படியாய்த்து திருநாமத்தினுடைய ப்ரபாவமிருப்பது"

என்றும் "பக்தியினுடைய துஷ்கரதையோபாதி ப்ரபத்திநிஷ்டா ஹேதுவான மஹாவிச்வாஸமும் சிலருக்குக் கிட்டுகை அரிதாகை யாலே இதில் இழியக்கூசினவர்களுக்கு ஸர்வாதி$_4$காரமான யாத்$_3$ ருச்சி$_2$க ப$_4$க$_3$வந்நாம ஸங்கீர்த்தனமே சேதநருடைய பாபத்தைப் போக்கி ஸுக்ருதானுகூலமாகக் கர்மயோகா$_3$தி$_3$களிலே மூட்டுதல். ப்ரபத்தியிலே மூட்டுதல், விரோதியைப்போக்கி ப்ராப்யத்தைக் கொடுக்கைக்குத் தானே நிர்வாஹகமாதலாம்படியான வைபவத்தை உடைத்தாயாய்த்து திருநாமத்தினுடைய வைபவமிருப்பது" என்றும் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தார். இவையெல்லாவற்றையும் வேதாந்தாசார்யரான பட்டரும் ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யத்திலே பரபக்ஷப்ரதிக்ஷேபபூர்வகமாகப்பரக்க அருளிச்செய்தார். அபி$_4$யுக்தாக்$_3$ரேஸரரான பிள்ளைலோகாசார்யரும் "வாச்யப்ரப$_4$ாவம் போலன்று வாசகப்ரப$_4$ாவம். அவன் தூ$_3$ரஸ்த$_2$ னானாலும் இது கிட்டி நின்று உதவும். த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே. சொல்லும் க்ரமமொழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது. இதுதான் 'குலந்தரும்' என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும். ஐச்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும். கர்மஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப்போக்கி, அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும். ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும ஹேதுவாயிருக்கும்" என்று முமுக்ஷுப்படியில் அருளிச்செய்தார்.

(ஜாநந்த: விவக்தந) அறிபவர்களே! சொல்லுங்கள். அசேதநமாயிராமல் சேதனராயிருந்தவாசிக்குச் சொல்லுங்கள். அறிவை ஸம்பாதிக்க வேண்டியதில்லையே; உங்களைவிட்டுப் பிரியாத தொன்றுயிற்றே இது. இங்கு அறிவைச் சொன்னது சரீரம், நாக்கு முதலிய உபகரணங்கட்கும் உபலக்ஷணம். (நாம விவக்தந) அவனுடைய நாமம் ஸித்தமாயிருக்கிறதொன்றுயிற்றே. ஆக இப்படி நாமமும ஸித்தமாய், அதை உச்சரிக்க உபகரணங்களும் குறைவற்றதாயிருக்கும்போது உச்சரித்து உஜ்ஜீவிக்கத் தட்டென்ன? விரைவில் உச்சரியுங்கள் என்கிறது. இவ்வர்த்தத்தையே

"நாராயணேதி ஶப்$_3$தே$_3$ாऽஸ்தி வாக$_3$ஸ்தி வஶவர்த்திநீ।
தத$_2$ாபி நரகே கே$_4$ாரே பதந்தீதி கிமத்$_3$பு$_4$தம்॥"

[நாராயணன் என்னும் சப்தமிருக்கிறது; வாயும் வசத்திலிருக்கிறது. அப்படியும் கோரமான நரகத்தில் பலர் விழுகின்றனர் என்பது என்ன ஆச்சரியம்!] என்று புராணங்களில் பேசப்படுகிறது. பொய்கையாழ்வாரும் இதையே

"நாவாயிலுண்டே நமோ நாரணவென்று
ஓவாதுரைக்கும் உரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும்திறம்." — என்று அருளிச்செய்தார்,

(ஆவிவக்தந) ஆ–ஸமந்தாத்–விவக்தந. எங்கும் சொல்லுங்கள் ஸர்வதேசத்திலும் சொல்லுங்கள். ஸர்வகாலத்திலும் சொல்லுங்கள். ஸர்வாவஸ்தையிலும் சொல்லுங்கள்.

"துஞ்சும்போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லினும் நன்றாம்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணாவென்னும் நாமம்" [பெரியதிரு1-1-9]

என்றார் திருமங்கையாழ்வார்.

ஆஸீநா வா ஶயாநா வா திஷ்ட$_2$ந்தோ யத்ர குத்ர வா |
நமோ நாராயணாயேதி மந்த்ரைகஶரணா வயம்||

[எங்காவது உட்கார்ந்திருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும், நின்றுகொண்டிருந்தாலும் 'நமோ நாராணாய' என்னும் மந்திரத்தையே உபாயமாகப் பற்றியவர்கள் நாங்கள்.]

என்று ரிஷிகளும் இதை விவரித்தனர். (ஆவிவக்தந)எங்கும் ஸங்கீர்த்தனம் செய்யுங்கள் என்கையாலே, பரிசுத்தனாயிருக்கும் போதோடு, அசுத்தனாயிருக்கும் போதோடுவாசியற ஸர்வாவஸ்தைகளிலும் சொல்லுங்கள் என்றதாகிறது. திருநாமஸங்கீர்த்தனம் செய்யும் போது; அசுத்தனுக்கு சுத்திஸம்பாதிக்கவேண்டியதில்லை, சுத்தனுக்கு அசுத்தி ஸம்பாதிக்கவேண்டியதில்லை. இருந்தபடியே ஸங்கீர்த்தனம் செய்ய அமையும் என்று கருத்து.

"நஞ்ஜீயர், 'அப்ரயதனாய்க்கொண்டு திருநாமம் சொல்லலாமோ? ஆகாதோ?' என்று பட்டரைக் கேட்க, 'கங்காஸ்நாநம் பண்ணப் போமவனுக்கு உவர்க்குழியிலே (உப்புநீர்க்குட்டையிலே) தோய்ந்து

(குளித்து) போகவேணுமோ? மேலுண்டான நன்மையைப் பண்ணிக் கொடுக்கவற்றான்னது கீழுள்ள அசுத்தியைப் போக்கமாட்டாதோ?' என்றருளிச்செய்தார்'' என்று திருமாலை வ்யாக்யானத்தில் பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளையால் எடுக்கப்பட்ட ஐதிஹ்யம் இங்கு அனுஸந்திக்கத்தக்கது. (ஆ விவக்தந)எங்கும் சொல்லுங்கள் திருநாமம் செவிப்பட்ட ஜீவராசிகளுக்கெல்லாம் உய்வுண்டாகையாலே, செல்லுமிடங்களிலெல்லாம் அனைவர்க்கும் செவிப்படும்படி இதை உத்கோஷியுங்கள்.

' நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்களுடைய நம்பி'' [திருமாலை-12]
என்றன்றோ திருநாமவைபவம் சொல்லப்படுகிறது

கடைசியாக, ப$_4$க்தியென்னும் உபாயத்தை ஸ்வாநுஷ்டாநபாயந்தமாகக் காட்டித்தருகின்ற வேதபுருஷன் (விஷ்ணோ) ஸர்வவ்யாபியான தேவனே! (மஹ தே) மஹாபுருஷனான உன் விஷயமான. (ஸுமதிம்) நல்ல ஞானத்தை, பக்தி ரூபாபந்நஜ்ஞாநத்தை என்றபடி "மதிநலம்" [திருவாய் 1-1-1] என்று இதைத் தமிழ்ப்படுத்தினார் வேதம் தமிழ் செய்த மாறன். (ப$_4$ஜாமஹே) அடையக் கடவோம்,(மஹஸ தே விஷ்ணோ ஸுமதிம் ப$_4$ஜாமஹே)"ப$_3$ரஹ்மணி ஸ்ரீநிவாஸே ப$_1$வது மம பரஸ்மிந்ஶேமுஷீ ப$_4$க்திரூபா'[ஸ்ரீபாஷ்யமங்களம்] [பரப்ரஹ்மமான ஸ்ரீநிவாஸனிடம் எனக்கு பக்திரூபமான ஞானம் ஏற்படட்டும்] என்று இவ்வாத்தத்தை பாஷ்யகாரர் அநுஸந்தித்தருளினார் 'ப$_4$ஜாமஹே' என்று பன்மையிலே படித்திருக்கையாலே முன் சொல்லப்பட்ட சரணாகதி, அவதாரரஹஸ்ய ஜ்ஞாநம், ஸ்துதி, திருநாமஸங்கீர்த்தனம் என்னும் உபாயங்களை அனுஷ்டிப்பாருக்கும் பக்தி நியமமாக இருப்பதொன்று என்று காட்டப்படுகிறது, பரபக்தி நிஷ்டனுக்கு பக்தி ப்ராப்யருசியிலே புகும் மற்ற உபாயங்களை அனுஷ்டிப்பாருக்குப் பக்தி அங்கமாயிருக்கும்

ஆக, முன் மந்திரத்தாலும் இம்மந்திரத்தாலும் சரணாகதி, அவதாரரஹஸ்யஜ்ஞானம், ஸ்துதி, திருநாமஸங்கீர்த்தநம்,பக்தி என்னும் ஐந்து உபாயங்களையும், அவற்றுக்குப்பலனையும் காட்டினாயிற்று. "ஸே து$_3$ஶ்ரவோபி$_1$ர் யுஜ்யம் சித$_3$ப$_4$யஸத்" என்று சென்ற மந்திரத்தில் படிக்கப்பட்ட பலன் இம்மந்திரத்திலும் பலனாக அநுஸந்திக்கத்தக்கது.

१६. तमस्य राजा वरुणस्तमश्विना क्रतुं सचन्त मारुतस्य वेधसः।
दाधार दक्षमुत्तममहर्विदं व्रजं च विष्णुः सखिवाँ अपोर्णुते॥

16. தமஸ்ய ராஜா வருணஸ்தமஶ்விநா
க்ரதும் ஸசந்த மாருதஸ்ய வேத₄ஸ: ।
தா₃தா₄ர த₃க்ஷமுத்தமமஹர்விதம்
வ்ரஜம் ச விஷ்ணு: ஸகி₂வாம் அபோர்ணுதே ॥

**பதவுரை:— மாருதஸ்ய**—*தேவகணங்களுக்கு,* **வேத₄ஸ:**-*ஸ்ரஷ்டாவான,* **அஸ்ய**—*இந்த விஷ்ணுவினுடைய,* **தம் க்ரதும்**—*ஸுப்ரஸித்தமான ரக்ஷணச்செயலை,* **வருண:**—*வருணன்,* **ஸசந்த**—*அடைகிறுன்;* **தம்**—*அந்த ரக்ஷணச் செயலை,* **அஶ்விநா**—*அச்விநீதேவதைகளும்(அடைகின்றனர்)* **ஸகி₂வாந் விஷ்ணு:**—*துணைவரோடு கூடிய விஷ்ணுவானவன்,* **அஹர்வித₃ம்**-*மோக்ஷத்தை அளிப்பதான,* **உத்தமம் த₃க்ஷம்**-*மேலான(மோக்ஷ)ப₂லப்ரத₃த்வரூபஸாமர்த்₂யத்தை,* **தா₃தா₄ர**-*தரிக்கிறுன்;* **வ்ரஜம் ச**—*மேகத்தையும்,* **அபோர்ணுதே**—*மழைபொழிவிக்கிறுன்.*

ஸாதநங்களையும் பலனையும் சொல்லிற்று கீழ் இரண்டு மந்திரங்களாலே. இந்த ஸாதனங்கள் நேரே பலம் தருவனவல்ல; அவனுடைய பிரீதியை உண்டு பண்ணுவதன் மூலமே ஐஹிகாமுஷ்மிக பலன்களைத்தருவிக்கின்றன. ஸர்வரக்ஷகனை அவனே இம்மைப் பலன்களையும் மறுமைப்பலனையும் அளிக்கிறுன் என்கிறது இம்மந்திரம்.

ஸர்வரக்ஷகனுயிருப்பவனே ஸகலபலப்ரத₃னுகக் கூடுமாகையால், இந்த பகவானே ஸகலசேதனரையும் ரக்ஷிக்கிறுன் என்கிறது மந்திரத்தின் முதற்பகுதி. இவனே ஸர்வரக்ஷகன் என்னும் இவ்வரும் பொருளை,

**ந ஹி பாலநஸாமர்த்₂யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் ।**
**ஸ்தி₂தௌ ஸ்தி₂தம் மஹாப்ராஜ்ஞ ப₄வத்யந்யஸ்ய கஸ்யசித் ॥**

[மஹாபுத்திமானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேச்வரனை ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்யம் கிடையாதன்றே.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஸ்ரீபராசரரும்,

''ஏ பாவம் பரமே ஏழுலகும்
ஈபாவம் செய்து அருளாலளிப்பாரார்''
என்று ஸ்ரீபராங்குசரும் விவரித்தருளினரன்றே.

(மாருதஸ்ய) மருத்கணங்களுக்கு; தேவகணங்களுக்கு என்றபடி. (வேத₄ஸ:) ஸ்ரஷ்டாவானவனுடைய; தேவர்களைப் படைத்தவனுடைய என்றபடி. நாட்டைப்படையென்றயன் முதலாத் தந்த நளிர்மாமலருந்தி வீட்டைப்பண்ணி விளையாடும் விமலனுடைய என்றபடி. அன்றிக்கே (மாருதஸ்ய) 'மருத்துக்கள்' எனப்படும் தேவர்களோடு ஸம்பந்தமுடையவனுடைய; அவர்களுடைய ஆப₄ாஸமான (மேலெழத்தோற்றும்) ஆநுகூல்யலேஶத்தையே கொண்டு அவர்களைத் தன்னைச்சேர்ந்தவர்களாக நினைத்திருக்குமவனுடைய.

''தே₃வாநாம் த₃ாநவாநாஞ்ச ஸாமாந்யமதி₄தை₃வதம்''
[ஜிதந்தே-1]
[தேவர்க்கும் அசுரர்க்கும் பொதுவான தெய்வம்] என்கிறபடியே பொதுநின்ற பொன்னங்கழல்களையுடையவனாயிருந்தபோதிலும் ஆநுகூல்யலேசமுடையாரிடம் அளவுகடந்த பக்ஷபாதத்தையுடையவனாயிருக்கை. பரஸ்பர விருத்தமான இவ்விரண்டும் எப்படிப் பொருந்தும்? எனில்

''ஸமோஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோஸ்தி கஶ்சந''

[(என்னை ஆச்ரயிக்கும் விஷயத்தில்) நான் அனைவர்க்கும் பொதுவாயிருப்பவன்; என்னால் வெறுக்கத்தக்கவன் ஒருவனுமில்லை.] என்கிறபடியே தன்னையடையும் விஷயத்தில் அனைவர்க்கும் பொதுவாயிருப்பவனாகையால் பொதுநின்ற கழலென்றதும் பொருந்தும். ஆச்ரயித்தபின்பு அவர்களிடத்தில், அநாச்ரிதரிடத்திற்காட்டிலும் அன்பு விஞ்சியிருக்கும் என்றதும் மிகப்பொருந்தும். (வேத₄ஸ:) இவ்விரண்டாவது நிர்வாஹத்தில், 'வேத₄ஸ:' என்றது ஸர்வ ஸ்ரஷ்டாவினுடைய என்றபடி. (அஸ்ய) ஸுப்ரஸித்தரக்ஷகனான இந்த விஷ்ணுவினுடைய. அகாரவாச்யனான விஷ்ணுவினுடைய என்றுமாம். ''அ இதி ப்₃ரஹ்ம'' [அகாரம் ப்ரஹ்மத்தைச் சொல்லுகிறது] ''தஸ்ய ப்ரக்ருதி லீநஸ்ய ய: பர: ஸ மஹேஶ்வர:'' [தை-நா] [தன் காரணமான அகாரத்திலடங்கிய ஓங்காரத்துக்குப் பொருள் மேலான ஈச்வரனான நாராயணனே] 'அக்ஷராணாமகாரோஸ்மி' [கீதை 10-33] [எழுத்துக்களுள் 'அ' எனும் முத

லெழுத்தாகிறேன்.] "அ இதி ப₁க₃வதோ நாராயணஸ்ய ப்ரத₂மாபி₄தா₄நம்" [மஹாபாஷ்யம்] ['அ' என்பது பகவானான நாராயணனுடைய முதற்பெயராகும்.] என்கிறபடியே அகாரவாச்யன் இவனே என்பது ஸுப்ரஸித்தமன்றோ. 'அவ-ரக்ஷணே' என்னும் தாதுவிலிருந்து தோன்றியதாகையாலும், இன்னாரை ரக்ஷிப்பவன், இன்ன தேசத்தில் ரக்ஷிப்பவன், இன்ன காலத்தில் ரக்ஷிப்பவன், இன்ன நிலையில் ரக்ஷிப்பவன் என்னும் வரம்பு கட்டவில்லையாகையாலும், ஸர்வதேசஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வரையும் ரக்ஷிப்பவன் என்று அகாரத்திற்குப் பொருளாகிறது. (வேத₄ஸ: அஸ்ய) ஸர்வகாரணனான அகாரவாச்யனுடைய. 'ப்ரக்ருதிலீநஸ்ய' [தை-நா] 'அகரமுதல எழுத்தெல்லாம்' [குறள்] என்கிறபடியே வாசகங்களான எல்லா எழுத்துக்களுக்கும் காரணமான அகாரத்துக்குவாச்யனே, வாச்யங்கள் அனைத்துக்கும் காரணன் என்று காட்டுகிறபடி. "ப்ரக்ருதிலீநஸ்ய ய: பரஸ் ஸ மஹேஶ்வர:" [அக்ஷரகாரணமான அகாரத்துக்குப் பொருளானவனே ஸர்வகாரணன்] என்று அருமறையும்

"அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு" என்று குறளும் கூறினவன்றோ.

(அஸ்ய தம் க்ரதும்) ஸர்வரக்ஷகனான இவனுடைய அந்த ரக்ஷணச் செயலை. (ராஜா வருண: ஸசந்த) பிரகாசிப்பவனான வருணன் அடைகிறான். உலகம் முழுவதையும் ஈரக்கையாலே தடவிக் கொடுக்கையாலே ஸுப்ரஸித்த ரக்ஷகனாக விளங்கும் வருணன் அடைகிறான். வருணனிடமுள்ள ரக்ஷணச்செயல் பரமபுருஷனுடையதேயாகும் என்று கருத்து. (ராஜா வருண:) பிரகாசிப்பவனான வருணன். இவனுக்குப் பிரகாசமாவது எம்பெருமானாலே விசேஷித்து அபிமானிக்கப்படுகை. அதாவது:— "ஆழிமழைக் கண்ணா என்றவிடத்து வியாக்கியானத்தில், "ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை ப்ரஹ்மருத்ரர் தலையிலே பொகட்டு, ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த பாலநவிதி₄யைத்தான் நடத்துமாபோலே, நாட்டாரைக் கட்டுவது விடுவதாகிற க்ரௌர்ய வ்யாபாரத்தை யமாதிகள் தலையில் ஏறிட்டு 'நம்மோபாதி ஈரக்கையாலே தடவிக்கொடுக்கவல்லன்' என்று ஈச்வரனாலே மதிக்கப்பட்டவனல்லையோ நீ" என்று வ்யாக்யான சக்ரவர்த்தி அருளிச்செய்தபடியே அவனாலும் மதிக்கப்படுகையாகிற பெருமையைச் சொல்லுகிறது. அன்றிக்கே, "ஆழிமழைக் கண்ணா" என்று ஆண்டாள் அருளிச்செய்தபடியே க₃ம்பீ₄ர ஸ்வப₄ாவத்தையுடையவனுமாய், மழைக்கு நிர்வாஹகனுமாயிருக்கும்

பெருமையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம் (தமஸ்விநா) அந்த ரக்ஷணச் செயலையே தேவவைதயர்களாக ப்ரஸித்திபெற்ற அச்விநீ தேவதைகளும் அடைகிறார்கள் மழைபெய்து இவ்வுலகை ரக்ஷிப்பவனாகையாலே வருணனையும், வைத்யம்செய்து தேவருலகை ரக்ஷிப்பவராகையாலே அசவிநீ தேவதைகளையும் எடுத்த இது, மற்றும் உலகில் காணப்படும் ரக்ஷகர்களனைவர்க்கும் உபலக்ஷணம் உலகில் ரக்ஷகர்களாகச் சொல்லப்படுமவர்களிடமுள்ள ரக்ஷணதாமமெல்லாம் இவனுடையதே என்கை

' ராஜாவான வருணனும், அச்விநீதேவர்களும் பகவானுடைய ரக்ஷணச்செயலை அடைகிறார்கள்," என்கிறது, அவர்களும் அவனுடைய ரக்ஷணசசெயலுக்கு விஷயமாவதைச் சொல்லுகிறதாய், ரக்ஷகர்களாய் நினைக்கப்படும் தேவர்களும் அவனுக்கு ரக்ஷ்யர்களாகையாலே ஸர்வரக்ஷகன் அவனே என்று முடிவுகட்டுவதாகவும் கொள்ளலாம்.

அன்றிக்கே வேறுவிதமாகவும் பொருள்கொள்ளலாம் (மாருதஸ்ய) மருத்துக்களான ருத்விக்குகளின் ஸமூஹத்தையுடையவனுடைய, அல்லது தேவர்களோடு ஸம்பந்தமுடையவனுடைய, அதாவது:—

"தேவாந் பா₄வயதாநேந தே தேவா பா₄வயந்து வ |
பரஸ்பரம் பா₄வயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத₂||" [கீதை]

[தேவர்களை யஜ்ஞத்தால் ஆராதியுங்கள்; அந்த தேவர்கள் (மழை முதலானவற்றாலே) உங்களை திருப்தி செய்யட்டும். இப்படி ஒருவருக்கொருவர் திருப்திசெய்வித்துக்கொண்டு சிறந்த நன்மையை அடையுங்கள்] என்று சொல்லப்பட்ட ஸம்பந்தமுடையவனுடைய. (வேத₄ஸ அஸ்ய) மேதாவியான இந்த யஜமானனுடைய (தம க்ரதும்) ப்ரஸித்தமான யஜ்ஞத்தை, யஜ்ஞஸ்வரூபியான விஷ்ணுவை என்றபடி. 'யஜ்ஞோ வை விஷ்ணு' என்று ஓதப்படுகிறதன்றோ (வருண:—அஶ்விநா—ஸசந்தே) வருணன், அசவிநீதேவர்கள் முதலான தேவர்களனைவரும் ஸேவிக்கிறார்கள். வருணனையும், அச்விநீதேவர்களையுஞ்சொன்னது, அஷ்டவஸுக்கள், ஏகாதசருத்ரர்கள், த்வாதசாதித்யர்கள் முதலிய ஸகலதேவர்க்கும் உபலக்ஷணம்.

"எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்
வண்ணமலரேந்தி வைகலும்—நண்ணி

ஒருமாலையால் பரவி ஓவாதெப்போதும்
திருமாலைக்கைதொழுவர் சென்று'' [முதல்திருவ-52]

என்று பொய்கையாழ்வார் அருளிச்செய்தாரன்றோ. ஆக, இத்தால் யஜ்ஞஸ்வரூபியாயிருந்து ரக்ஷிப்பவனும் இவனே என்று உத்கோஷிக்கப்பட்டது.

மந்திரத்தின் முற்பகுதியால் இவனே ஸர்வரக்ஷகன் என்னுமர்த்தம் பேசப்பட்டது. இவன் ரக்ஷிப்பதுதான் எப்படியென்னில்: இம்மை மறுமைப்பயன்களை அளிப்பதன் மூலம் ரக்ஷிக்கிறான் என்கிறது,— (தா₃தா₄ர த₃க்ஷம்) ப₃லத்தை தரிக்கிறான். மோக்ஷப₂ல ப்ரத₃த்வஸாமர்த்₂யம் இங்கு 'ப₃லம்' எனப்படுகிறது. அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த ஜீவனுடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தை ருசி வாஸனைகளோடு கழிப்பது ஸாமாந்யமானதொரு செயலன்றே.

''தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா'' [கீதை 7-13]

[விசித்திரச் செயல்களைப் புரிகையாலே மாயையெனப்படும் ப்ரக்ருதி, தேவனுகிற என்னால் நிர்மாணம் செய்யப்பெற்றதாய், கடத்தற்கரிதாயுள்ளது.] என்றன்றோ அவனும் அருளிச்செய்தது. (த₃க்ஷம் தா₃தா₄ர) மோக்ஷபலப்ரதத்வத்தை இவனே தரிக்கிறான். '' உதாம்ருதத்வஸ்யேஶாந:'' [பு-ஸூ] [மோக்ஷத்திற்கு ஈச்வரன் பரமபுருஷனே] என்றது புருஷஸூக்தம். '' மோக்ஷமிச்சே₂த் ஜநார்த்த₃நாத்'' [ஜநார்த்தனனிடமிருந்து மோக்ஷத்தை விரும்பக்கடவன்] என்றனர் ரிஷிகள்.

''மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே''[கீதை7-13]

[என்னையே எவர்கள் சரணமடைகின்றனரோ அவர்கள் இம்மாயையைத் தாண்டுகிறார்கள்.] என்று தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்தான். (உத்தமம் தக்ஷம்) மிகச்சிறந்ததான முக்தி ப₂ல ப்ரத₃த்வகு₃ணத்தை. ஜகத்காரணத்வமும், முக்திபலப்ரதத்வமும், ஸர்வலோக ஸார்வபௌமனை எம்பெருமானுக்குச் ச₃த்ரசாமரங்கள் போலே அஸாதா₄ரணங்கள் என்றன்றோ ஆசார்யர்கள் அனைவரும் அருளிச்செய்வது. நித்யானபாயினியான பிராட்டிக்கும் முக்திப₂ல ப்ரதானவேளையில் அந்வயமில்லை என்னும்படியன்றோ இவனுடைய உபாயநைரபேக்ஷ்யமிருப்பது. பரமப்ராப்யமான மோக்ஷத்தைத் தரும் குணமாகையாலே 'உத்தமமான ப₃லம்' எனப்படுகிறது. ப₃ல வாசியான தக்ஷபதத்தைப் பிரயோகிக்கையாலே, இக்குணமே அடி

யாரனைவாககும தருசம என்று உணர்ததபபடுகிறது. இது உததம மான குணமாயிருககைககு காரணமெனன? எனில. (அஹாவிதம) 'அஹஸ்' ஸபதவாசயனை பகவானை அடைவதறகுக காரணமா யிருககையே எனகிறது. "அஹஸ தத்₁வலுமபது" [பகலெனப படும பகவான அபபாபததைப போக்கடிககட்டும] என்று வேதத திலும, "பகலைச சென்று நாடிக கணணமங்கையுள கணடு கொணடேனே" [பெரியதிரு 7-10-3] "பகறகணடேன நாரணனைக கணடேன" [இர-திருவ 81] என்று ஆழவாரகளாலும அஹஸ்ஸபத வாசயன பகவான என்று அறிவிககபபட்டதன்றோ "அஹா விநத₃நதயநேந" என்னும வயுதபததியாலே அஹாவிசச₂பதம பகவத பராபதி ஸாதனமான முகதிபலபரததவ ஸாமாததியததைச சொலலுகிறது. அன்றிககே, "தஸமாத₃வா ஏதம ஸேதும தீரதவா அபி நகதமஹரேவ அபி₄நிஷபத₃யதே ஸகருத₃விபே₃ாதே₄ா ஹயேஷ ப₃ரஹமலோக:" [மோக்ஷோபாயமான இநதப் பரமாதமாவை அடைநதால இரவும பகலாகிறது எபபோதும மறைககபபடாத பகலாயிருபபதன்றோ இநத பரஹமஸவருபம.] எனகிறபடியே பரபராபதியைப பகலெனபதுணடாகையாலே, அநத பகவத பராபதிக்கு ஸாதனமாயிருபபது என்றும அஹாவிச்சபதததுககுப பொருள கொளளலாம், (ஸகி₂வாந விஷ்ணு உததமம த₃க்ஷம த₃ாத₄ார) 'ஸகி₂வாந' என்னும பதததை மூன்றாவது பாதததிலும, நானகாவது பாதததிலும, ஆக இரணடிடஙகளிலும கூட்டிக கொளளவேணடும துணைவரோடு கூடிய விஷ்ணுபகவான மோக்ஷப₂ல பரத₃தவகுணததை தரிககிறான. நிருபாதி₄க புருஷகார பூ₄தையான பிராட்டியோடும, அவளோடு ஸமபநதததாலே புருஷ காரததவப பெருமையைப பெறறிருககும நிதயமுகதாகள, பாக வதாகள, ஆசாாயன முதலானவாகளோடும கூடிய பகவான முகதிபலபரதனுகிறான பலபரதான ஸஙகலபவேளையில வேறொரு வரையும அபேக்ஷியாதிருநதபோதிலும, அதறகு முனனம, அநாதி காலம தீசசெயலகளைச செயதுபோநத இவனைககணடு வெநநீர போலே கொதிபபடைநதுகிடககும ஸாவேசவரனை ஆறவைதது அவனிடம சேதனனை ஆசரயிபபிகக, குளிாநீரபோனற பிராட்டி முதலானருடைய புருஷகாரகருதயம அவசயம வேணடியிருககை யாலே "துணைவரோடு கூடிய இவன முகதிபலபரததவததை தரிககிறான" என்றதில உபாயநைரபேக்ஷய விரோதமிலலை. இவ் விடததில, பரமகாருணிகரான பெரியவாச்சானபிளளை பரநத

ரஹஸ்யத்தில் புருஷகாரவிஷயமாக அருளிய பின்வரும் ஸ்ரீஸூக்திகள் அநுஸந்தேயங்கள்:—

[''ஸ்ரீமந்நாராயணசரணௌ'' என்று உபாயதயா வக்ஷ்யமாணனை நாராயணனுக்கு விசேஷணமாக ஸ்ரீமத்தையைச் சொல்லா நின்றால், நாராயணசப்தத்தினால் சொல்லப்புகுகிற குணவிசேஷங்கள் விசேஷணத்வேந உபாயசரீரத்தில் அந்விதமாகிறவோபாதி, இவளும் உபாயாவயவமாக ப்ராப்தையுமாய், மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து ப்ரஜாரக்ஷணம் பண்ணுகை ப்ராப்தமுமாய் அதுக்குமேலே, '' வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும் '' என்று உபாயக்ருத்யமான விரோதி$_4$ நிவர்த்தகத்வம் இவ்வர்த்தத்திலே நிஷ்டரான நம்மாழ்வார் திருவுள்ளத்தாலுமுண்டாய், ப்ரதேசாந்தரங்களில் இவளைப் புருஷகாரமாக நினைத்துச் சொல்லுகிறார்களென்கிற அவையும் உபாயப$_4$ாவத்திலே அந்வயிப்பிக்க யோக்யமுமாய், அதுக்குமேலே, ''அரி:ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:'' என்று மேலே அநுஷ்டிக்கப்புகுகிற ப்ரபத்தி தானே புருஷகார க்ருத்யத்தைச் செய்யவற்றாகையாலும், மாட்டாதாகில், இவள் ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றிச் சேரவிட, உபாயபூ$_4$தனான ஈச்வரன் ரக்ஷிக்க அமைந்திருக்க உபாயாந்விதமான இவனுடைய ப்ரபத்யநுஷ்டானம் நிஷ்ப$_2$லமாம்படியுமாயிருக்க இவளுக்கு உபாய சரீரத்திலே அந்வயமில்லை; புருஷகாரத்திலே என்று ஒதுக்கித் தருவார் ஆரென்னில்:

விசேஷணத்வமுண்டேயாகிலும், விசேஷணபூ$_4$தமான குணவிசேஷங்களோபாதி உபாயோபயோகித்$_3$வம் அவளுக்கில்லாமையாலும், ஸமாச்ரயணைகாந்தமான ஸௌசீல்யாதி குணோத$_3$ய விரோதி$_4$யான ஸ்வாதந்த்ர்யத்தைப் புருஷகாரபூ$_4$தையான இவள் ஆற்றினாலும் அவன கார்யம் செய்யும்போதைக்கு ''ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே'' என்கிறபடியே உபாயப்ரார்த்தனாரூபமான பரபத்தி வேண்டுகையாலும், ''வினை தீர்க்கும்'' என்கிற இடம் ''களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'' என்கிறவருடைய உக்தியாகையாலே, இத்திருவாய்மொழி அநுஸந்தித்தவர்கள் பக்கல் இவளுக்குண்டான ஆதராதிசயப்ரகாசகமாகையாலும், இவளுக்குப்புருஷகாரபாவத்திலேநோக்காகக்கடவது.

இவளுக்கு உபாயப$_4$ாவத்தில் அந்வயமுண்டாகில், ஸாத$_4$நபூ$_4$தமான கர்மஜ்ஞாநாதிகளுக்கு 'ப$_2$லமத:' ''ஸ ப்ரீதோலம் ப$_2$லாய''

என்று, ஆராத₄நபரீக்ஷனை ஈஶ்வரமுகத்தாலே இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரரூபமான பலஸித்தி இவனாலேயாதல், அங்ஙனன்றியிலே பலோபபாத₃ந ஹேதுவான ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கு உத்பாத₃னை யாதலாகவேணும் தான் பலப்ரஸாத₄னையாகில், "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" "பராஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாநப₃லக்ரியா ச" "தேஜோ ப₃லைஶ்வர்யமஹாவபோ₃த₄ஸுவீர்ய ஶக்த்யாதி கு₃ணைகராஶி" என்று சுருதி ஸ்ம்ருதிகளில் ஈச்வரனுக்குச் சொல்லுகிற ஜ்ஞாநசக்த்யாதி குணவிசேஷங்களின்றியிலே ஒழிய வேணும். உண்டாகில் இவனையொழியவே ஈச்வரனருனே காரியம் செய்ய க்ஷமனே. அக்குணங்களை உத்பாதிக்கிறானாகில் குணங்களுக்கு ஸ்வாபா₄விகத்வமின்றியிலே ஒழியும்

ஸௌசீல்யாதிகளோபாதி திரோஹிதமானவற்றை ப்ரகாசிப்பிக்கிறானென்னில், ஜகத்ஸ்ருஷ்டிஸ்தி₂திஸம்ஹாராதி₃களிலே இடைவிடாமல் விநியோகங்கொண்டு போருகிற ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கு, ஸௌசீல்யாதி₃திரோத₄ாயகமான ஸ்வாதந்த்ர்யத்தோபாதி ஒரு திரோத₄ாநமில்லையே. உண்டாகில் ஸ்ருஷ்ட்யாதிகள் நடவாதொழிய வேணும் ஸர்வதா₂ அநவிதையாமாகில் ஸ்வவிரோதி₁நிவ்ருத்தியில "தத் தஸ்ய ஸத்₃ருஶம் ப₁வேத்" என்றிருக்கக்கூடாதே, குணவிசேஷங்களே அமைமையன்றோ, "ஆஶ்ரமஸ்யம் ஹரிஶ்ரேஷ்ட₂ க்ஷிப்ரம் மாம் பராபஸ்யதே பதி", அநந்தராதமா ஹி மே ஶுத₄த₄ஸ் தஸ்மிம்ஶ்ச ப₃ஹவோ கு₃ணா" என்று தன் பக்கல் அநந்யோபாயத்வமும் அவன் பக்கல் குணவிசேஷங்களுமே ப₂லஸித்திக்கு அபேக்ஷிதமாகத்தான் அறுதியிட்டு வைத்தது

நாம் உபாயமாக யாதொரு வஸ்துவை ஸ்வீகரிக்கிறோம், அவ்வஸ்துவுக்கு இவள் ஸ்வரூபம் நிரூபகமாகையாலே, பரணவத்தில் பரத₂மபத₃த்திற்போலே 'யத் யபிஸ்சசித்த" என்கிற குணஸித்₃தி₄ந்யாயத்தாலே அவர்ஜநீயமாய் அநவயியாதோ? என்னில் ஸ்வரூப நிரூபகத்வேந அவர்ஜநீயப₃ந்த₄முண்டேயாகிலும், உபாயத₃சையில் கண்டுகொள்ளவதொரு ப்ரயோஜநமில்லாமையாலே, ஸ்வரூபநிரூபகங்களான ஜ்ஞாநாநந்தங்களோபாதியும் ஸ்வரூபாஶ்ரயமான கு₃ணாந்தரங்களோபாதியும் குமிருந்துபோமத்தனை

இவற்றுக்கு ப்ரயோஜநமின்றிக்கே ஒழிகைக்கு ஹேது அவனுடைய நைரபேக்ஷ்யமாகில், சில குணவிசேஷங்கள் உபாயதயா அநவயிக்கிறபடி என்னென்னில் அவை காரியோபயோகி₃யாகை

யாலும், குணத்வேந அப்ருதக்ஸித்தி ப்ரவர்த்தகமாகையாலும், குணி குணத்வாரா கார்யம் செய்கை நைரபேக்ஷ்யத்துக்குக் குறையில்லாமையாலும், அவற்றுக்குத் தட்டில்லை. இவள் கார்யாநுபயுக்தையாகையாலும், த்ரவ்யத்வேந ப்ருதக்ஸித்திப்ரவ்ருத்தி யோக்யதையுண்டாகையாலும், அத்தாலே உபாயநைரபேக்ஷ்யத்துக்குக் கொத்தையாயறுகையாலும், உபாயபாவத்தில் அந்வயமில்லை; ஆகையாலே, சேஷித்வதசையிலும் ப்ராப்யத்வதசையிலும் ஒரு மிதுனமேயாகவேண்டினவோபாதி, உபாயதசையிலே ஸ்வேதரஸகலஸஹாயாஸஹமாயிருக்கையாலே, இவளுக்கு உபாயபாவத்தில் அந்வயமின்றியிலே புருஷகார பாவத்திலேயாகக்கடவது.

இச்சேதநனோட்டை ஸம்பந்தம், ஈச்வரனுக்கும் பிராட்டிக்கும் ஒத்திருக்க, அவன் புருஷகாரத்வாரா ஸமாஶ்ரயணீயனாகைக்கும், இவள் புருஷகாரபூதையாகைக்கும் ஹேது என்னென்னில்: அவன் புருஷோத்தமனாய், பும்ஸ்த்வப்ரயுக்தமாய் வரும் காடிந்யம் நடையாடுகையாலும், "தேவதேவோ ஹரி: பிதா" என்கிறபடியே பித்ருத்வப்ரயுக்தமாய் வரும் ஹிதபரத்வத்தாலும், அதுக்கு மேலே ஸ்வேதரஸகலபதார்த்த ஸார்த்த நிருபாதிக நிர்வாஹகனாகையாலே "தஹ; பச" என்னும்படியான க்ரௌர்யத்தாலும், அவனை ஆஶ்ரயிக்கும்போது புருஷகாரத்வாரா ஆஶ்ரயிக்கவேண்டும். இவள் நாரீணாமுத்தமையாகையாலே ஸ்த்ரீத்வப்ரயுக்தமாய் வரும் மார்த்தவத்தாலும், "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" என்கிறபடியே மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யாதிசயத்தாலும், தத்தத்கர்மாநுகுண நிர்வஹணமில்லாமையால் வரும் மாதுர்யத்தாலும், அவனிற்காட்டில் இவளுக்கு நெடுவாசியுண்டாகையால் இவள் புருஷகாரபூதையாகக்கடவள்.]

ஆசார்ய ஸார்வபௌமரான பெரியவாச்சான்பிள்ளை இப்படி முடிவு கட்டுவதற்குக்காரணம்,

ஆகிஞ்சந்யைகஶரணா: கேசித் பாக்யாதிகா: புந: |
மத்பதாம்போருஹத்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீதமாநஸா: ||
லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந |
மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவ மாம் ||
லப்த்வா க்ருதார்த்தா: ப்ராப்ஸ்யந்தே மாமேவாநந்ய

மாநஸா: ||"

[அழகிய முகத்தையுடைய சேநாபதியே! ஒரு கைம்முதலும் அற்றிருக்கையையே பற்றுசாகக்கொண்ட சில பாக்கியசாலிகளோ வென்னில், என் திருவடித்தாமரையிணையை அன்புடன் கூடிய மனத்தராய்ச்சரணடைந்து, லக்ஷ்மீதேவியைப் புருஷகாரமாகப் பற்றி, என் பொறுமைக்கு இலக்காகி, என்னையே ப்ராப்யப்ராபகங்களாக அடைந்து கிருதார்த்தர்களாய், வேறொன்றிலும் நெஞ்சு செல்லப்பெறுதவர்களாய் என்னையே அடைவார்கள்.]

"அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷாத் லக்ஷ்மீபதி:ஸ்வயம்।
லக்ஷ்மீ: புருகாரேண வல்லப₄ா ப்ராப்தியோகி₃நீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிக₃மாந்தேஷு ஶப்₃த்₃யதே ॥"

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன். என் பிரியையான லக்ஷ்மியானவள் புருஷகாரத்தினுல் என்னை அடைய உதவிபுரிகிருள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதாந்தங்களில் சொல்லப்படுகிறது.]

"மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத₄:।
லக்ஷ்மீ: புருஷகாரதவே நிர்தி₃ஷ்டா பரமர்ஷிபி₄:।
மமாபி ச மதம் ஹ்யேதந் நாந்யத₂ா லக்ஷணம் ப₄வேத் ॥"

[ஸம்ஸாரத்தில் கீழே விழுகின்ற ஜந்துக்களுக்கு என்னை அடையும் விஷயத்தில் லக்ஷ்மீதேவியானவள் பரமரிஷிகளாலே புருஷகாரத்வத்தில் நியமிக்கப்பட்டிருக்கிருள். எனக்கும் இதுவே இஷ்டம். வேருன (உபாயத்வமாகிற)ஆகாரம் இல்லை.] என்னும் ஸ்ரீபாஞ்சராத்ரவசனங்களேயாகும்.

(ஸகி₂வாந் விஷ்ணு: வ்ரஜம் ச அபோர்ணுதே) துணைவனேடு கூடிய விஷ்ணு மேகத்தையும் கைகரவாமல் செய்கிருன்; இந்திரன் வருணன் முதலானுரோடு கூடிய பகவான் உலகிற்கு மழைபொழிவிப்பதன் மூலம் இவ்வுலகப்பலன்களையும் அளிக்கிருன் என்றபடி. பயிர்கள் தழைப்பதற்குக்காரணமான மழைபொழிவிப்பதே இவ்வுலகப்பலன்களிற் சிறந்ததாகையாலே, அதையிட்டு மற்றவற்றை உபலக்ஷிக்கிறது. இந்திரன் மழைபொழிவிக்கிருன்; ஆழிமழைக் கண்ணனுன வருணன மழைபொழிகிருன் என்று உலகில் பிரஸித்தியிருந்தபோதிலும், அவர்களை நிமித்தமாத்ரமாகக்கொண்டு மழை முதலான இவ்வுலகப்பலன்களை அளிப்பவன் இவனே என்னும் அரும்பொருளைக் காட்டுகிறது அருமறை.

''காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்₃யந்தே(அ)ந்ய தே₃வதா: ।
தம் தம் நியமமாஸ்தா₂ய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥
யோ யோ யாம் யாம் தநும் ப₄க்த: ஶ்ரத்₃த₄யார்ச்சிதுமிச்ச₂தி ।
தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்₃தா₄ம் தாமேவ வித₃தா₄ம்யஹம் ॥
ஸ தயா ஶ்ரத்₃த₄யா யுக்தஸ் தஸ்யாராத₄நமீஹதே ।
லப₄தே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந் ॥''

*[கீதை 7-20...22]*

*[தம் பாபவாஸனையோடு கூடியவர்களாய், அதற்குத்தகுந்த முக்குணமயங்களான விரும்பப்படும் பொருள்களாலே என் ஸ்வரூப விஷயமான அறிவுகெட்டு, இந்திரன் முதலான மற்ற தெய்வங்களைச் சரணடைகின்றனர்; எனக்கு சரீரபூதமான எந்த எந்த தெய்வத்தை சிரத்தையோடு (உறுதிப்பாட்டோடு) எந்த எந்த மனிதன் பூஜிக்க விரும்புகிறானோ, அந்த அந்த மனிதனுக்கு அந்த சிரத்தையையே நான் நிலைநிறுத்துகிறேன். அந்த சிரத்தையோடு கூடிய அவன், அந்த தெய்வத்தின ஆராதனத்தை விரும்புகிறான்; அதனாலேயே, (உண்மையில்) என்னாலேயே கொடுக்கப்பட்ட அந்த விரும்பிய பொருள்களை அடைகிறான்.] என்று கண்ணனும்,*

''அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனவடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே'' *[திருவாய் 1-1-5]*

*என்று நம்மாழ்வாரும் இவ்வர்த்தத்தையே அருளிச்செய்தனர்.*

*ஆக, இம்மந்திரத்தால் ஸகலப₂லப்ரத₃ன் விஷ்ணுவே என்னும் அர்த்தம் அறுதியிடப்பட்டதாயிற்று.*

१७. आ यो विवाय सचथाय दैव्य इन्द्राय विष्णुः सुकृते सुकृत्तरः ।
वेधा अजिन्वत् त्रिषधस्थ आर्यमृतस्य भागे यजमानमाभजत् ॥

17. ஆயோ வியாய ஸசதா₂ய தை₃வ்ய
இந்த்₃ராய விஷ்ணு: ஸுக்ருதே ஸுக்ருத்தர: ।
வேதா₄ அஜிந்வத் த்ரிஷத₄ஸ்த₂ ஆர்யம்
ருதஸ்ய பா₄கே₃ யஜமாநமாப₄ஜத் ॥

பதவுரை:—ய:விஷ்ணு:-எந்த விஷ்ணுவானவர் தை₃வ்ய:- பரமபதத்திலிருப்பவராய், ஸுக்ருத்தர:—நற்பலனளிப்பவர்களிற் சிறந்தவராய், ஸுக்ருதே—(துதியாகிற) நற்செயலைச் செய்யும், இந்த்₃ராய—இந்திரனுக்கு, ஸசத₂ாய—ஸஹாயம் செய்வதற்காக, ஆ வியாய—(சுவர்க்கத்திற்கு) எழுந்தருளுகிறாரோ, த்ரிஷத₄ஸ்த₂: வேத₄ா:—த்ரிபாத் விபூதியிலிருப்பவராய், ஸகலப₂லவித₄ாதாவான அந்த விஷ்ணுவே, ஆர்யம்—நல்லோனும், யஜமாநம்—(தன்னைக்குறித்து) ஆராதிப்பவனுமான அவ்விந்திரனை, அஜிந்வத்—உகப்பிக்கிறார்; ருதஸ்ய—யஜ்ஞத்தினுடைய, ப₄ாகே₃—ஹவிர்ப்பாகத்தில், ஆப₄ஜத்—(அவனை) நிலைநிறுத்துகிறார்.

சென்ற மந்திரத்தில் உத்கோஷிக்கப்பட்ட ஸகலப₂லப்ரத₃த்வத்தை இந்திரன் விஷயத்தில் காட்டினபடியை நிரூபிப்பதன்மூலம் நிலைநிறுத்திக்கொண்டு உபஸம்ஹரிக்கிறான் இம்மந்திரத்தில்.

(ய: விஷ்ணு:) எவன் ஸர்வவ்யாபகனாக ப்ரஸித்தி பெற்றிருக்கிறானோ.

"யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேபி வா |
அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த: ||"

[இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமான அனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்.] என்று மறைகளில் ஓதப்படுமவன் எவனோ அவன். (தை₃வ்ய:) "தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்" என்று மறைமுடிகளில் புகழப்படும் பரமபதத்திலிருப்பவன். (ஸுக்ருத்தர:) சென்ற மந்திரத்தில் ஶோப₄னப₂லப்ரத₃ர்களில் மிகச்சிறந்தவனாக நிரூபிக்கப்பட்டவன்.

"தே₃வேந்த்₃ரஸ் த்ரிபு₄வநமர்த்த₂மேக பிங்க₃ஸ்
ஸர்வர்த்₃தி₄ம் த்ரிபு₄வநக₃ாஞ்ச கார்த்தவீர்ய: |
வைதே₃ஹ: பரமபத₃ம் ப்ரஸாத்₃ய விஷ்ணும்
ஸம்ப்ராப்தஸ் ஸகல ப₂லப்ரதே₃ா ஹி விஷ்ணு: ||"
[விஷ்ணுதர்மம் 43-47]

[விஷ்ணுவை ஆராதித்து தேவேந்திரன் மூவுலகங்களையும், குபேரன் செல்வத்தையும், கார்த்தவீர்யன் மூவுலகங்களிலும் பரவிய எல்லாப்

பெருமைகளையும், ஜநகமஹாராஜன் பரமபதத்தையும் அடைந்தனர்; விஷ்ணுபகவான் வேண்டிற்றெல்லாம் தரும் வள்ளலன்றே.] என்று ஞானிகளால் உத்கோஷிக்கப்படுமவன். (ஆவியாய) எங்கும் அவதரித்தான். எதற்காகவெனில்: (ஸசத₂ாய) (யுத்தம் முதலானவற்றில்) ஸஹாயம் செய்வதற்காக. யாருக்கு? எனில்: (இந்த்₃ராய) இந்திரனுக்கு. அவனுக்காக இப்பாடுபடக்காரண மென்னவெனில்: (ஸுக்ருதே) தன் விஷயமான துதி முதலான நற்செயலைச் செய்தவனுக்கு.

இங்கு வந்து, இந்திரனுக்கு இவன் செய்த ஸஹாயங்கள் என்னவெனில்: (த்ரிஷத₄ஸ்த₂:) த்ரிபாத்விபூதியிலிருந்த இவன், "பாதே₃ாஸ்ய விஶ்வா பூதாநி த்ரிபாத₃ஸ்யாம்ருதம் தி₃வி" [இவ்வுலகிலுள்ள ஜீவராசிகளெல்லாம் இவனுக்குக் கால்பங்கு; பரமபதத்தில் இவனுடைய முக்கால் பங்கு உள்ளது.] என்று மும்மடங்காகச் சொல்லப்பட்ட பரமபதம் இங்கு குறிப்பிடப்படுகிறது. இவ்விபூதியும், அவ்விபூதியும் ஆகிய இரண்டும் அநந்தமாயினும், இதினிலும் அது மும்மடங்கு பெரியது எனப்படுகிறது. இங்கு மும்மை [மும்மடங்கு] என்றது பன்மையைக் காட்டுகிறது. அநந்தமானவற்றுள்ளும் தாரதம்யம் உண்டு என்பது கணிதசாஸ்திர விற்பன்னர்கள் கண்டதோர் உண்மை. "இந்த விபூதி த்வய விஷயமான பாத₃சப்தமும், த்ரிபாச்ச₂ப்தமும் அல்பத்வமஹத்வங்களுக்கு உபலக்ஷணமித்தனையொழிய, பரிச்சே₂த₃பரமன்று; லீலாவிபூ₄தியில் அண்டங்கள் தானே அஸங்க்யாதங்களாயிறே இருப்பது" என்று தீ₃பப்ரகாசத்தில் பெரியவாச்சான் பிள்ளையின் சிஷ்யரான வாதி கேஸரி அழகியமணவாளச்சீயர் அருளிச்செய்தார்.

**தி₃வி இதி அப்ராக்ருதம் ஸ்த₂ாநமுச்யதே। த்ரிபாத்த்வஞ்ச அப்ராக்ருதைர் பே₄ாக்₃ய பே₄ாகே₃ாபகரண பே₄ாக₃ஸ்த₂ாந விஶேஷைர் வா பூ₄ஷணாஸ்தராதி₃ ரூபேண ஜக₃த₃ந்தர்க்க₃த வஸ்த்வ பி₄மாநிபி₄ர் நித்யைர் ப₄க₃வத₃நுப₄வமாத்ரபரைஶ்ச நித்யஸித்₃தை₄ர் முக்தைஶ் சாத்மபிர் வா ஸம்ப₄வதி ||"**

[ச்ருதப்ரகாசிகை]

['தி₃வி' என்று ப்ரக்ருதி கார்யமல்லாததான பரமபதம் சொல்லப்படுகிறது; இதற்கு மும்மையாவது:— (1) அப்ராக்ருதமான 1. போக்யம் 2. போகோபகரணம் 3. போகஸ்தானம் என்னும் மூன்று

பதவுரை:—ய:விஷ்ணு:-எந்த விஷ்ணுவானவர் தை₃வ்ய:-பரமபதத்திலிருப்பவராய், ஸுக்ருத்தர:—நற்பலனளிப்பவர்களிற் சிறந்தவராய், ஸுக்ருதே—(துதியாகிற) நற்செயலைச் செய்யும், இந்த்₃ராய—இந்திரனுக்கு, ஸசதூ₂ராய—ஸஹாயம் செய்வதற்காக, ஆ வியாய—(சுவர்க்கத்திற்கு) எழுந்தருளுகிறாரோ, த்ரிஷத₄ஸ்த₂: வேத₄ா:—த்ரிபாத் விபூதியிலிருப்பவராய், ஸகலப₂லவித₄ாதாவான அந்த விஷ்ணுவே, ஆர்யம்—நல்லோனும், யஜமாநம்—(தன்னைக்குறித்து) ஆராதிப்பவனுமான அவ்விந்திரனை, அஜிந்வத்—உகப்பிக்கிறார்; ருதஸ்ய—யஜ்ஞத்தினுடைய, ப₄ாகே₃—ஹவிர்ப்பாகத்தில், ஆப₄ஜத்—(அவனை) நிலைநிறுத்துகிறார்.

சென்ற மந்திரத்தில் உத்கோஷிக்கப்பட்ட ஸகலப₂லப்ரத₃த்வத்தை இந்திரன் விஷயத்தில் காட்டினபடியை நிரூபிப்பதன்மூலம் நிலைநிறுத்திக்கொண்டு உபஸம்ஹரிக்கிறான் இம்மந்திரத்தில்.

(ய: விஷ்ணு:) எவன் ஸர்வவ்யாபகனாக ப்ரஸித்தி பெற்றிருக்கிறானோ.

"யச்ச கிஞ்சித் ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேபி வா |
அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த: ||"

[இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமான அனைத்தையும் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்.] என்று மறைகளில் ஓதப்படுமவன் எவனோ அவன். (தை₃வ்ய:) "தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்" என்று மறைமுடிகளில் புகழப்படும் பரமபதத்திலிருப்பவன்.(ஸுக்ருத்தர:)சென்ற மந்திரத்தில் ஶோப₄னப₂லப்ரத₃ர்களில் மிகச்சிறந்தவனாக நிரூபிக்கப்பட்டவன.

"தே₃வேந்த்₃ரஸ் த்ரிபு₄வநமர்த்த₂மேக பிங்க₃ஸ்
ஸர்வர்த்₃தி₄ம் த்ரிபு₄வநக₃ாஞ்ச கார்த்தவீர்ய: |
வைதே₃ஹ: பரமபத₃ம் ப்ரஸாத்₃ய விஷ்ணும்
ஸம்ப்ராப்தஸ் ஸகல ப₂லப்ரதோ₃ ஹி விஷ்ணு: ||"
[விஷ்ணுதர்மம் 43-47]

[விஷ்ணுவை ஆராதித்து தேவேந்திரன் மூவுலகங்களையும், குபேரன் செல்வத்தையும், கார்த்தவீர்யன் மூவுலகங்களிலும் பரவிய எல்லாப்

ஸோப₁னப₂லமளிப்பாரிற் சிறந்தவராய், பரமபத₃நிலயரான யாவரொரு விஷ்ணு எழுந்தருளுகிறுரோ.(த்ரிஷத₄ஸ்த₂: வேத₄ா: ஆர்யம் அஜிந்வத்) ஸவநத்ரய ஸ்தானங்களிலிருப்பவராய், யஜமானன் விரும்பிய பலனை அளிப்பவரான விஷ்ணு, அடையத்தகுந்தவனுன யஜமானனை உகப்பிக்கிறுர். (யஜமாநம் ருதஸ்ய ப₄ாகே₃ ஆப₄ஜத்) யாகம் செய்பவனை ஹ்ருதயேஷ ரூபமான யஜ்ஞப₄ாக₃த்தை அடைவிக்கிறுர்; அன்றிக்கே, யஜ்ஞத்தின் பலனை யஜமானனுக்கு அடைவிக்கிறுர் என்றுமாம். ஆக, இத்தால் "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் பே₄ாக்தா ச ப்ரபு₄ரேவ ச" [கீதை 9-24] [நானே எல்லா யாகங்களையும் புஜிப்பவனும், அவற்றுக்குப் ப₂லப்ரத₃னுமாவேன்.] என்று கண்ணன் கீதையில் காட்டிய அர்த்தம் விவரிக்கப்பட்டதாயிற்று.

இனி, ருக்வேதம் ஐந்தாமஷ்டகம், ஆருமத்தியாயம் இருபத்துநாலாவது வர்க்கம் –(இதற்கு சரியான ஏழாம் மண்டலம், ஆருமத்தியாயம் தொண்ணூற்றென்பதாவது ஸூக்தம்)– தொடங்கியுள்ள விஷ்ணுஸூக்தங்கள் விவரிக்கப்படுகின்றன.

१. परो मात्रया तन्वा वृधान न ते महित्वमन्वश्नुवन्ति।
उभे ते विद्म रजसीपृथिव्या विष्णो देव त्वं परमस्य वित्से ॥

1. பரோ மாத்ரயா தந்வா வ்ருத₄ாந
ந தே மஹித்வமந்வஶ்நுவந்தி ।
உபே₄ தே வித்₃ம ரஜஸீ ப்ருதி₂வ்யா:
விஷ்ணோ தே₃வ த்வம் பரமஸ்ய வித்ஸே ॥

பதவுரை:— மாத்ரயா—மிகப்பெரிய, தந்வா—திருமேனியோடு, வ்ருத₄ாந—வளர்ந்தருளின, தே₃வ—தேவனுன, விஷ்ணோ—விஷ்ணுவே! பர:—நீ மிகப்பெரியவன்; தே—உன்னுடைய, மஹித்வம்–பெருமையை, ந அந்வஶ்நுவந்தி–(அளவிட்டு) அனுபவித்தார் யாருமில்லை. ப்ருதி₂வ்யா:—பூமியிலிருந்து தொடங்கிய, தே—உன்னுடைய, உபே₄ ரஜஸீ–இரண்டு பாதஸ்தானங்களை, வித்₃ம—அறிகிறோம்; பரமஸ்ய–(அதற்கு) மேற்பட்ட மூன்ருவது அடிவைப்பை, த்வம்—நீயே, வித்ஸே—அறிகிருய்.

